# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

**பாகம் - 9**

ஓஷோ

தமிழில் :
சி. எஸ். தேவநாதன்



Since 1976


**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

**PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 9 (Tamil)**



Originally published in English under the title:
**Yoga : The Alpha and the Omega, Volume -9**



A Comprehensive multilingual web site featuring Osho's meditations, books and tapes and an online tour of Osho International Meditation Resort.



2

| | | |
|---|---|---|
| Translated by | : | **C. S. Devanathan** |
| Coordination by | : | **Dhyan Sanjay** |
| Publishing Editor | : | **S. Chockalingam** |
| First Edition | : | 2007 |
| Second Edition | : | 2012 |
| Third Edition | : | 2019 |
| Pages | : | **384** |
| Price | : | **Rs. 350/-** |
| ISBN | : | 81-8345-063-6 |
| Printed a | : | Sree Durga Printers, Cnennai |

Published by :



**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

அன்பார்ந்த யோகா குருவிற்கு.

**நா**ன் ஆசிரமக் கூரையில் வெயிலில் காய்ந்தபடி படுத்திருக்கிறேன். 'யோகா என்றால் என்ன? யோகா பற்றி நான் சொல்லக்கூடியது என்ன? அது எத்தகையது என்று எனக்குத் தெரியாதே' என எண்ணிக் கொள்கிறேன்.

ஆரஞ்சு நிற ஆடைக்குள் மறைந்து கிடக்கும் என்னுடைய பழுப்பு நிற அங்கங்கள் கூரையின் பளபளக்கிற ஓடுகளில் படிப்படியாய் கரைந்து கொண்டிருக்கின்றன. இத்தகைய வியக்கத்தக்க உணர்வு எப்படிச் சாத்தியமாகிறது?

'யோகா என்றால் ஒன்றாக்குதல்... இதுதான் யோகா' என்று நான் கருதுகிறேன். அது பைத்தியக்காரத்தனம் - யோகா என்பது ஆசனங்களை, கட்டுப்பாடுகளை, விரதத்தை விருப்பாற்றலைக் கொண்டது' என்று பிறகு கருதிக் கொள்கிறேன். நண்பகல் இந்தச் சூரியனின் ஒளியில் நான் சோம்பலுடன் குளிர் காய்கிறேன். அந்தச் சுகமான கதகதப்பில் ஈடுபட்டு 'இதுதான் யோகா' என்று முணு முணுத்துக் கொள்கிறேன்.

சூரியன் என்னைக் கண்சிமிட்ட வைக்கிறது. மிகப்பெரிய தங்கமான தோழன் என்னுடைய மயிர்க் கால்களினூடே பரவுகிறான். எல்லாமே ஒன்றாகி விடுகிறது. சூரியனும், நானும், எதிர்பாராது திடீரென மேல் வந்து பாயும் பறவைகளும், மகிழ்ச்சியில் கூத்தாடும் உடம்பின் வழியே ஓடுகிற இரத்தமும் எல்லாமும் ஒன்றாகி விடுகிறது. இதுதான் யோகா... ஆகா... இதுதான் யோகா.

என்னுடைய தோழியின் உடம்பில் பூவாளி கொண்டு நீரை நான் 'ஸ்ப்ரே' செய்கிறேன். வெதுவெதுப்பான தசைகளை அந்த நீர்ப் பொழிவு அரவணைக்கிறது. அவள் மகிழ்ச்சியில் பெருமூச்சு விடுகிறாள். இளிக்கிறாள். நாங்கள் ரொம்பவே தெளிவற்றவர்களாய் கரைந்து கொண்டிருக்கிறோம். உவகையும், சோம்பலும் எங்களைப்

பேசவிடவில்லை. வெதுவெதுப்பான தசைமீது விழுந்த நீர்த்துளிகள் சூரிய ஒளியில் புன்னகைக்கின்றன. இதுதான்... இதுதான் யோகா.

குளியலறை நீர்க்குழாயினடியில் நான் தரையில் அமர்ந்திருக்கிறேன். (ஷவருக்கடியில் நிற்பதைவிட இது இனிமையாய் தெரிகிறது. சோம்பல்தனம்) இந்தியாவில் இப்படித்தான் குளிக்கிறேன். இதனை 'வாஷிங் ஆசனா' என்று சொல்லலாம்தானே. சுவரில் பொருத்திய குழாயில் இருந்து என்மீது விழும் நீரை நான் விரும்புகிறேன். சன்னல் வழியே தெரியும் மரத்தின் இலைகளினூடே சூரியனைப் பார்க்கிறேன். தெளிவில்லாத கவனக்குவிப்பு என்றாலும், இனிய நாதமாய் ஒலிக்கும் ஒருமை (oneness)யை நான் உணர்கிறேன். இடைவிடாத இந்த ஒலி ஆசிரமமெங்கும் ரீங்கரிக்கிறது. சிரிப்பு கூச்சல், என் முதுகில் சடசடவென்று விழுகிற நீரின் ஓசை, குளியலறை சன்னலருகே உள்ள செடியில் இருந்து தொங்கிக் கொண்டிருக்கும் ஒரு சிறிய பூச்சி, அவை அத்தனையிலும் வந்து விழும் சூரிய ஒளி. நான் அந்தப் பூச்சியை விரும்புகிறேன், பறவையை அதன் பாடலை, நீரை, சூரியனை, குளியலறை சன்னலை அத்துடன் என்னையும் நான் நேசிக்கிறேன். எனக்குத் தெரிந்தவரை இதுதான் யோகா.

என்னுடைய மேசையருகே அமர்கிறேன், உங்களுடைய வார்த்தைகளைப் படிக்கத் தொடங்குகிறேன்: 'அன்பு உங்களை ஒற்றுமைப்படுத்துகிறது. ஞாபகம் இருக்கட்டும் ஒருங்கிணைப்பு (union) அல்ல ஒற்றுமை (unity). காரணம் ஒருங்கிணைப்பில் ஒன்று சேர்கிற இருவர் தனித்தனியாகவே இருப்பார்கள். ஒற்றுமையிலோ அவர்களுடைய வேறான தன்மைகள் மறைந்து விடும், அவர்கள் ஒருவருக்கு ஒருவர் கரைந்து விடுகிறார்கள். முதலில், அன்பு உங்களுக்குள் ஓர் உள்ளார்ந்த ஒற்றுமையை ஏற்படுத்துகிறது. பிறகு, உங்களுக்கும் அப்பால் உள்ள பரம்பொருளுடன் ஒன்றுபடுகிறீர்கள். துளிகள் மறைந்து விடுகின்றன கடலில், கடல் மறைந்து விடுகிறது துளிகளில்.

என்னுடைய குரல் வளையில் சிரிப்பு வெடியொலியுடன் கிளம்புகிறது. நன்றிப் பிரவாகத்தில் என் இதயம் மூழ்கிக் கிடக்கிறது. அன்பார்ந்த ஆசானே, வார்த்தைகள் வெளியேற மகிழ்ச்சி உள்ளே நுழைகிறது.

**மா ஆனந்த வந்தனா**

'டாரட்' சீட்டாட்டம் எனக்கு ரொம்பப் பிடிக்கும். என்னுடைய பல்வேறு அம்சங்களையும் பிரதிபலிக்கும் நிலைக்கண்ணாடியைப்

போன்று. அதனுடன் விளையாடுவதை நான் விரும்புகிறேன். எனக்கு விருப்பமான சீட்டு பெண் பாதிரி (priestess) - பெண் ஒரு புதிர், வாவென்று கையசைக்கும் விண்ணுலகின் வாசல். அந்தச் சீட்டு எப்போதுமே என் கைக்கு வந்ததில்லை. ஆனால், இன்று மேடையில் இருந்தபடி என்னை வெறித்து நோக்குகிறது. என்னுடைய உலகியல் சார்ந்த பண்பில் இருந்து நழுவிச் செல்லவும், சில இரவுகளுக்கு முன் நான் கண்ட ஒரு கனவானுபவத்தை நான் அசை போடவும் இது இடமளிக்கிறது.

கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விடுவது பற்றிய கனவு அது. அறிவூட்டுதல் தொடர்பான கனவு. பகவானைக் குறித்த கனவு. எவ்வகையிலும் அதை ஒரு கனவாக நான் உணரவில்லை. தற்போது அதை ஒரு கனவென்று உணர்கிறேன். சூரிய ஒளி மிக்க நாளில், பட்டப் பகலில் வந்தபடியால் அதைக் கனவென்று சொல்கிறேன். பகவானின் நூல்களுள் ஒன்றிற்கு முகவுரை எழுதிக் கொண்டிருக்கும் சுவாமி ஆனந்த சுபுதியாக அந்தக் கனவில் நான் இருக்கிறேன். நான் திடீரென்று விழித்துக் கொண்டு விட்டால், கனவு காண்பவரால் காணப்பட்ட அந்தக் கனவு எவ்வகையிலும் கனவாக இருக்காது.

நான் இராமரையும் சீதையையும் கடவுள்களையும் பெண் தெய்வங்களையும் தேவர்களையும் அவர்களுடைய ஒளி வீசும் கம்பீர உருவங்களையும் ஆபரணாதிகளையும் பல தன்மைகளையும் சவுகரியங்களையும் அந்தக் கனவில் கண்டேன். அவர்களைப்பற்றிய கனவில் என்னுடைய உண்மையான சுயத்தை நான் நினைவுபடுத்திக் கொண்டிருக்கிறேன்.

பிறகு பகவானுடைய குரல் என்னை வந்தடைந்தது, 'நீ மறைந்து விட வேண்டும்' என்றது. அதில் அச்சுறுத்தும் தொனி இருக்க வில்லை. அது சத்தியத்தின் வாக்குமூலமாகவே ஒலித்தது. நான் இழந்துவிட்ட தெய்வத் தன்மையை மீட்டுப் பெறுவதற்கான வழியை அவர் எனக்குக் காட்டுவதுபோல் இருந்தது. ஓர் இலையின் மீது அமர்ந்திருக்கும் பனித்துளி போலில்லாமல் கடலின்மீது அமர்ந்த நீர்த்துளி போல் நான் இருந்தேன். அடுத்த கணத்தில் ஒரு கருந்துளையின் வழியே அந்தக் கடலினுள் விழுந்து மறைவதாய் உணர்ந்தேன்.

அதே கணத்தில், கிட்டத்தட்ட தாமதமாக, மிகப்பெரிய அச்சம் என்னுள் குபுகுபுத்தது. என்னுடைய கடந்த காலமும், அதுவரை எனக்குப் போதிக்கப்பட்ட அனைத்தும், எனது கல்விக்கு சமுதாயம் செய்த முதலீடுகளும், இன்னமும் அதுதான் நான் என்று நினைத்துக்

கொண்டிருப்பவையும், என் தாயுடன் தந்தை மற்றும் சகோதரனுடன் எனக்கிருந்த பிணைப்புகளும் அச்சமும் திகைப்பும் கொண்டு 'இல்லை' என்றன பெருங்குரலில்.

தூக்கு தண்டனைக் கைதி தண்டனையை இன்னும் ஒருநாள் தள்ளிப்போடும்படி கதறுவதுபோல் இருந்தது அந்தக் கதறலின் சோகம்.

நான் முழுமையான உணர்வு நிலையில் கண் விழிக்கிறேன். பரிச்சயமான, பாதுகாப்பான அந்த 'நான்' இன்னும் அப்படியே இருப்பதை உணர்ந்து நன்றியுடன் நிம்மதிப் பெருமூச்சு விடுகிறேன்.

பொழுது விடிகிறது. காலையில் ஆசிரமப் போதனைக்கு நான் போய்க் கொண்டிருக்கிறேன். நம்ப முடியாதவிதமாய் பகவான் சரணாகதி பற்றியும், மறைதல் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார். நீங்கள் ஒரு குன்றின் மீது இருந்து குதிக்க முடியும் அல்லது ஓர் ஏணி வழியே அங்கிருந்து இறங்கவும் முடியும் - ஆனால் ஏணி வழி இறங்கினாலும் அதன் கடைசிப் படியில் இருந்து குதித்துதான் ஆகவேண்டும் என்றார் அவர். குன்றின் அடிப்பகுதி வரைக்கும் ஏணியின் கீழ்ப்பகுதி தொட்டுக் கொண்டிருப்பதில்லை. கடந்த காலத்துடன் முற்றிலும் தொடர்பில்லாத விதமாய் ஒரு குதிப்பு தேவைப்படுகிறது.

'உடனடி ஞானம்' பற்றிப் பேசுகிறபோது பகவான் எதைக் குறிப்பிடுகிறார் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியும் என்றே எண்ணுகிறேன். அதுவரை ஞானம் என்றால் வருங்காலத்தில் எப்போதோ ஏற்படக்கூடியது என்றுதான் எண்ணியிருந்தேன். எனது கடந்த காலத்துணுக்குகள் ஒவ்வொன்றாய் விழும்வரை நான் பொறுமையாய் கவனித்தபடி, தியானிக்க வேண்டியிருக்கும் என்று கருதியிருந்தேன்.

ஆனால், நான் கண்ட கனவு எனது கண்ணோட்டத்தை மாற்றி இருந்தது.

தற்போது, அது இக்கணத்திலேயே நிகழக்கூடியது என்று உணர்கிறேன். இக்கணத்தில் இல்லாவிடினும், அடுத்த கணத்தில் அல்லது ஏதோவொரு கணத்தில் அது நிகழ்ந்து விடும். என்னுடைய அச்சமே அதைத் தடுத்துக்கொண்டிருக்கிறது. அடுத்தமுறை பகவான் என் பொருட்டு வரும்போது, கடந்த காலத்தின் கரங்கள் என்மீது விழுந்து பேரச்சத்தை ஊட்டும்போது, கடந்த காலம் அல்ல நான் என்று துணிவு பெறுவேன். அந்தக் குன்றின்மீது நன்றிப் பெருமூச்சுடன் தலைகுப்புற விழுந்து கிடப்பேன்.

- சுவாமி ஆனந்த சுபுதி

# உள்ளடக்கம்

*சூத்திரம் - 44 'பகிரகல்பிதா வ்ருத்திர் மகாவிதேகா தத ப்ரகாசா வர்ண க்ஷய'*

உடலுக்கு வெளியே உள்ள மனதின் 'உண்மையான விருத்தி' களுக்கு 'உடலற்ற மாபெரும் நிலை' என்று பெயர். அதன்மீது சம்யமம் செய்தால் ஆன்ம ஒளியை மறைக்கின்ற மறைப்பு விலகி விடுகிறது.

*சூத்திரம் - 45 'ஸ்தூல ஸ்வரூப சூக்ஷ்மான் வயார்த்த வத்வ ஸம்யமாத் பூதஜய'*

பூதங்களின் தூல மற்றும் சூட்சுமத்தன்மை, அவற்றின் முக்கிய பண்புகள், அவற்றில் அடங்கியிருக்கும் தன்மை, ஆன்மாவின் அனுபவத்துக்குப் பொருட்டாயிருத்தல் இவற்றின் மீது சம்யமம் செய்வதால் பூதங்களை வெற்றிகொள்ள முடியும்.

( நிலம், நீர், நெருபபு, காற்று, ஆகாயம் என்பன ஐம்பூதங்கள் )

*சூத்திரம் - 46 'ததோ அணிமாதி ப்ராதுர்பாவ: காய ஸம்பத் தத்தர் மானபிதா தஸ்ச்ச'*

அதிலிருந்து நுண்ணிய தன்மை, பிற சித்திகள், உடல் சிறப்பு, உடலின் குணங்கள் அழியாமை எல்லாம் கூடும்.

*சூத்திரம் - 47 'ரூபலாவண்ய பலவஜ்ர ஸம்ஹன னத்வானி காய ஸம்பத்'*

இனிய உருவமும், அழகும், ஆற்றலும், உறுதியான உடற்கட்டும் காய சம்பத் எனப்படும். (அது எல்லா லட்சணங்களும் பொருந்தியது)

காய சம்பத் - மகிமை பெற்ற உடல்.

பதஞ்சலியின் யோகமுறை தத்துவஞானம் சார்ந்த ஒன்றல்ல. அது செயல்முறை அனுபவத்தைக் கொண்டது. அது செயல்பட உதவும் ஒரு சாதனம். நீங்கள் எங்கே சென்று கொண்டிருக்கிறீர்கள், எதை நாடிச் செல்கிறீர்கள் என்பது பற்றிய அறிவார்ந்த புரிதலை அது வழங்குகிறது. தத்துவஞானம் நிச்சயமற்றது, பயனைக் குறிக்கோளாய்க் கொண்டது. நீங்கள் கண்டறியப் போகிற பரப்பெல்லை குறித்து ஒரு பரந்த காட்சியைத்தான் அது வழங்கும், ஆனால் அந்தத் தத்துவ ஞானம் புரிந்து கொள்ளப்பட வேண்டியதே.

முதலாவது, பதஞ்சலியின் அடிப்படைக் கொள்கைகள் பற்றிய ஆய்வு. அவர் மனிதனின் சிறப்பியல்பை ஐந்து விதைகளாகவும், ஐந்து சரீரங்களாகவும் பிரிக்கிறார். நீங்கள் ஒரேயொரு சரீரத்தைப் பெற்றிருக்கவில்லை, அடுக்கடுக்காய் ஐந்து சரீரங்களைப் பெற்றிருக்கிறீர்கள் என்கிறார். முதலாவது அன்ன சரீரம், உணவால் ஊட்டமளிக்கப்படுகிற சரீரம். இதனை 'அன்னமய கோசம்' என்கிறார் அவர். இது மண்ணாலான சரீரம், உணவு மண்ணில் இருந்து கிடைப்பது. நீங்கள் உணவு கொள்வதை நிறுத்தினால் உங்களுடைய அன்னமய சரீரம் அழிந்துவிடும். எனவே, தான் எதை உண்கிறார் என்பதில் ஒருவர் கவனமாக இருக்கவேண்டும். அது இலட்சோப லட்சம் வழிகளில் உங்களைப் பாதிக்கும். கொஞ்சம் முன், பின்னாக என்றாலும் நீங்கள் உண்கிற உணவு உணவாகவே இருந்துவிடுவதில்லை. அது இரத்தமாகவும், எலும்புகளாகவும், எலும்பில் மஜ்ஜையாகவும் (bone marrow) மாறுகிறது. அது உங்கள் இருப்புணர்வில் பரவி, உங்களுக்குள் விளைவை ஏற்படுத்துகிறது. ஆக, மாசற்ற உணவு ஒரு தூய்மையான அன்னமய கோசத்தை உருவாக்குகிறது, தூய்மையான அன்ன சரீரம்.

முதலாவது சரீரம் தூய்மையாகவும், கனமில்லாமல் இலகுவாயும் இருந்தால் அந்நிலையில் இரண்டாவது சரீரத்தில் நுழைவது எளிதாயிருக்கும். இல்லையேல், நீங்கள் சுமையேற்றப்பட்டவராகி, அது கடினமாகிவிடும். நீங்கள் அளவுக்கதிகமாய் சாப்பிட்டு

வைக்கிறபொழுது, விருந்து சாப்பாட்டை ஒரு பிடி பிடிக்கிற பொழுது என்ன ஆகிறது என்பதைக் கவனித்திருக்கிறீர்களா?

உடனே ஒருவித மந்தத்தன்மை ஏற்பட்டு, அயர்ந்து உறங்கத் தொடங்கி விடுகிறீர்கள். உடனடியாய் உங்கள் விழிப்புணர்வு மறையத் தொடங்கும். முதல் உடம்பு பாரமானதும், பெரிய அளவில் விழிப்புணர்வு கொள்வது கடினம். அதனால்தான் உண்ணாநோன்பு எல்லா மதங்களிலும் முக்கியத்துவம் பெறுகிறது. உண்ணாமை ஓர் அறிவியல். ஆனால் அதை பொறுப்பற்ற விதத்தில் ஒருவர் கையாளக் கூடாது.

ஒரு நாளிரவு சந்நியாசினி ஒருவர் என்னிடம் வந்து, தான் உண்ணா நோன்பிருப்பதாகவும், தன்னுடைய சரீரமும் இருப்புணர்வும் அமைதிக் குலைவுக்குள்ளாகி விட்டிருக்கிறது என்றும் தெரிவித்தார். வயிறு நன்றாகச் செயல்படவில்லை. வயிறு நல்ல முறையில் செயல்படாத பொழுது எல்லாமே நலிவடைந்து விடும். இன்றியமையாத ஆற்றல் இழக்கப்படும், உங்களால் உயிரோடு இருக்க முடியாது. நீங்கள் உணர்வற்றவராகி செத்துப் போவீர்கள்.

ஆனால், உண்ணாமை முக்கியமானது. அதை வெகு கவனமாய் செய்ய வேண்டும். ஒருவர் அன்னமய சரீரத்தின் செயல்பாட்டைப் புரிந்து கொண்டிருந்தால் மட்டுமே அது சாத்தியம். அத்துடன், முறையான வழிகாட்டுதல் பெற்று அதைச் செய்ய வேண்டும். அன்னமய சரீரத்தின் அத்தனைப் பகுதிகளிலும் செயல்பட்ட அனுபவம் உள்ள ஒருவரே வழிகாட்டத் தக்கவர். அது மட்டுமல்ல, அவர் அதற்குமப்பால் சென்று, ஒரு சாட்சியாய் இருந்து அன்னமய கோசத்தைக் கூர்ந்து கவனித்திருப்பவராகவும் இருக்க வேண்டும். இல்லையேல் உண்ணாமை ஆபத்தை விளைவிப்பதாகி விடும்.

தரமான உணவை, சரியான அளவில் உண்டாலே போதும், உண்ணாமை அவசியப்படாது.

ஆனால், இது முக்கியத்துவம் பெறக் காரணம் இதுவே உங்களுடைய முதலாவது சரீரம், கூடுதல் குறைவு என்றாலும் மக்கள் தங்களுடைய முதல் சரீரத்தையே பற்றிக் கொண்டிருக்கிறார்கள். இரண்டாவது சரீரத்துக்குச் செல்வதில்லை. தங்களுக்கு ஓர் இரண்டாவது சரீரம் இருப்பதே இலட்சக்கணக்கானவர்களுக்குத் தெரியாது. முதலாவது உறையின் பின்புறத்தில் அது மறைந்திருக்கிறது. அந்த முதலாவது உறை முரட்டுத்தனமானது.

இரண்டாவது சரீரத்தை 'பிராணமய கோசம்' என்கிறார் பதஞ்சலி. அது ஆற்றல் சரீரம், மின்னாற்றல் சரீரம். இரண்டாவது சரீரம் மின்புலங்களைக் கொண்டது. அக்குபஞ்சர் (acupuncture) அதுபற்றியதே. முதலாவதை விட இரண்டாவது நுட்பமானது. முதலாவது உடம்பில் இருந்து இரண்டாவது உடம்புக்குச் செல்கிறவர் பெரிய அளவில் ஈர்க்கத்தக்க, காந்தவிசை உடைய, அறிதுயில் நிலைசார்ந்த (hypnotic) சக்திப் புலங்களாகிறார். அவர்களருகே சென்றால் ஆற்றலும், மின்றேற்றமும் பெறுவீர்கள்.

தன்னுடைய அன்ன சரீரத்தில் (food body) வாழ்கிறவரின் அருகே நீங்கள் சென்றால் வெறுமையாக்கப்பட்டுவிடுவீர்கள். உங்களுடைய ஆற்றலை அவர் காலி செய்து விடுவார். அவர்கள், புறப்பட்டு சென்றதும் நீங்கள் கையிருப்பு இல்லாதவராய், ஆற்றலை வீணடித்த வராய் உணர்வீர்கள். உங்கள் ஆற்றலை யாரோ பயன்படுத்திக் கொண்டுவிட்ட உணர்வடைவீர்கள். முதலாவது சரீரம் உறிஞ்சுதல் மூலம் ஒட்டி இருக்கும் அமைவு, அந்தச் சரீரம் நுட்பமற்றது. எனவே நீங்கள் முதலாவது சரீரத்தில் தங்களை நிலைப்படுத்திக் கொண்டவர் களுடன் அதிக அளவில் தங்கி வாழ்ந்தால் நீங்கள் பாரமாகவும், இறுக்கமாகவும், சலிப்பாகவும், தூங்குமூஞ்சித் தனமாகவும், ஆற்றலே இல்லாமல் உணரும்படி இருக்கும். உங்கள் ஆற்றலின் கீழ்ப்படியி லேயே நின்று விட்டிருப்பீர்கள். நீங்கள் உயர் வளர்ச்சிக்குத் தேவையான ஆற்றலை ஓரளவும் பெற்றிருக்க மாட்டீர்கள்.

இந்த வகையில், முதல்வகையில், அன்னமய சரீரத்தில் நிலைப்பட்டிருப்பவர் உணவுக்காகவே வாழ்பவர். அவர் தின்பார், தின்பார், தின்றபடி இருப்பார். தின்பதே அவருடைய வாழ்க்கையாக இருக்கும். அவர் ஒருவகையில் குழந்தைத்தனமானவர். குழந்தை உலகிற்கு வந்ததும் செய்கிற முதல் காரியம் காற்றை உறிஞ்சுவதும், அடுத்து பாலை உறிஞ்சுவதும்தான். குழந்தை செய்கிற முதல் காரியம் தன்னுடைய அன்னமய சரீரத்துக்கு உதவியாயிருப்பதுதான். ஒருவர் உணவுக்கு அடிமையாய் இருப்பார் எனில் அவர் குழந்தைக்குரிய இயல்பினர்தான். அவருடைய வளர்ச்சி இழப்புக்குள்ளாகும்.

இரண்டாவது சரீரமான பிராணமய சரீரம் ஒரு புதிய சுதந்திரத்தை, அதிகமான பயண பரப்பை (space) யை உங்களுக்கு வழங்குகிறது. இரண்டாவது சரீரம் முதல் சரீரத்தைவிட பெரியது. அது உங்கள் தூல சரீரத்தோடு கட்டுப்படுத்தப்பட்டு விடுவதில்லை. அது தூல

சரீரத்துக்குள்ளேயும், வெளியேயும் இருக்கிறது. அது ஒரு நுட்பமான தட்வ வெப்பநிலையைப் போல், ஓர் ஆற்றல் உணர்வு போன்ற போன்று உங்களைச் சுற்றிக் கொண்டிருக்கும். தற்போது சோவியத் ரஷ்யாவில் சக்தி உடலை புகைப்படமாக எடுக்க முடியும் என்பதைக் கண்டுபிடித்திருக்கிறீர்கள். அவர்கள் அதனை 'பயோப்ளாஸ்மா' (Bioplasma) என்கிறார்கள். மிகச்சரியாகச் சொல்வதெனில் அதுவே பிராண சரீரம் ஆகும். தாவோக்கள் (Taoists) அதனை 'சி' (chi) என்பர். அந்த சக்தியை தற்போது புகைப்படம் எடுக்க முடிகிறது. தற்போது அது கிட்டத்தட்ட அறிவியலாகிவிட்டது.

மிகப்பெரிய ஒரு கண்டுபிடிப்பு சோவியத் ரஷ்யாவில் நிகழ்த்தப்பட்டது. அது, உங்களுடைய தூல உடம்பு ஓர் உபாதையை அனுபவிப்பதற்கு முன், ஆறுமாதங்களுக்கு முன்பாகேவே பிராண சரீரம் (சக்தி சரீரம்) அதை அனுபவித்து விடுகிறது என்பதாகும். உங்களுக்கு எலும்புருக்கி நோய் அல்லது புற்றுநோய் அல்லது வேறெந்த பிணியோ வருவதாக வைத்துக் கொள்வோம். உங்களு டைய பிராண சரீரம் ஆறுமாதம் முன்பே அதன் அறிகுறிகளைக் காட்டத் தொடங்கிவிடும். தூல உடம்பில் மேற்கொள்ளப்படும் எந்தப் பரிசோதனையிலும் அது வெளிப்படாது. ஆனால் பிராணமய சரீரத்தில் அது முதலில் தோன்றி விடுகிறது. ஆக, ஒருவர் நோய்வாய்ப் படுவதற்கு முன்பே அவரை சிகிச்சையளித்து குணப்படுத்திவிட முடியும் என்கிறார்கள். அப்படி ஆகிவிட்டால் மனிதகுலம் நோய் வாய்ப்படுகிற நிலை இருக்காது. நீங்கள் நோயுற்றிருப்பதாக உணரும் முன்பே, கிர்லியன் முறைகளின் (Kirlian method) மூலம், உங்களுக்கு வரவிருக்கும் நோய்களை முன்னதாகவே புகைப்படத்தில் கண்டுகொள்ளலாம். அதைப் பிராணமய சரீரத்திலேயே தடுத்துக் கொண்டு விடலாம்.

அதனால்தான், மூச்சுக்காற்றின் தூய்மையை யோகா வெகுவாக வலியுறுத்துகிறது. காரணம் பிராணமய சரீரம் உங்களுடைய சுவாசத்தோடு பயணிக்கிற ஒரு நுண்ணிய சக்தியாலானது. நீங்கள் சரியான முறையில் சுவாசித்தால் உங்களுடைய பிராணமய சரீரம் ஆரோக்கியமாகவும், உயிரோட்டத்துடனும் இருக்கும். அத்தகைய நபரால் எதையும் செய்ய முடியும். அவர் ஒரு போதும் சோர்வடைவ தில்லை. அவர் ஏற்புத்தன்மை உடையவராயிருப்பார். எந்தக் கணத்திலும் எதிர்ச் செயல்புரியக் கூடியவராகவும், சவாலை

எதிர்கொள்கிறவராகவும் இருப்பார். அவர் எப்போதும் ஆயத்தநிலையில் இருப்பவர். ஒரு கணத்திலும் முன்னேற்பாடின்றி இருக்கமாட்டார். அது அவர் வருங்காலத்தைத் திட்டமிடுகிறவர் என்று ஆகிவிடாது. ஆனால், எது நடந்தாலும் எதிர்ச் செயல்புரியக் கூடிய சக்தி பெருமளவில் அவரிடம் இருக்கும். அவருடைய சக்தி தங்கு தடையின்றித் தொடர்வது. தாய் - சி (Tai -chi) பிராணமய கோசத்தில் செயல்படுகிறது. பிரணயம் பிராணமய சரீரத்தில் செயல்படுகிறது.

இயற்கையாகச் சுவாசிப்பது எப்படி என்று நீங்கள் தெரிந்து கொண்டால், உங்களுடைய இரண்டாவது சரீரத்தினுள் நீங்கள் வளர்ச்சி பெற முடியும். இரண்டாவது சரீரம் முதலாவதைவிட வலிமையுடையது. முதலாவதைவிட இரண்டாவது சரீரம் நெடுநாள் வாழக்கூடியது.

ஒருவர் இறக்கிறபோது கிட்டத்தட்ட மூன்று நாட்களுக்கு அவருடைய உயிர்ப்பொருளை நீங்கள் பார்க்க முடியும். அந்த பயோப்ளாஸ்மா (Bio-plasma) வை அவருடைய ஆவியென்று சில நேரங்களில் கருதிக் கொள்வதும் உண்டு. தூல சரீரம் இறக்கிறது. ஆனால் பிராண சரீரம் தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக்கும். மரணத்தைப் பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சியை மேற்கொண்டவர்கள் சொல்கிறார்கள். இறந்த ஒருவரை அவர் இறந்துவிட்ட மூன்று நாட்கள் வரை இறந்ததாய் சொல்ல முடியாது. காரணம் அதே உருவம், எப்போதையும் விட ஆற்றல் மிக்கதாய், எப்போதையும் விட ஆரோக்கியமானதாய், எப்போதும் இருந்திராத அதிக அழகுடன் அவரைச் சுற்றிக் கொண்டிருக்கும். அது உங்கள் 'பயோ ப்ஸாஸ்மா' எவ்வளவு பெரியது என்பதைப் பொறுத்தது. பிறகு பதின்மூன்று நாட்களுக்கு அல்லது அதற்குமேலும் அது சுற்றிக் கொண்டிருக்கும்.

இந்தியாவில் சமாதிநிலை அடைந்த யோகிகளைத் தவிர மற்றவர்களை எரித்துவிடுவதுதான் வழக்கம். குறிப்பிட்ட காரணங்களுக்காக யோகியின் உடலை நாம் எரிப்பதில்லை. உடலை எரித்தால் உயிர்ப்பொருள் இவ்வுலகில் இருந்து விலகி செல்லத் தொடங்கும். சிலநாட்கள் வரை நீங்கள் அதை உணர முடியும். ஆனால் அதன்பிறகு, அண்டவெளியில் அது மறைந்து விடுகிறது. ஆனால், தூல சரீரம் இழக்கப்படுகிற பொழுது உயிர்ப்பொருள் அதைப் பற்றிக் கொண்டுவிட முடியும். சமாதிநிலை அடைந்த, ஞானம் பெற்ற ஒருவர், அவருடைய உயிர்ப்பொருள் (பிராண சரீரம்) அவருடைய சமாதியைச் சுற்றி இருக்குமாயின், மக்களில் பலரும் அதன்மூலம் பயனடையக்

கூடும். அப்படித்தான் பலரும் தங்களுடைய குருவின் உருவத்தைப் பார்க்க முடிகிறது.

அரவிந்த ஆசிரமத்தில், அரவிந்தரின் உடல் எரிக்கப்படாமலும், சிதைக்கப்படாமலும் ஒரு சமாதியில் அப்படியே வைக்கப்பட்டிருக் கிறது. அரவிந்தரைத் தாங்கள் பார்த்த உணர்வு அவர்களுக்கு உண்டாகிறது. சில நேரங்களில் அரவிந்தர் உயிரோடு இருக்கும்போது நடந்ததைப் போன்று அதே காலடியோசையை அவர்கள் கேட் கிறார்கள். சில நேரங்களில் அவர்கள் முன்பாகவே காட்சியளிக்கவும் செய்கிறார். அரவிந்தர் அங்கே இருக்கவில்லை. ஆனால் அவரு டைய பிராணமய சரீரம் பல நூற்றாண்டுகளுக்கும்கூட தொடர்ந்து இருந்தபடி இருக்கும். தன்னுடைய பிரபஞ்ச இருப்பை (existence) அது கொண்டிருக்கிறது.

இயல்பான சுவாசம் அறியப்பட வேண்டியது. குழந்தைகளைக் கவனியுங்கள். அவர்களுடைய சுவாசம் இயல்பாக இருக்கும். அதனால் குழந்தைகள் முழுமையான ஆற்றலுடன் இருப்பது. பெற்றோர்கள் சோர்ந்து விடுவார்கள், ஆனால் அவர்கள் சோர்வடைவதில்லை.

ஒரு குழந்தை மற்றொரு குழந்தையிடம் சொல்லிக் கொண் டிருந்தது, "நான் ஏழே நாட்களில் என்னுடைய காலணிகளைச் சோர்வடையச் செய்து விடுவேன்" என்று.

மற்றொரு குழந்தை, "நான் மூன்றே நாட்களில் எனது உடைகளைச் சோர்வடையச் செய்துவிடுவேன்" என்றது.

மூன்றாவது குழந்தை சொன்னது, "நான் ஒரே மணி நேரத்தில் எங்க அப்பா அம்மாவைச் சோர்வடையச் செய்து விடுவேன்" என்று.

அமெரிக்காவில் உடற்பயிற்சி மூலம் வலிமைபெற்ற ஆற்றல்மிக்க ஒருவனிடம், ஒரு குழந்தையின் பாவனைகளை மேற்கொள்ள (ஒரு பரிசோதனைக்காக)ச் செய்தார்கள். ஓர் எட்டு மணி நேரத்துக்கு, குழந்தை செய்வதை எல்லாம் அவன் செய்ய வேண்டும்.

நான்கு மணி நேரத்தில் அந்த உடற்பயிற்சியில் வல்லவன் (athlete) சலிப்புற்று தரையில் விழுந்துவிட்டான். காரணம், அந்தக் குழந்தை குதிக்கவும், சீராக ஓடவும், கூச்சலிடவும், மகிழ்ச்சியோடு கத்தவும் செய்தது. இப்படிப் பல காரியங்களை அது அனுபவித்துச் செய்தது.

அந்த வல்லவன் அவற்றையெல்லாம் அப்படியே திரும்பச் செய்ய வேண்டும். நான்கு மணி நேரத்துக்குப் பிறகும் அந்தக் குழந்தையின் சக்தி முழு அளவில் அப்படியே இருந்தது. உடற்பயிற்சி வல்லவன் தான் முடியாமல் போய்விட்டான். அவன் சொன்னான், ''அடேயப்பா எட்டு மணி நேரமா! அவன் என்னைத் தீர்த்துக் கட்டி விடுவான். தீர்ந்த போச்சு. இதற்குமேல் என்னால் முடியாது'' என்று. அவன் ஒரு பெரிய குத்துச் சண்டை வீரன். ஆனால் குத்துச்சண்டை வேறு விஷயம். உங்களால் ஒரு குழந்தையோடு போட்டி போட முடியாது.

ஆற்றல் எங்கிருந்து வருகிறது? பிராணமய சரீரத்தில் இருந்து. குழந்தை இயல்பாகச் சுவாசிக்கிறது. உண்மையில் அதன் பிராணசக்தி அதிக அளவில் இருக்கிறது. அது தன்னுடைய வயிற்றில் அந்தச் சக்தியைச் சேகரித்துக் கொள்ளும். வயிறு சக்தியின் தேக்கம் (கொள்கலன்) எனலாம். ஒரு குழந்தையைக் கவனியுங்கள். குழந்தை சுவாசிக்கும்போது முற்றிலும் பாதிக்கப்படாததாயிருக்கிறது. அவனுடைய வயிறு மேலும் கீழும் உயர்ந்து தாழும். அவன் வயிற்றுப் பகுதியில் இருந்து சுவாசிக்கிற மாதிரி தெரியும். குழந்தைகளின் வயிறு சிறியது. அவர்களுடைய சுவாசிப்புக்கும், சக்தியைத் தேக்கி வைப்பதற்குமே அந்த வயிற்றுப்புடைப்பு (belly) இருக்கிறது.

அதுவே சுவாசிக்கச் சரியான வழி. உங்களுடைய நெஞ்சுப் பகுதியை ரொம்பவும் பயன்படுத்தக்கூடாது என்பதை நினைவில வையுங்கள். நெருக்கடி காலங்களில் அதைப் பயன்படுத்தலாம். நீங்கள் உயிரோடு இருப்பதற்காக அதைச் செய்கிறீர்கள். அது அவசர காலத்தில் பயன்படுத்துகிற ஒரு சாதனம். அந்நிலையில் ஆழமற்ற, துரித சுவாசிப்பை நீங்கள் மேற்கொள்ளலாம். ஆனால், பொதுவாக நெஞ்சுப் பகுதியை அதற்குப் பயன்படுத்தக் கூடாது. நெருக்கடிக் காலங்களுக்காக மட்டுமே அது குறிக்கப்படுகிறது. காரணம் நெருக்கடி நிலைகளில் இயற்கையாகச் சுவாசிப்பது கடினம். காரணம், நீங்கள் இயல்பாகச் சுவாசிக்கிறபோது அமைதியாய் இருப்பீர்கள். உங்களால் ஓடவோ, எதிர்த்து நிற்கவோ முடியாது. ஒரு புத்தரைப் போன்று உங்களைக் கட்டுப்படுத்தியிருப்பீர்கள். அவசர நிலையிலோ - வீடு தீப்பற்றி எரிவது போன்ற நிலையில் - நீங்கள் இயல்பாக சுவாசித்துக் கொண்டிருந்தால், எதையுமே உங்களால் காப்பாற்ற முடியாது. காட்டில் ஒரு புலி உங்கள் மீது பாய்கிறது. நீங்கள் இயல்பாகச் சுவாசித்துக் கொண்டிருந்தால், 'சரிதான். அது விரும்பியதைச் செய்யட்டும்' என்று சொல்வீர்கள். உங்களைக் காப்பாற்றிக் கொள்வது முடியாத காரியம்.

எனவேதான், நெருக்கடி நிலைகளில் பயன்படுத்துவதற்காக இயற்கை ஒரு சாதனத்தை உங்களுக்கு வழங்கியிருக்கிறது. நெஞ்சுக்கூடுதான் அந்த நெருக்கடிகால சாதனம். ஒரு புலி உங்களைத் தாக்குகிறபொழுது, நீங்கள் இயல்பான சுவாசத்தை விட்டுவிட வேண்டும். அத்துடன், நெஞ்சுக்கூட்டில் இருந்து மூச்சிழுக்க வேண்டும். அந்நிலையில் ஓடுவதற்கோ, சண்டையிடுவதற்கோ தேவையான திறனை, சக்தியைத் துரிதமாய் பயன்படுத்தித் தீர்க்கும் ஊக்கத்தை நீங்கள் அதிக அளவில் பெறுவீர்கள். நெருக்கடி நிலைகளில் இரண்டு மாற்று வழிகளை நீங்கள் பயன்படுத்த முடியும். ஒன்று - ஓடுவது அல்லது போரிடுவது. இரண்டுக்குமே கடுமையான சக்தி தேவைப்படும்.

தற்போது நீங்கள் நெஞ்சுக்கூட்டில் இருந்து தொடர்ந்து சுவாசித்தால், உங்கள் மனம் இறுக்கங்களுக்குள்ளாகும். நீங்கள் நெஞ்சுக் கூட்டில் இருந்து தொடர்ந்து சுவாசிக்கிறபோது அச்சம் உண்டாகும். காரணம், திகிலூட்டும் நிலைகளில் மட்டுமே மார்புச் சுவாசம் குறிக்கப்படுகிறது. நீங்கள் அதையே வழக்கமாக்கிக் கொண்டால் அந்நிலையில் உங்களுக்கு அச்சமும் மன இறுக்கமும் ஏற்படும், எப்போதுமே வேகமாய் இயங்கிக் கொண்டிருப்பீர்கள். பகைவன் இல்லை என்றாலும், அவன் இருப்பதாய் நீங்கள் கற்பனை செய்து கொண்டு விடுவீர்கள். அப்படித்தான் கருத்துத்திரிபு (Paranoia) உண்டாகிறது.

மேற்கிலும்கூட ஒரு சிலர் இந்த நடப்பினை (phenomenon) - அலெக்சாண்டர் லோவென் போன்ற உயிர்ச்சக்தியை ஆராய்ந்து கொண்டிருந்தவர்கள் - இந்தத் தோற்ற நிலையை எதிர் கொண்டிருக்கிறார்கள். அதுவே பிராணன். அச்சமுற்றவர்களின் நெஞ்சு இறுக்கமடைகிறது என்பதையும், அவர்கள் விடுகிற மூச்சு மேலோட்டமாக இருக்கும் என்பதையும் அவர்கள் உணர முடிந்தது. அவர்கள் ஆழ்ந்து சுவாசிக்க முடிந்தால், அந்த மூச்சுக்காற்று அவர்களுடைய வயிற்றுப்பகுதியைத் தொடுமெனில், அப்போது அவர்களது அச்சம் மறைகிறது. அவர்களுடைய தசையின் செயல்முறை - ரோல்ஃபிங் முறை (Rolfing) யில் செய்யப்படுவது போன்று - தணிவடையும். இடா ரோல்ஃப் என்பவர் உடம்பின் உள்ளார்ந்த அமைப்பை மாற்றும் அருமையான முறைகளில் ஒன்றைக் கண்டறிந்தவர். நீங்கள் ஆண்டுக்கணக்கில் தவறான முறையில் சுவாசித்தன் காரணமாய்

ஒருவித தசைத்தடிமன் ஏற்பட்டு, நீங்கள் முறையாக சுவாசிக்கவோ, ஆழ்ந்து சுவாசிக்கவோ முடியாமல் போய்விடும். இந்தத் தசைத் தடிமனை மாற்ற முடிகிறபோது அச்சம் மறைகிறது, இறுக்கம் மறைகிறது. ரோல்ஃபிங் பெரிய அளவில் உதவுகிறது. இந்தச் செயல்முறை பிராணமய சரீரத்தின் பேரில் மேற்கொள்ளப் படுவது. அதுவே உயிர்ச்சக்தி உடம்பு, 'சி' (chi) உடம்பு என்று நீங்கள் விரும்பியவாறு அழைக்கலாம்.

குழந்தையைக் கவனியுங்கள்; அதன் சுவாசிப்பு இயல்பானது. அந்த முறையில் சுவாசியுங்கள். நீங்கள் மூச்சை உள்ளிழுக்கும்போது வயிற்றுப்பகுதி உயரவும், நீங்கள் மூச்சை வெளிவிடும்போது அது தாழவும் வேண்டும். உங்கள் சக்தியில் அது ஒரு கீதமாகிய சீர்த்தன்மையைப் பெறவிடுங்கள், நடனத்தின் இசைவாகும் தன்மையை அது பெறட்டும். நீங்கள் அப்போது தணிவாகவும், உயிரோட்டமாகவும் உணர்வீர்கள். அத்தனை ஆற்றல் சாத்தியப்படும் என்பதை நீங்கள் கற்பனை செய்யவே முடியும்.

மூன்றாவது மனோமய சரீரம் - மனம் சார்ந்த உடல். இரண்டாவதைவிட மூன்றாவது பெரியது, இரண்டாவதை விடவும் அது உயர்ந்தது, நுட்பமானது. மிருகங்களுக்கு இரண்டாவது உண்டு, மூன்றாவது உடம்பு கிடையாது. விலங்குகள் ஆற்றல் மிக்கவை. ஒரு சிங்கம் நடப்பதைப் பாருங்கள். என்ன ஓர் அழகு, என்ன ஒரு பொலிவு, கம்பீரம்! மனிதன் எப்போதுமே பொறாமைப்படுகிறவன். ஒரு மான் ஓடுவது எப்படியென்று பாருங்கள், எத்தனை இலகுவாய், ஆற்றலுடன் ஓடுகிறது! ஆற்றலின் தேற்றநிலை அல்லவா அது. மனிதனுக்குப் பொறாமை வந்துவிடுகிறது. ஆனால், மனிதனுடைய சக்தி மட்டு மீறியது.

மனோமய சரீரம் மூன்றாவது சரீரம். இது இரண்டாவதை விட அகன்றதும், பெரியதும் ஆகும். நீங்கள் அதை வளரச் செய்யாவிடில் மனிதனாகும் சாத்தியத்தை (நிகழ்த்தும் முறை)க் கொண்டிருப் பீர்களேயன்றி உண்மையான மனிதனாக முடியாது. மனிதன் என்ற சொல் மனம், மனோமயம் என்பதிலிருந்து வந்தது. ஆங்கில வார்த்தையும் மன் என்கிற வடமொழி வேர்ச்சொல்லை மனிதனைக் குறிக்கும். அதுவும் 'மன்' என்கிற வேர்ச்சொல்லைக் கொண்டதாகும். மனமல்லவா உங்களை மனிதன் ஆக்குகிறது. ஆனால் ஏறக்குறைய நீங்கள் அதைப் பெற்றிருக்கவில்லை என்றே சொல்ல வேண்டும்.

அந்த இடத்தில் ஒரு நிலைப்படுத்தப்பட்ட இயக்கநுட்பத்தை (conditioned mechanism) யே நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். நீங்கள் சூழ்நிலைக் கட்டுப்பாட்டில் வாழ்கிறீர்கள். அந்நிலையில் உங்களிடம் மனம் என்பது இருப்பதற்கில்லை. உங்களுடைய சொந்த முறையில் நீங்கள் வாழத் தொடங்குகிற போது, பிறருடைய தூண்டுதலின்றி தானாக இயங்குகிறபோது, நீங்கள் சுயமாகவே உங்கள் வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு விடைகாண முற்படுகிறபோது நீங்கள் மனோமய சரீரத்தில் வளரத் தொடங்கி விடுகிறீர்கள். அந்நிலையில் மனம் சார்ந்த சரீரம் வளர்ச்சி காண்கிறது.

சாதாரணமாக நீங்கள் ஓர் இந்துவாகவோ, முகமதியராகவோ அல்லது கிறிஸ்தவராகவோ இருப்பீர்கள், உங்களுடையது இரவல் மனமாக இருக்கும். அது உங்களுடைய மனமாக இருக்காது. கிறிஸ்து கட்டுக்கடங்காது கிளர்ந்தெழும் மனோமயக் கோசத்தை முயன்று அடைந்திருப்பார். அடுத்து, மக்களும் அதைப் பெற்றிருப்பார்கள். அது உங்களுக்குள் ஒரு வளர்ச்சியை ஏற்படுத்தாது. செய்ததையே திரும்பச் செய்வது ஓர் இடையூறாகி விடும். உயிரோட்டமானவராய், நம்பத் தக்கவராய், ஏற்புத்தன்மை உடையவராயிருங்கள். நேர்வழியினின்றும் விலகுகிற சாத்தியம் இருந்தால் வழி தவறிப் போங்கள், காரணம், தவறு செய்துவிடுவோமோ என்கிற அச்சம் உங்களுக்குள் இருந்தால் நீங்கள் வளர்ச்சியடைய வழியே இல்லை. தவறுகள் விரும்பத்தக்க வைதாம். தவறுகள் செய்யப்பட வேண்டியவைதாம். ஒருமுறை செய்த தவறை மறுபடியும் செய்யாதீர்கள். ஆனால் தவறு செய்துவிடுமோ என்கிற அச்சம் கூடாது. தவறு செய்வது பற்றி அஞ்சுகிறவர்கள் வளர்ச்சி காண்பதில்லை. அவர்கள் அசைவதற்கும் அஞ்சியவராய், தங்கள் இடத்திலேயே அமர்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் உயிரோட்டம் இல்லை.

நீங்கள் சூழ்நிலைகளை எதிர்கொள்ளவும், எதிர்த்து நிற்கவும் செய்கிறபொழுதுதான் உங்களுடைய மனம் வளர்ச்சி அடைகிறது. உங்களுடைய சக்தியைக் கொண்டு நீங்கள் தீர்வு செய்கிறீர்கள். எப்போதுமே ஆலோசனை கேட்டு நிற்காதீர்கள். உங்கள் வாழ்வின் கடிவாளம் உங்கள் கையில் இருக்க வேண்டும். உங்களுடைய செயலை மேற்கொள்ளுங்கள் என்று நான் சொல்கிறபோது அதையே கருத்தில் கொள்கிறேன். நீங்கள் இடர்ப்பாட்டில் இருக்கும்போது - மற்றவர்களைப் பின்பற்றுவது பாதுகாப்பாய் தெரியும், சமூகத்தைப்

பின்பற்றுவது சவுகரியமாய் படும். நடைமுறை ஒழுங்கை, மரபை, புனித நூல்களைப் பின்பற்றுவது வசதியாக இருக்கும். எல்லாருமே பின்பற்றுகிற ஒன்றை நீங்களும் பின்பற்றுவது எளிது – நீங்களும் ஒரு மந்தையின் ஜடத்தன்மையை பெற்று விடுகிறீர்கள். மக்கள் கூட்டம் போகிற இடத்துக்கு நீங்களும் போகிறீர்கள். அதில் உங்களுடைய பொறுப்பு என்று எதுவும் இல்லை. ஆனால் உங்களுடைய மனம் சார்ந்த உடல் மனோமய சரீரம் பெரிய அளவில் துயரத்துக்குள்ளாகும். உங்களுடைய சொந்த மனத்தை நீங்கள் கொண்டிருக்க மாட்டீர்கள். மிகமிக நேர்த்தியான ஒன்றை நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். சிறந்த வளர்ச்சிக்கான ஒன்றை நீங்கள் தவற விடுவீர்கள்.

ஆக, நான் சொல்கிற எதையும் நீங்கள் இரண்டு வழியில் புரிந்து கொள்ள முடியும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். என்னுடைய அதிகாரத்தின் (authority) பேரில் நீங்கள் புரிந்து கொள்கிற போது – 'பகவான் அப்படிச் சொல்கிறார் என்றால் அது உண்மையாகத்தான் இருக்க வேண்டும்' – என்கிற புரிதல் நீங்கள் துன்பத்துக்குள்ளாவீர்கள், வளர்ச்சி காண்பதற்கில்லை. நான், எதைச் சொன்னாலும் கவனமாய் கேளுங்கள், புரிந்து கொள்ள முயலுங்கள், அதனை உங்கள் வாழ்வில் செயற்படுத்துங்கள், அது எப்படி வேலை செய்கிறது என்று பாருங்கள், அதன்பிறக ஒரு முடிவுக்கு வாருங்கள். அவை ஒரே மாதிரி இருக்கலாம், அப்படி இல்லாமலும் இருக்கலாம். நீங்கள் சரிநுட்பமாக ஆராய்ந்தால் அவை ஒரே மாதிரியாக இருக்காது காரணம் நீங்கள் மாறுபட்ட ஆளுமை கொண்டவர், ஒப்பற்ற இருப்புணர்வு உங்களுடையது. நான் எதைச் சொன்னாலும் அது என்னுடையதாகவே இருக்கும். அது ஆழமான முறையில் என்னுள் வேரூன்றியது. நீங்கள் ஒத்த முடிவுகளுக்கு வந்திருக்கலாம். ஆனால் அவை அப்படியே ஒன்றுபோல் இருக்காது. ஆக, என்னுடைய முடிவுகள் உங்களுடைய முடிவுகளாகிவிடாது. நீங்கள் என்னைப் புரிந்துகொள்ள முயலவேண்டும், கற்கவுந்தான். ஆனால் என்னிடமிருந்து அறிவைத் திரட்டக்கூடாது, என்னிடமிருந்து முடிவுகளைத் தொகுக்கக்கூடாது. அப்போதுதான் உங்களுடைய மனோமய சரீரம் வளர்ச்சியடையும்.

ஆனால், மக்கள் குறுக்கு வழிகளைக் கையாள்கிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள், "உங்களுக்குத் தெரிஞ்சிட்டா சரிதான், அதைச் சோதித்துப் பார்க்கணும், அதன் தன்மை தகுதிகளை ஆராய்ந்து பார்க்கணும்கற அவசியம் இல்லை, உங்களை நாங்க

நம்பறோம்'' என்று. நம்புகிறவரிடம் இருப்பது மனோமய சரீரம் அல்ல. அவரிடம் இருப்பது பொய்யான மனோமய சரீரம். அவருடைய இருப்புணர்வில் இருந்து வந்ததல்ல அது.

விஞ்ஞானமய சரீரம் என்பது மனோமய சரீரத்தைவிட மேம்பட்டதும், பெரியதும் ஆகும். அது உள்ளுணர்வு சார்ந்த சரீரம். அது மிகமிக அகன்றது. அது அறிவு நுட்பம் கொண்டதல்ல. அறிவு நுட்பத்துக்கும் அப்பாற்பட்டதல்ல. அது மிக நுண்ணியது. அது பொருள்களின் இயல்பை நேரடியாய் புரிந்து கொள்வது. அதைப்பற்றி கருத்துருவாக்கிக் கொள்வதில்லை. வீட்டு முற்றத்தில் சைப்ரஸ் மரம் இருக்கிறது; நீங்கள் அதை அப்படியே பார்ப்பதோடு சரி. அதைப்பற்றிச் சிந்திப்பதில்லை. நீங்கள் அநுகூலமானவராய், ஏற்கக் கூடியவராய் இருந்துவிட்டால் மெய்ம்மை (reality) தன்னுடைய இயல்பை உங்களுக்கு வெளிப்படுத்தும். நீங்கள் எந்தவொரு வாதத்தையும் முன்வைக்க வேண்டியதில்லை. தேடக்கூட வேண்டாம். நீங்கள் அப்படியே இருந்து கொண்டிருந்தால் போதும். மெய்ம்மை வெளிப்படுத்திக் கொள்ளும். உள்ளுணர்வு சரீரம் உங்களைத் தொலைதூர எல்லைகளுக்குக் கொண்டு செல்லும். ஆனால், இன்னமும் ஒரு சரீரமும் இருக்கிறது.

ஆனந்தமய சரீரம் என்கிற ஐந்தாவது சரீரம், பேரின்ப சரீரம் - பரமசுகமளிப்பது. அது உண்மையிலேயே முழுமையான தூய இன்பம். உள்ளுணர்வும் கடந்தநிலை அது.

இந்த ஐந்து விதைகளும் அப்படியே விதைகள் தாம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவற்றுக்கும் அப்பால் இருக்கிறது மெய்ம்மை. இவை உங்களைச் சுற்றி வளைத்திருக்கும் விதைகள். முதலாவது - அத்தனை ஒழுங்கில்லாதது. நீங்கள் ஆறு அடி உடம்பில் உட்படுத்தப்பட்டிருக்கிறீர்கள், இரண்டாவது அதைவிடப் பெரியது. மூன்றாவது இன்னும் பெரியது. நான்காவது மேலும் பெரியது. ஐந்தாவது ரொம்பப் பெரியது. ஆனால் இன்னமும் அவை விதைகள்தாம். எல்லாமே கட்டுப்படுத்தப்பட்டவை, ஓர் எல்லைக்குட்பட்டவை. இந்த விதைகளை விட்டுவிட்டால் நீங்கள் ஆடையற்றவராய் நிற்பீர்கள். அந்நிலையில் நீங்கள் எல்லையற்றவராகி விடுவீர்கள். அதைத்தான், 'நீங்கள் கடவுள்' (அகம் பிரம்மாஸ்மி) என்று யோகா சொல்கிறது. நீங்கள் அந்த பிரம்மனேதான். எது முடிவான குறிக்கோள் எனப்படுகிறதோ. அதற்கு மேலும் கூற இயலாத மெய்ப்பொருளாக

எது இருக்கிறதோ அதுவாகவே நீங்கள் ஆகிவிடுகிறீர்கள். தற்போது எல்லாத் தடைகளும் அகன்று விட்டன.

இதனைப் புரிந்து கொள்ள முயலுங்கள். தடைகள் உங்களைச் சுற்றிலும் வட்டமாய் அமைந்துள்ளன. முதல் தடுப்பு வேலி ரொம்பக் கடினமானது. அதைவிட்டு வெளியேறுவது அத்தனை எளிதல்ல. மக்கள் தங்களுடைய தூல உடம்பில் உட்படுத்தப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கை என்றால் அது தூல உடம்பு சார்ந்தது என்றே எண்ணிக் கொள்கிறார்கள். அதுதான் வாழ்க்கையென்று நீங்கள் முடிவு செய்து விடாதீர்கள். தூல சரீரம் என்பது ஒரு படி (step) முதற்படி. அது பிராண சரீரத்தை அடைதற்கானது. பிராண சரீரம் மற்றொருபடி, அது மனோ சரீரத்தை அடைதற்கானது. அதுவும் உள்ளுணர்வு சரீரத்தை அடைதற்கான ஒருபடியேயாகும். அந்த ஒன்றும்கூட ஆனந்த சரீரத்தை அடைதற்கானதே. ஆனந்த சரீரத்தில் இருந்து நீங்கள் ஒரே தாவலாய் தாவிவிடுகிறீர்கள் - தற்போது வேறு படிகள் இல்லை. உங்கள் இருப்புணர்வு என்கிற பள்ளத்தில் குதித்து விடுகிறீர்கள். அதுவே முடிவற்ற தன்மை (Infinity), நிலைபேறு (eternity) எனப்படுவது.

இவையே ஐந்து விதைகள். இவ்வைந்து விதைகளுக்கும் இசைவாக யோகா மற்றொரு கொள்கையை, ஐம்பூதங்கள் பற்றிய கொள்கையைக் கொண்டிருக்கிறது. உங்கள் உடம்பு உணவாலானது, மண்ணுக்குரிய உணவாலானது. மண் முதலாவது மூலப்பொருள். எங்கே பருப்பொருள் இருக்கிறதோ அது மூலம். உங்களுக்குள் அது உடம்பாயிருக்கிறது. உங்களுக்கு வெளியே அது சகலமு மாயிருக்கிறது. வாழ்கிற அனைத்திலும் நிலம் இருக்கிறது. அவை நிலத்தால் உண்டானவை. ஐந்து பூதங்கள் என்பது மண், நெருப்பு, நீர், வாயு, ஆகாயம் என்கிற ஐந்து மூலங்களைக் குறிக்கும்.

ஒவ்வொன்றும் அன்னமயகோசம் என்கிற உணவாலான உடம்பில் சமநிலையில் இருக்கிறது. நெருப்பு உங்களுடைய இரண்டாவது உடம்பான பிராணமய கோசத்துடன், 'பயோ ப்ளாஸ்மா' என்கிற் உயிர்ப் பொருளுடன் தொடர்புடையது. அது நெருப்பின் தன்மையைக் கொண்டிருக்கிறது. மூன்றாவது நீர், இது மனோமய சரீரத்துடன் தொடர்புடையது. இது நீரின் தன்மையைக் கொண்டது. மனதைக் கவனியுங்கள். அது ஓர் உருகும் பொருளைப் போல், ஓடுகிற ஆறினைப் போல் ஓரிடத்தும் நில்லாது போகிறது, இடைவிடால் மாறுகிது. நான்காவது வாயு (காற்று) கிட்டத்தட்ட கண்ணுக்குத் தெரியாது.

உங்களால் காணமுடியாது. ஆனால், அது இருக்கும், உங்களால் அதை உணரத்தான் முடியும். அது உள்ளுணர்வு சார்ந்த சரீரத்துடன் விஞ்ஞானமய சரீரத்துடன் தொடர்புடையது. அடுத்து வருவது ஆகாயம் (தூயவெளி). நீங்கள் அதை உணரக்கூட முடியாது. அது காற்றைவிடவும் நுட்பமானது. அதை நீங்கள் நம்பக்கூடும். நம்புங்கள், அது இருக்கிறது என்று. அது தூயவெளி, அதுவே பேரின்பம்.

அந்தத்தூய வெளியைவிடவும் தூயவர் நீங்கள். உங்களுடைய மெய்ம்மை (reality) கிட்டத்தட்ட இல்லை என்பது போல் இருப்பது ஆகும். அதனால்தான் புத்தர், 'அனட்ட' - சுயம் - இல்லை என்று கூறுகிறார். உங்களுடைய சுயம், சுயமற்ற ஒன்று போலவே காணப்படுகிறது. உங்கள் இருப்புணர்வு கிட்டத்தட்ட இருப்புணர்வற்ற ஒன்றினைப்போல் இருக்கிறது. ஏன் அப்படி? காரணம் அதைப்பற்றி எதுவும் சொல்ல முடிவதில்லை, எந்த விவரணையும் போதுமானதாய் இருக்காது.

இவை ஐம்பூதங்கள், பஞ்சமூலங்கள். ஐந்து சரீரங்களுடனும் தொடர்புடையவை.

மூன்றாவது கொள்கை. நீங்கள் இவற்றைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று நான் விரும்புவதற்குக் காரணம், நாம் தற்போது விவாதித்துக் கொண்டிருக்கும் சூத்திரங்களைப் புரிந்து கொள்ள அவை உதவும் என்பதால்தான். அடுத்து ஏழு சக்கரங்கள் இருக்கின்றன. சக்கரம் என்ற வார்த்தை மையத்தைக் குறிக்காது. மையம் (center) என்ற வார்த்தையால் அதை விளக்க முடியாது, விவரிக்க முடியாது. காரணம் 'மையம்' என்று நாம் சொல்கிறபோது, அது நிலையான ஒன்றையே குறிக்கும். சக்கரம் என்றால் இயக்கத்தில் உள்ள (dynamic) தைக் குறிப்பதாகும். சக்கரம் சுழல்கிற சக்கரத்தைக் குறிக்கிறது. ஆக, சக்கரம் என்பது உங்கள் இருப்புணர்வில் உள்ள ஒரு ஆற்றல் மிக்க மையம், கிட்டத்தட்ட ஒரு சுழலைப் போன்றது, சுழற்காற்று போன்றது. அது வேகம் மிக்கது, தன்னைச் சுற்றி ஒரு சக்திப் புலத்தைத் தோற்றுவித்துக் கொள்வது.

ஏழு சக்கரங்கள். முதலாவது ஒரு பாலம், கடைசியும் ஒரு பாலம். மிச்சமுள்ள ஐந்தும் ஐந்து மகாபூதங்களுடன் தொடர்பு உடையவை. பாலுணர்வு ஒரு பாலம் உங்களுக்கும், 'பிரகிருதி' என்று சொல்லப்படுகிற இயற்கைக்கும் இடையே உள்ள பாலம். சஹஸ்ராரம்

என்கிற ஏழாவது சக்கரம் ஒரு பாலந்தான், உங்களை நரகத்துடனும் சொர்க்கத்துடனும் இணைப்பது.

இதுவே பதஞ்சலி முறையின் அடிப்படை அமைப்பு ஆகும். இது கட்டுப்பாடற்ற போக்கினைக் கொண்டது. இதனை ஒரு கருவியாகப் பயன்படுத்தப்பட வேண்டும். ஒரு கோட்பாடாகக் கருதி விவாதிக் கக்கூடாது. எந்தவோர் இறைமையிலும் (theology) அது ஒரு கோட்பாடாக இடம் பெறவில்லை. அது ஒரு பயனைக் குறிக்கோளாய்க் கொண்ட வரைபடம். நீங்கள் அறிந்திராத ஒரு நிலப்பரப்புக்கு, அதற்குமுன் சென்றிராத ஒரு நாட்டுக்கு வரைபடத்துடன் போகிறீர்கள். அந்த வரைபடம் உண்மையிலேயே நிலப்பகுதியை உருப்படுத்தவிலலை. வரைபடம் சிறியது, நிலப்பகுதி பெரியது. வரைபடத்தில் நகரங்கள் வெறும் புள்ளிகளாய் இருக்கும். அந்தப் புள்ளிகள் எப்படி நகரங்களுடன் பொருந்துவதாகும்? வரைபடத்தில் சாலைகள் வெறும் கோடுகளாகவே இருக்கும். சாலைகள் எப்படிக் கோடுகளாய் இருக்க முடியும்? மலைகள் குறிக்கப்பட்டிருக்கும், ஆறுகள் அடையாளக் குறியைப் பெற்றிருக்கும் - சிறியவை விடப்பட்டிருக்கும். பெரியவை மட்டுமே குறிப்பிடப்பெறும். இது ஒரு வரைபடம், கோட்பாடு அல்ல.

சரீரங்கள் ஐந்து மட்டும்தான் என்று எண்ணிவிடாதீர்கள், பல சரீரங்கள் இருக்கின்றன. காரணம், சரீரங்களுக்கு இடையே அதை இணைப்பதாய் இன்னொன்று இருக்கும். நீங்கள் ஒரு வெங்காயத்தைப் போல் அடுக்குகளின் மீது அடுக்குகளைக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் இந்த ஐந்து போதுமா? ம்ம்... இவை முக்கியமான சரீரங்கள். எனவே அதைப்பற்றி அதிகம் கவலைப்படாதீர்கள். ம்ம்... காரணம் புத்தமதத்தினர் ஏழு சரீரங்கள் இருப்பதாகவும், ஜைனர்கள் ஒன்பது சரீரங்கள் இருப்பதாகவும் சொல்கிறார்கள். அதில் தவறில்லை, முரண்பாடு இல்லை. காரணம் அவை வெறும் வரைபடங்கள். நீங்கள் உலக வரைபடத்தை ஆராய்ந்தால் பெரிய நகரங்களும் காணாமல் போய்விட்டிருக்கும், பெரிய நதிகள் இடம் பெற்றிருக்காது. ஒரு நாட்டின் வரைபடத்தை ஆராய்ந்தால் பல புதிய அம்சங்கள் அதில் காட்சியளிக்கும். அவை உலக வரைபடத்தில் காணாப்படாதவை. ஒரு மாநில வரைபடத்தை நீங்கள் ஆராய்ந்தால் மேலும் பல செய்திகள் இருக்கும். ஒரு மாவட்ட வரைபடத்தை ஆராய்ந்தால் உண்மையில் மேலும் பல தகவல்கள் கிடைக்கும். அது ஒரு நகரத்தின் வரைபடம்

என்றால் கூடுதலான தகவல்கள் கிடைக்கும். ஒரு வீட்டின் வரைபடமாயின் இன்னும் பல...

ஜைனர்கள் சொல்கிறார்கள் ஒன்பது என்று. புத்தர்கள் சொல்கின்றனர் ஏழு என்று. பதஞ்சலியோ ஐந்து என்கிறார். மூன்று மட்டுமே என்று சொல்கிற சிந்தனாமுறைகளும் உண்டு. அவை எல்லாமே உண்மை எனலாம். காரணம் அவை தர்க்க முறையில் எதையும் விளக்கவில்லை. உங்கள் செயல்பாட்டுக்கு உதவும் சில கருவிகளை மட்டுமே அவை வழங்குகின்றன.

நான் ஐந்து என்பதே மிகச்சரியான அளவு என்று கருதுகிறேன். காரணம் ஐந்துக்கு மேல் என்கிறபோது ரொம்ப அதிகம். ஐந்துக்கும் கீழ் என்கிற போது ரொம்பக் குறைவு. ஐந்தே குறையற்றதாய் தெரிகிறது. பதஞ்சலி ஒரு சமநிலைச் சிந்தனையாளர்.

இந்தச் சக்கரங்களைப் பற்றி இன்னும் சில தகவல்கள். முதலாவது சக்கரம், முதல் ஆற்றல் மையம் பாலுணர்வு - மூலாதாரம். இது உங்களை இயற்கையுடன் இணைக்கிறது. கடந்த காலத்துடன் இணைக்கிறது. எதிர்காலத்துடன் இணைக்கிறது. இரண்டு பேர் ஆடிய பால் சார்ந்த விளையாட்டில் தோன்றியவர்கள் நீங்கள். உங்கள் பெற்றோர்களின் பாலுறவு அல்லவா உங்கள் பிறப்புக்குக் காரணம். பால் சார்ந்த மையத்தின் வழியே, உங்கள் பெற்றோர்களுடன் நீங்கள் தொடர்பு கொண்டிருக்கிறீர்கள். அவர்கள், அவர்களுடைய பெற்றோர்களுடன் என்று அது மேலும் மேலும் போய்க் கொண்டிருக்கும். பால்சார்ந்த மையத்தின் வழியே கடந்துபோன காலத்துடன் நீங்கள் தொடர்புடையவராயிருக்கிறீர்கள். பால் மையத்தின் வழியே நூல் தொடர்கிறது. நீங்கள் ஒரு குழந்தையைப் பிறப்பிப்பதன் மூலம் வருங்காலத்துடனும் தொடர்புடையவராகிறீர்கள்.

இயேசு கொஞ்சம் முரட்டுத்தனமான முறையில் வலியுறுத்திச் சொல்கிறார். ‘உங்களுடைய தந்தையையும், தாயையும் நீங்கள் வெறுக்காமல் என்னை அடையவோ, பின்பற்றவோ முடியாது’ என்று. இது கொஞ்சம் கடுமையாய்த் தெரியலாம். இத்தகைய கொடூர வார்த்தைகளை இயேசு போன்ற ஒருவரிடமிருந்து நாம் எதிர்பார்த்திருக்க மாட்டோம். அவர் கருணையின் வடிவமல்லவா. அன்பின் திருவுருவம் அல்லவா. அவரிடமிருந்தா இத்தகைய வார்த்தைகள்? இந்த வார்த்தைகளை அவர் எதற்காகப் பயன்படுத்தினார்? ‘நீங்கள் என்னைப் பின்பற்ற விரும்பினால் உங்கள்

தாயை வெறுங்கள், தந்தையை வெறுத்து விடுங்கள்' என்று சொல்வது ஏன்? அதன் பொருள் இதுதான் - பாலுறவு சார்ந்த ஒன்றைக் கைவிடுங்கள். அவர் குறிப்பாலுணர்த்த முற்படுவது: பால் சார்ந்த மையத்துக்கு அப்பால் செல்லுங்கள். அந்நிலையில் நீங்கள் உடனே கடந்த காலத்துடன் தொடர்பற்றவராகி விடுகிறீர்கள். வருங்காலத் துடனும் உங்களுக்குத் தொடர்பிருக்காது.

பாலுறவு உங்களைக் காலத்தின் ஒரு பகுதியாக்குகிறது. நீங்கள் பாலுறவைக் கடந்ததும் சாசுவதமாகி விடுவீர்கள், காலத்தின் ஒரு பகுதியாய் இருக்க மாட்டீர்கள். அப்போது, நிகழ்காலம் மட்டுமே உடனடியாய் இடம் பெற்றிருக்கும். நீங்கள் நிகழில் (present) இருப்பீர்கள். ஆனால், பால் சார்ந்த மையத்தின் வழியே பார்க்கிறபோது நீங்கள் கடந்த காலத்துக்குரியவராகிறீர்கள்,. காரணம், உங்களுடைய கண்கள் உங்கள் தாயினுடைய, தந்தையினுடைய நிறத்தைப் பெற்றிருக்கும். இலட்சக்கணக்கான தலைமுறைகளின் அணுக்களை, உயிரணுக்களை உங்கள் உடம்பு பெற்றிருக்கும். உங்களுடைய ஒட்டு மொத்த அமைப்பும் ஒரு நீண்ட தொடர்ச்சியின் பகுதியேயாகும்.

நீங்கள் குழந்தைகள் பெற்றாலன்றி உங்கள் பெற்றோர்களுக்குப் பட்ட கடனை உங்களால் அடைக்க முடியாது என்று இந்தியர்கள் சொல்லுவார்கள். நீங்கள் உண்மையிலேயே திரும்பச் செலுத்த விரும்பினால் வேறு வழியில்லை. உங்கள் தாய் உங்களிடம் அன்பு வைத்திருந்தனர். உங்கள் தந்தை உங்களை நேசித்திருந்தார். தற்போது உங்களால் என்ன செய்ய முடியும், அவர்கள் போய் விட்ட நிலையில்? உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் தாயாக முடியும், ஒரு தந்தையாக முடியும். உங்கள் பெற்றோர்கள் எங்கிருந்து வந்தார்களோ, நீங்கள் எங்கிருந்து வந்தீர்களோ, உங்கள் குழந்தைகள் எங்கிருந்து வருவார்களோ அந்த இயற்கையிடம் அதைத் திருப்பிச் செலுத் துங்கள்.

பாலுணர்வு ஒரு பெரிய தொடர்பு. ஒட்டு மொத்த உலகத்தையும் அது தொடர்புப்படுத்துகிறது. அது மற்றவர்களுடன் இணைக்கிறது. நீங்கள் அதைக் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் பால் சார்ந்த விதத்தில் உணர்கிறபோது நீங்கள் மற்றவர்ளைப் பற்றி எண்ணத் தொடங்கு கிறீர்கள். பாலுணர்வுத் தூண்டல் இல்லாதபோது அடுத்தவரைப் பற்றிய எண்ணம் வராது. பாலுணர்வைக் கடந்தவர், மற்றவற்றையும் கடந்தவர்தான். அவர் சமூக அமைப்பில் நடந்தாலும் தனியாக நடப்பார்.

ஆனால் பாலுணர்வு கொண்டவர் எவரஸ்டின் உச்சியில் தனியாளாய் இருந்தாலும். அடுத்தவர்கள்ளப் பற்றி எண்ணமிட்டபடிதான் இருப்பார். அவரை ஆழ்ந்து சிந்திக்கும்படி சந்திரனுக்கு அனுப்பி வைத்தாலும், அவருடைய சிந்தனை அடுத்தவரைப் பற்றியதாகவே இருக்கும்.

பாலுணர்வுப் பாலம் மற்றவர்களுடன் இணைப்பை ஏற்படுத்து கிறது. பாலுணர்வு மறைந்தால் தொடர்பும் மறைந்துவிடும். முதல் முறையாக நீங்கள் ஒரு தனி நபராகிறீர்கள். அதனால்தான் மக்கள் பாலுறவில் மன உறுத்தல் அடைகிறார்கள். காரணம் அது இரண்டு விளிம்புகளைக் கொண்டது. அது மற்றவர்களுடன் உங்களை இணைக்கிறது. உங்களைத் தனியாளாக இருக்க விடுவதில்லை. நீங்கள் நீங்களாக இருக்க அது அனுமதிக்காது. அது உங்களை அமைப்புகளில், அடிமைத் தனங்களில் தளைப்பட்டுக் கிடக்கும்படி கட்டாயப்படுத்தும். ஆனால், நீங்கள் அதனைக் கடக்கும் வழியை அறியாவிடில், உங்கள் ஆற்றலைப் பயன்படுத்த அது ஒன்றே வழியாய் தெரியும். அது ஒரு பாதுகாப்பு அமைவாகி (safety valve) விடுகிறது.

முதலாவது மையமான மூலாதாரத்தில் வாழ்கிற மக்கள், ஒரு முட்டாள்தனமான காரணத்துக்காகவே அங்கிருக்கிறார்கள். அவர்கள் தொடர்ந்து சக்தியைத் தோற்றுவித்துக் கொண்டும், அதனைச் சுமந்து கொண்டும் இருக்கிறார்கள். பிறகு அதனை வீசியெறிகிறாகள். அவர்கள் உண்கிறார்கள், உழைக்கிறார்கள், உறங்குகிறார்கள். சக்தியை உருவாக்கப் பலவிதமான செயல்களில் ஈடுபடுகிறார்கள்.

பிறகு, அவர்கள் சொல்கிறார்கள், ‘அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது? அது ரொம்ப கனக்குது’ என்று. அதன்பிறகு அதை வீசியெறிந்து விடுகிறார்கள். அதை எறிந்த பின் மீண்டும் தங்களை வெறுமையாய் அவர்கள் உணர்கிறார்கள். புதிய எரிபொருள், புதிய உணவு, புதிய வேலை இவற்றால் தங்களை நிரப்பிக் கொண்டு மறுபடியும் சக்தியைப் பெற்று விடுகிறார்கள். ‘ரொம்பவே பெரிய அளவாய்’ உணர்கிறார்கள். ஏதாவதொரு வழியில் அதை விடுவிக்க வேண்டியிருக்கிறது. பாலுறவே விடுவிக்கக் கூடியதாய் தெரிகிறது. சக்தியைக் குவிப்பது, சக்தியை வீசியெறிவது, சக்தியை மறுபடியும் குவிப்பது, மறுபடியும் வீசியெறிவது என்று நிலை மாற்றத்துடன் கூடிய ஒரு வட்டமாய் அது இருக்கிறது. அது அறிவுக்குப் பொருத்த மற்றதாகவே தெரிகிறது.

சக்தியைப் பயன்படுத்தக்கூடிய சிறந்த மையங்கள் உங்களுக்குள் இருப்பதை நீங்கள் அறியவில்லையெனில், அதனை ஆக்கப் பூர்வமான வழியில் பயன்படுத்துங்கள். இல்லையேல் பால் சார்ந்த வட்டத்துக்குள் சுழன்றபடி இருக்க வேண்டியதுதான். அதனால்தான், அத்தனை மதங்களும் ஏதேனும் ஒரு வகையில் பால்சார்ந்த கட்டுப்பாட்டை வலியுறுத்துகின்றன. அதை அடக்க முடியும் ஆனால் ஆபத்தாகிவிடும். புதிய மையங்கள் திறக்கவில்லை என்றால் நீங்கள் சக்தியைத் தேக்குவீர்கள், அதுபற்றிய வெறுப்பை அல்லது விருப்பமின்மையைத் தெரிவிப்பீர்கள். என்றாவதொரு நாள் வெடிப்பீர்கள், உணர்ச்சி மிகைப்புள்ளாகி (neurotic) விடுவீர்கள். பித்துப் பிடித்தது போலாகி விடும். அந்நிலையில், அதில் இருந்து விடுபடுவதே சிறப்பு. ஆனால், சக்தியைக் கிரகித்துக் கொள்ளக்கூடிய மையங்கள் இருக்கின்றன. அவை சிறந்த இருப்புணர்வை, சிறப்பான சாத்தியங்களை உங்களுக்கு வெளிப்படுத்தும்.

கடந்த சில நாட்களில் நாம் பாலுறவு மையத்துக்கு அருகில் உள்ள ஹரா (hara) என்கிற மையத்தைப் பற்றி (இறப்பு மையம்) நாம் சொல்லிக் கொண்டிருந்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கும். சக்தியானது பாலுறவு மையத்துக்கப்பால் செல்கிற கணத்தில், அது ஹரா மையத்தைத் தொடவும் ஒருவர் அச்சத்துக்குள்ளாகிறார், அதனால்தான் மக்கள் பாலுறவு மையத்தைக் கடந்து செல்ல அஞ்சுகிறார்கள்.

ஆனால், அந்த இரண்டாவது மையம் பிரவேசிக்கப்பட வேண்டியதாய், ஊடுருவி அடையப்பட வேண்டியதாயிருக்கிறது. 'நீங்கள் இறப்பதற்குத் தயாராக இல்லாவிடில் மீண்டும் பிறப்பதற்கு முடியாமல் போகும்' என்று இயேசு சொல்கிறபோது அதைத்தான் கருத்தில் கொண்டார்.

இரண்டு மூன்று நாட்களுக்கு முன், ஈஸ்டர் தினத்தன்று, 'பகவானே, இன்று ஈஸ்டர் பண்டிகை, தாங்கள் ஏதேனும் சொல்ல விரும்புகிறீர்களா?' என்று ஒருவர் கேட்டார். என்னிடம் சொல்வதற்கு ஒன்றுதான் உள்ளது. அது எல்லா நாளும் ஈஸ்டர் என்பதே. காரணம் ஈஸ்டர் திருநாளில்தான் இயேசு உயிர்த்தெழுந்தார்- அன்றுதான் சிலுவையில் அறையப்பட்டவர் மீட்டெழுச்சி கொண்டது. இறந்தவர் மறுபடியும் பிறந்தது. நீங்கள் ஹரா மையத்தில் நுழைவதற்குத் தயாராயிருந்தால் எல்லா நாளும் ஈஸ்டராகிவிடும். நீங்கள் முதலில் சிலுவையில் அறையப் பெறுவீர்கள், சிலுவை உங்களுடைய ஹரா

மையத்தில் உள்ளது. ஆம், அதை நீங்கள் முன்பே சுமந்து கொண்டிருக்கிறீர்கள், அதை நோக்கி நகர்ந்தால் போதும், அதன் வழியே நீங்கள் இறப்பீர்கள், அதன்பிறகு அதில் மீண்டும் பிறத்தல் இருக்கிறது.

நீங்கள் ஹரா மையத்தில் இறந்தால், இறப்பு மறைந்து விடுகிறது. முதல் தடவையாய் ஒரு புதிய உலகு பற்றிய தெரிநிலையை நீங்கள் பெறுகிறீர்கள், புதிய பரிமாணத்தை அடைகிறீர்கள். அதன் பிறகு ஹராவைவிட உயர்ந்த மையத்தை நீங்கள் கண்டு கொள்ள முடியும். அதுதான் தொப்புள் மையம். தொப்புள் மையமே உயிர்த்தெழுதலுக் கானது, காரணம் தொப்புள் மையந்தான் சக்தியைப் பெருமளவில் பாதுகாக்கிற மையம். அது சக்தியின் தேக்கம் எனலாம்.

பாலுறவு மையத்தில் இருந்து ஹரா மையத்துக்கு நீங்கள் சென்றுவிட்டதை அறிந்து கொண்டீர்கள், தற்போது உள்நோக்கிச் செல்லும் சாத்தியம் இருப்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். நீங்கள் ஒரு கதவைத்தான் திறந்தீர்கள். எல்லாக் கதவுகளையும் திறக்காவிடில் நீங்கள் அமைதியாய் இருக்க முடியாது. தற்போது நீங்கள் நுழைவாயிலிலேயே இருந்துவிட முடியாது. நீங்கள் மாளிகையில் நுழைந்து விட்டீர்கள். பிறகு, ஒவ்வொரு கதவாய் திறந்து கொண்டே செல்ல வேண்டியதுதான்.

மத்தியில் இருப்பது இருதய மையம். அது மேல் பகுதியையும், கீழ்ப் பகுதியையும் பிரிக்கிறது. முதலில் இருப்பது பால் சார்ந்த மையம், அடுத்தது ஹரா, அதற்கடுத்தது தொப்புள், அதன்பிறகு வருவது இருதய மையம். மூன்று மையங்கள் கீழே உள்ளன. மூன்று மையங்கள் அதற்கும் மேலே உள்ளன. இருதயம் மிகச்சரியாக நடுவில் உள்ளது.

நீங்கள் சாலமன் முத்திரையைப் பார்த்திருப்பீர்கள். யூத மதத்தில், குறிப்பாக கபாலிஸ்டிக் (Kabbalistic) சிந்தனைகளில், சாலமன் முத்திரை முக்கியக் குறியீடுகளில் ஒன்றாகும். அந்த சாலமன் முத்திரையே இருதய மையத்தின் குறியீடாய் உள்ளது. பால் மையம் கீழ்நோக்கிச் செயல்படுவது எனவே தான் அது கீழ்நோக்கிய முக்கோணமாய் இருக்கிறது. சஹஸ்ராரம் மேல்நோக்கி நகர்வது, எனவே சஹஸ்ராரம் மேல் நோக்கிச் சுட்டும் முக்கோணத்தைக் கொண்டிருக்கிறது. இருதயம் மத்தியில் உள்ளது. அங்கே பால்மைய முக்கோணம் சஹஸ்ரார முக்கோணத்தைச் சந்திக்கிறது. இரண்டு முக்கோணங்களிலும் சந்தித்து, ஒன்றில் ஒன்றாய் ஐக்கியப்பட்டு அறுமுனை கொண்ட ஒரு நட்சத்திரம்

ஆகிறது. அதுவே சாலமன் முத்திரை. இருதயம் சாலமன் முத்திரையாக உள்ளது.

இருதய மையத்தைத் திறந்து விட்டால் மிகச்சிறந்த சாத்தியங்கள் உங்களுக்கு அநுகூலமாய் அமையும். இருதயத்துக்குக் கீழே நீங்கள் ஒரு சாதாரண மனிதன். இருதயத்துக்கு அப்பால் நீங்கள் மாமனிதராகி விடுகிறீர்கள்.

இருதய மையத்துக்குப் பிறகு உள்ளது குரல்வளை மையம், அதன்பிறகு உள்ளது முக்கண்மையம், அதற்கடுத்து சஹஸ்ராரம்.

இருதயம் அன்பை உணர்கிறது. இருதயம் அன்பை உட்கிரகிக்கிறது. அன்பாகவே ஆகிவிடுகிறது. குரல்வளை அன்பை முகபாவனையிலும் பேச்சிலும் வெளிப்படுத்துகிறது. மற்றவர்களோடு பகிர்ந்து கொள்கிறது. மற்றவர்களுக்கு வழங்குகிறது. நீங்கள் மற்றவர்களுக்கு அன்பை வழங்கினால் மூன்றாவது கண் என்று சொல்லப்படுகிற மையம் திறந்து கொள்ளும். செயல்படத் தொடங்கும். நீங்கள் வழங்கத் தொடங்கினாலே உயரப் போவீர்கள் மேலும் மேலும். அடுத்தவர்களிடம் இருந்து எடுத்துக் கொண்டேயிருப்பவர் கீழ் நோக்கிச் செல்வார். அடுத்தவர்களுக்கு வழங்கிக் கொண்டே யிருப்பவர் மேல்நோக்கிச் செல்வார். கருமித்தனம் வீழ்ச்சியடையச் செய்யும். மோசமான சாத்தியம். பகிர்ந்து கொள்வது மிகச்சிறந்த சாத்தியம்.

ஐந்து சரீரங்கள், ஐந்து மகாபூதங்கள், ஐந்து மையங்கள் அத்துடன் இரண்டு பாலங்கள். இதுதான் கட்டமைப்பு, வரைபடம். இந்தக் கட்டமைப்பின் பின்னே இருப்பது யோகியின் முழுமையான முயற்சி, ஒவ்வொரு மூலை முடுக்கிலும் சம்யமத்தைக் கொண்டு வருவதன் மூலம் அவன் முழுமையான ஒளியைப் பெறுகிறான், ஞானியாகிறான்.

தற்போது சூத்திரம்:

*'உடலுக்கு வெளியே உள்ள மனத்தின் உண்மையான விருத்திகளுக்கு, 'உடலற்ற மாபெரும் நிலை' என்று பெயர். அதன் மீது சம்யமம் செய்வதால் ஆன்ம ஒளியை மறைக்கின்ற மறைப்பு விலகி விடுகிறது.'*

நீங்கள் மனோமய சரீரத்துக்கு அப்பால் சென்றதும் நீங்கள் மனமல்ல, சாட்சிபாவம் என்பதை முதல்முறையாய் உணர்ந்து கொள் கிறீர்கள். மனதுக்குக் கீழே நீங்கள் அதனுடன் அடையாளப்படுத்திக்

கொண்டிருக்கிறீர்கள். எண்ணங்களை, மனம் சார்ந்த கற்பனைகளை, கருத்துகளை நீங்கள் தெரிந்து கொண்டதும் அவை வெறும் பொருள்களாகி விடும். உங்கள் உணர்வு நிலையில் மிதக்கும் மேகங்கள் அவை. நீங்கள் அவற்றில் இருந்து விலகிவிடுங்கள் - உடனடியாய்.

'உடலுக்கு வெளியே உள்ள மனிதன் விருத்திகளுக்கு 'உடலற்ற மாபெரும் நிலை' என்று பெயர். உடலுக்கு அப்பாற்பட்டவராகி விடுகிறீர்கள் நீங்கள். மகாவிதேகம் என்றால் ஒருவர் உடலுக்கு அப்பாற்பட்ட நிலையை அடைவது. அவர் அதற்கு மேலும் எந்தச் சரீரத்துக்கும் உட்பட்டவரல்லர், தான் முடிவற்றவர், எல்லையற்றவர் என்று அவர் அறிந்து கொள்வதையே அது குறிக்கும். எல்லைகள் அனைத்தும் தடுப்புக்காவல் செய்கிறவை, சிறையிடுகிறவைதாம். அவற்றைத் தகர்த்தெறிந்து, அவற்றைக் கைவிட்டு, இந்த எல்லையற்ற வானத்துடன் அவர் ஒன்றாகி விடுகிறார்.

தம்மை எல்லையற்றவராய் ஒருவர் உணர முடிகிற தருணமே சிறந்த தருணம்.

'...அதன் மீது சம்யமம் செய்ய, ஒளியை மறைத்திருந்த எல்லா மறைப்புகளும் அகன்று விடுகின்றன. பல மறைப்புகளுக்குள்ளாக மறைந்து கிடக்கும் ஒளியைப் போன்றவர் நீங்கள். மெள்ள மெள்ள ஒவ்வொரு மறைப்பும் விலக்கப்படுகிறது. மிகப்பெரிய ஒளி ஊடுருவிப் பரவுகிறது.

மனோமய சரீரம், மனம் சார்ந்த உடல் கைவிடப்பட்டதும் நீங்கள் மனம்அற்ற நிலையை அடைகிறீர்கள். இங்கே நாம் செய்கிற முயற்சிகள் எல்லாம் மனோமய சரீரத்துக்கு அப்பால் எப்படிச் செல்வது என்பதற்காகத்தான், சிந்திக்கும் செயல்முறையல்ல நான் என்பதை எப்படி உணர்ந்து கொள்வது என்பதுதான்.

'பூதங்களின் தூல மற்றும் சூட்சுமத் தன்மை அவற்றின் முக்கியப் பண்புகள், அவற்றில் அடங்கியிருக்கும் தன்மை, ஆன்மாவின் அனுபவத்துக்குப் பொருட்டாயிருத்தல் இவற்றின் மீது சம்யமம் செய்தால் பூதங்களை வெற்றி கொள்ள முடியும்'

இது பதஞ்சலி சூத்திரங்களில் மிக இன்றியமையாத ஒன்று. வருங்கால அறிவியலில் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். என்றாவது ஒருநாள் இந்தச் சூத்திரத்தின் பொருளை அறிவியல் கண்டுபிடிக்கும்.

அறிவியல் முன்பே அதைநோக்கிய பாதையில்தான் இருக்கிறது. உலகிலுள்ள அனைத்து மூலகங்களும் - மண், ஆகாயம், நெருப்பு உள்ளிட்ட பஞ்ச மகாபூதங்கள் இன்மை (nothingness) யில் இருந்தே வந்தன. இன்மைக்கே மறுபடியும் செல்லும் என்பதையே இந்தச் சூத்திரம் தெரிவிக்கிறது. இன்மையில் இருந்து வருகிற அனைத்தும் சேர்ந்த நிலையில் இன்மைக்குத் திரும்பிச் சென்று அங்கேயே இயக்கமற்று இருக்கும்.

தற்போது அறிவியலில் குறிப்பாக இயற்பியல் வல்லுநர்கள் 'பொருளானது இன்மையில் இருந்து வந்தது' என்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எந்த அளவு பொருளின் ஆழத்துக்குச் செல்லச் செல்ல, நழுவும் தன்மை பெற்றதாகி, முடிவில் அவர்களுடைய பிடியை விட்டு தப்பிச் சென்று விடுகிறது. எதுவும் மிஞ்சவில்லை, வெற்றிடம், தூய்மையான வெற்றிடம் மட்டுமே இருக்கிறது. தூய வெற்றிடத்தில் இருந்தே அனைத்தும் தோன்றின. இது தர்க்க முரண்பாடாய் தெரியலாம். வாழ்க்கையே அறிவுக்குப் புறம்பானது (illogical) தான். நவீன அறிவியல் முற்றாக தர்க்கத்துக்கு ஒவ்வாததாகிவிட்டது. காரணம், உங்களுடைய தர்க்கத்திலேயே நீங்கள் தொடர்ந்து இருந்து கொண்டிருந்தால், உங்களால் மெய்ம்மையை நோக்கிச் செல்ல முடியாது. நீங்கள் மெய்ம்மைக்குள் செல்வதெனில் தர்க்கத்தை விட வேண்டியிருக்கும். உண்மையில் தர்க்கத்துக்கும் மெய்ம்மை (reality) க்கும் இடையே தேர்வு செய்யும்படி இருந்தால் நீங்கள் தர்க்கத்தை எப்படித் தேர்வு செய்வீர்கள்? நீங்கள் தர்க்கத்தைக் கைவிட வேண்டியிருக்கும்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால், மின்துகள்களும் *உகைப்பளவும் (Quanta) அறிவுக்குப் பொருந்தாத வகையில் செயலாற்றுவதை, ஒரு ஜென் துறவியைப் போல் நம்பத்தகாத முறையில் அபத்தமாய் செயல்படுவதை அறிவியல் நிபுணர்கள் தெளிவாகப் புரிந்து கொண்டனர். சில நேரங்களில் அவை அலைகளைப் போல் தோற்றமளித்தன. சில நேரங்களில் சிறு துகள்களாய் காட்சியளித்தன. அதற்கு முன், குறிப்பிட்ட ஒன்று சிறு துண்டுகளாக (particles) அல்லது அலைகளாக இருக்கும் என்பது வாய்விட்டுச் சொல்லாமலே புரிந்து கொள்ளப்பட்டது. ஒரே பொருள்

---

* *உகைப்பளவு (Quanta) - ஓர் எலக்ட்ரானை அதிக அளவு ஆற்றலுக்கு உயர்த்துவதற்குத் தேவைப்படும் ஒரு குறிப்பிட்ட அளவு ஆற்றல்.*

ஏக காலத்தில் இரண்டாக இருக்க முடியாது. ஒன்று, சிறு துகளாக இருக்க வேண்டும் அல்லது அலையாக இருக்க வேண்டும். புள்ளியே ஏக காலத்தில் கோடாகவும் இருக்க முடியாது. அது சாத்தியமில்லை. யூக்ளிட் அதனை ஒத்துக்கொள்ள மாட்டார், அரிஸ்டாட்டில் அதனை அடியோடு மறுத்து விடுவார். புள்ளி என்றால் புள்ளிதான். பல புள்ளிகள் ஒரே வரிசையில் இடம் பெறுகிற போதுதான் அது ஒரு கோடாக முடியும். ஆக, புள்ளியாக இருந்து கொண்டே ஒரு புள்ளி எப்படி கோடாகும்? அறிவுக்கு ஏற்புடைமையற்றதாகவே படுகிறது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அறிவியலாரின் ஒட்டுமொத்த மாளிகையும் தரையில் நொறுங்கி விழுந்தது. ஆம் உகைப்பளவும், மின் துகளும் என இரண்டு வழிகள் ஏக காலத்தில் செயல்படுகின்றன.

தர்க்க வல்லுநர்கள் (Logicians) வாதங்களை எழுப்பினர். 'இது சாத்தியமற்றது' என்று தெரிவித்தனர். இயற்பியலாரோ, 'நாங்கள் என்ன செய்ய முடியும்? அது சாத்தியமா, சாத்தியமற்றதா என்பதல்ல கேள்வி. அது அப்படித்தான் இருக்கிறது' என்றனர். 'இதில் நாங்கள் எதுவும் செய்வதற்கில்லை. உகைப்பளவு அரிஸ்டாட்டில் அறிவுறுத்தியபடி இல்லையென்றால் அதற்கு நாங்கள் என்ன செய்ய முடியும்? அது யூக்ளிடின் ஜியோமிதியுடன் ஒத்துப் போகவில்லை என்றால் எங்களால் என்ன செய்ய முடியும்? அது அப்படிச் செயலாற்றுகிறது. மெய்ம்மை எப்படிச் செயல்படுகிறது என்பதை, நாம் கவனித்தபடி இருக்க வேண்டியதுதான்' என்றும் அவர்கள் தெரிவித்தனர். மனித உணர்வு நிலை வரலாற்றின் நெருக்கடியான கணங்களில் இதுவும் ஒன்று.

அதன்பிறகு, குறிப்பிட்ட ஒன்று குறிப்பிட்ட ஏதோ ஒன்றில் இருந்து வெளிப்படுகிறது என்றே நம்பப்பட்டது. அது ரொம்ப எளிதாகவும், இயல்பாகவும், தெளிவாகவும் இருந்தது. ஏதுமற்ற ஒன்றில் (nothing) இருந்து ஏதோ ஒன்று (something) எப்படி வர முடியும்? அறிவியலார் பருப்பொருள் மறையவும், அறிவியலாய் எல்லாப் பொருளும் இன்மையில் இருந்தே வந்தன, அவை இன்மையிலேயே மறைகின்றன என்ற முடிவுக்கு வந்தனர். தற்போது அவர்கள் கருந்துளைகளை (black holes) பற்றிப் பேசுகிறார்கள். அந்தத் துளைகள் மிகப்பெரிய இன்மைகளின் துளைகள். நான் அவற்றை மிகப்பெரிய இன்மை என்று அழைப்பதற்குக் காரணம் இன்மை என்பது வெறும் இல்லாமை (absence) யாக இருந்துவிடவில்லை

என்பதால்தான். அது ஆற்றலால் நிரம்பியுள்ளது. ஆனால் அந்த ஆற்றல் இன்மையினுடையது ஆகும். எதையும் கண்டுபிடித்தாக வேண்டும் என்பதில்லை. அங்கு ஆற்றல் இருந்து கொண்டிருக்கிறது. தற்போது அவர்கள் பிரபஞ்ச இருப்பில் கருந்துளைகள் இருப்பதாகத் தெரிவிக்கிறார்கள். அவை விண்மீன்களுக்கு இணையாக இருக்கின்றன. விண்மீன்கள் நேர்தன்மை கொண்டவை. ஒவ்வொரு விண்மீனுக்கும் இணையாய் ஒரு கருந்துளை இருக்கிறது. விண்மீன் உண்மை கருந்துளை என்பது இன்மை. ஒவ்வொரு விண்மீனும் எரிந்து தீர்ந்தபின் ஒரு கருந்துளையாகி விடும். ஒவ்வொரு கருந்துளையும் ஓய்வுக்குப் பின் (இயக்கமற்று இருந்து பின்) விண்மீனாகி விடுகிறது.

பொருளும், பொருளற்றதும் தொடர்ந்து மாறிக் கொண்டேயிருக்கின்றன. பொருளானது பொருளல்லாததாகிறது. பொருளல்லாத ஒன்று பொருளாக மாறுகிறது. இந்த ஐம்பது ஆண்டுகளில் அறிவுக்குப் பொருந்தாத பலவற்றை அவர்கள் உணரும்படி ஆயிற்று. இன்றியமையாத காலப்பகுதிகளில் அதுவும் ஒன்றாகிவிட்டது. ஓர் அமைவுக்குள் (system) உட்படுத்த இயலாதபடி மிகப்பலவாய் பொருள்கள் அதிகரித்து விட்டன. ஓர் அமைவை எப்படி உருவாக்குவது? ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பென்றால் தன்னிறைவுடைய ஓர் அமைவை உருவாக்குவது எளிதாயிருந்தது. இப்போது சாத்தியமில்லை. மெய்ம்மை எல்லாப் பக்கங்களிலும் இருந்து, தன்னுடைய கோட்பாடுகள் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்று நினைப்பவர்களை (Doctrinaires) யும், அமைவுகளையும், கொள்கைகளையும் அழித்துப் போட்டது. மெய்ம்மை அளவுக் கதிகமாகவே நிரூபித்துக் காட்டிவிட்டது.

அறிவியல் நிபுணர்கள், 'அது இப்போதே நடந்து கொண்டிருக்கிறது' என்கிறார்கள். பதஞ்சலியோ 'அதை நிகழும்படி செய்ய முடியும்' என்கிறார். அது நிகழ்ந்து கொண்டிருக்குமாயின், ஏன் அதை நிகழும்படி செய்ய முடியாது? கொஞ்சம் கவனியுங்கள். நீங்கள் நீரைச் சூடு பண்ணுகிறீர்கள், நூறு டிகிரி வெப்பத்தில் அது ஆவியாகிறது. சூரியக் கதிர்கள் கடலில் இருந்தும், ஆறுகளில் இருந்தும், மேகங்களில் இருந்தும் நீரை ஆவியாக்கவும், மேகங்கள் உருவாயின. நீரானது மறுபடியும் ஆறுகளை வந்தடைந்தது. மறுபடியும் ஆவியாதல் நடைபெறுகிறது. பிறகு, மனிதன் தீயைக் கண்டு பிடித்தான். அதன் பிறகு அவன் நீரைக்காய்ச்சி ஆவியாகும்படி செய்தான்.

எது நிகழ்ந்து கொண்டிருந்தாலும், அதை வழிமுறைகளைக் கொண்டு நிகழ்த்த முடியும். நிகழ்த்துவதற்கான வழிமுறைகளைக் காண முடியும். முன்பே நிகழ்ந்து கொண்டிருக்கிற ஒன்று மெய்ம்மைக்கு எதிரானதாய் இருக்க முடியாது. அந்நிலையில் அதை எப்படி நிகழ்த்துவது என்பதை நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். பொருளானது பொருளல்லாத ஒன்றாக மாறும் என்கிறபோது பொருளல்லாத ஒன்று பொருளாக மாற முடியுந்தானே. பொருள்கள் எதிரெதிரான கொள்கை நிலை (polarity) களை மாற்றிக் கொள்ளுமெனில், பொருள்கள் இன்மை (nothingness) யில் மறையுமெனில் - இது முன்பே நிகழ்ந்து கொண்டிருக்குமாயின், அதை நிகழ்த்துவதற்கான வழி முறைகளைக் கண்டறிய முடியும். அந்த வழிமுறைகளைக் கொண்டு நிகழ்த்த முடியும் என்கிறார் பதஞ்சலி. இதுவே அவர் கூறும் செயல்முறை: உங்கள் இருப்புணர்வை நீங்கள், ஐந்து விதைகளுக்கும் அப்பால் அடையாளம் கண்டுகொண்டுவிட்டால் நீங்கள் பொருள்களுக்கு உருக்கொடுக்கவும் முடியும், பொருள்களை உருவற்றதாக்கவும் முடியும்.

அது சாத்தியமா இல்லையா என்பது அறிவியலாளரைப் பொறுத்தவரை இன்னும் கண்டறியப்பட வேண்டிய ஒன்றாகவே இருக்கிறது. ஆனால், அறிவுக்குப் பொருத்தமான தர்க்கமாகவே அது இருந்து கொண்டிருக்கிறது. தர்க்கம் சார்ந்த பிரச்சினை எதுவும் அதில் இல்லை.

'அதிலிருந்து நுண்ணிய தன்மை, பிற சித்திகள், உடல் சிறப்பு, உடலின் குணங்கள் அழியாமை எல்லாம் கைகூடும்.'

அதன்பிறகு எட்டு சித்திகளும் (யோகிகளின் எட்டு ஆற்றல்கள்) அடையப்படும். முதலாவது அணிமா, லகிமா, கரிமா இன்னபிறவும். யோகி தன்னுடைய எட்டு ஆற்றல்களைக் கொண்டு உடம்பை மறைக்கவும், உடம்பைச் சிறிதாக்கவும், கண்ணுக்குத் தெரியாத அளவு சிறிதாக்கவும், தான் விரும்பிய அளவுக்கு பெரிதாக்கவும் முடியும். தாங்கள் உடம்பை மறைப்பதும், குறுக்குவதும், பெருக்குவதும் அவர்களுடைய கட்டுப்பாட்டில் இருக்கிறது. ஒரே சமயத்தில் பல இடங்களில் காட்சியளிப்பதும் அவர்களால் முடிகிறதுதான்.

சாத்தியமற்றதாய் தெரியும். ஆனால் சாத்தியமற்றதும் போகப்போக சாத்தியப்படுவதாகிவிடும். பறப்பது மனிதனுக்கு முடியாத காரியமாயிருந்தது. ரைட் சகோதரர்கள் பைத்தியங்களாய்

கருதப்பட்டார்கள். அவர்கள் ஆகாய விமானத்தை முதல் முறையாய் கண்டுபிடித்த பொழுது. மக்களிடம் சொல்வதற்குப் பயந்தார்கள். அவர்களுக்குத் தெரிந்துவிட்டால் எங்கே தங்களைப் பிடித்து. மருத்துவமனையில் அடைத்துவிடுவார்களோ என்கிற பயம். அவர்களுடைய முதல் பறப்பு யாருக்கும் தெரியாமல் நிகழ்த்தப்பட்டது. சகோதரர்களாகிய அவர்கள் இருவர் மட்டுந்தான். தங்களுடைய முதல் விமானத்தை ஒரு நிலவறையில் ஒளிந்து இருந்து கொண்டுதான் அவர்கள் கண்டுபிடித்தது. அப்போதுதானே அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது மற்றவர்களுக்குத் தெரியாமல் இருக்கும். யாராவது பறந்திருக்கிறார்களா என்ன? அவர்களுக்குப் பைத்தியம் முற்றிப் போய்விட்டது என்றே மக்கள் நினைத்துக் கொண்டார்கள். அவர்களுடைய முதல் பறப்பு ஆறு நொடிகளுக்குத்தான். ஆனால் அந்த மிகக்குறுகிய அவகாசமே வரலாற்றை மாற்றப் போதுமானதா யிருந்தது. அது சாத்தியமாகிவிட்டது. அணுவைப் பிளக்க முடியும் என்று யாரும் ஒரு போதும் எண்ணிப் பார்த்ததில்லை. அது பிளக்கப்பட்டது. தற்போது மனிதன் முன்பிருந்த நிலைக்குத் திரும்பி முடியாதவனாகி விட்டான்.

முடியாதென்று நினைத்திருந்த காரியங்கள் பலவும் நடந்தேறிவிட்டன. நாம் சந்திரனைச் சென்றடைந்து விட்டோம். அது சாத்தியமின்மையின் குறியீடாக இருந்தது ஒரு காலம். உலக மொழிகள் எல்லாவற்றிலும் 'நிலவைப் பிடிக்க ஆசைப்படாதே' என்றொரு சொலவடை இருந்ததுண்டு. நடக்கவே முடியாத ஒன்றில் நாட்டம் வைக்கக்கூடாது என்பதுதான் அதன் பொருள். அந்தப் பேச்சையெல்லாம் நாம் மாற்றிக் கொள்ள வேண்டியதாகிவிட்டது. உண்மையில் நாம் சந்திரனை அடைந்துவிட்ட படியால், தற்போது பாதையில் எந்தத் தடையும் இல்லை, எதுவும் நம்மைத் தடுப்பதற் கில்லை. தற்போது எல்லாமே கிடைக்கக்கூடியதாகி விட்டது. நேரம்தான் பிரச்சினை.

ஒளியின் வேகத்தில் செல்லக்கூடிய ஒரு வாகனத்தை நாம் கண்டுபிடித்துவிட்டால், ஒருவர் பயணம் செய்து கொண்டே இருக்க முடியும். அவர் முதுமையடைய மாட்டார் என்கிறார் ஐன்ஸ்டீன். ஒளியின் வேகத்தில் செல்லக்கூடிய ஒரு விண் கல்த்தில் முப்பது வயதான ஒருவர் சென்று, முப்பது ஆண்டுகள் கழித்துத் திரும்புகிறார் என்று வைத்துக் கொள்வோம். அப்போதும் அவர் முப்பது

வயதிலேயே இருந்து கொண்டிருப்பார். அவருடைய சகோதரர்களும், நண்பர்களும் முப்பது வயது கூடியவர்களாகக் காணப்படுவார்கள். ஒரு சிலர் இறந்து விட்டிருப்பார்கள். ஆனால் அவர் மட்டும் முப்பது வயதுக் காரராகவே இருப்பார். நீங்கள் பேசுவது பொருளற்ற சொற் களாயிருக்கிறதே. ஐன்ஸ்டீன் சொல்கிறார்: 'ஒருவர் ஒளியின் வேகத்தில் செல்கிறபோது, காலமும் அதன் விளைவும் மறைந்து விடுகிறது' என்று. ஒருவன் முடிவற்ற அண்டவெளியில் பயணம் செய்துவிட்டு ஐநூறு ஆண்டுகள் கழித்துத் திரும்பிவர முடியும். இங்கு (உலகில்)உள்ள மனிதர்கள் போய்விட்டிருப்பார்கள், யாரும் அவரை அடையாளம் கண்டு கொள்ள முடியாது, அவராலும் மற்றவர்களை அடையாளம் காண முடியாது. ஆனால் அவர் அதே வயதில் இருப்பார். இந்த மண்ணுலகின் வேகத்தில் தான் நீங்கள் முதுமை அடைவது. அந்த வேகம் ஒளியின் வேகத்தில் இருந்தால் - உண்மையிலேயே மிகப்பெரிய வேகம் – அப்போது எந்த வகையிலும் நீங்கள் முதுமையடைய மாட்டீர்கள்.

ஐந்து சரீரங்களையும் நீங்கள் கடந்துவிட்டால் ஐம்பூதங்களையும் கடந்தவராவீர்கள் என்கிறார் பதஞ்சலி. தற்போது நீங்கள் விரும்பியவாறு எதையும் கட்டுப்படுத்தக்கூடிய நிலையில் இருக்கிறீர்கள். நீங்கள் மிகச்சிறிய உருவத்தைப் பெற விரும்பினால், மிகச் சிறியவராகி விடுவீர்கள், மிகப்பெரிய உருவெடுக்க விரும்பினால் மிகப்பெரிய உருவத்தைப் பெற்று விடுவீர்கள். நீங்கள் மறைந்து போக விரும்பினால் அதுவும் உங்களால் முடிகிறதுதான்.

யோகிகள் என்றால் அப்படி செய்தாக வேண்டும் என்பதில்லை. புத்தருக்கு அது தெரிந்திருக்கவில்லை. பதஞ்சலிக்கும் அது தெரியாது. பதஞ்சலி என்ன சொல்கிறார்? அத்தனை சாத்தியங்களையும் அவர் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

உண்மையில் மிக உயர்ந்த நிலைக்குச் சென்றவன் எதற்காக சிறியதாவதைப் பற்றி எண்ணப் போகிறான்? அவன் அப்படியெல்லாம் எண்ணுவதற்கு முட்டாள் அல்லவே. அவன் யானையாக வேண்டும் என்று எதற்காக விரும்புவான்? அதில் முக்கியக் கருத்து ஏதும் உண்டா என்ன? அவன் எதற்காக மறைவதற்கு விரும்ப வேண்டும்? மக்களுக்கு வேடிக்கைக் காட்டுகிற விருப்பமெல்லாம் அவனுக்குக் கிடையாது. அவன் மாயாஜாலக்காரன் அல்லன். மக்கள் கைதட்டிப் பாராட்ட வேண்டும் என்கிற விருப்பமும் அவனுக்கில்லை. பின்பு

எதற்காக? உண்மையில் ஒருவர் தம்முடைய இருப்புணர்வின் உச்சநிலையை அடைந்ததும், எல்லா விருப்பங்களும் மறைந்து விடுகின்றன. விருப்பங்கள் மறைகிற பொழுது சித்திகள் தோன்றும். இது ஒரு சிக்கலான நிலை - நீங்கள் பயன்படுத்த விரும்பாதபோது ஆற்றல்கள் உங்களை வந்தடைகின்றன. உண்மையில், பெற விரும்பியவன் ம்றைந்த பிறகே அவை வந்து சேர்கின்றன.

ஆக, யோகிகள் அத்தகைய செயல்களைச் செய்வார்கள் என்று பதஞ்சலி கூறவில்லை. அவர்கள் அவற்றைச் செய்வதற்குத் தெரிந்து வைத்திருக்கவில்லை. அவற்றைச் செய்ய முயன்றவர்கள் யோகி களல்லர். அப்படிச் சிலர் செய்திருந்தால் அவை தந்திரவேலைகளாக இருக்கும், அவர்கள் தந்திரக்காரர்களாக இருப்பார்கள், உண்மையில் அவற்றைச் செய்ய முடியாது.

தற்போது சத்யசாயி பாபா போன்றவர்கள், சுவிஸ் தயாரிப்புக் கடிகாரங்களை உருப்படுத்தி உருப்படுத்தி (materilize) க் காட்டு கிறார்கள். இவையெல்லாம் தந்திரங்கள், இத்தகைய தந்திரங்களில் யாரும் மயங்கிவிடக் கூடாது. சத்யசாயிபாபா செய்து காட்டுவதை யெல்லாம் செய்கிற, ஆயிரமாயிரம் மாயாஜாலக் காரர்கள் உலகெங்கிலும் இருக்கிறார்கள். ஆனால், மாயவித்தைக் காரர்களின் பாதங்களில் நீங்கள் விழுவதில்லை, காரணம் அவர்கள் தந்திர வேலை செய்பவர்கள் என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால், சமயம் சார்ந்த ஒருவர் அதே தந்திரத்தைச் செய்கிறபோது அதை நீங்கள் அற்புதம் என்று எண்ணிக் கொண்டு விடுகிறீர்கள்.

இவையெல்லாம் சாத்தியமாகிறவைதாம், ஆனால் இவற்றைப் பெற விரும்புகிறவர் இந்த ஆற்றல்களின் மூலம் அகந்தையில் தவறு செய்வார் என்பதால் இவை எய்தப் பெறுவதில்லை. இதனை உங்களுக்கு உணர்த்துவதே பதஞ்சலி யோக சூத்திரத்தின் இந்தப் பகுதியாகும். சித்து வேலைகளில் உங்களுக்கு ஆர்வம் இல்லாத போதுதான், சித்தாடும் சக்திகள் உங்களிடம் வந்து சேரும். நீங்கள் ஆசை வைத்தால் போதுமான விளைவை உண்டு பண்ண முடியாதவராகவே இருந்து விடுவீர்கள். நீங்கள் ஆசை கொள்ளாவிடில் ஆற்றல் மிக்கவராக இருப்பீர்கள். இதனை நான் வங்கித் தொழில் சட்டம் என்பேன். உங்களிடம் பணம் இல்லையென்றால் எந்த வங்கியும் பணம் கொடுக்காது. உங்களிடம் பணம் இருந்தால் எல்லா வங்கியும் பணம் கொடுக்கத் தயார்.

உங்களுக்குத் தேவையில்லாதபோது எல்லாமும் கிடைக்கக்கூடிய தாயிருக்கும். உங்களுக்குத் தேவை இருக்கிறபோது எதுவுமே கிடைக்காது.

'அழகு, அமைதி, வலிமை, வளைந்து கொடுக்காத திண்மை, இவற்றைக் கொண்டு உருவாக்கப்பட்டதே குறையற்ற சரீரமாகும்.'

பதஞ்சலி இந்தச் சரீரத்தைப் பற்றிச் சொல்லவில்லை. இந்தச் சரீரம் அழகாயிருக்கலாம். ஆனால் ஒருபோதும் முழுமையான அழகைப் பெற்றிருப்பதில்லை. இரண்டாவது சரீரம் இதைவிட அழகானது. மூன்றாவது அதைக் காட்டிலும் அழகானது. காரணம் அவை மையத் துக்கு வெகு நெருக்கமாய் செல்கின்றன. அழகு மையத்தினுடையது. அது பயணிக்க வேண்டிய தூரம் அதிகம் என்றாலும் அது மிகவும் கட்டுப்படுத்தப்பட்டதாயிருக்கிறது. நான்காவது சரீரம் ரொம்பவும் அழகானது. ஐந்தாவது சரீரம் தொண்ணூற்று ஐந்து சரீரம் குறைகளற்றது.

ஆனால், எது உங்கள் இருப்புணர்வோ, உண்மையில் எது நீங்களாக இருப்பதோ அது அழகாக, அமைதி நிரம்பியதாக வலிமையும் வளைந்து கொடுக்காத திண்மையும் கொண்டதாக இருக்கும். அது வளைந்து கொடுக்காத திண்மையைக் கொண்டிருக்கும். அதே நேரத்தில் தாமரையின் மிருதுத் தன்மையும் கொண்டதாக இருக்கும். அது அழகானது - ஆனால் உடைந்து போகக் கூடியதல்ல - வலிமை உடையது. அது வலிமையானது என்றாலும் கடினமானதல்ல. எதிரிடையான எல்லாமும் அதில் சந்திக்கின்றன... வைரங்களாலான ஒரு தாமரையைப் போல், அல்லது, தாமரை களாலான ஒரு வைரத்தைப் போல் அது இருக்கிறது. ஆணும் பெண்ணும் அங்கே சந்திக்கிறார்கள், கடந்து செல்கிறார்கள். சூரியனும் சந்திரனும் நேருக்குநேர் சந்திக்கின்றன, கடந்து செல்கின்றன.

யோகாவிற்கு பழைய சொற்றொடர் 'ஹதா' என்பதாகும். இந்த 'ஹதா' என்கிற சொல் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். 'ஹ' என்றால் சூரியன், 'த' என்றால் சந்திரன். 'ஹதா' என்றால் சூரிய சந்திரத் தொடர்பு. சூரியனும் சந்திரனும் ஒருங்கிணைந்திருக்கும் தன்மையே யோகம் (Unio mystica).

ஹதயோகிகளின் கூற்றுக் கிணங்க மனித சரீரத்தில் சக்திக்கான செல்வழிகள் மூன்று உண்டு. ஒன்று - பிங்கலை அது வலதுபக்க வழி.

இடது மூளையுடன் இணைக்கப்பட்டது. சூரிய ஊடகம். மற்றொன்று இடகலை - இது இடது பக்க வழி, வலது பக்க மூளையுடன் இணைந்தது. சந்திர ஊடகம். மூன்றாவதாக உள்ளது சுழுமுனை. இதனை நடுவழி எனலாம். இது சமநிலை உடையது - சூரிய சந்திர சேர்க்கையில் உருவானது.

வழக்கமாக உங்களுடைய சக்தி பிங்கலை அல்லது இடகலை வழியாகத்தான் செல்லும். யோகியின் சக்தியோ சுழுமுனை வழியாக செல்லத் தொடங்கும். சக்தி இவ்விரண்டு வழிகளுக்கும் இடையே செல்வதைத் தான் குண்டலினி என்கிறார்கள். உங்கள் முதுகுத் தண்டுக்கு இணையாக இந்த வழியாக இருக்கின்றன. சக்தி நடுவழியில் செல்கிறபோது நீங்கள் சமநிலையை அடைகிறீர்கள். அந்நிலையில் ஓர் ஆணாகவோ பெண்ணாகவோ இருக்க மாட்டார், கடினமாகவும் இருக்க மாட்டார் மென்மையாகவும் இருக்க மாட்டார். எதிரிடையானவை (opposites) சுழுமுனையில் மறைகின்றன, எதிரெதிர் கொள்கைளுந்தான். சஹஸ்ராரமே சுழுமுனையின் உச்சம்.

உங்கள் இருப்புணர்வின் கீழ்முனைப் பகுதியில் - மூலாதாரத்தில் (பால்மையம்) நீங்கள் தங்கி வாழ்ந்தால் அப்போது இடகலை அல்லது பிங்கலை வழியாகவே செல்வீர்கள், சூரியப்பாதை அல்லது சந்திரப்பாதை. நீங்கள் பிரிக்கப்பட்டிருப்பீர்கள். நீங்கள் மற்றொன்றை நாடிச் செல்வீர்கள், மற்றொன்றை வருந்தி வேண்டுவீர்கள். உங்களுக்குள் முழுமை அடையாதவராய் உணர்வீர்கள். நீங்கள் மற்றொன்றைச் சார்ந்திருக்க வேண்டும்.

உங்களுடைய சொந்த சக்திகள் உள்ளே தொடர்பாகி, உச்சக்கட்டப் பரவசம் உண்டாகும். இடாவும் பிங்கலையும் சுழுமுனையில் மறைகிறபோது பிரபஞ்சம் சார்ந்த பரவசம் ஏற்படும். அந்நிலையில் ஒருவர் சிலிர்ப்பெய்துவார், அந்தச் சிலிப்பு சாசுவதமானது. அவருடைய மெய்ம்மறந்த இன்பம் மேலும் தொடரும். பிறகு, ஒரு போதும் அவர் கீழிறங்குவதில்லை, தாழ்நிலை அடைவதில்லை. உயர்ந்த நிலையிலேயே இருந்து கொண்டிருப்பார்.

அந்த முழுமுடிவாய் உயர்த்தப்பட்ட நிலைதான் ஒருவருடைய உள்ளார்ந்த மையப்பகுதி (core) ஆகும். அதுவே அவருடைய இருப்புணர்வு (being).

மறுபடியும் நினைவில் கொள்ளுங்கள், அது ஒரு வரைபடம் என்பதையே நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். நாம்

நடைமுறையில் உள்ளவற்றைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதில்லை. இடகலை, பிங்கலை, சுழுமுனை இவற்றை அறுவைப் பகுப்பாய்வு (diqsect) செய்து பார்க்க முட்டாள்களும் இருக்கிறார்கள். அவர்கள் எங்கு தேடியும் அவற்றைக் காண முடியவில்லை. இவையெல்லாம் சுட்டிக் காட்டும் கருவிகள், குறியீடுகள் (பருப்பொருள் அல்லாததை பருப்பொருள் வகையில் கையாள்கிறவை) அவ்வளவுதான். உடம்பை அறுவைப் பகுப்பாய்வு செய்து மையங்களைக் கண்டுபிடிக்க முயன்ற முட்டாள்களும் உண்டு. மருத்துவர் ஒருவர் உடம்பில் மிகச்சரியாக எந்த இடத்தில் எந்த மையம் இருக்கிறது என்று மெய்ப்பிக்க ஒரு புத்தகம் எழுதியிருந்தார். இவையெல்லாம் முட்டாள்தனமான முயற்சிகள்.

யோகா தன்னுடைய வழியில் அறிவியல் சார்ந்ததல்ல. அது தொடர் உருவகம் சார்ந்தது (allegorical). அது மிகப்பெரிய தொடர் உருவகம். அது குறிப்பிடப்படாத ஒன்றைக் காட்சிப்படுத்தும். நீங்கள் உள்ளே சென்றால் அதைக் கண்டு கொள்வீர்கள், ஆனால் உடம்பை அறுத்துச் சோதிப்பதன் மூலம் இவற்றைக் காண முடியாது. இவை உயிரோட்டமான, காரண காரியத் தொடர்புக் கடங்காத நடப்பு எனலாம். வார்த்தைகள் சுட்டிக் காட்டுகிறவை, அவற்றின் எல்லைக்குள் அடைபட்டு விடாதீர்கள்.

இன்னும் ஒரு வார்த்தை: அது ஊர்ந்துவரேதாஸ். அதன் பொருள் சக்தியின் மேல்நோக்கிய பயணம் ஆகும். தற்போது நீங்கள் பால் மையத்தில் இருக்கிறீர்கள், அந்த மையத்தில் இருந்து சக்தியானது தொடர்ந்து கீழ்நோக்கி விழுந்தபடி இருக்கும். ‘ஊர்த்துவரேதாஸ்’ என்ற சொல் உங்கள் சக்தி மேல்நோக்கிச் செல்லத் தொடங்குவதைக் குறிக்கும்.

ஒரு நுட்பமான நடப்பு அது. அதில் செயல்படும்போது மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நீங்கள் எச்சரிக்கையாக இல்லாவிடில் நீங்கள் சரியான வழியினின்றும் விலகிப்போக அத்தனை சாத்தியங்களும் இருக்கின்றன. அது ஆபத்தானது. அதனால்தான் யோகிகள் அதனை ‘நாகசக்தி’ என்கிறார்கள். அது ஆபத்தானது. ஒரு பாம்பினைப் போன்றது. நீங்கள் பாம்புடன் விளையாடுகிறீர்கள். என்ன செய்வது என்று உங்களுக்குத் தெரியாவிட்டால் ஆபத்துதான். நீங்கள் நஞ்சுடன் விளையாடுகிறீர்கள்.

ரொம்பப்பேர் உளப்பிறழ்வுக்குள்ளாக (perverted) க் காரணம். அவர்கள் மேல்நோக்கிச் செல்லும்பொருட்டு தங்களுடைய பாலுறவு சக்தியை அடக்க முயல்வதுதான். அவர்கள் ஒருபோதும் மேல்நோக்கிச் செல்வதில்லை. அவர்கள் இயல்பான மக்களைவிட அதிகம் உளஇயல்புப் பிறழ்வுக்குள்ளாகிறார்கள்.

நான் படித்தறிந்த ஒரு சிறிய கதை:

ஏப் தன்னுடைய நண்பரான இஸ்ஸியிடம் சொன்னார், "என்னுடைய மகனைப் பற்றி எனக்கு அச்சமாக இருக்கிறது. எங்கே அது ஒரு பெரிய ஏமாற்றமாகி விடுமோ என்று. கல்வியறிவு இல்லாத நாங்க அவனுக்குக் கல்வியைக் கொடுக்க எவ்வளவு போராடி யிருப்போம் என்பது உனக்குத் தெரியும். நாட்டிலேயே மிகப்பெரிய தொழிற்கல்வி நிலையத்தில் நான் அவனைப் படிக்க அனுப்பினேன். இப்போது என்ன ஆயிற்று? பத்துமணிக்கு என்னோட ஆயத்த உடை தயாரிப்பு நிறுவனத்துக்கு வருகிறான். சோம்பேறித்தனமாய் இருந்துவிட்டு பதினோரு மணிக்கு டீ சாப்பிடறான் பன்னிரண்டு மணிக்கு மதிய உணவுக்கு எழுந்து போயிடறான். இரண்டு மணி வரைக்கும் திரும்பி வர்றதில்லை. இரண்டில் இருந்து நாலு மணி வரை 'மாடல்' பெண்கள் பின்னாடி பொறுப்பில்லாம சுத்தறான். இப்படி ஒரு உதவாக்கரையாவான்னு நான் நெனக்கலை."

"ஏப், உன்னோட துன்பங்கள்லாம் ஒண்ணுமேயில்லை. என்னோடது ஆயிரம் மடங்கு மோசம். உனக்கே தெரியும் என்னுடைய பையனுக்குக் கல்வி கற்பிக்க நாங்க எவ்வளவு கஷ்டப்பட்டோம்னு. அவனை நாட்டிலேயே சிறந்த தொழிற் கல்வி நிலையத்துக்கு நான் அனுப்பி வைத்தேன். இப்போ என்ன ஆச்சு. அவன் பத்து மணிக்கு என்னோட உடை தயாரிப்பு நிறுவனத்துக்கு வர்றான். பதினோரு மணிக்கு டீ குடிக்கிறான். பன்னிரண்டு மணிக்கு மதிய உணவுக்கு எழுந்து போறான். இரண்டு மணி வரைக்கும் திரும்பறதில்லை. இரண்டு மணியிலிருந்து நாலு மணி வரைக்கும் 'மாடல்'கள் பின்னாடி சுத்தறான். இப்படியொரு உதவாக்கரை ஆவான்னு நான் எதிர்பார்க்கலை."

"ஆனா இஸ்ஸி, அது எப்படி ஆயிரம் மடங்கு மோசமாகும்? உன்னிடம் நான் சொன்ன அதே கதைதான இதுவும்."

"ஏய், நீ ஒரு விசயத்தை மறந்திட்டயா. என்னோட நிறுவனம் ஆண்களுக்கான உடைகளைத் தயாரிப்பது."

தெரிந்ததா? பாலுறவு சக்தியை எப்படிப் பயன்படுத்துவது என்று தெரியாவிட்டால் நீங்கள் பொறுப்பின்றி செயல்படுவீர்கள். ஒன்று சுய இன்பம் அல்லது ஓரினச் சேர்க்கை அதை விட்டால் ஆயிரத்தொரு வழிகள் உண்டு நீங்கள் வழி தவறிப் போவதற்கு. அந்நிலையில், இருக்கிறபடிக்கே இருக்கட்டும் என்று அதை விட்டுவிடுவதுதான் நல்லது.

அதனால்தான் ஒரு குரு தேவைப்படுவது. நீங்கள் எங்கிருக் கிறீர்கள்; எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள், அடுத்து என்ன நடக்கப் போகிறது என்பதை அறிந்தவர் அவர். அவரே உங்கள் வருங்காலத்தைப் புரிந்து வைத்திருப்பவர், உரிய வழியில் நடந்து கொண்டிருக்கிறதா, இல்லையா என்பதையும் அவரே புரிந்து கொள்ளக்கூடியவர். இல்லையேல், ஒட்டுமொத்த உலகமும் பால்சார்நத தவறுகளால் ஒரே குளறுபடியாகி விடும்.

ஒருபோதும் அடக்கி வைக்காதீர்கள். தவறான போக்குடையவர் களாக இருப்பதைவிட வழக்கமானவராய், இயற்கை சார்ந்தவராய் இருந்துவிடுவது நல்லது. ஆனால் அப்படியே இயல்பாக இருந்தால் மட்டும் போதாது. இன்னும் மிகுதியாகச் செய்ய முடியும். மாற்றுங்கள். மேல்நோக்கிய பயணத்துக்கு அடக்கி வைத்தல் ஒரு வழியாகாது. நிலை மாற்றமே உகந்த வழி. உங்களுடைய உடம்பை நீங்கள் தூய்மை செய்வதுடன், உங்கள் மனதையும் தூய்மை செய்து, உங்கள் உடம்பிலும் மனதிலும் உள்ள குப்பைகளை வெளியேற்றினால்தான் நீங்கள் அதைச் செய்ய முடியும். தூய்மை, ஒளி, எடையின்மை இவற்றின் உதவியோடுதான் உங்கள் சக்தியை நீங்கள் மேல்நோக்கிக் கொண்டு செல்ல முடியும்.

அது வழக்கமாக சுருண்டு கிடக்கும் ஒரு பாம்பைப் போல் இருக்கும். நாம் அதைத்தான் குண்டலினி என்கிறோம். குண்டலினி என்றால் சுருளாக சுற்றப்பட்டது என்று பொருள். அது தன்னுடைய தலையை உயர்த்தி, மேல்நோக்கிச் செல்கிறபோது உண்டாகும் அனுபவம் வார்த்தையில் விவரிக்க முடியாது. அது மேலிருக்கும் மையத்தைக் கடக்கிறபோது நீங்கள் மேம்பட்ட அனுபவங்களைப் பெறுவீர்கள். ஒவ்வொரு மையத்திலும் பல நிகழ்ச்சிகள் உங்களுக்கு வெளிப்பாடாகும். நீங்கள் ஒரு பெரிய புத்தகம். ஆனால், சக்தியானது

பல மையங்கள் வழியே செல்லும்படி இருக்கும். அந்நிலையில் மட்டுமே அந்த மையங்கள் தங்களுடைய அழகுகளை காட்சிகளை கவிதைகளை, கீதங்களை, நடனங்களை உங்களுக்கு வெளிப்படுத்தும். ஒவ்வொரு மையமும் தனக்குக் கீழே உள்ளதைவிட மேம்பட்ட பரவசத்தை வழங்கும்.

பால்சார்ந்த உச்சக்கட்ட உணர்வு (orgasm) கீழானது. 'ஹரா'வின் உச்சகட்டம் மிக உயர்ந்தது. தொப்புள் மையத்தில் கிடப்பதைவிட சிறந்தது. அதைவிட சிறந்தது இருதய மையத்தில் ஏற்படுவது. அதனினும் பார்க்க மேலானது குரல்வளை மையத்தில் பெறுவது. அதனினும் இன்பச் சூழ்நிலை உடையது சுழுமுனை. பரவசத்தின் உச்சம் ஏழாவது மையமான சஹஸ்ராரம்.

இது வரைபடம். நீங்கள் விரும்பினால் மேல்நோக்கிப் பயணம் செய்ய முடியும். ஆனால் சித்து வேலைகளுக்காக முயலாதீர்கள். அவை முட்டாள்தனமாகும். நீங்கள் யார்? என்று அறிய விரும்பினால் ஊர்த்துவரேடாஸ் (oordhwaretas) ஆகலாம். அதிகாரம் பெறுவதற்காக அல்ல, அமைதிக்காக. அமைதியே உங்கள் குறிக்கோளாக இருக்கட்டும், அதிகாரமல்ல.

இந்த அத்தியாயம் விபூதிபாதம் என்று அழைக்கப்படுகிறது. விபூதி என்றால் சக்தி (திறன்)யைக் குறிப்பது. தம்முடைய மாணவர்களாலும், தம்மைப் பின்பற்றுகிறவர்களும், அநேக சக்திகளை வழியில் கண்டாலும் போதிய கவனம் இல்லாமல் பலவற்றில் சிக்கிக் கொள்கிறார்கள் என்பதால், அவர்களை விழிப்புடையவர்களாக்கவே பதஞ்சலி இந்த அத்தியாயத்தைச் சேர்த்தார். அதிகாரத்தில் சிக்கிக் கொள்வர் அவதிக்குள்ளாவார். நீங்கள் அந்த இடத்திலேயே கட்டுண்டு விடுவதால் உங்களுடைய பறப்பு நின்றுவிடும். நீங்கள் முடிவெல்லை வரைக்கும் பறந்து கொண்டேயிருங்கள், எல்லையற்ற ஆழமுடைய மலையிடுக்கு உங்களை உள்ளடக்கிக் கொள்ளும், நீங்கள் பிரபஞ்ச ஆன்மாவிற்குரியவராகி விடுவீர்கள்.

அமைதியே உங்கள் குறிக்கோளாயிருக்கட்டும்.

*பகவானே, என்னை மிதக்கும்படி தாங்கள் சொல்கிறீர்கள், ஆனால் என்னுடைய உடம்போ, மிதந்தால் மூழ்கி விடுமளவு சவத்தைப் போல் கனக்கிறது. எனவே நான் பெரும் அச்சத்தோடுதான் நீந்துகிறேன்.*

**மி**தத்தல் ஒரு புதிய வாழ்க்கை முறை. நீ போராடுவதற்குப் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். நீ எதிர்நீச்சல் போடவும் பழகிக் கொள்ள வேண்டும். ஏதோ ஒன்றை எதிர்த்து நிற்பது உன் அகந்தைக்கு ஊட்டமளிப்பதாயிருக்கிறது. நீ சண்டையிடாவிடில் உன்னுடைய அகந்தை இருந்த இடம் தெரியாமல் போய்விடும். அகந்தை நீடித்திருக்க வேண்டுமெனில் போரிடாமல் முடியாது. உலகாயத விஷயங்களுக்காகவோ ஆன்மிக சங்கதிகளுக்காகவோ ஏதோ ஒரு வகையில் போரிட்டுக் கொண்டுதான் இருக்கிறோம். இந்த யுத்தம் மற்றவர்களுடனோ அல்லது தனக்குத்தானேயோ நடந்து கொண்டு தான் இருக்கிறது. உலகாயதமானவர்கள் மற்றவர்களுடனும். ஆன்மா சார்ந்தவர்கள் தங்களோடும் போரிட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அடிப்படை என்னவோ ஒன்றுபோலத்தான் இருக்கிறது.

நீங்கள் போரிடுவதை நிறுத்தும்போதுதான் உண்மையான காட்சி தோன்றும். அந்நிலையில் நீங்கள் மறையத் தொடங்குகிறீர்கள். காரணம் அகந்தை ஒரு கணமும் எதிர்ப்பு காட்டாமல் இருப்பதற் கில்லை. தொடர்ந்து உந்திக் கொண்டேயிருக்க வேண்டும் அதற்கு. அது ஒரு சைக்கிள் மாதிரி. நீங்கள் உந்துவதை நிறுத்தினால் அது விழுந்து விடும். முந்தைய சுழற்சியால் கொஞ்சநேரம் தாக்குப்பிடிக்கலாம். நீண்ட நேரம் தாக்குப்பிடிக்க முடியாது. ஆனால், தன்னை உயிர்த்துடிப்போடு வைத்துக்கொள்ள, அகந்தைக்கு உங்களுடைய ஒத்துழைப்பு தேவைப்படும். சண்டையிடலும், எதிர்த்து நிற்றலுமே ஒத்துழைப்பு ஆகும்.

உன்னை மிதக்கும்படி நான் சொல்கிறபோது நீ பிரபஞ்சத்தின் சிறுபகுதி மிகச்சிறிய ஒரு பகுதி என்பதையே கருத்தில் கொள்கிறேன்.

அதனுடன் போரிடுவது என்பது நகைக்கத்தக்கதாகும் (அறிவுக்குப் பொருத்தமானதல்ல). அடிப்படையில் அது கடவுளுக்கெதிரான சண்டையாகவே இருக்கும், காரணம் அவர் உன்னைச் சுற்றிலும் இருக்கிறார். நீரோட்டத்துககு எதிராக (பொது நடப்புக்கு மாறாக) நீ செல்வதென்பது கடவுளுக்கெதிராக செல்கிற முயற்சியேயாகும். அவர் கடலின் அடிப்பகுதிக்குச் செல்வராயின் நீயும் அவரோடு சென்றுவிடு.

ஆற்றின் போக்கில் நீ மிதந்து செல்கிறபோது முற்றிலும் மாறுபட்ட ஒரு தன்மை உனக்குள் தோன்றுவதை நீ காண்பாய். உன் சக்திக்கும் வலிமைக்கும் அப்பாற்பட்ட மேம்பட்ட ஒன்று இறங்கிவரும். அங்கே நீ இருப்பதற்கில்லை, நீ வெறுமையாய் பெருமளவினை வெறுமை (emptiness) யாய், போரிடும்போது நீ கடினமாகி விடுவாய். போரிடாத போது (உன்னை) விட்டுக் கொடுக்கிறாய், வெளிப்படையாகிறாய், தன் இதழ்களை விரிக்கும் தாமரை போன்று. அந்நிலையில் நீ அடைகிறாய். அச்சமின்றி நகர்ந்து செல் வாழ்வுடன், ஆற்றுடனும்.

கேள்வி இதுதான்: 'தாங்கள் என்னை மிதந்து செல்லும்படி சொல்கிறீர்களே, ஆனால் நான் மிதந்தால் மூழ்கிவிடுவேனோ என்று அஞ்சுகிறேன்.' நீ மூழ்குவது நல்லதுதான் காரணம் மூழ்கிப் போவது உன்னுடைய அகந்தையேயன்றி நீயல்ல. நீ போடுரிடும் போது உனது உள்ளார்ந்த மையத்துடன் போரிடுவது உன்னுடைய அகந்தைதான். நீ மூழ்க நேரிடும். ஆனால், அப்படி மூழ்குவதன் மூலம் நீ மிதப்பதற்கு இயன்றவனாய். தேர்வு செய்யும் நிலையில் நீ அகந்தையைத் தேர்வு செய்கிறாய். தேர்வற்றவனாக இரு. உனக்காக வாழ்க்கை தேர்ந்தெடுக்கட்டும், அப்போது நீ அகந்தையற்றவனாக இருப்பாய். இயேசுவிற்கான பிரார்த்தனை உனக்குள் எதிரொலிக்கட்டும், 'உம்முடைய இராஜ்யம் வருவதாக, உமது சித்தம் போல் அமைவதாக' என்று. உனக்காக அவர் நடத்தட்டும்.

உன்னைக் கைவிட்டுவிடு. உன்னை மூழ்கடித்துக் கொண்டுவிடு. உன்னுடைய இருப்புணர்வு தளத்தில் இருந்து நீ காணாமல் போய்விடு. அதன்பிறகும் நீ மனிதனாயிருக்க மாட்டாய், மாமனிதனாகி விடுவாய். உன்னுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் ஒரு பேரின்ப வாழ்க்கையாகிவிடும்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

துரதிர்ஷ்டம் பிடித்த ஓர் ஆன்மா நரகத்தின் வாயிலைச் சென்றடைந்தது. அங்கே, நிக் என்கிற ஏமாற்றுக்காரப் பேய் அவனை

எதிர்கொண்டு, 'நீ எந்தப் பிரிவில் சேர விரும்புகிறாய்?' என்று வஞ்சக நோக்குடன் கேட்டது.

'நீ என்ன சொல்றே, பிரிவா?' புதிதாய் வந்தவன் கேட்டான்.

அந்தப் பேய் சொன்னது, 'உனக்குத் தெரியுமோ, இங்கே அத்தனை வகையான வதைகளை (tormets) யும் நாங்கள் வைத்திருக்கிறோம், வருகிறவர்கள் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளவும் இடமளிக்கிறோம். எங்களுக்கு சனநாயகத்தில் நம்பிக்கை இருக்கிறது, நாங்கள் சர்வாதிகாரம் பண்ணவில்லை - நெருக்கடி நிலையை அமல்படுத்தவில்லை. நீயே தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஒன்றை நினைவில் கொள், நீ கவனமாய் தேர்வு செய்ய வேண்டும். நான் உன்னைச் சுற்றுப் பயணமாய் கூட்டிப் போகிறேன்.'

அந்தப் பேய் அவனை நரகத்தினுள் கூட்டிச் சென்றது. அங்கே ஒரு குழு சேற்றில் புரண்டு கொண்டிருந்தது.*மக்காட் புழுக்கள் அவர்களைத் தொடர்ந்து தின்றபடி இருந்தன. மற்றொரு குழு பழுக்கக் காய்ச்சிய திரிசூலங்களால் குத்தப்பட்டன இடைவிடாமல். மற்றொரு குழு பற்கள் உடைய உலோகச் சட்டங்களில் வைத்து நெருக்கப் பட்டன. புதிதாய் வந்தவன் அவற்றையெல்லாம் கண்டு சோர்ந்து போனான்.

அதன்பிறகு அந்தப் பேய் வீச்சமடிக்கும் குழிக்குள் இடுப்பளவு புதைந்த நிலையில் தேநீர் பருகும் நரக வாசிகள் இருக்குமிடத்துக்கு அவனைக் கூட்டிச் சென்றது.

அவன் தனக்குள் எண்ணிக் கொண்டான், 'இது அத்தனை மோசமாயில்லை' என்று. 'நான் இந்தப் பிரிவைத் தேர்ந்து கொள் கிறேன்' என்று பேயிடம் சொன்னான்.

'உறுதியாகத்தானா? நீ உன்னுடைய மனதை அடிக்கடி மாற்றிக் கொள்ள முடியாது. ஒருமுறை சொல்லிவிட்டால் அதுதான் எப்போ தைக்கும், எப்போதைக்கும், எப்போதைக்குமாய் ஆகிவிடும்' என்றது சாத்தான்.

'இல்லை. அதில் நான் உறுதியாயிருக்கிறேன். இதுவே எனக்குப் போதுமானது' என்றான் தீர்ப்பளிக்கப்பட்ட அந்த புதியவன்.

---

* *மக்காட் (maggots) - மாமிசத்தில் முட்டையிடும் ஒருவகைப் பூச்சியின் முட்டைப் புழுக்கள்.*

'நல்லது, நீ உள்ளே செல்' என்றது பேய்.

அந்தப் பரிதாபத்துக்குரியவன் குழிக்குள் இறங்கியதும் ஒரு சீழ்க்கையொலி கேட்டது, 'ரொம்பசரி, தேநீர் இடைவேளை முடிந்தது. இனி எல்லோரும் தலைகீழாய் நிற்கலாம்' என்ற அறிவிப்பு ஒலித்தது.

நீங்கள் தேர்வு செய்வதாயின் நரகத்தைத் தேர்வு செய்கிறீர்கள். தேர்வு நரகமாயிருக்கிறது. தேர்வு செய்தவன் மூலம் உங்களைச் சுற்றிலும் ஓர் நரகத்தை நீங்கள் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். நீங்கள் தேர்வு செய்கிற பொழுது, உங்கள் பொருட்டு கடவுள் தேர்வு செய்ய நீங்கள் இடமளிக்கிறதில்லை.

கிருஷ்ணமூர்த்தி தேர்வற்றிருத்தலைத் தொடர்ந்து வலியுறுத்திக் கொண்டிருக்கிறார். அது முழுக்கதையின் ஓர் எல்லை, அவ்வளவு தான். மற்றோர் எல்லை - நீங்கள் தேர்வற்றவராயின் கடவுள் உங்களுக்காகத் தேர்ந்தெடுப்பார். தேர்வற்றவராவது கதையின் ஒரு பாதி மட்டுமே - வெறும் தொடக்கந்தான் அது. நீங்கள் தேர்வற்றவரான கணத்திலேயே வாழ்க்கை தொடர்கிறது. நீங்கள் அங்கே இருக்க மாட்டீர்கள் - வாழ்க்கை தொடர்ந்தபடி இருக்கும். நீங்கள் ஒரு நரகத்தையன்றி வேறெதுவுமில்லை. கடவுளுக்கும் உங்களுக்கும் இடையே நீங்கள் இல்லாவிடில் அவர் தேர்வு செய்வார். அவர் எப்போதுமே உங்களுக்காகத் தேர்வு செய்கிறவர்தாம்.

'மனிதன் வேண்டுகிறான், கடவுள் வழங்குகிறார்' என்றொரு பழமொழி இருக்கிறதுதானே. நடைமுறையிலோ அதற்கு நேர் எதிரிடையாகத்தான் இருக்கிறது. 'கடவுள் வேண்டுகிறார், மனிதன் செய்து முடிக்கிறான்.'

ஒருமுறை தேர்வற்றிருக்கும் பேரின்பத்தை, அவனோடு (கடவுள்) மிதந்த செல்வதை உணர்ந்து விட்டால், நீங்கள் ஒருபோதுமே தேர்வு செய்ய மாட்டீர்கள். காரணம், நீங்கள் தேர்வு செய்கிற போதெல்லாம் நரகத்தையே தேர்வு செய்கிறீர்கள்.

எனவேதான் நீ மூழ்க வேண்டும், என்னுடைய ஆசீர்வாதத்துடன் நீ மூழ்கிவிட வேண்டும் என்று நான் விரும்புவது.

தங்களைப் பற்றிக் கொண்டிருப்பவர்கள் தங்களை இழப்பார்கள், தங்களை இழக்கத் தயாராயிருப்பவர்கள் பெறுவார்கள் என்று இயேசு கூறும்போது அதையே கருத்தில் கொள்கிறார். 'மரணத்துக்கு முன்பே

மரித்துவிடு. அப்போது நீ மரணமற்றவனாகி விடுவாய்' என்று சூஃபிகள் கூறுகிறபோதும் அதைத்தான் கருத்தில் கொள்கிறார்கள்.

சரணாகதியால் மட்டுமே அகந்தை மடிய நேரிடும். மக்கள் என்னிடம் வந்து கேட்கிறார்கள், 'தற்பெருமை கொள்ளாமல் இருப்பது எப்படி?' என்று. நீங்கள் எதைச் செய்தாலும் அது உங்களை மறுபடியும் தற்பெருமைக் காரராக்கி விடும். அகந்தையைக் கட்டுப்படுத்த நீங்கள் முயன்று பாருங்கள், ஆனால் அகந்தையற்றிருக்க உங்களால் முடியாது காரணம் நீங்கள் செய்வது எதுவாயினும் அது உங்கள் அகந்தையை அதிகப்படுத்திவிடும். நீங்கள் கர்த்தாவாகிய கணத்திலேயே - அது எவ்வகைப்பட்டதாயினும் எவ்வளவு தாழ்மையுடனிருக்க முயன்றாலும், உங்கள் தாழ்மையுணர்வின் அடியாழத்தில் அகந்தை முடிசூட்டிக் கொண்டிருக்கும், 'பார்த்தாயா, நான் எத்தனை பணிவாயிருக்கிறேன்' என்று சொல்லும்.

'தாழ்வுணர்ச்சி (Inferiority Complex) என்ற சொல்லை உண்டு பண்ணிய ஆட்லரை (உளவியல் நிபுணர்)க் காண ஒருவன் சென்றிருந்தான். அவன் உணர்வு நிலை ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டவன். சில மாதங்களுக்குப் பிறகு ஆட்லர் அவனிடம் சொன்னார், 'தற்போது நீ குணமடைந்து விட்டாய்' என்று. அந்த மனிதன் சொன்னான், 'ஆகா, நான் குணமடைந்து விட்டதாகத்தான் நானும் உணர்கிறேன். தற்போது உலகிலேயே மிகச் சிறந்த தாழ்வுணர்ச்சி கொண்ட மிக நேர்த்தியான தாழ்வுணர்ச்சி கொண்ட ஒருவனாக நான் இருக்கிறேன்' என்று.

மிகச்சிறந்த மிக நேர்த்தியான தாழ்வுணர்ச்சி! அது சாத்தியந்தான், ஒவ்வொரு நாளும் அது நடக்கவே செய்கிறது. உங்கள் தாழ்வுணர்ச்சி பற்றியும் நீங்கள் தற்பெருமைப்பட்டுக் கொள்ள முடியும். உங்கள் தாழ்வுணர்ச்சி குறித்து ஒரு விஞ்சிய உணர்வை (Superiority Complex) நீங்கள் பெற முடியும். மனிதன் பெரிதும் நகைக்கத் தக்கவனாகவே இருக்கிறான்.

சமயப்பற்றுடையவர்களிடம் சென்று, அவர்களுடைய முகங்களைப் பாருங்கள். அவர்கள் தன்னடக்கத்துக்கான அத்தனை அறிகுறிகளையும் வெளிக்காட்டிக் கொண்டிருப்பார்கள். ஆனால் நீங்கள் சருமத்துக்குக் கீழே அதன் அடியாழத்துக்குச் சென்றால் அவர்களை அறிந்து கொள்ளலாம். அகந்தைக்குக் கீழே 'என்னைவிட அடக்கமானவர் எவரும் இல்லை' என்கிற மகிழ்ச்சி உணர்வு இருக்கும். சமயப்பற்றுடைய ஒருவரிடம், 'உங்களைவிட

தன்னடக்கமுள்ள ஒருவரை நான் கண்டிருக்கிறேன்' என்று சொல்லிப் பாருங்கள். மனிதர் நொந்து போய்விடுவார். அது நடவாத காரியம். தன்னைவிட பணிவு நிரம்பிய ஒருவர் இருப்பதாவது. தான் இழிவுப்படுத்தப்பட்டதாய் அவர் உணர்வார். என்னுடையதை விட சிறந்த வீடு எவரிடமும் இருப்பதற்கில்லை. என்னுடையதை விட சிறந்த கார் இன்னொருவரிடம் இருக்க முடியாது. என்னுடைய முகத்தைப்போல் குறையற்ற சரியான முகம் எவருக்கும் இருக்காது. என்னைவிட சிறந்த அறிவு யாருக்கும் இருக்க முடியாது என்பதெல்லாம் அகந்தையின் முழுமையான முயற்சி என்றே சொல்ல வேண்டும். ஒப்பீட்டில் சிறப்பாய் உணரமுற்படுவது அகந்தை.

உங்களால் அதை மாற்ற முடியாது. நீங்கள் அதைவிட்டு விடுகிறபோது – இப்படிச் சொல்லலாம் – உங்களுடைய ஆழ்ந்த புரிதலில் அது நழுவியவுடன் – வாழ்க்கையை நீங்கள் வரவேற்கிற வராகி விடுகிறீர்கள். திறந்திருக்கும் அறையில் நுழைகிற தென்றலைப் போல் வாழ்க்கை உங்களுக்குள் பாயத் தொடங்குகிறது. நீங்கள் ஒரு சன்னலற்ற அறையைப் போல் இருக்கிறீர்கள். எல்லாக் கதவுகளும், சன்னல்களும் மூடியிருக்கின்றன. வெளிச்சக் கீற்று உங்களுக்குள் விழுந்திருக்கவில்லை, மென்காற்று உங்கள் வழியே கடந்திருக்க வில்லை. மூடிய குகைக்குள் (உங்களுக்குள்) நீங்கள் விழுந்து கிடக்கிறீர்கள். நீங்கள் மூச்சுத் திணறுவதாய் உணரத் தொடங்கினால், உண்மையில் அது இயல்புதான்.

ஆனால், எனக்குத் தெரியும் உங்களை மூழ்கடிப்பது (அடக்கி ஆள்வது) கடினம் என்று. அதற்கு அவகாசம் தேவைப்படும். சில கணநேரக் கண்ணோட்டங்கள் தேவைப்படும். சில சமயம் நீந்தாமல் அப்படியே மிதந்தபடி இருங்கள், ஆறு உங்களை முன்னெடுத்துச் செல்வதை – உங்களுக்குப் பொறுப்பேற்றிருப்பதை உணர்வீர்கள். சில சமயம் எதையும் தேர்வு செய்யாமல் தோட்டத்தில் சும்மா உட்கார்ந்திருங்கள். அழகாயிருக்கிறது அருவருப்பாயிருக்கிறது என்றெல்லாம் சொல்லிக் கொண்டிராதீர்கள். எதையும் பிரித்தறிய முற்படாமல் எல்லாவற்றையும் பார்த்தபடி இருங்கள். சில நேரங்களில் எதையும் நிந்திக்காமல், பாராட்டாமல் வாய்திறந்து எதுவும் சொல்லாமல் அங்காடி வீதியில் செல்லுங்கள். எவ்வித மதிப்பீடும் செய்யாமல் சும்மா இருப்பது எப்படி என்பதைப் பல வகையிலும் கற்றுணருங்கள். காரணம், ஒன்றை மதிப்பீடு செய்கிற கணத்தில் நீங்கள் தேர்வு செய்தவராகிவிடுகிறீர்கள். 'இது நன்றாயிருக்கிறது' என்று சொல்கிற

பொழுது. 'நான் அதைப் பெற விரும்புகிறேன்' என்பதைச் சொல்லாமல் சொல்லி விடுகிறீர்கள். 'இது ரொம்ப மோசமானது' என்று சொல்கிறபோது. 'நான் அதை விரும்பவில்லை, எனக்கு அது வேண்டாம்' என்றே சொல்கிறீர்கள். 'இந்தப் பெண் அழகாயிருக்கிறாள்' என்ற கணத்திலேயே நீங்கள் விருப்பம் கொண்டு விடுவீர்கள். 'இவளைப் பார்க்க அருவருப்பாயிருக்கிறது' என்று சொல்கிற கணத்தில், அதற்கு முன்னரே வெறுப்புணர்வு உங்களுக்குள் வந்துவிட்டிருக்கும். விரும்பத்தக்கது, விரும்பத்தகாதது, அழகானது, அருவருப்பானது என்கிற இருமைத்தன்மை (duality) யில் நீங்கள் முன்பே அகப்பட்டிருப்பீர்கள், தேர்ந்தெடுக்கும் உரிமை உங்களுக்குள் பிரவேசித்துவிட்டிருக்கும்.

அகந்தையின் வழிகள், அதி நுட்பமானவை. ஒருவர் அதனிடம் மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

கணப்பொழுதேயாயினும் அகந்தை உங்களிடம் இருக்கவில்லை. அகந்தையை நீங்கள் தோற்றுவித்துக் கொள்ளவில்லை என்பதை நீங்கள் அறிகிறபோது - எல்லாக் கதவுகளும் திடுதிப்பென்று திறந்து கொள்ளும், எல்லாப்பக்கங்களிலும் இருநது ஆர்வம் ஓடி வந்து உங்களை அரவணைக்கும். நீங்கள் கவனமுடன் இல்லாவிட்டால் அதை உங்களால் கண்டு கொள்ள முடியாது. கடவுளின் தொடுகை மிகவும் மென்மையானது. அதை உணர்வதற்குப் பெருமளவில் நுட்ப உணர்வு தேவைப்படும்.

அன்றொரு நாள் 'ஹூப் ஊஸ்டர்ஹூயிஸ்' என்பவரின் சிறிய கவிதையொன்றை நான் வாசித்துக் கொண்டிருந்தேன். அது-

**'புயலிலும், வெள்ளத்திலும் சீற்றமுடன்**
**பொங்கி நம்மைத் துடைத்தெறியும்**
**விசையான நீரோட்டம் போல் இருக்காது**
**இறைவன் நமக்கு விடுக்கிற செய்தி.'**

**'காலைக்கதிரொளி, பனிக்காலப் பசுங்கிளை**
**மண்மீது சன்னமாய் விழுகிற மழை**
**போலத்தான் அது இருக்கும், இறைவன்**
**அப்படித்தான் நம்மை வந்தடைகிறார்'**

**'... மண்மீது சன்னமாய் விழுகிறது மழை.**
**கடவுள் நம்மை வந்தடைகிறார்'**

ஆழ்ந்த சரணாகதியில், கூர்ந்து அறியும் திறனில் (sensitivity), விழிப்புணர்வில், அதற்குமுன் நீங்கள் ஒருபோதும் அறிந்திராத ஒன்றால் நீங்கள் நிரப்பப்பட்டிருப்பீர்கள். சற்றும் எதிர்பாராத விதமாய், அது எப்போதுமே இருக்கத்தான் இருக்கிறது ஆனால் அதை அறிதற்காக நுட்பமற்றவராய் நீங்கள் இருந்திருக்கிறீர்கள். அது அங்கே இருக்கத்தான் செய்கிறது எப்போதும், நீங்களோ போரிடுவதில் மனத்தை நிறுத்தியிருந்தீர்கள், அகந்தையின் பாதையில் உங்களால் அதைத் திரும்பிப்பார்க்கவோ, உணரவோ முடிந்திருக்கவில்லை. அது தொடர்ச்சியாய் அங்கே இருக்கிறதென்றாலும், நீங்கள் அங்கே இருந்திருக்கவில்லை. அது தொடர்ந்து உங்களை எதிர்பார்த்திருக்கிறது. ஆனால், எப்படி வீட்டுக்குத் திரும்புவது என்பதை நீங்கள் மறந்துவிட்டீர்கள்.

எனவே உங்களை மூழ்கடித்துக் கொள்ளுங்கள். இங்கே நான் உங்களுக்குப் போதிக்கக்கூடிய ஒட்டு மொத்த அறிவும் இதுதான். நான் எதையேனும் உங்களுக்குப் போதிக்கிறேன் என்றால் அது மரணம் பற்றிய போதனையாகவே இருக்கும் காரணம், மரணத்தின் வழியேதான் மீட்டெழ இயலும், புத்துயிர் பெற (resurrection) முடியும் என்பதை நான் அறிவேன்.

> *இன்று காலையில் பொறுப்போடிருப்பதன் அவசியத்தை, மற்றவர்களைச் சாராதிருப்பதை, தனித்திருப்பதைப் பற்றித் தாங்கள் பேசினீர்கள். இவற்றைத் தவிர்ப்பதற்கு ஒரு சாக்காகவே நான் சந்நியாசத்தை மேற்கொள்வதாய் எண்ணுகிறேன். நான் வருத்தமாய், தனித்துவிடப்பட்டதாய் உணர்கிறபோதெல்லாம் உங்கள் முன்னால் வந்து நிற்கிறேன். என்ன செய்வது என்று உங்களிடம் வேண்டுகிறேன்.*
>
> *தாங்கள் என்னோடு இருப்பதாயும், வெற்றிடத்தை நிரப்புவதாயும், நான் பொறுப்பற்றிருப்பதாயும் கற்பனை செய்து கொள்கிறேன். சந்நியாசம் பற்றிய குழப்பம் மறுபடியும் எனக்கு வந்துவிடுகிறது.*

அடுத்தவரைச் சார்ந்திருக்கும் பட்சத்தில் நீங்கள் எப்போதுமே குழப்பமுற்ற உணர்வில்தான் இருப்பீர்கள். காரணம் அப்போது புரிந்து கொள்ளும் திறன் உங்களிடம் இருக்காது. அது மட்டுமல்ல, புரிந்து கொள்ளும் திறனை இரவல் வாங்கவும் முடியாது. ஆக, ஒரு

சிறுபொழுது உங்களை நீங்களே முட்டாளாக்கிக் கொள்ளும்படியாகும். திரும்பத் திரும்ப யதார்த்தம் (reality) வெடித்துக் கிளம்ப நீங்கள் குழப்பமாகவே உணர்வீர்கள். குழப்பத்தைத் தவிர்க்க ஒரே வழி விழிப்புணர்வோடு, எச்சரிக்கையாய் உங்கள் சொந்தக் காலில் நிற்பதுதான். விழிப்புணர்வைத் தள்ளிப் போடாதீர்கள்.

நீங்கள் அடுத்தவரைச் சார்ந்திருக்க முனைகிற போதெல்லாம், உங்கள் விழிப்புணர்வைத் தவிர்த்து விடுகிறீர்கள். தொடக்கத்தில் இருந்தே நீங்கள் அவ்வாறு போதிக்கப்பட்டிருப்பதுடன் கட்டுப்படுத்தப்பட்டிருப்பீர்கள். பெற்றோர்களும், தகுதி முதலியவற்றில் சமதையானவர் (peer) களும், சமூகமும், கல்வியாளர்களும் நீங்கள் எப்போதுமே அடுத்தவரைச் சார்ந்திருக்கும்படியாய் உங்களைக் கட்டுப்படுத்த முயன்றவாறு இருக்கிறார்கள். அந்நிலையில் அடுத்தவர் உங்களை ஆட்டிப்படைக்கவும் தம்முடைய ஆதிக்கத்துக்குட் படுத்தவும் கூடும். அந்நிலையில் நீங்கள் சரண்டப்படுவதோடு, அடக்கி ஒடுக்கி அடிமையாக்கவும் படுவீர்கள். உங்கள் சுதந்திரத்தை நீங்கள் இழந்து விடுகிறீர்கள்.

அந்த நிலையில்தான் என்னிடம் நீங்கள் வருகிறீர்கள். உங்கள் மனம் உங்களுடைய கட்டுப்பாட்டை மீறி இயங்கத் தொடங்குகிறது. நீங்கள் என்னைச் சார்ந்திருக்கத் தொடங்குகிறீர்கள். ஆனால், நான் உங்களை அதற்கு அனுமதிக்கப் போவதில்லை. நான் உங்களைத் திரும்பத் திரும்ப உங்களிடமே தள்ளிவிடுவேன், மறுபடியும் மறுபடியும் உங்களிடமே உங்களைத் திருப்பியனுப்புவேன்.

காரணம், நீங்கள் சொந்தமாய் புரிந்து கொள்ளும் திறனுடன் இருக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். அப்போதுதான அது நிலையான ஒன்றாக இருக்கும், நீங்களும் குழப்பமில்லாமல் இருப்பீர்கள்.

நான் உங்களிடம் ஒன்றைச் சொல்கிறேன், நீங்கள் அதை நம்பத் தொடங்குகிறீர்கள் - ஆனால் அது உங்களுடைய பார்வையாக இருக்காது. அது நீங்கள் கண்டுணர்ந்ததாயிருக்காது. நாளைய வாழ்க்கையில் ஏதோவொன்று நடக்கிறது, நீங்கள் இடர்ப்பாட்டுக் குள்ளாகிறீர்கள். அந்த இடர்ப்பாடு தோன்றக் காரணம் நீங்கள் பழக்கப்பட்ட போக்கில் (rote) விஷயங்களைத் தெரிந்து கொண்டீர்கள், என்னை அப்படியே மனப்பாடம் பண்ணி விட்டீர்கள். இந்த இரவல் திறனை வைத்துக் கொண்டு தற்போது நீங்கள் எதிர்ச்செயல் புரிய

முயல்கிறீர்கள். வாழ்க்கை மாறியபடி இருக்கிறது. ஒவ்வோர் கணத்திலும், இந்தக்கணம் பற்றிய என்னுடைய புரிதல் (understanding) அடுத்த கணத்தில் எப்படி உங்களுக்கு உதவக்கூடும்? இந்தக் கணத்துக்கான உணரும் திறனை நீங்கள் நிலையான குறிப்புரை (reference) யாய் கொண்டுவிடக் கூடாது. நீங்கள் அதை சொற்கள் சார்ந்த விதத்திலும், அறிவார்ந்த விதத்திலும், மனம் சார்ந்த விதத்திலும் அப்படியே எடுத்துக் கொண்டால் மறுபடியும் மறுபடியும் குழம்பித்தான் போவீர்கள். காரணம், வாழ்க்கை உங்களுடைய பொய்யான புரிதலைத் தகர்த்தெறிந்துவிடும்.

வாழ்க்கை மெய்யான புரிதலை மட்டுமே நம்புகிறது. 'மெய்யான' என்பது, அதிகாரப்பூர்வமாய் உங்களுக்குள் இருந்து தோன்றுகிற ஒன்றையே குறிக்கிறது.

உங்களுக்கு அறிவூட்டுவதற்காகவோ, கோட்பாடுகளை வழங்குவதற்காகவோ நான் இங்கிருக்கவில்லை. அது பல நூற்றாண்டுகளாகவே நடந்து கொண்டுதானிருக்கிறது, மனிதனும் எப்போதும்போல் அறியாமை நிரம்பியவனாகவே இருக்கிறான். உங்களுக்குப் பின்னால், உங்களுக்குள் இருக்கும் ஒளியின் மூலம் பற்றிய விழிப்பை உங்களிடம் ஏற்படுத்தவே நான் இங்கிருக்கிறேன். அந்த மூலத்தை வெளிக் கொணருங்கள். உங்களுக்குள் இருக்கும் ஒளி சுடர்விட்டுப் பிரகாசிக்கட்டும். அந்நிலையில் உயிரோட்டம் உள்ள ஒன்றை நீங்கள் பெறுவீர்கள். அப்போது, வாழ்க்கையில் எந்தப் பிரச்சினை வந்தாலும் உங்களுடைய கடந்த கால அறிவைக் கொண்டு அதைச் சமாளிக்க மாட்டீர்கள். உங்களுடைய நிகழ்கால உணரும் திறனைக் கொண்டே அதை எதிர்கொள்வீர்கள்.

நான் சொன்னது எதுவாயினும் அது கடந்தகாலத்தைச் சேர்ந்ததாகிவிடும்.

நான் சொன்ன கணத்தில், நீங்கள் கேட்டுக் கொள்வதற்கு முன்பாகவே அது கடந்தகாலத்திற்குரியதாயிற்று. வாழ்க்கை மாறிக் கொண்டேயிருக்கிறது. அது ஒரு நிலையான இயக்கம். அது நிறுத்தம் என்பதை அறிவதில்லை, அது ஓய்வென்பதையே அறிவதில்லை.

மறுபடியும் மறுபடியும் நீங்கள் குழப்பமாகவே உணர்வீர்கள்.

என்னிடத்திலும் ஒரு பிரச்சினை இருக்கிறது. அடுத்த கணத்தில் நீங்கள் அதே கேள்வியைக் கேட்பீர்கள், என்னுடைய பதிலோ ஒரே

மாதிரி இருக்காது. காரணம், நான் பதிலளிப்பதில்லை. எதிர்த்துக் கூறுகிறேன் (respond). என்னுடைய பழைய பதில்களை நான் ஞாபகத்தில் வைத்துக் கொள்வதில்லை. உங்களுடைய கேள்வி மட்டும் அப்படியே இருக்கும். நான் மறுபடியும் எதிர்க் கேள்வி போடுகிறேன். என்னுடைய பதில்களை நீங்கள் சேகரித்துக் கொண்டே வந்தால் குழப்பம்தான் மிஞ்சும். உங்களுக்குப் பைத்தியமே பிடித்துவிடும். காரணம், அவற்றில் எந்தவோர் இணக்கத்தையோ, நெருக்கத்தையோ நீங்கள் காண்பதற்கில்லை. அவை முன்னுக்குப் பின் முரணானவை. நான் என்ன செய்ய முடியும். வாழ்க்கையே முன்னுக்குப் பின் முரணாகத்தான் இருக்கிறது. நான் வாழ்க்கையிடம் உண்மையாய் இருப்பதாயின் என்னுடைய விரிவுரைகளில் (statement) நான் முரண்பட வேண்டியிருக்கும். என்னுடைய விவரவுரைகளிடம் நான் உண்மையாயிருக்க விரும்பினால், அந்நிலையில் நான் வாழ்க்கையை வஞ்சித்தவனாவேன். நான் கடந்த காலத்தை வஞ்சிக்கலாம். ஆனால் என்னுடைய நிகழ்காலத்துக்கு வஞ்சனை செய்ய முடியாது. என்னுடைய விவரவுரைகளுக்கெதிராக நான் போக முடியும். ஆனால் இந்தக் கணத்துக்கு நிகழ்காலத்துக் கெதிராக என்னால் போக முடியாது.

ஆக, குழப்பம் தோன்றவே செய்யும். நான் ஒருநாள் ஏதோ ஒன்றைச் சொல்வேன். இன்னொரு நாள் வேறொன்றைச் சொல்வேன். நீங்கள் ஒப்பீடு செய்வீர்களாயின், என்னுடைய விவரவுரைகளில் இருந்து முரண்பாடற்ற ஒரு முழுமையான பொருளை உருவாக்க முயல்வீர்களாயின் நீங்கள் இடர்ப்பாட்டுக்குள்ளாவீர்கள். கடுமையான இடர்ப்பாட்டில் சிக்கிக் கொள்வீர்கள். அதைச் செய்யாதீர்கள். நான் சொல்வதை கவனித்தால் போதும். என்னுடைய பதிலில் இருந்து கற்றுக் கொள்ளப் பார்க்காதீர்கள், எனது எதிர்ச்செயலில் இருந்து கற்றுக் கொள்ளுங்கள். நான் என்ன சொல்கிறேன் என்பது பற்றிக் கவலைப்படாதீர்கள். நான் சொல்கிற முறையைப் புரிந்து கொள் ளுங்கள்.

ஒரு செயல் நிலையில், ஒரு கேள்வியில் நான் எப்படி எதிர்ச்செயல் புரிகிறேன் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். பதில் முக்கியமல்ல ஆனால், என்னுடைய சுறுசுறுப்பான எதிர்ச்செயல்தான்.

உயிரோட்டமுள்ள ஓர் எதிர்ச்செயலை (response) உங்களால் தெரிந்து கொள்ள முடியுமாயின் நீங்கள் சுறுசுறுப்பாகி விடுவீர்கள். நான்

சொல்கிற பொறுப்பு (responsibility) அகராதியில் சொல்லப்படுகிற கடமை, பொறுப்புணர்ச்சி, வாக்கு அல்ல. தாய் மகனிடம் 'ஞாபகம் வச்சுக்கோ, நீ என்னிடம் நம்பிக்கைக்குரியவனா இருக்கணும்' என்று சொல்கிறாள். தந்தை மகனிடம் சொல்கிறார், 'நினைவிருக்கட்டும், நீ என்கிட்டே நம்பிக்கைக்குரியவனா நடந்துக்கணும்' என்று. சமூகம் தனி நபர்களிடம் சொல்கிறது, 'நீ எங்களுக்கு - சமூகத்துக்கு நம்பிக்கைக் குரியவனா இருக்கணும்' என்று. கடவுளின் பிம்பங்களாய் தங்களை வரித்துக் கொண்டிருப்பவர்கள் மக்களிடம் சொல்கிறார்கள், 'நீங்கள் எங்களிடம் நம்பிக்கைக்குரியவராய் இருங்கள்' என்று.

பொறுப்புணர்ச்சி (responsibility) என்கிற சொல்லை நான் பயன்படுத்துகிறபோது உங்களுடைய சுறுசுறுப்பை, சுறுசுறுப்பாய் எதிர்ச்செயல் புரிவதையே கருத்தில் கொள்கிறேன். இந்தக் கணத்தில் உங்கள் இருப்புணர்வன்றி (being) வேறு யாருக்கும் நீங்கள் பொறுப்பி அல்ல. நம்பிக்கைக்குரியவராயிருப்பதே உங்கள் பொறுப்பு ஆகும். ஊறுபடத்தக்க, வெளிப்படையான இதயத்துடன் எதிர்ச் செயல் புரியுங்கள். மூடிய முஷ்டியுடனல்ல, திறந்த கைகளுடன். எதையும் மறைத்துக் கொண்டோ, வைத்துக் கொண்டோ இராமல், வாழ்க்கையுட னான ஆழ்ந்த நம்பிக்கையுடன், முற்றாக உங்களை வெளிப்படுத்திக் கொள்ளுங்கள். ரொம்பவும் திறமையாகவோ சாமர்த்தியமாகவோ இருக்கிற முயற்சி வேண்டாம். அந்நிலையில் கணத்துக்குக் கணம் நீங்கள் வாழ்க்கையுடன் மிதப்பீர்கள். உங்கள் வாழ்க்கை மாறிக் கொண்டேயிருப்பதால் உங்களுடைய பொறுப்பும் மாறும்.

சிலநேரங்களில் நீங்கள் வெளியில் உட்கார முடியாத அளவு சூடாகி இருக்கும். பாதுகாப்பளிக்க ஓர் இடம் தேவைப்படும் உங்களுக்கு. சில நேரங்களில் ரொம்பக் குளிர்ச்சியாக இருக்கும். அந்த ஷெல்ட்டரில் (Shelter) உங்களால் உட்கார முடியாது. நீங்கள் வெயிலில் உட்காரவே விரும்புவீர்கள். ஆனால், உங்களை முன்னுக்குப் பின் முரணானவர் என்று யாரும் சொல்லப் போகிறதில்லை. 'அன்று ஷெல்ட்டரில் உட்கார்ந்திருந்த நீர், தற்போது வெயிலில் உட்கார்ந் திருக்கிறீரே. முரண்பாடற்றவராயிரும். நீர் வெயிலில் அமர விரும்பினால் வெயிலிலேயே அமர்ந்திரும்.' இந்த அபத்தம் உங்களைச் சிரிக்க வைக்கும். ஆனால், வாழ்க்கையில் உங்களிடம் அவர்கள் எதிர்பார்ப்பதென்னவோ இதுதான்.

உங்களைச் சுற்றியிருக்கிற எல்லாமும் மாறிக் கொண்டிருக்கிறது. நிலையான எண்ணங்களைக் கொண்டு விடாதீர்கள். இல்லையேல் குழப்பத்திற்குள்ளாவீர்கள். மற்றவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று கவனிக்க வேண்டியதில்லை, உங்கள் இதயம் சொல்வதைக் கவனமாய் கேளுங்கள்.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

மனிதகுலம் தலைமுறை தலைமுறையாய் எதைப் பற்றி அஞ்சி நடுங்கியதோ அது கடைசியில் நடந்துவிட்டது. ஓர் அணுவியல் எதிர்வினை கட்டுக்கடங்காததாகி ஒட்டுமொத்த உலகமும் வெடித்துச் சிதறி அதில் உள்ள உயிரினங்களை ஒன்றுவிடாமல் கொன்று தீர்த்தது.

இயல்பாகவே பேர்லிகேட்ஸில் (Pearly Gates) பயங்கர குழப்பம். அத்தனை உயிர்களும் ஒரே நேரத்தில் வந்து சேர்ந்திருக்கிறதென்றால் என்ன செய்வது? எனவே உயிர்களை பலதரப்பட்டதாய் வகையினப் படுத்தி உரிய வரிசைகளில் அவற்றை நிற்கச் செய்வதென்று செயின்ட் பீட்டர் தீர்மானித்தார்.

ஓர் அறிவிப்புகுறி 'எஜமானர்களுக்கு' என்றும் மற்றொன்றும் 'பெண்டாட்டி தாசர்களுக்கு' என்றும் கண்டிருந்தது. எஜமானர்களுக்கு மட்டும் என்ற அறிவிப்புப் பலகையின் பின்னே ஓர் ஆன்மா மட்டும் வரிசையில் நின்றிருந்தது. மற்றோர் அறிவிப்பின் பின்னே நின்றிருந்த வரிசையோ பால்வீதி (milky-way) வரைக்கும் நீண்டிருந்தது.

செயின்ட் பீட்டருக்கு ஆச்சரியம். அந்தத் தனியே நின்றிருந்த நபரிடம் கேட்டார். 'நீர் மட்டும் எப்படி இங்கே நிற்கிறீர்?' என்று.

'எனக்குத் தெரியாது- இங்கே நிற்கும்படி என்னுடைய மனைவிதான் சொன்னாள்' என்று பதில் வந்தது.

சில நேரங்களில் மனைவி, சிலநேரங்களில் கணவர், சில நேரங்களில் தந்தை, சில நேரங்களில் தாய் - சில நேரங்களில் குரு. 'இங்கே நில்' என்று உங்களிடம் யாரோ சொல்கிறார்கள். அது ஏன் என்று உங்களுக்கும் தெரியாது. நீங்கள் எதற்காக இங்கே நிற்கும்படியானது என்பதை உறுதி செய்து கொள்ளுங்கள்.

கவனியுங்கள். அதில் சின்னதாக ஒரு சிக்கல் இருக்கிறது. நீங்கள் யாரையேனும் பின்பற்றுவது என்று தீர்மானித்திருந்தாலும், உங்கள் இதயம் சொல்வதைக் கேளுங்கள், நீங்கள் பின்பற்ற விரும்புகிறீர்களா

என்பதை இதயத்திடம் கேட்டுக் கொள்ளுங்கள். யாரையும் பின்பற்றாதீர்கள் என்று நான் சொல்லவில்லை. பின்பற்று என்று உங்கள் இதயம் சொல்லிவிட்டால் பிறகென்ன செய்வீர்கள் நீங்கள்? ஆனாலும், இதயம் சொல்வதைக் கேளுங்கள், முதலில் உங்கள் மன உணர்ச்சியை நீங்கள் உணருங்கள். காரணம், நிறைவாக உங்கள் இதயத்தின் நம்பிக்கைக்குரியவராய் நீங்கள் இருக்க வேண்டும். மற்றதெல்லாம் இரண்டாம் பட்சம். நீங்கள் முதன்மையானவர். உங்களுடைய உலகத்திற்கு நீங்கள் மையம்.

என்னைப் பின்பற்றுவதென்று நீங்கள் தேர்வு செய்திருந்தால், அல்லது, என்னிடம் உபதேசம் பெறுவதென்று நீங்கள் தேர்ந்திருந்தால், என்னைச் சரணடைவது என்று நீங்கள் தேர்ந்து கொண்டிருந்தால் முதலில் உங்கள் மனஉணர்வை உணர்ந்து கொள்ளுங்கள். இல்லையேல் நீங்கள் மறுபடியும், மறுபடியும் குழப்பத்துக்குள்ளாவீர்கள். 'நான் இங்கே செய்து கொண்டிருக்கிறேன்' என்று திரும்பத்திரும்ப எண்ணமிடத் தொடங்குவீர்கள். 'நான் எதற்காக சந்நியாசத்தை மேற்கொண்டேன், எதற்காக?' என்று சிந்திக்கத் தொடங்குவீர்கள். அடுத்தவர் சொன்னார் என்பதற்காக எதையும் செய்யாதீர்கள். அதை உணர்ந்து பாருங்கள். அதன்பிறகு குழப்பமே வராது. குழப்பம் என்கிற கேள்விக்கே இடமிருக்காது.

குழப்பம் ஒரு தவறான செயற்பாடு. உங்கள் மையத்தில் இருந்து நீங்கள் செயல்படுவீகளாயின் ஒருபோதும் குழப்பம் ஏற்படாது. நீங்கள் வேறு யாருடைய மையத்தில் இருந்தேனும் செயல்பட்டால் தொடர்ந்து குழப்பமேற்படும். மக்கள், மற்றவர்களுடைய அறியும் திறனைக் கொண்டு செயல்படுகிறார்கள், ஆலோசகர்கள் சிறப்பறிவுடையவர் களின் திறன். அவர்களைக் கொண்டு இவர்கள் வாழ்கிறார்கள்.

மக்கள், தங்களுடைய வாழ்க்கையை முற்றாக அவர்கள் கையில் ஒப்படைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

உணருங்கள், உணர்வு தோன்றும் வரை காத்திருங்கள். பொறுமையாயிருங்கள், அவசரப்படாதீர்கள். உங்களுடைய உணர்வை நீங்கள் நன்றாகப் புரிந்து கொண்டால் ஓர் ஆழமான மூல காரணத்தைப் பெறுவீர்கள். அந்த மூல காரணம் உங்களை வலுப்படுத்தும். உங்களைச் சுற்றி எந்தக் குழப்பத்துக்கும் அது இடமளிக்காது.

*பகவானே, பிரச்சினை என்பது என்ன?*

தற்போது ஒரு பிரச்சினையை நீங்கள் தோற்றுவிக்கிறீர்கள். கேள்வி இதுதான். யாரோ ஒருவர் வந்து, 'மஞ்சள் வண்ணம் அல்லது மஞ்சள் நிறம் என்றால் என்ன?' என்று கேட்கிறார். மஞ்சள் நிறத்தில் பூக்கள் இருக்கின்றன. பழுத்த இலைகள் மஞ்சள் நிறந்தான். பொன்மயமான சூரியனும் மஞ்சள் நிறம். ஆயிரத்தொரு பொருள்கள் மஞ்சள் நிறத்தில். ஆனால் மஞ்சள் நிறத்தைத் தனியே நீங்கள் பார்த்ததுண்டா? மஞ்சள் நிறப் பொருள்களை நீங்கள் பார்க்க முடியும். மஞ்சள் நிறம் மட்டுமாய் எதிர்ப்பட்டிருக்காது. எதிர்ப்பட்டிருக்க முடியாது.

நிறையவே பிரச்சினைகள் உண்டு. ஆனால், பிரச்சினை என்றால் என்ன என்பதை ஒருபோதும் நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். அந்தக் கேள்வியே புரிந்து கொள்ளக் கடினமானது. 'பிரச்சினை' என்று எதுவும் இல்லை. பிரச்சினை உங்களுக்குள் மோதலை ஏற்படுத்துவது. உங்களுக்குள் இரண்டு மனங்கள் இருக்கும் பட்சத்தில், அப்போது பிரச்சினை தோன்றும். இந்தப் பக்கம் போவதா அந்தப் பக்கமா எங்கே போவது என்று உங்களுக்குத் தெரியாது. அந்நிலையில் அது பிரச்சினையாகிவிடுகிறது. உங்களுடைய இரட்டைத் தன்மை (duality) தான் உங்கள் பிரச்சினை. இதைச் செய்யலாம் என்று எண்ணுகிறீர்கள். பிறகு அதைச் செய்யலாம் என்று எண்ணுகிறீர்கள். அப்போது பிரச்சினை ஏற்படுகிறது. நீங்கள் ஒற்றையாய் (உங்கள் மனம்) இருந்தால் பிரச்சினை இருக்காது. நீங்கள் பாட்டுக்கு இயங்கியபடி இருப்பீர்கள். 'பிரச்சினை என்றால் என்ன?' அல்லது 'மஞ்சள் வண்ணம் என்பது என்ன?' அல்லது, 'காதல் என்றால் என்ன?' போன்ற உணர்ந்து கொள்ளக் கடினமான கேள்விகளை நீங்கள் கேட்கிறபோதெல்லாம் அது இடர்ப்பாடாகிவிடுகிறது.

புனிதர் அகஸ்டின் சொன்னார், நேரம் என்றால் என்னவென்று நான் அறிவேன். ஆனால் யாராவது என்னிடம், 'நேரம் என்ன' என்று கேட்டால், சற்றும் எதிர்பாராமல் என்னுடைய எண்ணத் தொடர்விட்டுப் போய்விடுகிறது. நேரத்தை எல்லாரும் அறிந்தவர்கள். ஆனால் யாரேனும், 'இப்போ சரியா என்ன நேரம்?' என்று கேட்டுவிட்டால் தொல்லைதான், நேரம் என்னவென்று உங்களால் காண்பிக்கமுடியும். ஆனால், 'நேரம்' என்பது பற்றிக் குறையில்லாமல் சொல்வது கடினம்.

ஆனால், இந்தப் பிரச்சினை எதனால் தோன்றியது என்பதை நான் அறிந்திருக்கிறேன். பிரச்சினை பற்றித் தீர்மானிக்க முடியாமல் குழப்பமுற்ற சிலர் இருக்கிறார்கள். பிரச்சினை பற்றியே தெரியாத வர்கள். தீர்வு தேடி பாதைகளின் சந்திப்பில் நிற்கிறார்கள். பிரச்சினைகள் பலவாக இருக்கின்றன. காரணம் உங்கள் உணர்வுடனான, பிரபஞ்ச இதயத்துடனான தொடர்பை நீங்கள் இழந்து விட்டிருக்கிறீர்கள். உங்கள் பிரச்சினை எத்தகையது என்று சொல்லும்படி என்னிடம் நீங்கள் கேட்கிறீர்கள். தீர்வுக்காக மட்டுமன்றி பிரச்சினைக்காகவும் என்னை நீங்கள் சார்ந்திருக்கிறீர்கள். ஆனால் இது, கடந்த காலத்தில் எப்படிச் செய்யப்பட்டது என்பதேயாகும்.

மக்கள் என்னிடம் வரும்போது பிரச்சினை அவர்களுடையதா, அல்லது அவர்கள் இரவல் வாங்கியதா என்பதை நான் உடனடியாய் கண்டு கொள்கிறேன். ஒரு கிறிஸ்தவர் கொண்டு வருகிற பிரச்சினை எப்போதுமே ஓர் இந்துவால் கொண்டுவரப்படாததாகவே இருக்கும். ஒரு யூதர் கொண்டு வருகிற பிரச்சினை எந்தவொரு கிறிஸ்துவரால் கொண்டுவரப்படாததாகவே இருக்கும். ஒரு சமணர் கொண்டு வருகிற பிரச்சினை இந்துவினுடைய பிரச்சினையில் இருந்து முற்றிலும் வேறுபட்டதாகவே இருக்கும். என்னதான் நேரிடுகிறது? நிச்சயமாக இந்தப் பிரச்சி னைகள் வாழ்க்கைப் பிரச்சினைகளாக இருக்க முடியாது. காரணம், வாழ்க்கைப் பிரச்சினைகளில் இது யூதருடையது. இது இந்துவினுடையது. இது சமணருடையது இது கிறிஸ்தவருடையது என்று இருக்கமுடியாது. இந்தப் பிரச்சினைகள் இறைமையியல் சார்ந்தது. அவை போதிக்கப்படுபவை. அவர்கள் பிரச்சினை பற்றியும் - எதைக் கேட்பது என்பது பற்றியும் போதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

ரொம்பவும் ஏமாற்றும் திறமை உள்ளவர்கள் மக்களைச் சுரண்டிக்கொண்டிருக்கிறார்கள். முதலில் என்ன கேட்பது என்பதை உங்களுக்குப் போதித்து விட்டுத்தான் அதற்கான பதிலை உங்க ளுக்குச் சொல்கிறார்கள். நீங்கள் சரியான கேள்வியைக் கேட்டிருந் தால் சரியான பதில் கிடைக்கும். இரண்டுமே போலியானவைதாம். கேள்வி அவர்களால் கற்பிக்கப்படுவதும், பிறகு நீங்கள் கேட்பதும். தங்களால் விடையளிக்கக்கூடிய கேள்விகளை மட்டும் அவர்கள் உங்களுக்குக் கற்பிக்கிறார்கள். ஆக அந்த விளையாட்டு சரியாகவே, மிகச் சரியாகவே நடைபெறுகிறது.

நீங்கள் ஒரு சமணத்துறவியிடம் செல்கிறீர்கள். என்ன மாதிரி கேள்விகளைக் கேட்பது என்று சமணர்கள் உங்களுக்குக் கற்பித் திருக்கவில்லை என்று வைத்துக் கொள்வோம். பிறகு உங்களால் தொல்லைதான். காரணம், நீங்கள் கேட்கும் கேள்விகளுக்கான தீர்வுகள் அவர்களுடைய மரபில் இருந்திருக்காது. கடவுள் இந்த உலகத்தை எதற்காகப் படைத்தார் என்று ஒரு சமணரிடம் நீங்கள் கேட்டால் அவர் திகைத்துப் போவார். காரணம் அவருடைய இறைமையியலில் (theology) கடவுள் என்பதே கிடையாது. அவரு டைய இறைமையியலில் அப்படி எதுவும் தோற்றுவிக்கப்பட்டிருக்க வில்லை. இந்த உலகம் இயங்கிக் கொண்டிருக்கிறது எப்போதும், எப்போதுமாய், எப்போதைக்குமாய். படைப்பு என்பது அங்கே ஒரு போதும் இருந்திருக்கவில்லை. எனவே, கடவுள் உலகத்தை எதற்காகப் படைத்தார் என்று நீங்கள் கேட்பீர்களாயின் ஒரு சமணரைப் பொறுத்தவரை உங்களுடைய கேள்வி அறிவுக்குப் பொருத்த மற்றதாகவே படும். காரணம் கடவுளும் இல்லை படைப்பும் இல்லை என்றே அவர் நம்புகிறார். உலகின் இயக்கம் தொடர்கிறது என்பதே அவருடைய கருத்து. சமணர்களின் மொழியில் ‘படைப்பு’ என்கிற வார்த்தையே கிடையாது. காரணம் ‘படைப்பு’ என்கிற வார்த்தை படைப்பதற்காக ஒருவர் (கர்த்தா) இருப்பதையும் மறைமுகமாகக் குறிப்பிடுகிறது. படைப்பே இல்லையெனில் கர்த்தா எப்படி இருக்க முடியும்? உலகம் இருக்கிறது ஆனால் அதுவோர் படைப்பு அல்ல. அது நிலை பேறுடையது. உருவாக்கப்படாதது. அது எப்போதைக்கு மாய் இருந்து கொண்டிருப்பது.

இறைமையியல் சார்ந்த ஒரு கேள்வியைக் கேட்டு வைக்காதீர்கள். அது இரவல் வாங்கப்பட்டதாகவே இருக்கும். இருத்தல் சார்ந்த (existential) கேள்விகளைக் கண்டுபிடியுங்கள். உங்களை இடர்ப்பாட்டுக்குள்ளாக்குவது எதுவெனக் கண்டுபிடியுங்கள். உங்கள் காலணி எங்கே கடிக்கிறது (நசுக்குகிறது).என்பதைக் கண்டுபிடியுங்கள். உங்களுடைய சொந்தப் பிரச்சினைகளைக் கண்டுபிடியுங்கள்.

உங்களுடைய பிரச்சினை அடுத்தவருடைய பிரச்சினையாகவும் இருக்கும் என்பதற்கில்லை, எனவே இது ஒரு பிரச்சினை என்றே அவர் ஒப்புக் கொள்ள மாட்டார். பிரச்சினைகள் தனிநபர் சார்ந்தவை. அவை உலகப் பொதுமையான நடப்பு அல்ல. என்னுடைய பிரச்சினை என்னுடைய பிரச்சினைதான், உங்களுடைய பிரச்சினை

உங்களுடையதுதான். அவை உங்கள் கட்டைவிரல் பதிவுகள் (thumbprints) மாதிரி வேறுபடுகிறது.

இரவலாய் பெறப்பட்ட பிரச்சினைகளை மக்கள் கேட்கிறபோது அவற்றின் மீது உங்கள் கையொப்பத்தை பெற்றிருக்கவில்லை. அந் நிலையில் அவை பலனற்றவையாய், கேட்பதற்கும் தகுதியற்றவை யாய் இருப்பதை நான் காண்கிறேன். உங்கள் பிரச்சினை உங்களுடைய கையொப்பத்தை (ஒப்புதல்)ப் பெற்றிருக்க வேண்டும். அது உங்கள் வாழ்வில் இருந்து, போராட்டத்தில் இருந்து, சவாலில் இருந்து, பொறுப்புணர்வில் இருந்து, உங்களுடைய நேருக்குநேரான எதிர்ப்பில் இருந்து வெளிவந்திருக்க வேண்டும்.

இது நான் கேட்டறிந்தது:

ஆக முடிவாக அந்தப் பெண்ணைச் சந்திக்கும்படி கல்யாணத் தரகர் கோஹனைத் தூண்டினார். அவள் ரொம்பவும் அழகானவள், திறமையானவள், படித்தவள், இளமையானவள், பெட்டி பெட்டியாய் பணம் வைத்திருப்பவள் என்றொரு பேச்சு இருந்து வந்தது.

கோஹன் அவளைச் சந்தித்தான், விரும்பினான், கல்யாணம் செய்து கொண்டான்.

ஒருநாள் சென்றபிறகு, அந்தத் தரகரைக் கண்டுபிடித்து அவரிடம் எரிந்து விழுந்தான் 'நீ என்னிடமே உனது எத்துவேலையை காட்டி விட்டாய் இல்லையா? அவள் புனேயில் பாதிபேரிடம் படுக்கையைப் பகிர்ந்து கொண்டதாய் என்னிடம் ஒப்புக் கொண்டு விட்டாள்' என்று.

'அப்படியா? பார்க்கப்போனால் புனே ஒன்றும் அத்தனை பெரிய ஊர் இல்லையே' என்றான் அந்தத் தரகன்.

தரகனின் பிரச்சினையல்ல உங்கள் பிரச்சினை. உங்கள் பிரச்சினை உங்களுடையது, அது வேறு யாருடையதும் அல்ல. பிரச்சினை தனிப்பட்ட ஒருவருடையது என்றால் அதற்குத் தீர்வு கண்டுவிட முடியும். காரணம் அது உண்மையானதாயிருக்கும். நீங்கள் அதை ஒரு பரம்பரையில் இருந்தோ, சமூகத்திடம் இருந்தோ, வேறு யாரிடமிருந்தோ இரவலாய் பெற்றதாயின் அதற்கு ஒரு போதும் விடைகாண முடியாது. காரணம், முதற்கண் அது உங்களுடைய பிரச்சினையல்ல. ஒரு வியாதியைப் பற்றி யாரிடம் இருந்தோ நீங்கள் தெரிந்து கொள்வது போலத்தான் அது.

பிரசித்தி பெற்ற மருத்துவர் ஒருவரின் அலுவலக அறிவிப்புப் பலகையில் பெண்களுக்கென்று பிரத்யேக வாசகம் ஒன்று பொறித்திருந்ததை அன்றொரு நாள் இரவு நான் படித்தேன். அந்த வாசகம் - 'தயவு செய்து உங்களுடைய நோயைப் பற்றியோ, நோய்க்குறிகளைப் பற்றியோ மற்ற பெண்களிடம் சொல்லாதீர்கள்' நோய்க்குறிகளை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டால் மருத்துவருக்குக் குழப்பத்தை ஏற்படுத்திவிடும். மருத்துவருக்காகக் காத்திருக்கும் நேரத்தில் பெண்கள் பேசித்தானாக வேண்டியிருக்கிறது. மற்றவர்களின் நோய்க்குறிகள் அவர்களுடைய மனதில் ஆழப் பதிந்துவிடும். கண்டிப்பாய் மருத்துவரைக் குழப்பத்தில் ஆழ்த்தி, அது என்ன என்று அவர் அறியமுடியாமல் போய்விடும்.

நாளேடுகளில் மருந்து விளம்பரங்களைப் பார்த்தே நோய்வாய்ப் படுகிறவர்கள் இருக்கிறார்கள். நள்ளிரவில் மருத்துவரை தொலைபேசியில் அழைத்துத் தொல்லை கொடுத்த ஒரு மனிதரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நள்ளிரவில் தன்னுடைய தூக்கம் கெட்டதற்காக அந்த மருத்துவர் உண்மையில் கோபவசமானார். தொலைபேசியில், 'என்னய்யா விஷயம்' என்று சிடுசிடுத்தார். அந்த ஆசாமி தன்னுடைய நோயைப்பற்றி விவரிக்கத் தொடங்கியதும், 'நிறுத்துய்யா. செய்தித்தாளில் வந்த அதே கட்டுரையை நானும் படிச்சாச்சு. ஏதாவது சொல்லணும்னா சுருக்கமா சொல்லு' என்று அவருடைய வாயை அடைத்தார் அவர்.

மக்கள் வார, மாத இதழ்களில் இருந்து தங்கள் நோய்களைக் கற்றுணர்கிறார்கள். அடுத்தவர் பிரச்சினைகள் உங்கள் மனதில் ஆழப் பதிந்துவிட, அதன் விளைவாக அவற்றை உங்கள் பிரச்சினையாகவே நீங்கள் எண்ணத் தொடங்கி விடுகிறீர்கள். அந்நிலையில் அதற்குத் தீர்வுகாண வழியே இருக்காது. காரணம் முதற்கண் அது உங்களுடைய பிரச்சினை அல்ல.

நான் கூர்ந்து கவனித்தது இதுதான். ஒரு பிரச்சினை உண்மையாக இருந்தால் அதற்குத் தீர்வு காண முடியும். அதுவே ஒரு பிரச்சினை பற்றிய என்னுடைய வரையறையும் ஆகும். அதற்குத் தீர்வுகாண முடியவில்லையெனில் அது ஓர் பிரச்சினையே அல்ல என்றுதான் சொல்ல வேண்டும். நோய் என்பது குணப்படுத்தக் கூடியதாயிருந்தால்தான் நோய். எல்லா நோய்களுமே குணப்படுத்தக்கூடியவைதாம், கொள்கையளவிலேனும். ஆனால், உங்களுக்கு நோய் இல்லை

என்றால். அந்நிலையில் குணப்படுத்த முடியாத நோயாகவே அது இருக்கும். உங்கள் மனதுக்குள் மட்டுமே இருக்கிற நோயை யாரால் குணப்படுத்த முடியும். எந்த மருந்தும் உங்களுக்குப் பயன்படாது.

ஆக. ஒரு பிரச்சினையைப் பற்றி அறிந்து கொள்வதற்கு அது உளதாய் இருக்க (existential) வேண்டும். இறைமையியல் சார்ந்ததாகவோ (theologicl), ஊகமாகவோ, கோட்பாடாகவோ இருந்தால் போதாது. வாழ்க்கையுடனான மோதலில் வெளிப்பட்டதாக அது இருக்க வேண்டும்.

நீங்கள் செயலற்ற சிந்தனைகளில் சிக்கிக் கொண்டதன் விளைவாகவே தொண்ணூற்று ஐயந்து சதவிகித பிரச்சினைகள் உங்களுக்கு. உங்கள் சிந்தனைக்குப் பொருந்தாத ஒரு செயல்நிலை அமைகிறபோது, பிரச்சினை உருவெடுக்கிறது. உங்களுடைய எண்ணத்தை மாற்றுவதற்குப் பதிலாக செயலின் நிலை (situation) யை நீங்கள் மாற்ற முற்படுகிறீர்கள். உங்களுடைய கருதுகோளுக்குப் பொருத்தமில்லாத ஒரு செயல்நிலையை நீங்கள் எதிர்கொள்கிறபோது, உங்கள் கருதுகோளை மாற்றிக் கொள்வதைவிட அந்தச் செயல் நிலையை மாற்றுவதற்கு நீங்கள் கடுமையாய் போராடுகிறீர்கள். அந்நிலையில் பிரச்சினை எழுகிறது.

எப்போதுமே உங்கள் மனதை மாற்றிக் கொள்ள தயாராயிருங்கள். ஏனெனில், கருதுகோள்களின் காரணமாக வாழ்க்கையை மாற்றுவதென்பது முடியாத காரியம். அதுவுமல்லாமல், வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கவும் விளங்கிக் கொள்ளவும் பலவழிகளை நாம் கற்றிருக்கிறோம். சில நடைமுறை ஒழுங்குகளை நாம் பொருத்திக் கொண்டிருக்கிறோம்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

தம்முடைய எஜமானரைக் கண்டால் அஞ்சி நடுங்குவார் சுண்டெலி போன்ற அந்தச் சிறிய மனிதர். ஒருநாள் தம்முடைய சக ஊழியரிடம் தாம் உடல்நலக் குறைவாக இருப்பதாய் தெரிவித்தார் அவர். அந்த நண்பர் கேட்டார், 'நீர் ஏன் வீட்டுக்குச் செல்லக் கூடாது?' என்று.

'ஓ. அது என்னால முடியாது.'

'இதென்ன முட்டாள்தனம்? அவருக்குத் தெரியவா போகுது. அவர் இன்னைக்கு இங்கே வரவும் இல்லை.'

கடைசியில் ஒருவாறு நம்பிக்கை பெற்றவராய் அந்த மனிதர் வீட்டுக்குச் சென்றார். அவர் அங்கே சென்ற பொழுது அவருடைய முதலாளி நம் மனைவியைத் தழுவி, முத்தமிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார். திரும்பவும் வந்த வழியே, அவர் அலுவலகத்துக்கு ஓடினார். 'அருமையான நண்பரய்யா நீர். நான் மாட்டிக்க பார்த்தேன்' என்று நண்பரிடம் சொன்னார்.

பழைய சிந்தனா முறை. செயல்நிலை முற்றிலும் வேறாயிருந்தால் இவர் முதலாளியைக் கையும் களவுமாய் பிடித்திருக்க வேண்டியவர், முதலாளியிடம் தாம் பிடிபட்டிருக்கக்கூடும் என்று அவர் நினைத்தது பழைய சிந்தனை முறை.

வாழ்க்கையைக் கவனியுங்கள். உங்கள் மனதுக்கு அடிமையாகி விடாதீர்கள். உங்களுடைய பிரச்சினைகளில் தொண்ணூறு சதவிகிதம் எவ்வித வருத்தத்திற்கும் இடமில்லாமல் எளிதாய் மறைந்துவிடும். பத்து சதவிகித பிரச்சினைகள் மட்டுமே எஞ்சியிருக்கும், காரணம், அவை உளதாய் இருப்பவை. அவை இருந்தாக வேண்டியவை தாம், காரணம் அவற்றின் மூலமே நீங்கள் வளர்ச்சியடைய வேண்டியிருக்கும். அவற்றைக் கைவிட்டால் நீங்கள் வளர்ச்சியடைவதற்கில்லை. மோதல் அவசியம், வேதனை அவசியம். காரணம் அது உங்களைப் பளிங்குப்போல் தெளிவுடையவராக்கும், மேலும் விழிப்புடையவராக்கும். உங்களால் அதைக் கடந்து வர முடியுமாயின், ஒரு பிரச்சினையைக் கடந்து சென்ற ஒருவன் அடைகிற பரமசுகத்தை நீங்கள் பெறுவீர்கள்.

அது மலையேற்றம் போன்றது. நீங்கள் தொடர்ந்து மேலேறுகிற போது களைத்து, வியர்த்து, மூச்சுவிடவே சிரமமாகி விடுகிறது. உச்சியை அடைவதென்பது சாத்தியமற்றதாய் தெரிகிறது. எப்படியோ மலையுச்சியை அடைந்து வானத்துக்குக் கீழேபடுத்து இளைப்பாறுகிறீர்கள். மலையேறத் தீர்மானித்ததில் உங்களுக்கு மகிழ்ச்சிதான். ஆனால் ஏறுவது கடினமாயிருந்தது. நீங்கள் ஹெலிகாப்டர் மூலம் மலையுச்சியை அடைந்திருக்க முடியும், அந்நிலையில் அது உழைத்து ஈட்டியதாயிருக்காது. ஹெலிகாப்டர் மூலம் உச்சியை அடைகிறவனும், காலால் நடந்து செல்கிறவனும் வெவ்வேறு சிகரங்களை அடைகிறார்கள்.

அவர்கள் ஒரே முகட்டினை (peak) ஒருபோதும் அடைவதில்லை. உங்கள் வழிமுறைகளால் நீங்கள் சென்றடையும் இடம் மாறுகிறது.

ஹெலிகாப்டர் மூலம் மலையுச்சியை அடைந்தவன் சிறிதளவே மகிழ்ச்சி அடைகிறான். 'ஆகா, எத்தனை அழகாயிருக்கு' என்பான் அவன். அது வயிறு புடைக்கத் தின்று வைத்த ஒருவன் முன்பாய் இன்னொரு தட்டு சுவைமிக்க உணவு வைக்கப்பட்டதைப் போன்றதே யாகும். அவன் நல்லது என்று சொல்வான். அதன் வாசனையை உள்ளுக்கிழுப்பான். ஆனால், வயிறு திணிந்து, பசி எடுக்காத நிலையில் அது எந்த அளவு அவனுக்கு மகிழ்ச்சியளிக்க முடியும்? அவனுக்குப் பக்கத்தில் இன்னொருவன் பசியோடிருக்கிறான்.

மலையுச்சியை அடைய ஒருவருக்கு வேட்கை அவசியம். நீங்கள் மலையேறும்போது அந்த வேட்கை வளர்ந்தபடி இருக்கும். நீங்கள் மேலும் மேலும் பசித்திருப்பீர்கள், களைத்திருப்பீர்கள், உடனே சென்றடையத் தயாராயிருப்பீர்கள். மலையுச்சியை அடைந்ததும் இளைப்பாறுவீர்கள். நீங்கள் அதை ஈட்டி விட்டீர்கள் உங்களுடைய உழைப்பின் மூலம்.

இந்த வாழ்க்கையில் உழைக்காமல் எதையும் நீங்கள் அடைவதற்கில்லை. நீங்கள் வாழ்க்கையிடம் ரொம்பவும் திறமையாய் நடந்து கொள்வதாயிருந்தால், பல வாய்ப்புகளை நீங்கள் தவறவிடும்படி ஆகும்.

எனவே, உங்களுடையதல்லாத பிரச்சினைகளை விட்டு விடுங்கள். மற்றவர்களிடமிருந்து நீங்கள் அறிந்து கொண்ட பிரச்சினைகளை விட்டுவிடுங்கள். உங்களுடைய மாறாத கருத்தியல்களால் (ideologies) உண்டான பிரச்சினைகளை விட்டுவிடுங்கள். தடையின்றிப் பாயும் நீர்மப் பொருளைப் போல் சென்றபடி இருங்கள். ஒவ்வொரு கணத்திலும் இறந்து புதிதாய் பிறவுங்கள். எந்தக் கருத்தியலையும் சுமக்கிற நிலை இருக்காது. நிலையான மனோ பாவத்தைக் கொள்ளும்படி இருக்காது. நீங்கள் வெளிப்படையாய், அனுகூலமானவராய் நம்பிக்கைக்குரியவராகி விடுகிறீர்கள். அந்நிலையில் அவசியமான பிரச்சினைகள் மட்டுமே அங்கிருக்கும், உங்கள் வளர்ச்சியின் பகுதியானவைதான் இருக்கும்.

ஒரு நடைமுறை ஒழுங்கை (routine) ஏற்படுத்திக் கொண்டு அதன்படி வாழ்கிறவர்கள் இருக்கிறார்கள். அவை வெறுமனே உடலசைவுகளை மேற்கொள்வதாகத்தான் இருக்கும், உண்மையான வாழ்க்கையாக இருக்காது. அவர்களுடைய பிரச்சினைகளும் வெறுமையாய், அர்த்தமற்றதாகவே இருக்கும். யாரோ ஒருவர்

வருகிறார். 'கடவுள் இருக்கிறாரா?' என்று கேட்கிறார். அது வெற்றான பிரச்சினை. கடவுளிடம் உங்களுக்கு எந்தவிதத்தில் தொடர்பிருக்கும்? இன்னும் உங்களையே நீங்கள் அறிந்து கொண்டபாடில்லை. ஆதியில் இருந்தே தொடங்குங்கள், தொடக்கத்தில் இருந்து தொடங்குங்கள். உங்களுக்குள் இருக்கும் விழிப்புணர்வையே நீங்கள் அறிந்திருக்க வில்லை. அப்படியிருக்க நீங்கள் கடவுளைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் நிறைவான, முழுமையான விழிப்புணர்வைப் பற்றியல்லவா கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள், முன்பே உங்களிடம் வெகுமதியாய் வழங்கப்பட்ட விழிப்புணர்வு பற்றிகூட நீங்கள் தெரிந்து கொள்ள வில்லை, இறுதியான குறிக்கோளாய் அமைகிற, அதற்குமேல் எதுவும் இல்லை என்பதாய் உள்ள ஒன்றின் (பிரும்மம்) மலர்ச்சி பற்றியல்லவா கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள்! முட்டாள்தனம்.

கடவுளைப் பற்றிய அனைத்தையும் மறந்து விடுங்கள். இப்போதே உங்களுடைய இருப்புணர்வில் நுழையுங்கள், கடவுள் உங்களுக்கு எதை வழங்கியிருக்கிறார் என்பதைக் கண்டு கொள்ளுங் கள். அந்தப் பரம்பொருளால் உங்களுக்கு வழங்கப்பட்டிருப்பதைப் புரிந்து கொள்ளுங்கள். உங்களால் அதைத் தெரிந்து கொள்ள முடிந்தால் இன்னும் பல வாசல்கள் உங்களுக்காகத் திறக்கும். நீங்கள் எந்த அளவு கற்றுணர்கிறீர்களோ அந்த அளவு புதிர்கள் வெளிப் படையாகும். கடவுளே முடிவான புதிராவார். மற்றவற்றையெல்லாம் நீங்கள் கற்றுணர்ந்து, இனி கற்பதற்கு எதுவும் இல்லை என்கிற நிலையில், நீங்கள் அத்தனை குழப்பங்களையும், வருத்தங்களையும், வாழ்வின் வேதனைகளையும் கடந்துவிட்ட நிலையில் கடவுளே இறுதியான வெகுமதி - நீங்கள் அதனை அடைந்தேயாக வேண்டும்.

உங்களுக்குப் பொருத்தமில்லாத கேள்விகளைக் கேட்டு வைக்காதீர்கள்.

வெற்றான அசைவுகளுடன் கூடிய வழக்கமான வாழ்க்கையை வாழாதீர்கள். மக்கள் தேவாலயத்துக்குச் செல்கிறார்கள். வெற்றான அசைவு. அவர்கள் ஒருபோதும் அங்கே போக விரும்பியதில்லை, அப்படியிருக்க நீங்கள் ஏன் போய்க் கொண்டிருப்பது? காரணம், மற்றவர்கள் போய்க் கொண்டிருக்கிறார்களே, சமுதாயத்தில் அதுவோர் சம்பிரதாயமாகிவிட்டிருக்கிறதே. தேவாலயத்துக்குச் செல்வது நல்லது என்று மக்கள் நினைக்கிறார்கள், அது சமுதாயத்தில் உங்களுக்கு ஒரு

மரியாதையை ஏற்படுத்தித் தருவது நிச்சயம். தேவாலயம் மதிப்புடையது. இயேசுவிடம் செல்வது கடினம். உங்கள் மதிப்பை ஆபத்துக்குட்படுத்திக் கொள்ளும்படி இருக்கும்.

நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள். நீங்கள் உங்களுடைய மதிப்பை பணயம் வைத்திருக்கிறீர்கள். ஏனெனில் இங்கே என்னிடம் வருவதை யாரும் மதிப்பாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள். நீங்கள் இழக்கலாம், இழக்காமலும் இருக்கலாம். ஆனால் உறுதியாக எதையும் பெற மாட்டீர்கள். இது சம்பிரதாயமல்ல. சம்பிரதாயத்திற்காக யாராவது மதிப்பை விட்டுத்தர முன் வருவார்களா என்ன? நேச நெஞ்சினால்தான் மதிப்பை உதற முடியும். அன்பிற்காக தங்களது மரியாதையை தாங்களே விட முடியும்.

மக்கள் பிரார்த்தனை பண்ணுகிறார்கள், வெற்றான அசைவுகள் என்றாலும் பண்ணத்தான் வேண்டியிருக்கிது. அவர்களுடைய இதயங்களில் அன்பு இல்லை, நன்றியுணர்வில்லை, ஆனாலும் அவர்கள் தொடர்ந்து பிரார்த்தித்தப்படி இருக்கிறார்கள். அந்நிலையில் தோன்றும் உதவாக்கரை பிரச்சினைகள்.

எது உங்கள் உணர்வைத் தொடுகிறதோ அதைச் செய்யுங்கள்.

நான் கேட்டறிந்த ஒன்று!

எண்பது வயதான முன்னாள் இரயில்வே ஊழியர் இரயில் பாதையின் பக்கமாய் வீடு அவருக்கு. அவர் வேலையில் இருந்து ஓய்வு பெற்றிருந்தார். அந்த வழியே போகும் சரக்கு இரயில்களின் பெட்டி (wagon) களை எண்ணுவதை அவர் வழக்கமாய் கொண்டிருந்தார். அவசியமில்லை ஆனால் அது பழக்கமாகிவிட்டது. ஒரு ஞாயிற்றுக் கிழமை குடும்பத்தோடு 'பிக்னிக்' (picnic) சென்றிருந்த போது, அவ்வழியே சென்ற ஒரு இரயிலை அவர் அசட்டை செய்ததை அவருடைய மகன் கண்டு, 'ஏன் பெட்டிகளை எணணாமல் இருந்துவிட்டீர்கள்?' என்று கேட்டார்.

அந்த முதியவர் சொன்னார், 'நான் ஞாயிற்றுக்கிழமைகளில் வேலை பார்ப்பதில்லை' என்று.

உங்கள் வாழ்க்கையைக் கவனியுங்கள். அதை உண்மையானதாய், நம்பத்தக்கதாய் செய்யுங்கள். வெற்றான அசைவுகளை மேற்கொள்ளாதீர்கள். இல்லையேல் உங்களுடைய கேள்விகள்

வெற்றானதாகிவிடும். அவை பிரச்சினைகளைப்போல் தோன்றும். ஆனால் அவை உண்மையான பிரச்சினைகளல்ல.

சரி, உண்மையான பிரச்சினைக்கும், பொய்யான பிரச்சினைக்கும் என்ன வேறுபாடு? தீர்வு காணப்படாமலே தீர்வு காணப்பட்டதாய் தெரிவது பொய்யான பிரச்சினை. தீர்வு காணப்பட்டாலும், தீர்வு காண்பதற்கான முயற்சியே பெருமளவு தீர்வாய் அமையும் உண்மையான பிரச்சினையில், அந்த முயற்சியில் நீங்கள் கவனமும், அறிதலும், புரிதலும் உடையவராகி விடுகிறீர்கள். உங்களைப் பற்றி முன்பு ஒருபோதும் அறிந்திராதவற்றை அறிந்து கொள்ளவே நீங்கள் வருகிறீர்கள்.

உங்களை எதிர்கொள்வதற்கும், உங்கள் இருப்புணர்வில் (being) புனிதப் பயணம் மேற்கொள்வதற்கும் பிரச்சினை ஒரு வாய்ப்பு எனலாம். உங்கள் இருப்புணர்வில் பிரவேசிக்க, பிரச்சினையை ஒரு வாயிலாக நீங்கள் பயன்படுத்துங்கள்.

ஆக, இது தான் என்னுடைய பதில். பிரச்சினை என்பது வளர்ச்சிக்கான ஒரு வாய்ப்பு. பிரச்சினை கடவுள் வழங்கும் வெகுமதி, கடவுளிடமிருந்து விடுக்கப்படுகிற ஒரு சவால். அதனை எதிர் கொள்ளுங்கள், அதனைக் கடப்பதற்கான வழிகளைக் கண்டறியுங்கள், பெருமளவில் பயனடைவீர்கள்.

***தாங்கள் சொல்கிறீர்கள், 'ஒரே தவறை மீண்டும் செய்யாதே' என்று. மதிப்பிடலும், ஒப்பிடலும், தீர்ப்பு செய்தலும் கொண்ட மனதை வைத்துக் கொண்டு நான் எப்படித் தவறு செய்வதில் இருந்து விலகியிருக்க முடியும்? அந்நிலையில் நான் முடியாது என்றுதானே சொல்லும்படி இருக்கும்.***

ஒரு தவறை இரண்டு முறை செய்யாதீர்கள் என்று நான் சொல்லும்போது, மதிப்பிடுங்கள், கருத்துருவாக்கிக் கொள்ளுங்கள், ஒப்பிடுங்கள் என்று நான் சொல்லி கொண்டிருக்கவில்லை. ஒரு தவறை நீங்கள் செய்கிறபோது அது தவறு என்பதை நீங்கள் கண்டு கொள்ள வேண்டும் என்று தான் நான் சொல்கிறேன். நீங்கள் கண்டு கொள்கிறபோதே அது கைவிடப்பட்டு விடுகிறது. உங்களால் அதை மறுபடியும் செய்ய முடியாமல் போய்விடும்.

உதாரணமாக, நீங்கள் நெருப்பில் கையை வைத்தால் அது சுட்டு புண்ணாகி விடும். அடுத்தமுறை நீங்கள் தீயின்பக்கம் சென்றால் அரிஸ்டாட்டில் மாதிரி முடிவை இரண்டு மெய்க்கோள்களில் இருந்து

அடையும் வாதமுறையை மேற்கொள்வீர்களா? 'இதுவும் நெருப்புதான், எல்லா நெருப்புமே புண்ணாக்கிவிடும் என்பதால் நான் அதில் கையை வைக்கமாட்டேன் என்று கருதிக் கொள்வீர்களா? கடந்த கால அனுபவத்துடன் அதை நீங்கள் ஒப்பிட்டுப் பார்ப்பீர்களா? மதிப்பீடு செய்வீர்களா? நீங்கள் அதைச் செய்தால் அப்போது மீண்டும் தவறு செய்வதை உங்களால் தவிர்க்க முடியாது. காரணம், அந்நிலையில் உங்கள் மனம் சொல்லும் 'இந்த நெருப்பு வேறாக இருக்கலாம். யார் கண்டது. நெருப்பு தன்னுடைய வாழ்க்கை முறையை மாற்றிக் கொண்டிருக்கலாம். ஏற்கனவே நடந்ததுபோல் இம்முறை நடவாதிருக்கலாம். சென்ற தடவை அதற்குக் கோபம் இருந்திருக்கும். இந்தத் தடவை அது கோபமில்லாதிருக்கலாம். யாருக்குத் தெரியும்?' என்று.

மதிப்பீடு செய்கிற, கருத்துக் கொள்கிற, ஒப்பிட்டுப் பார்க்கிற மனம், தான் முக்கிய விஷயத்தைப் புரிந்து கொண்டிருக்கவில்லை என்பதை முன்பே வெளிக்காட்டி விடுகிறது. இல்லையேல் மதிப்பிடவும், ஒப்பிடவும் என்ன அவசியம் இருக்கப் போகிறது? நீங்கள் உண்மையைக் கண்டு கொண்டால், அக்கறையோடு கண்டுபெறப்பட்ட அந்த உண்மையே போதுமானது. நீங்கள் தீயைத் தவிர்த்து விடுவீர்கள்.

எனவே, அனுபவங்களின் வழியே நீங்கள் கடந்து செல்கிறபோது கவனமுடன் இருங்கள், பார்க்கும் திறன் அற்றவராகவோ, கேட்கும் திறன் அற்றவராகவோ இருந்து விடாதீர்கள். கடந்த காலத்தைத் திரும்பிப் பார்க்கும்படி நான் கூறவில்லை. நீங்கள் இருக்கிற இடத்தில் இருந்தபடி மிகச்சரியாக இந்தக் கணத்தைப் பாருங்கள் என்றுதான் சொல்கிறேன். ஆனால் அதில் தவறு இருக்குமாயின் தன்னுடைய சொந்த இசைவின் பேரில் அது நழுவிச் சென்றுவிடும். தன்னுடைய சொந்த இசைவில் அது விடப்படாவில், அதில் உள்ள தவறை நீங்கள் இன்னும் முழுமையாக அறிந்திருக்கவில்லை என்பதையே அது வெளிக்காட்டும் அது இல்லை என்கிற பிரமை ஏதோவோர் இடத்தில் தொடர்ந்து இருக்கும்.

மக்கள் என்னிடம் வந்து, 'கோபம் கெடுதல் என்பது எங்களுக்குத் தெரியும். அது நச்சுத்தன்மை கொண்டது எங்களை அழித்துவிடும் என்பது தெரியும். ஆனால், என்ன செய்யட்டும்? நாங்கள் கோபப் பட்டுக் கொண்டுதான் இருக்கிறோம்' என்கிறார்கள். அவர்கள் என்ன

சொல்கிறார்கள்? கோபம் கெடுதலானது என்று மக்கள் சொல்வதில் இருந்து தாங்கள் தெரிந்து கொண்டதாகவும், கோபம் நச்சுத்தன்மை உடையது என்று மறை நூல்களில் தாங்கள் படித்ததாகவும் ஆனால் தாங்களாக அதைத் தெரிந்து கொள்ளவில்லை என்றும் அவர்கள் சொல்கிறார்கள்.

சாக்ரட்டீஸ் கூறுவார், 'அறிவு நுணுக்கத்திறன் கொண்டது' என்று. மிகச் சிறந்த கருத்து. இது ஒரு சுவர், கதவு அல்ல என்பதை நீங்கள் தெரிந்து கொண்டதும் மறுபடியும் மறுபடியும் உங்கள் தலையை அங்கே மோதிக் கொண்டிருக்க மாட்டீர்கள். ஒருமுறை கதவை நீங்கள் கண்டு கொண்டு விட்டால் பிறகு எப்போதுமே அந்த வழியாகக் கடந்து செல்வீர்கள். கடந்தகால அனுபவங்களை, ஒப்பிடல்களை, தீர்மானித்தலை, முடிவு செய்தலை மறுபடியும் மறுபடியும் எண்ணமிட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்பதில்லை.

இது நான் கேட்டறிந்தது.

கேட்கும் திறனற்ற ஒரு சமய குரு பாவமன்னிப்பு கோருபவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தார். ஒருவன் அதற்கான கூண்டுக்குவந்து, முழந்தாளிட்டுச் சொன்னான்.

'தந்தையே, ரொம்பவும் மோசமான ஒரு காரியத்தை நான் செய்துவிட்டேன். என்னுடைய தாயை நான் கொன்று விட்டேன்.'

முதியவரான அந்தச் சமயகுரு தன்னுடைய காதுகளைத் தனது கைகளால் குவித்துக் கொண்டு கேட்டார், 'என்னது?' என்று.

'என்னுடைய தாயை நான் கொன்றுவிட்டேன்' தன்னுடைய தவறுக்காக வருந்தியவன் உரத்த குரலில் சொன்னான்.

'என்னது? கேட்கும்படியா சொல்லு?' கடவுளின் பிரதிநிதி கட்டளையிட்டார்.

கடுமையான அளவு மனநிலை குலைந்திருந்த அந்தக் கொலைகாரன், 'என்னுடைய தாயை நான் கொன்றுவிட்டேன்' என்று இடி போன்ற குரலில் முழங்கினான்.

சமயகுரு கேட்டார், 'ஆ, எத்தனை முறை?' என்று.

செவிடன் செவிடன்தான், குருடன் குருடன்தான். நீங்கள் அனுபவம் சொல்வதைக் கவனமுடன் கேட்காவிடில், உங்கள்

அனுபவத்துக்கு நீங்கள் செவிமடுக்காவி'டில் அந்நிலையில் நீங்கள் தொடர்ந்து அதையேதான் செய்து கொண்டிருப்பீர்கள். உண்மையில் நீங்கள் செய்ததையே திரும்பவும் செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பது சரியாகாது. புதிதாய் ஒன்றைச் செய்வது போலத்தான் மறுபடியும் நீங்கள் அதைச் செய்கிறீர்கள். காரணம் கடந்தமுறை உங்களுக்குத் தவறிவிட்டது. அது செய்ததையே திரும்பச் செய்வதாகாது.

இதுவே என்னுடைய புரிதல் ஆகும். எந்தவொரு தவறையும் அது தவறு என்று புரிந்துவிட்டால் நீங்கள் மறுபடியும் அதைச் செய்ய மாட்டீர்கள். நீங்கள் அதை மீண்டும் செய்கிறீர்கள் என்றால், நீங்கள் புதிதாக அதைச் செய்வதையே அது காட்டுகிறது. காரணம், கடந்த காலம் உங்களுடைய பிரக்ஞை (தன்னுணர்)யில் இன்னும் பிரவேசித்தபாடில்லை. நீங்கள் அதை முதல் முறையாய் மறுபடியும் செய்கிறீர்கள். ஆனால் அது மீண்டும் செய்வதாகாது. நீங்கள் அதைப் புரிந்து கொண்டிருந்தால் மறுபடியும் அது செய்யப்பட்டிருக்காது. மனதால் உணர்ந்து கொள்ளும் திறன் (understanding) ஓர் இரசவாதம், அது உங்களை அடியோடு மாற்றிவிடுகிறது.

ஆக, உங்களை ரொம்பவும் சாமர்த்தியக் காரராகும்படி நான் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. எப்போதும் நல்லது எது கெட்டது எது என்று சிந்தித்துக் கொண்டிருக்கும்படியோ, எதைச் செய்யலாம் எதைச் செய்யக்கூடாது என்றோ, எது நெறி சார்ந்தது எது நெறியற்றது என்றோ நான் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. நான் சொல்வதெல்லாம், நீங்கள் எங்கிருந்து கடந்து சென்றாலும் கவனமுடன் செல்லுங்கள், அந்நிலையில் தவறான ஒன்றை மறுபடியும் செய்ய மாட்டீர்கள் என்பதைத்தான்.

இதுவே விழிப்புணர்வின் நேர்த்தியாகும். எது சரியானதோ அது உயர்நிலை அடைகிறது, எது தவறானதோ அதன்மூலம் அது அழிக்கப்படுகிறது. விழிப்புணர்ச்சி விரும்பத்தக்க ஒன்றுக்கு உயிர்ச்சக்தியாகவும், தீதான ஒன்றுக்கு அழிவு சக்தியாகவும் செயல்படுகிறது. விழிப்புணர்ச்சி தகுதியான ஒன்றுக்கு வாழ்த்தாகவும், தகுதியற்ற ஒன்றுக்கு சாபமாகவும் அமைகிறது. பாவம் பற்றி என்னிடம் நீங்கள் விளக்கம் கேட்பீர்களாயின், நான் இப்படித்தான் அதை வரையறை செய்கிறேன், 'முழுமையான விழிப்புணர்ச்சியுடன் செய்யப்படுவது பாவமாகாது. முழு விழிப்புணர்ச்சியுடன் செய்ய

முடியாததே பாவமாகும்' என்று. இப்படிச் சொல்லலாம், எது விழிப்புணர்வற்ற நிலையில் செய்யப்படுகிறதோ அது பாவம், எது விழிப்புணர்வுடன் செய்யக் கூடியதோ அது நற்பேறு (virtue) என்று கொள்ளலாம். விழிப்புணர்வு, விழிப்புணர்வின்மை என்பதை நினைவில் வையுங்கள்.

வளர்ச்சியின் முக்கியமான கருத்தே விழிப்புணர்வுக்கும், விழிப்புணர்வின்மைக்கும் இடையிலானதுதான். கூடுதல் விழிப்புணர்வுடனும், குறைவான விழிப்புணர்வின்மையுடனும் இருங்கள். விழிப்புணர்வில் இன்னும் கொழுந்து விட்டெரியும் அளவுக்கு உங்கள் ஆற்றலைக் கொண்டு வாருங்கள், அவ்வளவே.

*நேசிப்பிற்குரிய பகவானே, தாங்கள் எதையும் தீவிரமாக எடுத்துக் கொள்ள மாட்டீர்களா?*

ஒன்றை நான் தீவிரமாக எடுத்துக் கொள்வேன் - நகைச்சுவை (joke) களை நான் தீவிரமாக எடுத்துக் கொள்வதுண்டு. நீங்கள் அதைக் கவனித்தேயாக வேண்டும். ஒரு நகைச்சுவையை நான் சிரித்துக் கொண்டே சொல்ல மாட்டேன். அதை உண்மையிலேயே கருத்தூன்றியதாக (serious) த்தா எடுத்துக் கொள்வேன். உலகிலேயே நகைச்சுவை தவிர்த்து வேறெதுவும் அத்தனை மனமாரக் கூறப்பட்டிருக்கவில்லை.

*'முல்லா நஸ்ருத்தீன் ஆஸ்ரமத்திற்கு வந்தால் ஏதேனும் ஒரு குழுவில் அவரைச் சேர்த்துக் கொள்வீர்களா? அல்லது, சொந்தமாக அவரையே ஒரு குழுவை நடத்தும்படிச் சொல்வீர்களா? அப்படியானால் அது எப்படிப்பட்ட குழுவாக இருக்கும்?'*

நான் அதை முன்பே செய்ததுண்டு. அது பலனளிக்கவில்லை. முல்லா நஸ்ருத்தீன் தலைவர்களுக்குகெல்லாம் தலைவர். அவரை ஒரு குழுவில் பங்கேற்பாளராக்கிவிட முடியாது. அவருடைய நான் என்னும் அகந்தை (ego) அதற்கு இடம் கொடுக்காது. நான் அவரிடம் கேட்டேன். அவர் சொன்னார், 'சரி, நீங்கள் என்னை ஒரு தலைவராக்கிவிடலாம்' என்று. நான், ஒரு மூன்று நாள் குழுவில் அவருக்கு வாய்ப்புக் கொடுத்தேன். அதில் பங்கேற்பதற்காக அத்தனை அறிவுடையவர்களும், முட்டாள்களும் திரண்டு வந்தனர். காரணம், முல்லா நஸ்ருத்தீன் இரு சாராரையுமே அழைத்திருந்தார்.

யார் முட்டாள்களோ அவர்கள் அவரையும் முட்டாளாக எண்ணிக் கொண்டனர். யாரெல்லாம் அறிவுடையவர்களோ அவர்கள் எல்லாம் அவரையும் அறிவு நுட்பம் வாய்ந்தவராய் கருதிக் கொண்டனர். அவர் தந்திரமானவர், இரண்டுக்கும் பொதுவாய் நின்று கொண்டு விட்டார். அவரை ஒரு முட்டாளாகவும் விளங்கிக் கொள்ளலாம், சிறந்த மதியூகியாகவும் விளங்கிக் கொள்ளலாம்.

அவர் குழுவின் முன்பாக நின்றபடி கேட்டார், 'நான் உங்களுக்கு எதைக் கற்பிக்கப் போகிறேன்' என்று உங்களுக்குத் தெரியுமா?

உண்மையில் எல்லோரும் சொன்னார்கள், 'எங்களுக்கு எப்படித் தெரிய முடியும்? எங்களுக்குத் தெரியாது' என்று.

அவர், 'அதுகூட உங்களுக்குத் தெரியவில்லை என்கிறபோது நான் உங்களுக்குக் கற்பிக்கப் போகிறதில்லை, காரணம் நீங்கள் அதற்குத் தகுதியானவர்கள் அல்லர்' என்று.

அவர் சென்றுவிட்டார். அடுத்தநாள் நான் அவரிடம் பேசி ஒரு வழியாய் அவரை மறுபடியும் இணங்க வைத்தேன். அவர் மீண்டும் பங்கேற்பாளர்களிடம் சென்று கேட்டார், 'நான் கற்பிக்கப் போவது என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?'

தற்போது அவர்களுக்குக் கொஞ்சம் தெரிந்திருந்தது. அவர்கள் சொன்னார்கள், 'ஆகா, எங்களுக்குத் தெரியும்' என்று.

அவர், 'பிறகென்ன? உங்களுக்குத் தெரியும்னா நீங்க தெரிஞ்சிகிட்டீங்கன்னுதான் அர்த்தம்' என்று. சொல்லி, அங்கிருந்து சென்றுவிட்டார்.

நான் மூன்றாவது நாளும் ஒரு வழியாய் அவரைச் சமாதானப் படுத்தி அழைத்து வந்தேன். அவர் அங்கே சென்று அவர்களிடம் கேட்டார், 'நான் எதைக் கற்பிக்கப் போகிறேன் என்பது பற்றி உங்களுக்குத் தெரியுமா?'

தற்போது அவர்களுக்கு இன்னும் கொஞ்சங் கூடுதலாய் தெரிந்திருந்தது. அவர்கள் சொன்னார்கள், 'ஆமாம், எங்களில் பாதிபேர் அறிவோம், பாதிபேர் அறிந்திருக்கவில்லை' என்று.

அவர் சொன்னார், 'ரொம்ப நல்லது. யாருக்கெல்லாம் தெரியுமோ அவர்கள் தெரியாதவர்களுக்குச் சொல்லட்டும். நான் இங்கேயிருந்து என்ன ஆகப்போகிறது' என்று.

முல்லா நஸ்ருத்தீன் சூஃபிகள் கண்டறிந்த ஓர் உபாயம் (device) என்றே சொல்ல வேண்டும். இந்த மனிதர் இருந்தாரா இல்லையா என்பது நிச்சயமில்லை. அவர் இருந்திருக்கலாம், இல்லாதிருக்கலாம். பல நாடுகள் அவருக்கு உரிமை கொண்டாடுகின்றன. ஈரான் அவரைச் சொந்தம் கொண்டாடுகிறது. அவர்கள் அங்கே முல்லா நஸ்ருத்தீனுக்காக நினைவுச் சின்னத்துடன் ஒரு கல்லறையே கட்டி வைத்திருக்கிறார்கள். சோவியத் ரஷ்யாவும் அவருக்கு உரிமை கோருகிறது. மற்ற நாடுகளும் அவரைச் சொந்தம் கொண்டாடுகின்றன. ஏறக்குறைய மத்தியக் கிழக்கு நாடுகள் எல்லாமே அவரைத் தங்களுடையவர் என்று உரிமை கோருகின்றன. இங்கே அவர் புதைக்கப்பட்டிருக்கிறார் என்று பல இடங்களை அவர்கள் காட்டுகிறார்கள்.

அவர் இருந்திருக்கலாம். இல்லாதிருக்கலாம். ஆனால் அவர் ஏற்படுத்திய தாக்கம் பெரிய அளவிலானது.

எது அவரால் செய்யப்பட்டதாயினும், அவர் செய்ததாய் எழுதப் பட்டதாயினும் அவையெல்லாம் பொருட் செறிவுடையவைதாம். இந்தக் குட்டிக் கதையில்கூட, அவர் கேட்கிறார், 'நான் சொல்லப் போகிறேன் என்று உங்களுக்குத் தெரியுமா?' என. எல்லாரும் சொல்கிறார்கள் 'இல்லை' என்று. யாரும் சொல்லாமல் இருந்துவிடவில்லை. 'இல்லை' என்பது எளிதாய் வந்து விடுகிறது. கடவுள் நம்பிக்கையற்றவராய் இருப்பது எளிது. எந்தவொரு மனோபாவமும் இல்லாமல் இருந்தால்தான் சிரமம். அந்நிலையில் உங்களுக்குக் கற்பிப்பது கடினமாகிவிடும். அடுத்தநாள் அவர்கள் எல்லாருமே, 'ஆமாம்' என்கிறார்கள், காரணம், அவர் சொல்ல விரும்புவதைக் கேட்பதற்கு அவர்கள் பேராவல் கொண்டவர்களாய் இருக்கிறார்கள். அவர்களுடைய 'ஆம்' பேராசையில் வெளிப்பட்டது. பேராசையை ஒருபோதும் திருப்திப்படுத்துவதற்கில்லை. முல்லா சொன்னார், 'உங்களுக்கு முன்னாடியே தெரியும்னா. அப்புறம் சொல்றதுக்கு என்ன இருக்கு?' என்று. மூன்றாவது நாள் கூடுதல் சூழ்ச்சித் திறத்தையும், சாமர்த்தியத்தையும் அவர்கள் காட்ட முயல்கின்றனர். அவர்கள் இரண்டு மாற்றுக்களை (alternatives) முயன்று பார்த்தாயிற்று. தற்போது மிச்சமிருந்த மூன்றாவதை 'பாதிபேருக்குத் தெரியும் பாதிப்பேருக்குத் தெரியாது' என்பதை முயன்று பார்க்க முற்பட்டனர். முல்லாவைத் தகுந்த இடத்தில் வைப்பதற்கு அவர்கள் முயன்றனர். ஆனால்,

அவரை நிலைநிறுத்துவது முடிகிற காரியமா என்ன? அவர் கிட்டதட்ட பாதரசம் மாதிரி. அவர் உங்கள் கைகளில் இருந்து நழுவுகிறவர். அவர் சொன்னார், 'ரொம்ப நல்லது? உங்களில் பாதிப்பேருக்குத் தெரிந்திருக்கிறது பாதிப்பேருக்குத் தெரியாது என்கிறபோது தெரிந்தவர்கள் தெரியாதவர்களுக்குச் சொல்லித் தரலாமே.

நான் எதற்காக இங்கே தேவைப்படுகிறேன்? என்னுடைய நேரத்தை ஏன் வீணடிக்கிறீர்கள்' என்று.

முதலில் அவர்கள் 'இல்லை' என்றார்கள். யாரும் பேசாமல் இருக்கவில்லை. பிறகு அவர்கள் ஒருமித்த குரலில் 'ஆமாம்' என்றார்கள். யாரும் வாயை மூடிக்கொண்டு இருக்கவில்லை. பிறகு அவர்கள் 'ஆம், இல்லை' என்கிற இரண்டையும் சொன்னார்கள். ஆனால் யாரும் அமைதியாய் இருந்துவிடவில்லை.

அவர் மீண்டும் என்னிடம் வந்து, 'இவர்களுக்குக் கற்றுக் கொடுக்க முடியாது. அமைதியாயிருப்பவர்களுக்குத்தான் கற்பிக்க முடியும்' என்று சொன்னார்.

அமைதியாய் அடக்கமாயிருப்பது மாணவநிலைக்குரியது. நீங்கள் முன்பே அறிந்து கொண்டு இங்கு வந்திருந்தால் உங்களுக்குக் கற்பிக்க முடியாது. நீங்கள் மறுக்கிற மனோபாவத்துடன் இங்கே வந்திருந்தால், சந்தேகத்துடனோ அவநம்பிக்கையுடனோ வந்திருந் தால் உங்களுக்குக் கற்பிக்க முடியாது. நீங்கள் திறமையுள்ளவராய் இருக்கிறீர்கள். காரணம், இந்த மூன்று மனோபாவங்களையும் - 'இல்லை' என்கிறவருடையது, 'ஆம்' என்கிறவருடையது, ஒரே நேரத்தில் இரண்டு படகுகளிலும் சவாரி செய்ய முயல்கிறவருடையது - இவர்களுக்கு கேக்கை சாப்பிட்டுவிடவும் வேண்டும், வைத்துக் கொள்ளவும் வேண்டும் - கொண்ட மூன்று வகை மனிதர்கள் உலகில் இருக்கிறார்கள். இம்மூன்று வகையுமே புரிந்து கொள்ளும் திறனற்றவைதாம்.

யார் அமைதியாக இருந்து கொண்டு, தன்னுடைய அமைதியின் மூலம் விடையளிக்கிறாரோ, யார் ஒளிவு மறைவற்ற மனமுடையவரோ அவரே கற்பிக்கப்படத் தகுதியானவர்.

உங்களால் முடிந்தவரை முல்லா நஸ்ருத்தீனைப் படித்து, அவரைப் புரிந்துகொள்ள முயலுங்கள். அவர் உங்களுக்குக் கிடைத்த மிகப்பெரிய பாக்கியம், காரணம், அவர் நகைச்சுவையின் மூலமாக

உங்களுக்குக் கற்பிக்கிறார். அவருடைய ஒவ்வொரு கதையும் வலிமைமிக்க பொருளொன்றை (meaning) க் கருக்கொண்டிருக்கும். ஆனால், நீங்கள் தாம் அதை வெளிப்படுத்த வேண்டியிருக்கும். அதனால்தான் நான் சொல்கிறேன். அவரை முட்டாளாக எண்ணிக் கொள்பவர்களும் இருக்கிறார்கள் என்று. அவர்கள் மேலோட்டமாக ஒரு கதையைப் படித்துவிட்டு, சிரிப்பதோடு தீர்ந்தது. அதை ஒரு நகைச்சுவை என்றே அவர்கள் நினைக்கிறார்கள். நகைச்சுவையாகவே நின்று விடுவதில்லை. நீங்கள் நுட்பஅறிவு கொண்டவராயின், அதனை ஆராய்ந்து பார்த்து நட்பை மிகச்சரியாகப் புரிந்து கொள்வீர்கள். அதன் உட்பொருளை ஒரு கணமேனும் நீங்கள் பற்றிக் கொண்டு விட்டால், மிகப்பெரிய அளவில் மகிழ்ச்சி அடைவீர்கள்.

ஒரு புதிய பரிமாணத்தை நீங்கள் கவனத்தில் கொள்வீர்கள்.

தற்போது மேற்கத்திய நாடுகளிலும் முல்லா நஸ்ருத்தீன் வாசிக்கப்படுகிறார், ஆனால், மக்கள் தவறவிடுகிறார்கள். இவை வெறும் நகைச்சுவை என்றே அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். அவை அப்படி இல்லை. நகைச்சுவையூடே மிகவும் புனிதமான விஷயங்களைக் கற்பிக்கும் உபாயங்கள் (devices) அவை. அவற்றை நகைச்சுவை மூலம்தான் கற்பிக்க முடியும், காரணம் நகைச்சுவை மட்டுமே முறுக்கேறிய உணர்ச்சிகளில் இருந்து உங்களை விடுபடச் செய்ய (relax) முடியும். இறைவனை அறிய முடியும். சிரிப்பு - நம்பகத்தன்மையுடையதாய், வயிறு குலுங்கச் சிரிக்க வைப்பதாய் இருக்குமெனில், உங்களுடைய ஒட்டுமொத்த உடம்பும் அவருடைய உச்சகட்ட ஆற்றலில் அதிருமெனில், உங்களுடைய இருப்புணர் வெங்கும் அந்தச் சிரிப்பு பரவியிருக்குமெனில், நீங்கள் அதில் மூழ்கிக் கரைந்து விடுவீர்களெனில் நீங்கள் இறைவனை ஏற்றுக் கொள்ள இசைவானவர்தாம்.

தீவிரமுள்ள மனிதர்கள் ஒருபோதும் கடவுளை அடைவதற் கில்லை. அவர்களால் அது முடியாத காரியம். கடவுள் அத்தகைய தொரு ஆபத்துக்குத் தம்மை உட்படுத்திக் கொள்ள (risk) மாட்டார். ம்ம்... அவர்கள் சலிப்பின் விளிம்பிற்கே அவரைக் கொண்டு சென்று விடுவார்கள்.

ஒரு சின்னக் குழந்தையை முதல்முதலாய் தேவாலயத்துக்குக் கொண்டு சென்றிருந்தார்கள். கடுமையான, கவலை தேங்கிய, வாட்டத்தில் தொங்கிப்போன அவர்களுடைய முகங்களை அவன்

பார்த்தான். யாரோ செத்துப் போய்விட்ட மாதிரி ஒரு களையிழந்த காட்சியாய் அது இருந்தது. வீடு திரும்பம் வழியில் தாய் கேட்டாள், 'எப்படி இருந்துச்சு' என்று.

அவன் சொன்னான், 'நான் உண்மையைச் சொல்லித்தானாக வேண்டும். கடவுள் ரொம்பவும் கலக்கமுற்றிருப்பதாகவே எனக்குப் பட்டது' என்று.

தாய் கேட்டாள், 'நீ எதைக்குறித்துச் சொல்கிறாய்?' என்று.

அவன் சொன்னான், 'அந்தச் சலிப்பூட்டுகிற முகங்கள் அவரைச் சலிப்படையச் செய்திருக்கும். அம்மா, இதே மனிதர்கள்தாம் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் வருகிறார்களா?' என்று.

'ம்ம்... உண்மையில் இதே மனிதர்கள்தாம். சிலர் நாற்பது ஐம்பது ஆண்டுகளாக வந்து கொண்டிருக்கிறார்கள்.'

பையன் ரொம்பவும் கவலைக்குள்ளானான். அவன் சொன்னான், 'கடவுளைப் பற்றி எண்ணிப் பாருங்கள். அதே முகங்கள், அதே கடுமையான முகங்கள் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும். கடவுள் கண்டிப்பாய் உச்சகட்ட சலிப்பிற்குள்ளாகி விடுவார்' என்று.

சிரிப்பின் மூலம் நீங்கள் கடவுளை அடையமுடியும். நான் சிரிப்பை உங்களுக்குக் கற்றுக் கொடுக்கிறேன். ஆடியும், பாடியும், ஆனந்தக் கூத்தாடியும், மகிழ்ச்சியுடன் கொண்டாடியும் நீங்கள் கடவுளை அடையலாம். சிரிப்பைக் கற்றுக் கொள்ளுங்கள்.

நீங்கள் சிரிக்கிற பொழுது உங்களுக்கு என்ன நிகழ்கிறது என்பதைக் கவனியுங்கள். இல்லையேல் அதன் ஒட்டுமொத்த அழகை நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். நீங்கள் சிரிக்கிறபோது உங்கள் அகந்தை எப்படி எதிர்பாராதவிதமாய் மறைகிறது என்பதைக் கண்டு கொள்ளுங்கள். மனமானது கணப்பொழுதுக்குச் செயலற்று நின்றுவிடுவதைப் புரிந்து கொள்ளுங்கள். கணத்தின் சிறு பகுதி நேரத்துக்கு மனம் அங்கே இருக்கவில்லை - எவ்வித எண்ணமும் இருந்திருக்கவில்லை. நீங்கள் ஆழ்ந்து சிரிக்கிறபோது அங்கே எண்ணம் இருப்பதில்லை.

சிரிப்பில் தியான நிலை இருக்கிறது, மருத்துவ குணமுந்தான். தூல சரீரத்தை (physical body)ப் பொறுத்தவரை அது மருந்தின் குணங்களைக் கொண்டது. ஆன்மா சார்ந்த விதத்திலோ அது தியான பூர்வமானது.

முல்லா நஸ்ருத்தீன் ஒரு குழுவை உருவாக்க வேண்டும் என்று நான் விரும்புவேன். ஆனால் அது அத்தனை எளிதல்ல, அவர் கடினமானவர்.

*அன்பிற்குரிய பகவானே! தங்கள் தெய்விக இசை எனது இருப்புணர்வின் மையப் பகுதியைத் தொட்டுவிட்டது. முதல் தடவையாக நான் வந்தபோது சந்நியாசம் வாங்கிக் கொள்ளத் தயாராயிருந்தேன்.*

*என்னுடைய சந்நியாசம் தங்களுடைய ஆசியைப் பெற்றதா அல்லது எனது சத்யாக்கிரகமா என்பது எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை.*

*தாங்கள் சொல்கிறீர்கள், 'வா, என்னைப் பின்பற்று' என்று. ஆனால், தங்களை எப்படிப் பின்பற்றுவது. நான் தங்களை அறிந்திருக்கவில்லையே? சில சமயங்களில் தங்களுடைய நறுமணத்தை நான் உணர்கிறேன், சில சமயங்களில் அதை இழக்க நேரிடுகிறது.'*

நான் 'வருக'வென்றும், 'என்னைப் பின்பற்றுக' என்றும் சொல்கிறபோது, என்னுடைய அறிவைப் பின்பற்றுங்கள் என்று சொல்லவில்லை. 'வாருங்கள், என்னைப் பின்பற்றுங்கள்' என்று நான் சொல்வது அறிந்திராத ஒன்றை அறிதற்கான அழைப்பேயாகும். என்னைப் பின்பற்றுங்கள் என்று நான் கூறவில்லை, ஏன் எனில் நான் என்பது அங்கே இல்லை. மிகப்பெரிய வெட்டவெளிக்குள் உங்களை நான் அழைக்கிறேன்.

நீங்கள் அந்த வாசலுக்குள் நுழைந்தவுடன் என்னையோ, உங்களையோ காணமாட்டீர்கள். முற்றிலும் மாறுபட்ட ஒன்றைக் கண்டடைவீர்கள். மக்கள் அதைத்தான் கடவுள் என்கிறார்கள்.

சில நேரத்தில் என்னுடைய நறுமணத்தை நீங்கள் உணர்கிறீர்கள் என்பதையும் சில நேரத்தில் அது இழக்கப்படுகிறது என்பதையும் நான் அறிவேன். காரணம் நீங்கள் எனக்கு நெருக்கமாய் இருக்கிற மனநிலைகளும், என்னில் இருந்து தொலைவில் இருக்கும்படியான மனநிலைகளுந்தான். எனக்குச் சமீபமாய இருக்கும்போது அந்த நறுமணத்தை நீங்கள் பெறுகிறீர்கள். தொலைவாய் இருக்கும்போது அதைத் தவற விடுகிறீர்கள். எனவே, என்னுடன் நெருக்கமாய் இருக்கும்போது உண்டாகும் மனநிலையை எப்போதும்

பெறப்பாருங்கள். அந்த மனநிலைகளிலேயே மேலும் மேலும் உங்களை இளைப்பாற்றிக் கொள்ளுங்கள்.

உடல் சார்ந்த வகையில் நம் இருவருக்கும் இடையே உள்ள தூரம் ஒரு பிரச்சினையல்ல. ஆன்மா சார்ந்த இடைவெளிதான் பிரச்சினை. சிரித்துக் கொண்டிருக்கிற போது எனக்குப் பக்கமாய் இருப்பதாகவும் திடீரென்று உங்கள் நாசித்துவாரங்களில் அந்த நறுமணம் நிரம்பு வதாகவும், உங்கள் இருப்புணர்வில் நறுமணம் பரவியிருப்பதாகவும் நீங்கள் உணர்வீர்கள்தானே. அந்நிலையில் இன்னும் கூடுதலாய் சிரிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் இங்கிருக்கும் போது மட்டுமே அந்த நறுமணத்தை உணர்வதாய் உங்களுடைய உள்ளுணர்வு கூறினால், எண்ணங்களைக் கிளறாமல் அப்படியே என்னை நோக்கியபடி இருங்கள்.

அப்போது எண்ணங்களை மிகுதியான அளவில் கைவிடக் கற்றுக் கொள்ளுங்கள். உங்களுடைய உணர்வு எதுவாயினும் குறிப்பிட்ட மனநிலையோடு கூடுதல் பயனைப் பெறப் பாருங்கள். என்னுடைய நறுமணம் உங்களுடைய நறுமணமாகிவிடும். காரணம் அது என்னுடையதுமல்ல, உங்களுடையதுமல்ல, கடவுளுடையது.

*பகவானே, ஐந்து மாத காலமாய் நான் மூலாதாரத்தில் இருந்து பருகியது என்னை மேலும் தாகமாய் உணரச் செய்கிறதேயன்றி குறைவாக அல்ல. உங்களுடைய நீரில் ஏதோவொரு புதுமை இருக்க வேண்டும். தியானத்தில் இந்த வாசகம் எனக்குத் தோன்றியது.*

'இருண்ட வனத்திடை மறைந்திருக்கும்
இன்சுவை நீருள்ள சின்னஞ்சிறு ஏரி - அதுவே
கடலுக்கு மூலாதாரம்.
பகவானே! நீங்கள் இனிக்கிறீர்கள்
கரிக்கவும் செய்கிறீர்கள்
கரிக்கிறது பிரிகின்ற கணத்தில்
கவலையுறுகிறேன் பிரிவதில்
இந்த மூலத்துக்கே நான்
வந்துவிட விரும்புகிறேன்
நான் முட்டக் குடித்துப்பின்
அந்த மூலத்தை அடைந்திருப்பேன்'

இது ஆனந்த ஊர்மிளாவிடமிருந்து.

அது உண்மை. அப்படித்தான் அது இருக்கிறது.

எத்தனைக்கு என்னைப் பருகுகிறீர்களோ (ஆர்வத்துடன் மனதில் வாங்கிக் கொள்ளுதல்) அத்தனைக்குத் தாகமுடையவராய் இருப்பீர்கள். காரணம் நான் உங்களை நிறைவடையச் செய்யப் போவதில்லை. மேலும் மேலும் நிறைவற்றவராகவே வைத்திருப்பேன். காரணம். நீங்கள் நிறைவடைந்துவிட்டால் அந்நிலையில் கடவுளை ஒருபோதும் அடைய மாட்டீர்கள்.

உங்களுடைய தாகத்தை (விருப்பம்) அதிகரிக்கவே நான் இங்கிருக்கிறேன். உங்களை மேலும் பசியுடையவர்களாக்கவே (ஆவல்) நான் இங்கிருக்கிறேன். ஒருநாள் நீங்கள் அப்படியே தாகமும் பசியுமாய். பசி மட்டுமேயாய் இருப்பீர்கள். அந்தக் கணத்தில் நீங்கள் வெடித்து. மறைந்துவிட கடவுள் மட்டுமே காணப்படுவார்.

நீங்கள் என்னோடு திருப்தி அடைந்து விடுவீர்கள் என்றால், நான் உங்களுடைய எதிரியேயன்றி நண்பனல்லன், காரணம், அந்நிலையில் நீங்கள் என்னையும், என்னுடைய பதில்களையுமே பற்றிக் கொண்டிருப்பீர்க;ள.

கிட்டத்தட்ட ஒரு வாசலாகவே நான் இருக்கிறேன். என் வழியே செல்லுங்கள., என்னைப் பற்றிக் கொண்டு விடாதீர்கள். பயணம் என்னோடு தொடங்குகிறது. ஆனால் என்னோடு முடிவதில்லை.

நீங்கள் வருத்தப்படவே செய்வீர்கள் என்பதை நான் அறிவேன். ஆனால், அந்த வருத்தத்தில் கவனமாக இருங்கள். அதனுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள. அது இருக்கிறது. உங்களைச் சுற்றிலும் தொங்கவிடப்பட்டிருக்கிறது. ஆனால், அது நீங்கள் அல்ல. கூடுதலான விழிப்புணர்வை, சாட்சி பாவத்தைப் பெறுவதற்கு அந்த வாய்ப்பை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளுங்கள். உங்கள் கவலைக்கு ஒரு சாட்சியாக நீங்கள் இருக்க முடிந்தால், அந்தக் கவலை மறைந்துவிடும். உங்கள் கவலைபற்றிய உணர்வு உங்களுக்கிருந்தால், அதை உங்களுடைய விழிப்புணர்வின் மூலம் நீங்கள் மறையச் செய்துவிட முடியும். நீங்கள் எங்கு சென்றாலும் உங்களோடு நானும் வந்து கொண்டிருப்பேன்.

மூலத்துக்குத் திரும்ப வேண்டும் என்கிற அவசியம் இருக்காது. காரணம், உங்களுடைய சாட்சி பாவத்தில் நீங்கள் எங்கிருந்தாலும் எனக்குப் பக்கமாகவே இருப்பீர்கள். மூலாதாரத்துக்கு நெருக்கமாகவே இருப்பீர்கள்.

மூலம் (source) என்பது உங்களுக்கு வெளியே இருக்கிற ஏதோ ஒன்றல்ல. அத்துடன், நீங்கள் உண்மையிலே என்னைச் செவிமடுக்கிற போது, உங்களுக்கு வெளியே உள்ள ஒருவருக்குக் காது கொடுப்பதாகாது. அது உங்களுக்குள் இருக்கிற ஒருவரைக் கவனித்துக் கேட்பதேயாகும். அது உங்களுக்குள் இருந்து ஒலிக்கும் குரலை கவனமுடன் கேட்பதாகும். நீங்கள் என்னை நேசிக்கிறபோது என்ன நடக்கிறதென்றால், முதல் முறையாய் உங்கள் மீதே நீங்கள் நேசம் கொண்டு விடுகிறீர்கள். அதுதான் உண்மை.

சூத்திரம் - 48 *'க்ரஹணா- ஸ்வரூபா அஸ்மிதான்வ யார்த்தவத்வ ஸம்யமாதிந்திரிய ஜய'*

புலன்களின் புறச்சார்பு, அதில் இருந்து உண்டாகும் அறிவு, இந்த அறிவால் வரும் நான் என்கிற அகங்காரம் இவற்றின் முக்குணங்கள் அவற்றால் ஆன்மாவுக்கு வரும் அனுபவம் இவற்றின் மீது சம்யமம் செய்தால் புலன்கள் வெல்லப்படுகின்றன.

சூத்திரம் - 49 *'ததோ மனோஜ வித்வம் விகரணபாவ ப்ரதான ஜயச்ச'*

இதிலிருந்து, உடலானது மனத்தின் வேகத்தோடு இயங்கக் கூடிய ஆற்றலும், புலன்கள் உடலில் இருந்து பிரிந்து தனித்து நின்று செயல்புரியக்கூடிய ஆற்றலும், இயற்கையை வெல்கிற ஆற்றலும் உண்டாகின்றன.

சூத்திரம் - 50 *'சத்வபுருஷன் யதாக்யாதி மாத்ரஸ்ய சர்வபாலா திஷ்டாத்ருத்வம் ஸர்வக் ஞாத்ருத் வம்ச'*

சத்வத்திற்கும், புருஷனுக்கும் உள்ள வேறுபாட்டினைப் பிரித்தறிகின்ற விவேகத்தின் மீது சம்யமம் செய்வதால் எல்லா ஆற்றல்களும், எல்லா அறிவும் உண்டாகின்றன.

சொற்களால் வெளிப்படுத்த முடியாததை வெளிப்படுத்தும் பதஞ்சலியின் திறன் உயர்மதிப்பு உடையதாகும். எப்போதுமே அவரைவிட மேம்பட்டவர் எவரும் இல்லை. பிரக்ஞையின் அகவுலகை முடிந்த அளவு மிகச்சரியாக வரைவு செய்தவர் அவர். சாத்தியமற்ற ஒன்றை அவர் கிட்டத்தட்ட செய்து முடித்தார்.

இராமகிருஷ்ணரைப் பற்றி நான் கேள்விப்பட்ட கதை.

ஒருநாள் தம்முடைய சீடர்களிடம், 'நான் எல்லாவற்றையும் இன்று உங்களுக்குச் சொல்லப் போகிறேன். எதையும் இரகசியமாக வைக்கப் போகிறதில்லை' என்றார் அவர். மையங்கள் பற்றித் தெளிவாக விவரித்ததுடன், இதயம் தொண்டைவரை அவற்றுக்குரிய அனுபவங் களையும் அவர் விவரணை செய்தார். அத்துடன் புருவமத்தியில் உள்ள புள்ளியையும் சுட்டிக்காட்டி, 'பரமாத்மா நேரடியாக உணரப்படுகிற இடம் இது. மனம் இங்கே நிலைப்படுகிறபோதுதான் சமாதி கூடுகிறது' என்றும் சொன்னார். ஆத்மாவையும் பரமாத்மா வையும் பிரிப்பது ஒளி ஊடுருவும் தன்மை கொண்ட ஒரு மெல்லிய திரையேயாகும். அந்நிலையில் சாதகன் அனுபவப்படுகிறான்...' இதனைச் சொல்லியவர் உடனே பரமாத்மாவைப் பற்றி விளக்கமாக விவரிக்கத் தொடங்கினார். அவர் சமாதியில் பிரவேசித்து, தன்னுணர்வற்றவரானார். சமாதி கலைந்து விழிப்படைந்தவர் மறுபடியும் அதை விவரிக்க முயன்றார். மீண்டும் சமாதி கூடி உணர்வற்றவரானார். பல முயற்சிகளுக்குப் பிறகு, இராமகிருஷ்ணர் கண்ணீர்விட்டு அழத் தொடங்கியதோடு, அதைப்பற்றிப் பேசுவது சாத்தியமில்லை என்று தம்முடைய சீடர்களிடம் தெரிவித்தார்.

ஆனால், இராமகிருஷ்ணர் பல வழிகளில், பல்வேறு போக்குகளில் முயன்றும் இதுதான் எப்போதுமே நடந்திருக்கிறது அவருடைய வாழ்க்கை நெடுகிலும். புருவ மத்தியைக் கடந்து சஹஸ்ர தளத்தை அடைய முற்படுகிறபோதெல்லாம், உள்ளிருக்கும் ஏதோ ஒன்றின் பிடியில் அவர் அகப்பட்டுக் கொண்டு விடுகிறார். அதை

நினைவிற்குக் கொண்டு வந்து விவரிக்கிற முயற்சியில் அவர் நினைவிழந்து விடுகிறார். மணிக்கணக்கில் அவர் உணர்வற்ற நிலையிலேயே இருக்கிறார். அது இயல்புதான். சஹஸ்ராரத்தின் பேரின்பம் அத்தகையது. அது ஒருவரை அடக்கியாள்வதாகும். அந்தப் பரமசுகம் ஒருவர்மீது அதிகாரம் செலுத்தித் தன்போக்கில் கொண்டு செல்லும் பெரிய கடலைப் போன்றது. புருவமத்தியைக் கடந்ததும் நீங்கள் நீங்களாக இருப்பதில்லை.

இராமகிருஷ்ணர் தம்முடைய அனுபவத்தை விவரிக்க முயன்று தோற்றார். மிகப்பலரும் முயலவேயில்லை. இது காரணம் பற்றித் தானோ என்னவோ, லாவோட்சு தம்முடைய வாழ்க்கை முழுதிலும் *'தாவோ' உலகம் பற்றிச் சொல்லாமலே இருந்துவிட்டார்.

அதைப்பற்றி எதுவும் சொல்ல முடிவதில்லை. அதைப்பற்றி நீங்கள் சொல்ல முயல்கிறபோதே ஒரு சுழற்காற்றில், நீர்ச்சுழலில் நீங்கள் சிக்கிக் கொள்வீர்கள். நீங்கள் அதில் மூழ்கிக் காணாமல் போவீர்கள். அதைப்பற்றி ஒருவார்த்தைகூட சொல்லமுடியாத அளவிற்கு அந்த அழகிலும், பேரின்பத்திலும் நீங்கள் குளிப்பாட்டப் படுவீர்கள்.

ஆனால் சாத்தியமற்ற ஒன்றைச் செய்து முடித்தவர் பதஞ்சலி. அவர் ஒவ்வொரு படியையும், ஒவ்வொரு பகுதியையும், ஒவ்வொரு சக்கரத்தையும் அவற்றின் இயக்கத்தையும் சஹஸ்ராரம் வரை அவற்றை எப்படிக் கடப்பது என்பதையும் ஏன், அவற்றுக்கு அப்பாற்பட்டதையும் அவர் விவரித்திருக்கிறார். ஒவ்வொரு சக்கரத்திலும் ஒரு முழுமைப்பாடு (integration) நிகழ்கிறது. நான் அதைப்பற்றி உங்களுக்குச் சொல்கிறேன்.

பாலுணர்வு மையம் (மூலாதாரம்) முதல் மையம். அதுவே முதன்மையானதும் இயல்பானதும் ஆகும். அது எல்லாருக்கும் பயனளிப்பதாய் அமைந்தது. வெளிப்புறத்திலும் உட்புறத்திலுமாய் ஒரு சேர்க்கை நிகழ்கிறது. உண்மையில் அது சிறிது நேரத்துக்கே இருக்கக்கூடியது. பெண்ணொருத்தி ஓர் ஆடவனை சந்திக்கிறாள். அல்லது ஓர் ஆடவன் பெண்ணொருத்தியைச் சந்திக்கிறான். ஒரு கணத்தின் சிறு பகுதியில் மையத்திற்கு வெளியே இருப்பதும், உள்ளே இருப்பதும் ஒன்று சேர்ந்து ஒன்றில் ஒன்று ஐக்கியமாகி விடுகின்றன.

* தாவோ (Tao) அண்டங்கள் அனைத்தையும் தோற்றுவித்த முழுமுதற்கொள்கை.

நிறைவளிக்கக்கூடிய இரண்டு சக்திகள் சந்தித்து ஒன்றாகிறதே அதுதான் பாலின (sex) நேர்த்தியும், பரவசநிலையும் ஆகும். அது சிறிது நேரமே நீடிக்கும் என்பதற்குக் காரணம் அந்தச் சந்திப்பு உடலைக் கொண்டு அமைவது. உடலானது மேற்பரப்புகளைத் தொட்டுச் செல்லுமேயன்றி உண்மையில் அது மற்றொன்றுக்குள் நுழைவதில்லை. அது பனிக்கட்டித் துண்டங்கள் மாதிரி. நீங்கள் இரண்டு பனிக்கட்டித் துண்டுகளை ஒன்றாக வைத்தால் அவை ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருக்கும். ஆனால் அவை கரைந்தால் நீராகிவிடும், அப்போது அவை ஒன்றையொன்று எதிர்கொண்டு ஒன்றாகிவிடும். அதன்பிறகு அவை துல்லியமாக மையத்தைச் சென்றடையும். மேலும், நீர் ஆவியாகிறபோது அந்தச் சந்திப்பு மிகமிக ஆழமாகி விடும். அந்நிலையில் நீ என்பதும் இல்லை நான் என்பதும் இல்லை. வெளி, உள் என்பதும் இல்லை.

முதலாவது மையம், பால்மையம் (மூலாதாரம்) ஒரு நம்பகமான முழுமைப்பாட்டை உங்களுக்கு வழங்குகிறது. அதனால்தான் பாலுறவு நாட்டம் பெரிய அளவில் இருக்கிறது. அது இயல்பானது. அநுகூலமளிப்பது. விரும்பத்தக்கது. ஆனால் அங்கேயே நீங்கள் நிற்பீர்களாயின், அது மாளிகையின் நுழைவாயிலிலேயே நின்றுவிட்டது போலாகும். நுழைவாயில் நல்லதுதான். அதுதானே உங்களை மாளிகைக்குள் இட்டுச் செல்கிறது. ஆனால் அதுவே உங்கள் உறைவிடமாகிவிடாது. அது எப்போதைக்குமாய் நின்றுவிடக் கூடிய இடமல்ல.. மற்ற மையங்களில் உங்களுக்காகக் காத்திருக்கும் மகத்தான பேரின்பங்களை நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். அந்தப் பரமசுகத்துக்கும், மகிழ்ச்சிக்கும், ஆனந்தத்துக்கும் பாலுறவில் கிடைக்கும் இன்பம் நிகராகாது. அதனுடன் ஒப்பிடும்போது பால்சார்ந்த பரவசம். ஒன்றுமே இல்லைதான்.

இரண்டாவது சக்கரம் ஹரா. ஹராவில் வாழ்வும் மரணமும் சந்திக்கின்றன. நீங்கள் இரண்டாவது மையத்தை அடைந்தால் ஓர் உன்னதமான உச்சகட்ட முழுமையை அடைவீர்கள். வாழ்க்கை மரணத்தை எதிர்கொள்கிறது, சூரியன் சந்திரனை எதிர்கொள்கிறது. தற்போது சந்திப்பு என்பது உள்ளார்ந்ததாய் இருக்கிறது. அது (சந்திப்பு) மேலும் நிலைப்பட்டு, நிரந்தரமாகி விடுகிறது காரணம் நீங்கள் வேறு யாரையும் சார்ந்திருக்கவில்லை, தற்போது நீங்கள் உங்களுக்கிருக்கும் பெண்ணை அல்லது உங்களுக்குள்ளிருக்கும் ஆணைச் சந்திக்கிறீர்கள்.

மூன்றாவது மையம் தொப்புள். அங்கே நேர்முனையும் எதிர் முனையும் சந்திக்கின்றன - நேர்மின் விசையும், எதிர்மின் விசையும் பிறப்பு, இறப்பைவிட உயர்ந்தது. இந்தச் சந்திப்பு, காரணம், அந்த மின்சக்தி, பிராணசக்தி பிறப்பு இறப்பை விட மிகவும் ஆழமானது. அது பிறப்புக்கு முன்பிருந்தே இருப்பது. அது இறப்புக்கு பின்பும் இருப்பது. பிறப்பும், இறப்பும் உயிர்ச்சக்தியால் அமைந்தது. நாபி என்கிற தொப்புளில் நிகழும் இந்த உயிர்ச்சக்தியின் சந்திப்பு ஒரு முழுமையான, ஒன்றாயிருக்கும் அனுபவத்தை வழங்கும்.

அடுத்து இருதயம். இருதய மையத்தில் தாழ்ந்ததும், உயர்ந்ததும் சந்தித்துக் கொள்கின்றன. இருதய மையத்தில் ப்ரக்ருதியும் புருடனும், பால் சார்ந்ததும் ஆன்மா சார்ந்ததும் உலகு சார்ந்ததும் மறு உலகிற் கானதும் சந்தித்துக் கொள்கின்றன. நீங்கள் இதனை விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையேயான சந்திப்பு எனலாம். அதை இன்னும் உயர்ந்தது என்றே சொல்ல வேண்டும், காரணம் விடியலுக்கு அப்பாற் பட்ட ஒன்றையும் நீங்கள் முதல்முறையாகக் காண முடிகிறது. நீங்கள் இன்னமும் மண்ணில் வேரூன்றியிருந்தாலும் ஆகாயத்தில் உங்களுடைய கிளைகள் பரவி நிற்கின்றன. நீங்கள் ஒரு கூடுதலை (பல பகுதிகள் இணைந்து ஒன்றாதல்) மேற்கொள்கிறீர்கள். இருதய மையம் மிக உயர்ந்த, குறையேதுமற்ற அனுபவத்தை - காதல் அனுபவத்தை வழங்குகிறது. மண்ணும் விண்ணும் அடைகிற சேர்க்கையை காதல் அனுபவம். ஆக, காதல் என்பது ஒரு வகையில் உலகிற்குரியதாகவும், இன்னொரு வகையில் விண்ணிற்குரியதாயும் இருக்கிறது.

இயேசுவானவர் கடவுளை அன்பின் திருவுருவம் என்று வரையறை செய்ததற்கு இதுவே காரணம். ஏனெனில் மனிதனுடைய உணர்வு நிலையில் அன்பு ஓர் உன்னதக், காட்சியாய் தெரிகிறது.

சாதாரணமாக மக்கள் இருதயச் சக்கரத்தைக் கடந்து ஒருபோதும் செல்வதில்லை. இருதயச் சக்கரத்தை எட்டுவதும் அத்தனை எளிதல்ல, கிட்டத்தட்ட சாத்தியமற்றதே. மக்கள் பால்சார்ந்த மையத்தோடு (மூலாதாரம்) நின்று விடுகிறார்கள். அவர்கள் யோகா, கராத்தே, அகிடோ, தாய்-சி (Taichi) இவற்றில் கடுமையான பயிற்சி மேற் கொண்டிருந்தால், ஹரா என்கிற இரண்டாவது மையத்தை அவர்களால் அடைய முடிகிறது. அவர்கள் மூச்சுப் பயிற்சியில் தேர்ந்திருந்தால் தொப்புள் மையத்தை அடைவார்கள். அவர்கள் நிலவுலகிற்கு அப்பால், உடலுக்கும் அப்பால், எப்படிக் கூர்ந்தறிவது என்று பயிற்றுவிக்கப்

பட்டிருந்தால் எப்படி ஆழமாகவும், நுட்பமாகவும் கண்டு கொள்வது என்பதில் பழக்கப்பட்டிருந்தால் நுண்ணி கதிர்கள் உங்களுக்குள் நுழையக்கூடும் அந்நிலையில் மட்டுமே இருதய மையம் சாத்தியம்.

கடவுள் ஈடுபாட்டுக்குரிய அத்தனை பாதைகளும் பக்தியோகமும் இருதய மையத்தில் செயல்படுகின்றன. தாந்த்ரீகம் பால் மையத்தில் தொடங்குகிறது. தாவோ (Tao) ஹரா மையத்தில் தொடங்குகிறது. யோகா தொப்புள் மையத்தில் தொடங்குகிறது. பக்தியோகம், கடவுள் ஈடுபாட்டுக்குரிய பாதைகள், சூஃபி (sufi) மற்றும் மெய்ஞ்ஞான முறைகள் இருதய மையத்தில் இருந்தே தொடங்குகின்றன.

இருதய மையத்துக்கும் மேலே இருப்பது குரல் வளைமையம். அங்கே ஒரு மேம்பட்ட, நுட்பமான சேர்க்கை நிகழ்கிறது. இது பெறு வதற்கும் தருவதற்குமான மையம். குழந்தை பிறந்ததும், குரல்வளை மையத்தில் இருந்தே அவன் பெறுகிறான். முதலில் உயிரானது அவனது தொண்டையில் இருந்தே அவனுக்குள் பிரவேசிக்கிறது - அவன் காற்றை உறிஞ்சுகிறான், சுவாசிக்கிறான் அதன் பிறகு தன் தாயிடமிருந்து பாலை உறிஞ்சுகிறான். குழந்தை குரல்வளை மையத்தில் இருந்தே செயல்படுகிறது. ஆனால் அது அரைகுறை செயல்பாடுதான். சீக்கிரமே அதைப்பற்றி குழந்தை மறந்துவிடுகிறது. அவன் பெறுவதை மட்டுமே செய்கிறான், தருவதில்லை, தர முடிவதில்லை. அவனுடைய அன்பு ஏற்பதாக மட்டுமே இருக்கிறது. நீங்கள் அன்பைக் கோருகிறவராயிருந்தால், அப்போது நீங்கள் குழந்தைத்தனத்துடன், குழந்தை பருவத்துக்குரியவராகவே இருக்கிறீர்கள். அன்பை வழங்கும் பக்குவத்தை அடையாதவரை நீங்கள் வளர்ச்சியற்றவர்கள் தான். எல்லாருமே அன்பை வேண்டுகிறார்கள். கோரி நிற்கிறார்கள் ஆனால் கிட்டத்தட்ட யாருமே அதை வழங்குவதில்லை. உலகெங்கி லும் இந்தத்துன்பம் உள்ளதுதான். கோருகிற எல்லாருமே தாங்கள் கொடுப்பதாய் எண்ணிக் கொள்கிறார்கள், கொடுப்பதாய் நம்பிக் கொள்கிறார்கள்.

நான் ஆயிரக்கணக்கானவர்களை ஆராய்ந்து பார்த்திருக்கிறேன் - எல்லாரிடத்தும் அன்பிற்கான பசி (ஆவல்) இருக்கிறது, தாகம் (பெரு விருப்பம்) இருக்கிறது. ஆனால், எவரும் எந்தவொரு வழியிலும் வழங்க முற்படவில்லை. தாங்கள் கொடுத்துக் கொண்டிருப்பதாகவும் ஆனால் பெற்றுக்கொள்ளவேயில்லை என்றும் அவர்கள் நினைக்கிறார்கள். நீங்கள் கொடுத்ததும் பெறுகிறீர்கள் இயல்பாகவே.

அது வேறுவிதமாய் ஒரு போதும் நிகழ்வதில்லை. நீங்கள் கொடுக்கிற கணத்தில் அன்பு உங்களுக்குள் பிரவகிக்கிறது. மக்களிடம் அதற்கு எதுவும் ஆகிறதில்லை. கடவுளின் பிரபஞ்ச சக்தியுடனே அது செயல்படுகிறது.

கொடுப்பதற்கும் பெறுவதற்கும் இடையேயான சேர்க்கை நிகழ்கிறது. குரல்வளை மையத்தில் நீங்கள் அதில் இருந்தே பெறுகிறீர்கள். நீங்கள் மீண்டும் குழந்தையாகிவிடுங்கள் என்பதே. இயேசுவின் அருள்மொழியும் அதன் பொருளும்.

நீங்கள் யோகாவின் சொற்பாங்கில் அதனை மொழிபெயர்த்தால் `மறுபடியும் குரல்வளை மையத்துக்கே நீங்கள் வந்தடைய வேண்டும்' என்றே பொருள்படும். காலப்போக்கில் குழந்தை மறந்துவிடுகிறது.

நீங்கள் ஃப்ராய்டின் உளவியலை ஆராய்ந்து பார்த்தால் இணையான ஒன்றைக் காணமுடியும். ஃப்ராய்டு சொல்கிறார், குழந்தையின் முதல்நிலை வாய்சார்ந்தது என்றும், கடைசிநிலை குதம் (anal) சார்ந்தது என்றும் மூன்றாவது நிலை பிறப்புறுப்பு சார்ந்தது என்றும் அவர் சொல்கிறார். ஃப்ராய்டின் ஒட்டுமொத்த உளவியலுமே மூன்றாவதோடு முடிந்துவிடுகிறது. உண்மையில் அது ரொம்பவும் இழிவான, அடிப்படைக் கூறு சார்ந்த ஒரு பகுதி அவ்வளவே. மனிதர்களின் இழிந்த செயல்பாட்டோடு அது தொடர்புடையது. வாய் சார்ந்தது (ora£) -ஆம், குழந்தை குரல்வளை மையத்தைப் பயன்படுத்துகிறது பெறுவதற்காக மட்டுமே. ஒருமுறை அவன் பெறத் தொடங்கியதுமே அவனுடைய இருப்புணர்வு குதப்பகுதியை நோக்கிச் செல்கிறது.

சிலர் வாய் சார்ந்தவர்களாகவே இருப்பதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? சாகிற வரைக்கும் அப்படியே இருந்து விடுகிறார்கள். இவர்கள் புகை பிடிப்பதில் இருந்தே இவர்களை நீங்கள் கண்டு கொள்வீர்கள். இவர்கள் வாய் சார்ந்தவர்க்ள். இவர்கள் அதைத் தொடர்கிறார்கள். புகை, சிகரெட், சுருட்டு, தாய்ப் பாலைப்போன்றே இதத்தைக் கொடுக்கிறது அவர்களுக்கு. குரல்வளை மையத்தின் வழியே அந்த இதத்தை அவர்கள் பெறுகிறார்கள். சங்கிலித் தொடராய் புகைக்கிற, கடுமையாய் புகைக்கிற ஒருவர் எப்போதுமே - கிட்டத்தட்ட அன்பைக் கொடுப்பவராய் இருப்பதில்லை. அவன் கோருவானே தவிர கொடுப்பதில்லை.

அதிக அளவில் புகைப்பவர்கள் எப்போதுமே பெண்களின் மார்பகத்தில் விருப்பம் கொண்டவர்களாயிருப்பார்கள். காரணம், சிகரெட் முலைக்காம்புக்குப் பதிலியாக (substitute) தெரிகிறது அவர்களுக்கு. புகைக்காதவர்களுக்கெல்லாம் மார்பகத்தில் விருப்பம் இருக்காது என்று நான் சொல்லவரவில்லை. புகைக்கிறவர்களுக்கும் விருப்பம் இருக்கிறது, புகைக்காதவர்களுக்கும் விருப்பம் இருக்கிறது. அவர்கள் வெற்றிலைப் பாக்கு அல்லது பிசின் போன்ற பொருள் எதையாவது மென்று கொண்டிருப்பார்கள். அல்லது நிர்வாணப் படங்களை (ஆபாச இலக்கியங்கள்) ரசிப்பதில் ஆர்வப்படுவார்கள்- அல்லது மார்பகத்தைப் பற்றி மட்டுமே எண்ணிக் கொண்டிருப்பார்கள். அவர்களுடைய மனதில், கனவில் கற்பனையில் மார்பகங்களே அவர்களைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்கும். இவர்கள் வாய்சார்ந்தவர்கள்.

நீங்கள் மறுபடியும் குழந்தையாக வேண்டும் என்று இயேசு சொல்கிறபோது, உங்களுடைய குரல்வளை மையத்துக்கே நீங்கள் திரும்ப வேண்டும் ஆனால் வழங்குவதற்கான ஆற்றலைக் கொண்டிருக்க வேண்டும் என்பதையே அவர் கருத்தில் கொள்கிறார். படைப்பாளிகள எல்லாருமே கொடுப்பவர்கள்தாம். அவர்கள் ஒரு பாடலை உங்களுக்காகப் பாடலாம், அல்லது ஒரு நடனத்தை ஆடலாம் அல்லது ஒரு கவிதையை எழுதலாம், ஓவியத்தை வரையலாம் அல்லது ஒரு கதையை உங்களுக்குச் சொல்லலாம். இவை எல்லா வற்றுக்குமே குரல்வளை மையந்தான் மறுபடியும் கொடுப்பதற்கான மையமாய் பயன்படுத்தப்படுகிறது. கொடுப்பதற்கும் பெறுவதற்குமான சந்திப்பு குரல்வளைப் பகுதியில் நடக்கிறது. கொடுப்பதற்கும் பெறுவதற்குமான திறன் மிகச் சிறந்த முழுமைப்பாடுகளில் (integration) ஒன்று.

இவர்கள் பெறுவதற்கான திறனை மட்டுமே கொண்டவர்கள். அவர்கள் துன்புற்றவர்களாகவே இருக்கிறார்கள். காரணம், பெறுவதன் மூலம் ஒருபோதும் நீங்கள் செல்வந்தராவதில்லை, கொடுப்பதுதான் உங்களைச் செல்வந்தராங்க்கும். உண்மையில் உங்களால் கொடுக்கக்கூடியதையே நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். உங்களால் கொடுக்க முடியவில்லை என்றால், அது உங்களுக்கானது என்று நீங்கள் நம்புகிறீர்கள். உங்கள் ஆளுகையில் அதை வைத்துக் கொள்வதற்கில்லை, நீங்கள் தலைவனல்லன். உங்களுடைய பணத்தை

யாருக்கும் கொடுக்காமல் வைத்திருப்பதால் நீங்கள் அதற்கு எஜமானனாகிவிட முடியாது. அப்போது பணம் உங்களுக்கு எஜமானனாகிவிடும். உங்களால் அதைக் கொடுக்க முடியுமாயின் அப்போது உண்மையிலேயே நீங்கள் தலைவன்தான். இது கொஞ்சம் முரண்பாடாகத் தெரியலாம், எனவே மீண்டும் சொல்கிறேன். நீங்கள் எதையெல்லாம் கொடுக்கிறீர்களோ அதற்கெல்லாம் நீங்கள் உடைமைக்காரர். கொடுப்பதால் மட்டுமே நீங்கள் உடையவராகிறீர்கள். கொடுக்கிற கணத்திலேயே உங்கள் செல்வம் பெருகிவிடுகிறது. கொடுத்தல் உங்களை உயர்த்துகிறது.

கருமித்தனமானவர்கள் பெரும்பாலும் துன்பப்படுவதுடன் உலகிலேயே பரம ஏழைகளாகவும் இருக்கிறார்கள் - ஏழைகளை விடவும் ஏழ்மையில் அவர்களால் கொடுக்க முடியாது. தங்கள் எண்ணத்தில் விடாப்பிடியானவர்கள் அவர்கள். அவர்களால் சேமிக்கப்பட்டவை அவர்களுடைய இருப்புணர்வின் மீது சுமையாய் அழுத்தத் தொடங்கிவிடும். அவர்களை அது விடுவதில்லை. உங்களிடம் ஏதோ கொஞ்சம் இருந்தால் நீங்கள் தடையற்றவராய் இருப்பீர்கள். ஆனால், கருமிகளைப் பாருங்கள். அவர்களிடம் நிறைய இருக்கிறது. ஆனால் சுமையும் அதிகம். அவர்கள் தடையற்றவர் களாயில்லை. பிச்சை எடுப்பவர்கள்கூட அவர்களைவிட சுதந்திர மாயிருக்கிறார்கள். அவர்களுக்கு என்னவாயிற்று? தங்களுடைய குரல்வளை மையத்தை அவர்கள் பெறுவதற்காக மட்டுமே பயன்படுத்துகிறார்கள். ஃப்ராய்டின் இரண்டாவது மையத்துக்கு (குதம்)க் கூட நகராதவர்களாயிருக்கிறார்கள். இந்த மனிதர்கள் எப்போதுமே மலச்சிக்கல் உள்ளவர்களாய், சேமிப்பவர்களாய், கருமிகளாய் இருந்து கொண்டிருக்கிறார்கள். ஒன்றை நினைவில் வையுங்கள் மலச்சிக்கல் உள்ள எல்லாருமே கருமிகள் என்று நான் சொல்லவில்லை. அதற்கு வேறு காரணங்கள் இருக்கலாம். ஆனால், கருமிகள் மலச்சிக்கல் உள்ளவர்களாய் இருப்பார்கள் என்பது நிச்சயம்.

ஃப்ராய்டு சொல்கிறார் தங்கத்திலும், மலசலக் கழிவுகளிலும் ஏதோ ஒன்று இருக்கிறதென்று. இரண்டுமே மஞ்சள் நிறத்தில் இருப்பதுடன், மலச்சிக்கல் உள்ளவர்கள் தங்கத்தால் ஈர்க்கப்பட்டவர்களாகவும் இருக்கிறார்கள். தங்கத்தை நீங்கள் உண்ணவோ, பருகவோ முடியாது. அது இருத்தலுக்கான மதிப்பைக் கொண்டிருக்கவில்லை. அதன் முக்கியத்துவம் உளவியல் சார்ந்தது. தங்கத்தை வைத்துக்கொண்டு

என்ன செய்ய முடியும்? ஒரு தம்ளர் தண்ணீர்கூட அதைவிட மதிப்புடையது எனலாம். ஆனாலும், தங்கத்துக்கு ஏன் அத்தனை முக்கியத்துவம்? ஏன் தங்கத்தின் மீது மக்களுக்கு இத்தனை கருத்தாவேசம்? அவர்கள் தங்களுடைய வாய்ப்பகுதியில் இருந்து குதப்பகுதிக்கு நகரவில்லை. தங்களுடைய இருப்புணர்வில் மலச்சிக்கல் உள்ளவர்களாய் அவர்கள் இருக்கிறார்கள். தற்போது அவர்களுடைய ஒட்டு மொத்த வாழ்க்கையுமே மலச்சிக்கலைப் பிரதிபலிக்கிறது. அவர்கள் தங்கத்தைக் குவிப்பவர்களாகி விடுகிறார்கள். தங்கம் ஒரு குறியீடாகிறது. மஞ்சள் வண்ணம் ஏதோ ஒரு கருத்துரு (idea) வை அவர்களுக்கு வழங்குகிறது.

சின்னப் பிள்ளைகளைக் கவனித்திருக்கிறீர்களா? அவர்களை கழிவறைக்குத் தயார்ப்படுத்துவதே பெரும்பாடாகிவிடும். அவர்களைக் கட்டாயப்படுத்தித்தான் அனுப்பவேண்டியிருக்கும். அப்போதுகூட அவர்கள், 'எதுவும் இல்லே. நான் வந்துவிடவா' என்றுதான் அழுத்தமாய் கூறிக் கொண்டிருப்பார்கள். 'கொடாமல் எப்படித் தன்வசம் வைத்திருப்பது' என்கிற கருமிகளின் முதல் பாடத்தை அவர்கள் கற்றுக் கொள்கிறார்கள். ஒன்றுக்கும் உதவாததைக் கூட அடுத்தவருக்குத் தராமல் வைத்திருப்பது, தனக்குள்ளே வைத்திருந்தால் தீங்கு செய்யக்கூடியதையும் வெளிப்படுத்தாமல் வைத்திருப்பது என்று. நஞ்சைக்கூட விடுவதும், துறப்பதும் கஷ்டமாகத்தான் இருக்கும் கருமிகளுக்கு.

இரண்டு புத்த பிக்குகளைப் பற்றி நான் கேள்விப்பட்டது – ஒருவர் கருமியாகவும், பொன் பொருளைக் குவிப்பவராகவும் இருந்தார். நிறையப் பணத்தைச் சேமித்து, காப்பாற்றி வந்தார் அவர். மற்றவரோ அவருடைய அறிவற்ற மனோபாவத்தைக் கண்டு சிரிப்பார். தம்முடைய போக்கில் எது கிடைத்தாலும் அதைச் சேமிக்காமல் பயன்படுத்துகிறவர் அவர். ஒருநாள் அவர்கள் ஓர் ஆற்றைக் கடக்க வேண்டிய நிலை. அது மாலைக்காலம், சூரியன் மறைந்து கொண்டிருந்தது. அங்கே இருப்பது ஆபத்து. அவர்கள் மறுகரைக்குச் சென்றேயாக வேண்டும். அந்தப்பக்கம் ஒரு நகரம் இருந்தது. இந்தப் பக்கமோ அகன்ற பாழ்நிலம்.

பணம் வைத்திருந்தவர் சொன்னார், 'தற்போது உம்மிடம் பணம் எதுவும் இல்லை, அதனால் தோணிக்காரனுக்குக் கூலி கொடுக்க நம்மால் முடியாது. இப்போது அதைப்பற்றி என்ன சொல்கிறீர், நீரோ

சேமிப்பிற்கு எதிரானவர். இப்போது என்னிடம் பணம் எதுவும் இல்லையென்றால் நாம் இருவருமே சாக வேண்டியதுதான். விஷயத்தைப் புரிந்து கொண்டீரா? பணம் தேவை' என்று. துறப்பதில் நம்பிக்கை வைத்தவரோ எதுவும் பேசாமல் சிரித்தார். பணம் சேமிக்கிறவர் பயணக் கட்டணத்தைக் கொடுக்கவும், அவர்கள் ஆற்றைக் கடந்து மறுகரையை அடைந்தனர்.

பணத்தைச் சேமிப்பவர் மறுபடியும் சொன்னார், 'நினைவிருக்கட்டும், அடுத்தமுறை என்னோடு வாதம் பண்ணக்கூடாது. தெரிந்ததா பணம் உதவியாயிருக்கிறது. பணம் இல்லாதிருந்தால் நாம் சாகும்படி ஆகியிருக்கும். பயங்கர மிருகங்கள் இருக்கும் அந்தக் கரையில் ராத்திரி முழுக்க இருந்திருந்தால் உயிராபத்து ஏற்பட்டிருக்கும்' என்று.

மற்றொரு பிக்கு சிரித்தபடி சொன்னார், 'ஆனால் நாம் ஆற்றைக் கடக்க முடிந்ததற்குக் காரணம் நீர் பணத்தைத் துறக்கத் தயாராயிருந்தது தான். சேமிப்புப் பணத்தால் நாம் உயிர் பிழைத்துவிடவில்லை. நீர் சேமிப்புப் பணத்தை தோணிக்காரனுக்குச் செலுத்தாதிருந்திருந்தால் நாம் செத்துப் போயிருப்போம். நீர் அதை (பணம்)த் துறக்கவும், அதைவிடவும் தயாராயிருந்ததால்தான் உம்மால் அதைக் கொடுக்க முடிந்தது. அதனால்தான் உயிர் பிழைத்தோம்' என்று.

அந்த விவாதம் இன்னும் தொடர்ந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால், நினைவில் வையுங்கள், நான் பணத்துக்கு எதிரானவன் அல்லன். பணத்தை வைத்திருங்கள், சொந்தம் கொண்டாடுங்கள். ஆனால், அதை உங்களால் கொடுக்க முடிகிற போதுதான் அதில் உங்களுக்குச் சொந்தம் (ownership) உண்டாகும். குரல்வளை மையத்தில் இந்தப் புதிய கூட்டிணைவு (synthesis) ஏற்படுகிறது. நீங்கள் அதை ஏற்கமுடிவதுடன், கொடுக்கவும் முடியும்.

ஒரு உச்ச முனையில் இருந்து மற்றொன்றிற்கு மாறிக் கொண்டிருப்பவர்கள் இருக்கிறார்கள். முதலில் அவர்கள் கொடுக்க முடியாதவர்களாய், பெறுகிறவர்களாக மட்டுமே இருந்தார்கள். மறுமுனைக்குச் சென்றார்கள் - தற்போது அவர்கள் கொடுக்க முடிகிறது, பெறமுடியவில்லை. அதுவும் சமநிலையற்ற தன்மைதான். உண்மையான ஒருவன் வெகுமதிகளைப் பெறுவதில் போலவே வழங்குவதிலும் வல்லமை உடையவனாயிருப்பான். இந்தியாவில் பணத்தையே கையால் தொடாத சந்நியாசிகளையும், மகான்கள் என்று சொல்லிக் கொள்பவர்களையும் பார்த்திருப்பீர்கள். அவர்களிடம்

நீங்கள் ஏதாவது கொடுத்தால் அப்படியே பின்னுக்கிழுத்துக் கொள்வார்கள். ஒரு பாம்பையோ அல்லது நச்சுப் பொருளையோ நீங்கள் அவர்களுடைய கையில் கொடுக்க முற்பட்டதுபோல் அவர்கள் சுருங்கிக் கொண்டுவிடுவார்கள். அவர்கள் மறுமுனைக்குச் சென்று விட்டதையே அது காட்டும். தற்போது அவர்கள் பெறுவதற்கான திறமையற்றவர்களாகி விடுகிறார்கள். அவர்களுடைய குரல்வளை மையம் மறுபடியும் பாதியளவே வேலைசெய்கிறது. ஒரு மையம் முழுமையாக வேலை செய்யாதவரையில் அது உண்மையில் வேலை செய்வதாகாது. ஒரு சக்கரம் தொடர்ந்து முழுமையாகச் சுற்றினால்தான் விசையாற்றல் புலங்களை (energyfield)த் தோற்றுவிக்க முடியும்.

அடுத்தது மூன்றாவது கண் மையம். இங்கே பிங்கலையும், இடகலையும் சேர்ந்து சுழுமுனை ஆகிறது. மூளையின் இரண்டு அரைக்கோளங்கள் மூன்றாவது கண்ணில் சந்திக்கின்றன. அது இரண்டு கண்களுக்கும் மத்தியில் இருப்பது. ஒரு கண் வலது பக்கத்தையும், மற்றொரு கண் இடது பக்கத்தையும் பிரதிநிதித்துவப் படுத்துகிறது. இரண்டுக்கும் நடுவே இருக்கிறது மூன்றாவது கண். இடது பக்க மூளையும், வலது பக்க மூளையும் மூன்றாவது கண்ணிடத்தே சந்திக்கின்றன, இது ஓர் உயர்ந்த கூட்டிணைவு ஆகும். இந்த முனைவரைக்கும் விவரிக்கும்திறன் மக்களுக்கு இருக்கிறது. இராமகிருஷ்ணரால் மூன்றாவது கண் வரைக்கும் விவரிக்க முடிந்தது. நிறைவாக உள்ளதை, சஹஸ்ரதளத்தில் இறுதியாக என்ன நிகழ்கிறது என்பதை அவர் விவரிக்க முற்பட்டபோது தான் அவர் மறுபடியும், மறுபடியும் சமாதிநிலையில் வீழும்படி ஆயிற்று. அது வெள்ளம் போன்றது. அவர் அதிலேயே மூழ்கி விட்டார். அவர் கடலுக்கு அடித்துச் செல்லப்பட்டார். தம்மை உணர்வு நிலையில், விழிப்புடன் வைத்துக் கொள்ள அவரால் முடியவில்லை.

இறுதியான கூட்டிணைவு சகஸ்ராரத்தில் நிகழ்கிறது. அதுவே உச்சியில் உள்ள சக்கரம், சக்கரங்களுக்கு மகுடம் போன்றது. உலகெங்கிலும் அரசர்களும், சக்கரவர்த்திகளும் ராணிகளும் மகுடம் தரிக்க இதுவே காரணம். அது சம்பிரதாயமாகிவிட்டது. ஆனால் அடிப்படையில் அது ஏற்கப்பட்டதற்குக் காரணம், உங்களுடைய சஹஸ்ராரம் செயல்படாவிட்டால் நீங்கள் எப்படி முடிசூட முடியும், அரசனாக இருக்க முடியும்? மகுடம் என்கிற குறியீட்டில் மறைந்திருக்கிறது ஒரு ரகசியம். தன்னுடைய உச்சித்தளத்தை - இருப்புணர்வான நிறைவான கூட்டிணைவை அடைந்த ஒருவரே

அரசன் அல்லது அரசியாக முடியும், வேறொருவருக்கும் அது இயலாத ஒன்று என்பதுதான் அந்த ரகசியம். அவரால் மட்டுமே மற்றவர்களை ஆள முடியும், காரணம் அவர் தம்மை ஆளக் கூடியவராய் இருப்பதுதான். அவர் தமக்கே தலைவரானார், தற்போது மற்றவர்களுக்கும் பயனளிக்கக் கூடியவராகிறார்.

உண்மையில், நீங்கள் சஹஸ்ர தளத்தை அடைந்தவுடன் ஒரு மலர்முடி (crown) உங்களுக்குள் முகிழ்க்கிறது. ஆயிரத்து ஓர் இதழ்கள் கொண்ட ஒரு தாமரை விரிகிறது. எந்தவொரு மணி முடியையும் அதனுடன் ஒப்பிட முடியாது. ஆனால், அந்நிலையில் அது ஒரு குறியீடே ஆகும். அந்தக் குறியீடு உலகெங்கிலும் இடம் பெற்றிருக் கிறது. எல்லா இடத்திலும் மக்கள் கவனத்தோடும், உணர்வோடும் இருக்கிறார்கள் என்பதையே அந்தக் குறியீடு வெளிக்காட்டுகிறது. சஹஸ்ராரத்தில் நிகழும் கூட்டிணைவை அவர்கள் ஏதோ ஒரு வழியில் அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள் என்பதையே அது நிரூபிக்கிறது. யூதர்கள் தலை உச்சியில் விளிம்பில்லாத தொப்பி அணிகிறார்கள், மிகச்சரியாக சஹஸ்ராரத்தில் அது அணியப்படுகிறது. இந்துக்கள் உச்சியில் ஒரு கொத்து முடியை விட்டு வைக்கிறார்கள். சஹஸ்ராரம எங்கே இருக்குமோ, சரியாக எந்த இடத்தில் இருக்க வேண்டுமோ அந்த இடத்தில் அவர்கள் முடியை வளர்க்கிறார்கள். கிறிஸ்தவர்களில் சிலர் தலையின் ஒரு பகுதியை மட்டும் மழித்துக் கொண்டு விடுகிறார் கள். குருவானவர் தம்முடைய சீடனை ஆசீர்வதிக்கிறபோது, தமது கையை சஹஸ்ராரத்தின் மீது வைத்தே அவர் ஆசீர்வதிக்கிறார். அந்தச் சீடன், உண்மையிலேயே ஏற்புத் தன்மையுடன், சரணாகதி அடைந்திருப்பானாயின், பால் மையத்தில் இருந்து சஹஸ்ராரம் வரை பாய்ந்து செல்லும் எழுச்சி மிக்கதோர் சக்தியை அவன் உடனே உணர்ந்திருப்பான்.

சில நேரங்களில் உங்களுடைய தலையை நான் தொடும்போது, நீங்கள் சட்டென்று பால்சார்ந்த உணர்வைப் பெறுவீர்கள், அதற்காகப் பயந்துவிட வேண்டாம். காரணம், அது எப்படி இருக்க வேண்டுமோ அப்படித்தான் இருக்கிறது. சக்தியானது பால் மையத்தில் இருக்கிறது. அது தன்னைச் சுருள்பிரித்துக் கொள்ளத் தொடங்குகிறது. நீங்கள் அச்சமடைகிறீர்கள், பின்னுக்கு இழுத்துக் கொள்கிறீர்கள், அதை அடக்கப் பார்க்கிறீர்கள் - என்ன நடக்கிறது? உங்கள் குருவின் பாதங்களில், பால் சார்ந்த உணர்வுடன் இருக்க நேரிடுவது உங்களுக்கு

அருவருப்பாகவும், குழப்பமூட்டுவதாகவும் படலாம். அதற்கு இடமளியுங்கள். இருந்து போகட்டும். சீக்கிரமே அது முதலாவது மையத்தைக் கடந்து இரண்டாவது மையத்தை அடைவதைக் காண்பீர்கள். நீங்கள் சரணடைவீர்களாயின் ஒரு கணத்தில் சக்தியானது சஹஸ்ராரத்தை நோக்கிச் செல்வதை, உங்களுக்குள் ஒரு புதிய தொடக்கத்தை நீங்கள் உணர்வீர்கள். அதனால்தான் சீடன் தன்னுடைய சிரசைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும், அப்போதுதான் குருவானவர் அவனுடைய தலையைத் தொட முடியும் என்று கருதப்படுகிறது.

இறுதியான கூட்டிணைவு நோக்கமும் பொருளும், புறமும் அகமும் பற்றியது. பால்சார்ந்த உச்சக்கட்டத்தில், (sexual orgasm) வெளியே இருப்பதும், அந்தச் சந்திப்பும் குறுகிய காலமே நீடிப்பது. சஹஸ்ராரத்தில் அவை நிலையாய் சந்தித்துக் கொள்கின்றன. அதனால்தான் நான் சொல்கிறேன் ஒருவர் பாலுணர்வில் இருந்து சமாதிநிலைக்கு (மூலாதாரத்தில் இருந்து சஹஸ்ராரத்திற்கு)ப் பயணிக்க வேண்டும் என்று. சஹஸ்ராரத்தில் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதமும் சஹஸ்ராரந்தான், ஒரு சதவிகிதம் மட்டுமே பாலுணர்வு. சக்தியின் ஓட்டத்தைக் கொண்டு அவை இணைக்கப்படுகினறன. ஒன்று சேர்கின்றன. ஆக நீங்கள் பாலுறவில் கிடைக்கிற மகிழ்ச்சிக்காக அங்கேயே உங்கள் உறைவிடத்தை அமைத்துக் கொண்டு விடாதீர் கள். பாலுறவு என்பது சஹஸ்ராரத்தின் கணநேரத் தோற்றந்தான். அதைப்போல் ஆயிரம் மடங்கு, இலட்சோப லட்சம் மடங்கு பரமசுகத்தைத் தருவது சஹஸ்ராரம், அதுவே பேரின்பநிலை.

வெளியே இருப்பதும் உள்ளே இருப்பதும் சந்திக்கின்றன. நீங்களும் நானும் சந்திக்கிறோம், ஆணும் பெண்ணும் சந்தித்துக் கொள்கிறார்கள். ஆண் சக்தியும், பெண் சக்தியும் சந்தித்துக் கொள் கின்றன. அந்நிலையில் பிரிவென்பதில்லை. அதன்பிறகு உறவை ரத்து செய்து கொள்வதில்லை.

இதுவே யோகா எனப்படுகிறது. யோகம் என்பது இரண்டு சேர்ந்தது ஒன்றாவது. கிறிஸ்தவத்தில் மறைஞானிகள் அதனை 'யூனியோமிஸ்டிகா' (uniomystica) என்கிறார்கள். யோகாவிற்கு மிகச்சரியான விளக்கம். யூனியோமிஸ்டிகா - புலனாகாத சேர்க்கை. ஆல்ஃபாவும், ஓமேகாவும் சஹஸ்ராரத்தில் சந்தித்துக் கொள்கின்றன, முதலும் முடிவும். தொடக்கம் பால் மையத்தில் (மூலாதாரம்) உள்ளது. பாலுணர்வே ஆல்ஃபா (alpUa), சமாதி நிலையே ஓமேகா (omega).

ஆல்ஃபாவும் ஒமேகாவும் சந்தித்துக் கொள்ளாவிடில். இந்த மேம்பட்ட சேர்க்கையை நீங்கள் அடையாவிடில் நீங்கள் துன்பத்திலாழ்ந்திருப்பீர்கள். காரணம் அதுவே உங்கள் வியாதியாயிருக்கிறது. நீங்கள் நிறைவற்றவராய் இருப்பீர்கள். இந்தக் கூட்டிணைவின் உச்சியில் நிறைவு பெறுவீர்கள்.

தற்போது சூத்திரங்கள்:

புலன்களின் புறச்சார்பு. அதில் இருந்து உண்டாகும் அறிவு. இந்த அறிவால் வரும் நான் என்கிற அகங்காரம் இவற்றின் முக்குணங்கள், இவற்றால் ஆன்மாவுக்கு வரும் அனுபவம் இவற்றின் மீது சம்யமம் செய்தால் புலன்கள் வெல்லப்படுகின்றன.

நீங்கள் புலன்களைப் பெற்றிருக்கிறீர்கள். ஆனால் புலனுணர்வை இழந்து விட்டிருக்கிறீர்கள் என்பதே முதலாவதாய் அறியப்பட வேண்டியது. உங்களுடைய புலன்கள் கிட்டத்தட்ட மந்தமாகி, மரத்துப் போய் விட்டன என்றே சொல்ல வேண்டும். அவை உங்களுடன் இருந்தாலும் அவற்றின் வழியே ஆற்றல் பாய்ந்தோடவில்லை. அவை உங்களுடைய இருப்புணர்வின் உயிரோட்டமுள்ள உறுப்புகளல்ல. உங்களுக்குள் ஏதோவொனறு உணர்ச்சி குன்றிவிட்டது. உயிரோட்டமற்றதாகிவிட்டது, தடைப்பட்டுவிட்டது. இது ஒட்டுமொத்த மனித இனத்துக்கும் நேரிட்டிருக்கிறதுதான. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் அடக்கி வைத்ததாயிற்றே. உடம்பின் இயல்புக்கு மாறாக ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் கட்டுப்படுத்தியவையும் கருத்தியல்களும் உங்களை முடக்கி விட்டன. நீங்கள் பெயரளவுக்கே வாழ்கிறீர்கள்.

ஆக முதலில் செய்யப்பட வேண்டிய காரியம் உங்களுடைய புலன்களை உயிரோட்டமுடையதாக்குவதும், நுட்ப உணர்வுடையதாக்குவதந்தான். அந்நிலையில் மட்டுமே அவை அடக்கியாளப்படும். நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள். ஆனால் ஆழமாய் புரிந்து கொள்ளவில்லை. நீங்கள் விஷயங்களை அவற்றின் மேற்பரப்பிலேயே பார்க்கிறீர்கள். நீங்கள் தொடுகிறீக்ள். ஆனால் உங்கள் தொடுதலில் உவகையில்லை. நீங்கள் கேட்கவும் செய்கிறீர்கள். பறவைகள் பாடுகின்றன, நீங்கள் கேட்கிறீர்கள். 'ஆகா, நான் கேட்கிறேன்' என்று உங்களால் சொல்லிக் கொள்ள முடிகிறது. தவறில்லை. நீங்கள் கேட்கவே செய்கிறீர்கள். ஆனால், அது உங்களுடைய இருப்புணர்வின் மையப்பகுதி (core) யைச் சென்றடைவதில்லை. அது

உங்களோடு களிநடம் புரிவதில்லை. அது உங்களுக்குள் ஒரு மலர்ச்சியை. ஏற்றுக் கொள்வதற்கான இசைவை உண்டு பண்ணுவதில்லை.

இந்தப் புலன்களுக்குப் புத்திளமை தேவை. யோகா உடம்புக்கு எதிரானதல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். யோக உடம்புக்கு அப்பால் போகச் சொல்கிறதேயன்றி உடம்புக்கு மாறானதல்ல. அது. உடம்பைப் பயன்படுத்துங்கள். உடம்பால் பயன்படுத்தப்பட்டு விடாதீர்கள் என்கிறது யோகா. ஆனால், உடம்புக்கு எதிரானதல்ல. யோகா சொல்கிறது உடம்பே ஆலயம் என்று. நீங்கள் உடம்பில் இருக்கிறீர்கள், இந்த உடம்பு மிகவும் நேர்த்தியான ஒன்று. இது பல பாகங்களைக் கொண்டது. நுட்பமானது, புதிர்கள் நிறைந்தது. இதன் வழியே பல பரிமாணங்கள் வெளிப்படுகின்றன. புலன்களே கடவுளை அடைதற்கான வாயில்கள், சன்னல்கள். எனவே, அவற்றை உணர்வற்றுப் போகச் செய்யாதீர்கள். அவற்றை இன்னும் உயிரோட்டமுடையதாக்குங்கள். அவை அதிரட்டும், துடிக்கட்டும், ஸ்டான்லி கெல்மன் சொன்னதுபோல் ஆறாகட்டும் (stream). அதுதான் சரியான வார்த்தை. சிற்றாறு போல் அவை பாய்ந்து செல்லட்டும், வழிந்தோடட்டும், அந்தக் கிளர்ச்சியை நீங்கள் பெற முடியும். உங்கள் கையில் ஆறுபோல் சக்தி பாய்ந்து செல்லுமாயின், மணி நாதம் போல் கிளர்ச்சியூட்டும் உணர்வை நீங்கள் அடைவீர்கள். கையினுள் ஏதோவொன்று பாய்ந்து செல்வதை உணர்வீர்கள். அது தொடர்பாயிருக்க விரும்புகிறது. இணைக்கப்படுவதை விரும்புகிறது.

ஒரு பெண்ணை அல்லது ஆணை நீங்கள் நேசிக்கிற போது அவளுடைய (அவன்) கையை உங்கள் கையில் வைத்துக் கொள்கிறபோது உங்கள் கை ஒரு பாய்ச்சலை உணராவிடில் அந்தக் காதலால் எந்தப் பயனுமில்லை. உங்கள் கை ஆற்றலுடன் பாய்ந்து உங்களுடைய பெண்ணுக்குள் (அல்லது உங்கள ஆணுக்குள்) ஓர் அதிர்வை உண்டு பண்ணாவிடில் அந்தக் காதல் தொடக்கத்திலே உயிரற்றதுதான். அந்தக் குழந்தை உயிரற்றதாகவே பிறந்தது எனலாம். சற்று முன் பின்னாக என்றாலும் நீங்கள் தீர்ந்தீர்கள் – முன்பே தீர்ந்து விட்டீர்கள் எனலாம். அதை இனங்கண்டு கொள்ள கொஞ்சம் காலமாகி விட்டிருக்கும் காரணம் உங்களுடைய மனமும் தெளிவற்றிருக்கிறது தான. இல்லையேல் நீங்கள் அதில் பிரவேசித்திருக்க மாட்டீர்கள் காரணம். அது முன்பே உயிரற்றதாயிருக்கிறது. நீங்கள் எதற்காகப் பிரவேசித்தது. நீங்கள் விஷயங்களைக் கண்டுகொள்ள அவகாசம்

எடுத்துக் கொள்ளுங்கள் காரணம் உங்களுடைய கூர்ந்து அறியும் திறன், திறமை, நுண்ணறிவு இவை ரொம்பவே தெளிவற்று குழப்பத்திலாழ்ந்திருக்கும்.

ஆற்றொழுக்குபோல் அமைதியாய் வழிந்தோடுகிற அன்பே பரம சுகத்தின் மூலமாயிருக்க முடியும். ஆனால் அதற்கு உங்களுடைய புலன்களும் பாய்ந்தோடக்கூடியவையாய் இருக்க வேண்டும்.

சில நேரங்களில் அந்தக் கண நேரத் தோற்றம் உங்களுக்குக் காணக்கிடைத்திருக்கும். தான் குழந்தையாக இருந்தபோது ஒவ்வொருவரும் அது கிடைக்கப் பெற்றிருப்பார்கள். ஒரு வண்ணத்துப் பூச்சியைத் துரத்திக் கொண்டு ஓடும் குழந்தையைக் கவனியுங்கள். எந்தக் கணத்திலும் தன் உடம்பைவிட்டு வெளியே குதித்துவிடுவது போல் அவன் ஓடுவான். ரோஜா மலரை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு குழந்தையைக் கவனியுங்கள். அவனுடைய கண்களை அதில் ஒளிவிடும் திறமையைக் காணுங்கள். அவன் தங்குதடையின்றிப் பாய்ந்தோடுகிறான் ஒரு சிற்றாறு ஓடுவதைப் போன்று. அவனுடைய கண்கள் கிட்டத்தட்ட அந்தப் பூவிதழ்களின் மீது நடனமாடுகிற தென்றே சொல்ல வேண்டும்.

இதுவே இருப்பதற்கான வழி. ஆறுபோல் இருங்கள். அப்போது தான் இந்தப் புலன்களை அடக்கியாள்வது சாத்தியமாயிருக்கும். உண்மையில் மக்கள் ஒரு தவறான மனோபாவத்தையே பெற்றிருக்கிறார்கள். புலன்களை அடக்கவேண்டும் என்றால் அவற்றை உணர்வற்றதாய், உயிரற்றதாய் முடக்கிப் போட்டுவிட வேண்டும் என்றே அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் அந்நிலையில் புலனடக்கம் என்பதற்குப் பொருளேயில்லாமல் அல்லவா போயிடும். நீங்கள் கொன்று போடுகிறீர்கள், தலைவனாயிருக்கிறீர்கள். உங்களால் வீற்றிருக்க முடிகிறது ஒரு சவத்தின்மீது. முதலில் கொல்வது, பிறகு ஆதிக்கம் செலுத்துவது எளிதாகத்தான் தெரிகிறது. அதனைப் பலவீனப்படுத்திவிட்டு நீங்கள் கைதேர்ந்தவராய் உங்களை எண்ணிக் கொண்டு விடுகிறீர்கள். ஆனால் நீங்கள் அந்த அமைப்பையே கொன்று போட்டீர்கள். வாழ்க்கை ஆளப்பட வேண்டியதுதான் ஆனால் உயிரற்றவற்றை அல்ல. அதனால் எந்தப் பயனுமில்லை.

இது ஒரு குறுக்குவழியாய் தெரிகிறது. உலக மதங்கள் அனைத்தும் இதனைப் பயன்படுத்துகின்றன. கொஞ்சம் கொஞ்சமாய் உங்கள் உடம்பை அழித்துவிடுகிறீர்கள். அதில் இருந்து உங்களை

அகற்றிக் கொண்டு விடுகிறீர்கள். அக்கறையற்றவராகிறீர்கள். அந்நிலையில் உங்கள் உடம்பு பட்டமரம் போலாகிவிடுகிறது. இனியும் அங்கே இலைகள் துளிர்ப்பதில்லை. இதற்கு மேலும் அது பூப்பதில்லை, பறவைகள் வந்து இளைப்பாறுவதில்லை. அது உயிரற்ற அடிமரத் துண்டாய் நிற்கிறது. நீங்கள் அதை வென்று விட்ட தென்னவோ உண்மைதான், ஆனால், இந்த வெற்றியின் மூலம் உங்களுக்குக் கிடைக்கவிருப்பது என்ன?

இதுதான் பிரச்சினை. இதனால்தான் பதஞ்சலி என்ன கருதுகிறார், எதைக் குறிக்கிறார் என்பதே மக்களுக்குப் புரிந்திருக்கவில்லை.

'அறியும் ஆற்றலின் மீது சம்யமம் செய்வது...'

உங்களுடைய கண்கள் பார்க்கின்றன, உங்களுடைய காதுகள் கேட்கின்றன, உங்களுடைய நாசி முகர்கிறது, உங்கள் நாக்கு சுவைக்கிறது, உங்கள் கைகள் தொடர்பேற்படுத்திக் கொள்கின்றன, உங்கள் கால்கள் நிலத்துடன தொடர்புற்றவையாய் இருக்கின்றன. அவற்றின் அறியும் ஆற்றலே அது.

'அவற்றின் அறியும் ஆற்றலின் மீது சம்யமம் செய்வது...'

ஆனால், அவை ஆற்றல் மிக்கதாய் இருக்க வேண்டும். இல்லையேல், ஆற்றல் என்றால் என்ன என்பதைக்கூட நீங்கள் உணர முடியாது. இந்தப் புலன்கள் முழு ஆற்றலுடன் இருக்கவேண்டும், சம்யமம் செய்யுமளவு, அவற்றின் மீது தியானம் செய்யுமளவு உயர் அளவிலான ஆற்றலுடன் இருக்கவேண்டும்.

இந்தக் கணத்தில் ஒரு மலரைப் பார்க்கிறீர்கள், மலர் அங்கே இருக்கிறது. ஆனால் உங்கள் கண்களை நீங்கள் உணர்ந்தீர்களோ? நீங்கள் மலரைப் பார்க்கிறீர்கள், ஆனால் உங்கள் கண்களின் ஆற்றலை நீங்கள் உணர்ந்தீர்களோ? மலரைக் காண்பதில் உங்கள் கண்களைப் பயன்படுத்துவதற்கு அது அங்கே இருந்தாக வேண்டும். உண்மையில் எந்தவொரு மலரை விடவும் கண்கள் அழகானவை, காரணம் அத்தனை மலர்களும் கண்களின் வழியேதான் வருகின்றன. கண்களின் வழியேதான் மலர்களின் உலகத்தை நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள், ஆனால், எப்போதாவது கண்களின் ஆற்றலை நீங்கள் உணர்ந்ததுண்டா? அவை கிட்டத்தட்ட தெளிவற்றதாய், உணர்வற்ற தாய் இருக்கின்றன. அவை இணக்கமாய், வரவேற்கும் பண்புடையதாய் இருக்கின்றன சன்னல்களைப் போன்று. தங்களால் அறியப்படும்

பொருளை நோக்கி அவை செல்வதில்லை. ஆற்றல் என்பது சுறுசுறுப்பாய் செயல்படுவது. ஆற்றல் சுறுசுறுப்பாயிருப்பதைக் குறிக்கிறது. உங்களுடைய கண்கள் மலர்களை நோக்கிச் சென்று அவற்றை கிட்டத்தட்ட தொட்டுவிடுவதே ஆற்றல் ஆகும். உங்களுடைய காதுகள் சென்று பறவைகளின் கீதத்தைத் தொடுகின்றன. உங்களுடைய கைகள் உங்களுக்குள் இருக்கும் முழு ஆற்றலையும் கொண்டு உங்கள் பிரியத்துக்குகந்தவளைத் தொடுகிறது அல்லது. நீங்கள் புல்தரையில் படுத்திருக்கிறீர்கள், உங்களுடைய ஒட்டுமொத்த உடம்பும் முழு ஆற்றலுடன் புற்களோடு தொடர்பேற்படுத்திக் கொண்டு இருக்கும், புற்களுடன் நீங்கள் உரையாடல் நிகழ்த்துகிறீர்கள். அல்லது நீங்கள் ஆற்றில் நீந்தும்போது ஆற்றோடு எதையோ முணுமுணுக்கிறீர்கள். ஆற்றின முணுமுணுப்பைக் கேட்கிறீர்கள். தோழமையுடன் ஒன்றுபட்டிருக்கிறீர்கள். ஆனால் அதற்கு ஆற்றல் தேவைப்படும்.

நான் முதலாவதாய் உங்களுக்குச் சொல்லக்கூடியது இதுதான், நீங்கள் பார்க்கிறபோது, உண்மையிலேயே கண்களாகி விடுங்கள். எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள். ஆற்றல் முழுவதையும் கண்களின் வழியே பாய்ந்தோடச் செய்யுங்கள். உங்களுடைய கண்கள் உள்ளார்ந்த பொழிவில் (shower) குளித்து, சுத்தமாகிவிடும். மரங்கள் இனியும் இருந்ததுபோல் இருக்காது, அதன் பசிய காய்கள் அதற்கு மேலும் அப்படியே இருக்காது. அதன்மீது படிந்திருந்த தூசி மறைந்து விட்டது போல் பச்சைப் பசேலென்று ஆகிவிடும். மரத்தின் மீது இல்லை புழுதியும் தூசியும். அது உங்களுடைய கண்களில் இருக்கிறது. நீங்கள் முதல் முறையாய் காண்பீர்கள், முதல்முறையாய் கேட்பீர்கள்.

இயேசு தம்முடைய சீடர்களிடம் சொல்லிக் கொண்டேயிருப்பார், 'உங்களுக்குக் காதுகள் இருந்தால் கேளுங்கள், கண்கள் இருந்தால் காணுங்கள்' என்று. அவர்கள் குருடர்களல்லர், அவர்கள் செவிடர்களுமல்லர். அவர் எதனைக் குறிப்பிடுகிறார்? நீங்கள் கிட்டத்தட்ட செவிடராகி விட்டீர்கள், கிட்டத்தட்ட குருடராகி விட்டீர்கள் என்பதைத்தான். நீங்கள் மனதால் பார்க்கிறீர்கள், கண்களால் பார்க்கவில்லை, நீங்கள் மனதால் கேட்கிறீர்கள், காதுகளால் கேட்கவில்லை. அது செயல்திறனுடன் கூடியதல்ல, அதில் ஆற்றல் இருக்கவில்லை. அதில் தேவையானது இல்லை.

'அறியும் ஆற்றல்களின் மீது சம்யமம் செய்வது. அந்த அறிவால் வருவது...' அந்நிலையில் உங்கள் புலன்களின் இயல்பை உங்களால்

கண்டு கொள்ள முடியும். அந்த அனுபவம் தெய்விகமானது. அந்த நேர்த்தியை உங்களுடைய உடலானது உள்ளடக்கியிருக்கும். உங்களுடைய கண்களின் வழியே பார்ப்பவர் கடவுளல்லவா.

மெய்ஸ்டர் எக்கார்ட்டினுடைய பிரபலமான மொழியை நான் நினைவில் கொள்கிறேன். அவர் மெய்ப்பொருளை உணர்ந்து, ஞானம் பெற்ற நாளில் அவருடைய நண்பர்களும், சீடர்களும், உடன் பிறந்தவர்களும் கேட்கிறார்கள் 'தாங்கள் எதைக் கண்டீர்கள்?' என்று. அவர் சிரித்தார். ஒட்டுமொத்த கிறிஸ்தவ மதத்திலும் ஜென் குருமார்களுக்கு வெகு நெருக்கமாய் வரக்கூடியவர் அவர் மட்டுமே. கிட்டத்தட்ட அவரே ஒரு ஜென் குரு. எக்கார்ட் சொன்னார், 'நான் அவரைக் காணவில்லை. என்மூலமாக அவரே காண்கிறார். இந்தக் கண்கள் அவருடையவை. ஆகா, என்ன ஒரு ஆட்டம், என்ன ஒரு விளையாட்டு. அவர் என்வழியே பார்க்கிறார்.'

உங்களுடைய புலன்களின் இயல்பை நீங்கள் உண்மையிலே உணர்கிறபோது, அது தெய்விகமான உணர்வாய் இருக்கும். இறைவனல்லவோ உங்கள் கைகளின் வழியே இயங்குகிறார். அது இறைவனின் கைகள். எல்லாக் கைகளும் அவருடையதுதான். இறைவனன்றோ உங்களுக்குள் இருந்து காதல் செய்கிறார். எல்லாக் காதல் விவகாரங்களும் அவருடையதுதான். அது எப்படி வேறுவிதமாயிருக்க முடியும்? இந்துக்கள் அதை லீலா விநோதம் என்கிறார்கள், கடவுளின் திருவிளையாடல். 'குக்கூ' (cuckoo) பறவையின் மூலம் அவரன்றோ உங்களை அழைக்கிறார். அதை உங்கள் மூலம் செவிமடுப்பது அவர்தான். அவர்தான், அவர் மட்டுந்தான் எங்கும் பரவியிருப்பது.

'புலன்களின் புறச்சார்பு, அதில் இருந்து உண்டாகும் அறிவு, இந்த அறிவால் வருகிற 'நான்' என்கிற அகங்காரம், இவற்றின் முக்குணங்கள் அவற்றால் ஆன்மாவுக்கு வரும் அனுபவம் இவற்றின் மீது சம்யமம் செய்வதால் புலன்கள் வெல்லப்படுகின்றன.' 'அகந்தை'க்கு மூன்று வார்த்தைகள் உண்டு வடமொழியில், ஒரு வார்த்தைதான் இருக்கிறது ஆங்கிலத்தில். அதுதான் இடர்ப்பாட்டை உண்டு பண்ணுகிறது. சூத்திரத்தில் 'அஸ்மா' என்கிற வடமொழிச் சொல் உள்ளது. எனவே, நான் அதனை முதலில் உங்களுக்கு விளக்குகிறேன்.

அகங்காரம், அஸ்மிதா, ஆத்மா என மூன்று சொற்கள் இருக்கின்றன. எல்லாமே 'நான்' என்பதைக் குறிப்பவை. அகங்காரத்தை 'ஈகோ' (Ego) என்று மொழிபெயர்க்கலாம். அகந்தை 'நான்' என்று பெரிதும் தவறாகப் பயன்படுத்தப்படுவது. 'அஸ்மிதா'வுக்கு ஆங்கிலத்தில் நேரான சொல் கிடையாது. 'அஸ்மிதா' என்றால் இருத்தல் என்கிற ஒருமை வடிவம், 'நான் இருக்கிறேன்'. அகந்தை - 'ஈகோ'வில் 'நான்' அழுத்தம் பெறுகிறது. 'அஸ்மிதா'வில் 'இருக்கிறேன்' என்பது அழுத்தம் பெறுகிறது. இருத்தல் 'ஈகோ'வை விட சுத்தம். 'ஆத்மா'வில் இருத்தலும் மறைந்துவிடுகிறது. அகங்காரத்தில் 'நான் இருக்கிறேன்'; அஸ்மிதாவில் 'இருக்கிறேன்' என்பது மட்டுமே. ஆத்மாவில் அது மறைந்துவிடுகிறது. ஆத்மாவில் தூய இருப்புணர்வு மட்டுமே இருக்கிறது. 'நான்' என்பதும் இல்லை, 'இருத்தல்' என்பதும் இல்லை.

இந்தச் சூத்திரத்தில் 'அஸ்மிதா' என்கிற இருத்தல் மட்டும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. அகந்தை மனத்தினுடையது என்பதை நினைவில் கொள்ளுங்கள். புலன்களுக்கு அகந்தை இல்லை. அவற்றுக்கு ஒரு குறிப்பிட்ட இருத்தல் உண்டு. ஆனால் அகந்தை என்பது கிடையாது. உங்களுடைய கண்களுக்கு எந்த அகந்தையும் இல்லை. உங்கள் கைகளுக்கும் அகந்தை இல்லை. ஒரு குறிப்பிட்ட இருத்தல் மட்டுமே உண்டு. அதனால்தான் உங்களுக்குச் சருமமாற்றுச் சிகிச்சை செய்கிறபோது அடுததவருடைய சருமத்தைப் பொருத்தினால் உங்கள் உடம்பு ஏற்றுக் கொள்கிறதில்லை. காரணம் உடம்புக்குத் தெரியும், 'இது நம்முடையதல்ல' என்று. எனவே தான் தோலைப் பொருத்திச் சிகிச்சை செய்கிற நிலையில், உங்கள் உடம்பில் இருந்தே - தொடைப்பகுதியில் இருந்து தேவையான தோல் எடுத்துப் பயன்படுத்தப்படுகிறது. உங்களுடைய தோலைத் தவிர வேறொருவர் தோலைப் பொருத்தினால் உடம்பு அதை ஏற்றுக் கொள்வதில்லை. உடம்புக்கு 'நான்' இல்லை, 'இருத்தல்' உண்டு.

உங்களுக்கு இரத்தம் தேவைப்பட்டால் யாருடைய இரத்தத்தையும் பயன்படுத்திவிட முடியாது. உடம்பு எல்லாவகை இரத்தத்தையும் ஏற்றுக் கொண்டுவிடாது. ஒரு குறிப்பிட்ட இரத்தத்தைத்தான் அது ஏற்றுக் கொள்ளும். தனக்கென்று ஓர் இருத்தலை அது கொண்டிருக்கிறது. வேறு இரத்தத்தை அது ஏற்க மறுத்துவிடும். உடம்பு தனக்கென்று ஓர் இருத்தல் உணர்வு கொண்டது. அது தெரியாத அளவுக்கு நுட்பமானது ஆனாலும் இருக்கவே செய்கிறது.

உங்களுடைய கண்கள் உங்களுடைய கைரேகை போன்று உங்களுக்கே உரியவைதாம். உங்களுக்கான எல்லாமும் உங்களுடையவைதாம்.

தற்போது உடலியல் நிபுணர்கள் சொல்கிறார்கள் எல்லாருடைய இருதயமும் வெவ்வேறானவை, வெவ்வேறு வடிவில் அமைந்தவை என்று. உடலியல் நூலில் நீங்கள் பார்க்கிற படம் உண்மையான படம் அல்ல. அது சராசரியானது, கற்பனை செய்யப்பட்டது. ஒவ்வொருவருடைய இருதயமும் வெவ்வேறு வடிவம் கொண்டது. ஒவ்வொருவருடைய சிறுநீரகமும் அதேபோன்று வெவ்வேறு. வடிவிலானவைதாம். உடலின் பாகங்கள் தனிச்சிறப்புடையவை, இணையற்றவை. அதுவே இருத்தல் உணர்வைத் தருபவை.

நீங்கள் இதற்குமுன் இங்கே இருந்திருக்கவில்லை. இனி இருக்கப் போவதும் இல்லை. எனவே எச்சரிக்கையுடனும், கவனமுடனும், மகிழ்ச்சியுடனும் செயல்படுங்கள். உங்கள் இருப்புணர்வின் மகிமையை எண்ணிப் பாருங்கள். நீங்கள் மேம்பட்டவர். ஒப்பற்றவர் என்பதைக் கருத்தில் கொள்ளுங்கள். கடவுள் மிகப்பலவற்றையும் உங்களுக்குள் இடம்பெறச் செய்திருக்கிறார். மற்றவரைப் போல் பாவனைகளை மேற்கொள்ளாதீர்கள். அது உங்களுக்கு நீங்களே செய்கிற துரோகம் ஆகும். நீங்கள் நீங்களாக இருங்கள். அதுவே உங்கள் மதமாயிருக்கட்டும். மற்றதெல்லாம் சூழ்ச்சித் திறன்கள். இருப்பது ஒரு மதம்தான். அது நீங்கள் நீங்களாகவே இருப்பது. மெய்யாகவே நீங்களாக இருப்பது.

'புலன்களின் புறச்சார்பு, அதில் இருந்து உண்டாகும் அறிவு இந்த அறிவால் வரும் நான் - உணர்வு எனப்படும் அகங்காரம் இவற்றின் முக்குணங்கள், அவற்றால் வரும் ஆன்மாவின் அனுபவம் இவற்றின் மீது சம்யமம் செய்வதால் புலன்கள் வெல்லப்படுகின்றன'. இவற்றின் மீது நீங்கள் தியானம் செய்தால் நீங்கள் தலைவனாகி விடுவீர்கள். தியானம் அடக்கியாளும் தன்மையைக் கொடுப்பது. தியானத்தைப் போல் ஆதிக்கத்தைக் கொடுப்பது வேறொன்றில்லை. உங்கள் கண்களின் பேரில் தியானம் செய்தால் முதலில் ரோஜா மலரைக் காண்பீர்கள், போகப்போக எந்தக் கண்களைக் கொண்டு பார்க்கிறீர்களோ, அந்தக் கண்களையே நீங்கள் பார்ப்பீர்கள். பார்க்கிற கண்களை நீங்கள் பார்த்துவிட்டால் நீங்கள் தலைவனாகிவிடுவீர்கள். தற்போது, அதன் ஆற்றல்கள் அனைத்தையும் நீங்கள் பயன்படுத்த

முடியும். அவை ஊடுருவிப் பரவுகிறவை. உங்களுடைய கண்கள் எந்த அளவில் இருப்பதாய் நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கிறீர்களோ, அந்த அளவில் அவை வரையறுக்கப்பட்டிருக்கவில்லை.

நீங்கள் கண்டிராத பலவற்றையும் அவற்றால் காணமுடியும். நீங்கள் கனவில்கூட கண்டிராத பலவற்றிலும் அவை ஊடுருவக்கூடும். உங்களுடைய கண்களுக்கு நீங்கள் எஜமானரல்லர். இன்னது செய்கிறோம் என்று தெரியாமலே, சரியாகத் திட்டமிட்டுக் கொள்ளாமலே நீங்கள் அவற்றைப் பயன்படுத்துகிறீர்கள்.

பொருள்களுடன் அதிக அளவு தொடர்புடையதாகி, உங்களுடைய கண்களின் அக உணர்வையே (subjectivity) நீங்கள் மறந்துவிட்டீர்கள். தொடர்ந்து ஒருவருடன் பழகுகிற போது, அவரால் நீங்கள் வசீகரிக்கப்படுகிற நிலை இருக்கிறது. நீங்கள் புறப்பொருள்களுடனான தொடர்பை அதிகரித்துக் கொண்டு, உங்கள் புலன்களின் அகப் பண்பை மறந்து விடுகிறீர்கள். நீங்கள் பொருள்களைப் பார்க்கிறீர்கள், ஆனால், உங்களுடைய நோக்குகை (seeing) யை நீங்கள் பார்க்கிறதில்லை. நீங்கள் கீதங்களைக் கேட்கிறீர்கள் ஆனால் உங்களுக்குள் இணைந்திருக்கும் நுட்பமான அறிவை, உங்கள் இருப்புணர்வின் ஓசையை நீங்கள் கேட்கிறதில்லை.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

நாடோடி ஒருவனைப் பற்றி நான் அறிந்தது. அவன் நேர்த்தியான உணவு விடுதியொன்றில் நுழைந்து, வயிறு புடைக்கத் தின்றுவிட்டு விடுதி மேலாளரிடம் சொன்னான், 'அருமையானவரே! உங்கள் உணவை நான் மகிழ்ச்சியோடு உண்டேன். உண்மையில் அது நன்றாகவே இருந்தது. ஆனால், துரதிருஷ்டம் பாருங்கள். அதில் ஒரு சிறு பகுதிக்கும் பணம் செலுத்த முடியாதவனாக நான் இருக்கிறேன். என்னுடைய என்று சொல்லிக் கொள்ள செப்பாலடித்த காசுகூட என்னிடம் இல்லை. தயவு செய்து கோபப்படாதீர்கள். என்னுடைய தொழில் பிச்சையெடுப்பது. அதை நீங்களே புரிந்து கொள்ளலாம். நான் திறமையுள்ள பிச்சைக்காரன். நான் வெளியே சென்று, ஒரு மணிநேரத்திலேயே இந்தச் சாப்பாட்டுக்கான பணத்தைத் தேடிக் கொண்டு வந்து விடுவேன். நான் திரும்பி வருவேன என்பதை நீங்கள் நம்ப மாட்டீர்கள். அது எனக்கும் தெரியும். இயல்புதானே நீங்கள் என்னோடு வருவதாயின் நான் அதை வரவேற்கவே செய்வேன். ஆனால் புகழ்பெற்ற ஓர் உணவு விடுதி உரிமையாளர் நீங்கள்.

என்னுடைய தரத்தில் உள்ளவனோடு சேர்ந்து வருவது அத்தனை நன்றாக இருக்காது. வேண்டாம் ஐயா. இந்தச் சிறிய பிரச்சினைக்கு நானே ஒரு தீர்வு வைத்திருக்கிறேன். நான் இங்கேயே இருந்து கொள்கிறேன். இந்தச் சாப்பாட்டுக்கான தொகை கிடைக்கிறவரை தாங்களே வெளியில் பிச்சையெடுத்து வாருங்கள்' என்று.

நீங்கள் ஒரு பிச்சைக்காரனுடன் சேர்ந்தால் நீங்களும் பிச்சைக் காரராகி விடுவீர்கள். அவன் ஆயிரத்தியொரு யோசனைகளைச் சொல்லி அவனையும் உங்களைப் போல் ஆக்கிவிடுவான்.

நம்முடைய அகவுணர்வை (subjectivity)யே மறந்துவிடு மளவுக்குப் புறப்பொருள்களுடன் நாம் தொடர்பு வைத்திருக்கிறோம். நாம் யார் என்பதையே மறந்துவிடுமளவிற்கு புறத்தேயான பொருள்களின் மீது நம்முடைய கவனத்தைக் குவித்துக் கொண்டு விட்டிருக்கிறோம். பொருள்களுடனான இந்தத் தொடர்பு உங்களைப் பற்றி உங்களுக்கிருக்கும் படிமத்தை (imager) யே உடைத்தெறிந்து விடுகிறது.

யோகாவில், உங்கள் பார்க்கிற கண்களை நீங்கள் பார்க்கத் தொடங்குகிறபோது, ஒரு நுட்பமான ஆற்றலை நீங்கள் எதிர்கொள் கிறீர்கள். அவர்கள் அதைத் தன் மாத்திரை என்கிறார்கள். உங்களுடைய பார்க்கும் கண்களை நீங்கள் பார்க்கிறபோது அந்தக் கண்களின் பின்னே ஓர் அபாரசக்தி மறைந்திருப்பதை நீங்கள் காண்கிறீர்கள். உங்கள் செவிகளுக்குப் பின்னால் காதுகளின் தன்மாத்திரை, பெரிய அளவில் குவிந்து கிடக்கும் சக்தியை நீங்கள் காண்பீர்கள். உங்களுடைய பிறப்புறுப்புகளின் பின்னே பெருமளவில் குவிந்து கிடக்கும் சக்தியை, பாலுணர்வு தன் மாத்திரையை நீங்கள் காண்கிறீர்கள். உங்களுடைய புலன்களின் பின்னணியில் சக்தி ஒரு பெரிய நீர்நிலை போல் அமைந்திருக்கிறது. பயன்படுத்தப்படாமல் கிடக்கிற சக்தி ஏராளம். ஒருமுறை நீங்கள் அதை அறிந்து கொண்டு விட்டால் அந்தச் சக்தியை உங்கள் காதுகளில் நீங்கள் ஊற்ற முடியும். அதன்பிறகு கவிஞர்களும், ஓவியர்களும் மட்டுமே அரிதாய் காண்கிற காட்சிகளை நீங்களும் காண்பீர்கள். அதன்பிறகு, கவிஞர்களும் ஓவியர்களும் இசைக்கலைஞர்களும் மட்டுமே அரிதாய் கேட்கிற ஒலிகளை நீங்களும் கேட்க முடியும். அரிதான கணங்களில் எப்படித் தொட்டுக் கொள்வது என்பது அறிந்த காதலர்களைப் போல் நீங்களும் பொருள்களைத் தொடுவீர்கள்.

நீங்கள் உயிரோட்டமும், துள்ளாட்டமும் கொண்டவராகி விடுவீர்கள்.

சாதாரணமாக, உங்களுடைய புலன்களை அடக்கி வைக்கும் படிதான் நீங்கள் கற்பிக்கப்பட்டிருப்பீர்கள், அவற்றை அறிந்து கொண்டிருக்க மாட்டீர்கள். அது முட்டாள்தனமானது. ஆனால் அந்தச் செய்கையே சவுகரியமாய் இருக்கும்.

இப்படி நடந்தது.

கிராமப்புறத்தில் தங்களுடைய திருமணம் முடிந்ததும், மணமகனும் மணமகளும் அவனுடைய பூட்டிய வண்டியில் ஏறி, பண்ணை வீட்டுக்குச் சென்றனர். வண்டி சாலையில் ஒரு மைல் சென்றிருக்கும், குதிரை தடுமாறியது. மாப்பிள்ளை கத்தினான் 'இது ஒண்ணு' என்று.

அவர்கள் பயணத்தைத் தொடர்ந்தனர். குதிரை மீண்டும் தடுமாறியது 'இத்தோட ரெண்டு' என்று கூவினான் மாப்பிள்ளை.

அவர்கள் பண்ணையை நெருங்கி விட்டிருப்பார்கள், அந்தக் குதிரை மீண்டும் தடுக்குற்று நின்றது. 'அவ்வளவுதான் மூணு' என்றவன், தன்னுடைய இருக்கைக்குக் கீழேயிருந்து துப்பாக்கியை எடுத்து குதிரையின் தலைப்பகுதியில் சுட்டான்.

மணப்பெண் அச்சத்துடன் உட்கார்ந்திருந்தாள். பிற்பாடு அவர்கள் சந்தோஷ மனநிலையில் இருந்தபோது தன்னுடைய புதுக்கணவன் நடவடிக்கைப் பற்றி தான் என்ன நினைத்தாள் என்பதை அவனிடம் சொன்னாள் அவள். 'இத்தோட ஒண்ணு' என்று கூவினான் அவன்.

அந்தத் தம்பதிகள் அறுபதாண்டுகள் மகிழ்ச்சியாக வாழ்ந்தனர்.

ஆனால், அந்த மகிழ்ச்சி உண்மையான மகிழ்ச்சியாகாது. துப்பாக்கி முனையில் அடக்குவது எளிது. ஆனால் அவர்களுக் கிடையில் எத்தகைய அன்பு நிலவும் என்று நினைக்கிறீர்கள்? இருவருக்கும் இடையே எப்போதும் துப்பாக்கி இருந்து கொண்டிருக் கும். மனைவி தொடர்ந்து அச்சத்தில் இருப்பாள். அவன் எந்த கணத்திலும் சொல்லக்கூடும் 'இத்தோட ரெண்டு, இத்தோட மூணு' என்று. அத்தோடு தீர்ந்தது.

உங்களுடைய புலன்களையும், உடம்பையும் வைத்துக் கொண்டு அதைத்தானே நீங்கள் செய்கிறீர்கள். ஆனால் உதவியற்றவரானீர்கள்.

அதை அடக்கி வைத்ததற்கு நீங்கள்தான் பொறுப்பு என்று நான் சொல்லமாட்டேன். நீங்கள் அப்படியொரு முறையில் வளர்க்கப் பட்டீர்கள். உங்களுடைய புலன்கள் சுதந்திரமாய் செயல்பட யாரும் இடமளிக்கவில்லை. அன்பின் பெயரால் அடக்குமுறை தொடர்கிறது. பெற்றோர்களும் சமூகமும் தொடர்ந்து அடக்குமுறையை செயல்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். போகப்போக ஒரு தந்திரத்தை அவர்கள் கற்பிப்பார்கள். அந்தத் தந்திரம் உங்களை ஏற்பதற்கானதன்று, மறுப்பதற்கானது. எல்லாமும் ஏற்றுக் கொள்ளப்பட்ட பழக்க வழக்கங்களுக்கு ஒத்துப் போகிற விதமாய் நெறிப்படுத்தப் பட்டிருக்கும். உங்களுடைய கிறுக்குத்தனத்தை (கட்டுப்பாடின்மை) மூட்டை கட்டி ஆன்மாவின் இருண்டதோர் மூலையில் வைத்துவிட்டு, ஒரு சிறிய மூலையை வரவேற்பறையில் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். அங்கே மனிதர்களை நீங்கள் காண்பீர்கள், சந்திப்பீர்கள், உங்களுடைய கட்டுப்பாடற்ற உணர்வை, உண்மையான இருப்புணர்வை மறந்து வாழ்வீர்கள். உங்களுடைய அப்பா, அம்மாவும் அதற்குப் பொறுப்பாக மாட்டார்கள். காரணம், அவர்களும் அதே வழியில் வளர்க்கப்பட்டவர்கள்தாம்.

ஆக, யாருமே பொறுப்பாளியல்லர். ஆனால், அதை அறிந்துகொண்டு, நீங்கள் எதையும் செய்யாமல் இருந்தால் அந்நிலையில் நீங்களே பொறுப்பாளியாகிறீர்கள். நீங்கள் என்னருகே இருந்தால்நான் உங்களைப் பொறுப்புணர்ச்சி மிக்கவராய் ஆக்கிவிடுவேன் காரணம் நீங்கள் அதை அறிந்து கொள்வதுடன் எதையும் செய்யாமல் இருப்பின் அந்நிலையில் நீங்கள் பொறுப்பைத் தட்டிக் கழிக்க மாட்டீர்கள், அடுத்தவர் தலையில் சுமத்தவும் மாட்டீர்கள். அப்போது நீங்கள் பொறுப்புடையவராகி விடுகிறீர்கள்.

உங்கள் புலன்களை நீங்கள் எப்படி பாழ்படுத்தி விட்டிருக் கிறீர்கள் என்பதையும், அவற்றை எப்படிச்செழிப்பான நிலைக்கு மீண்டும் கொண்டுவரலாம் என்பதையும் தற்போது நீங்கள் அறிந்து கொள்வீர்கள். ஏதாவது செய்யுங்கள். துப்பாக்கியைத் தூக்கி எறியுங்கள், உங்களுடைய அடக்கி வைத்த மனதையுந்தான். உங்களைத் தடையற்றவராக்கிக் கொண்டுவிடுங்கள். மீண்டும் பாய்ந்தோடத் தொடங்குங்கள். மீண்டும் உங்கள் இருப்புணர்வுடன் தொடர்பேற் படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் துண்டிக்கப்பட்ட தொலைபேசிக் கம்பி (line) மாதிரி இருக்கிறீர்கள்.

எல்லாமும் மிகச்சரியாக இருப்பது போலத் தெரிகிறது. தொலை பேசியும் இருக்கிறது ஆனால் கம்பிதான் துண்டிக்கப்பட்டிருக்கிறது. உங்கள் கண்கள் இருக்கின்றன, கைகள் இருக்கின்றன, உங்கள் காதுகளும் அங்கே இருக்கின்றன. ஆனால் இணைப்பு துண்டிக்கப் பட்டிருக்கிறது. அதை மறுபடியும் இணையுங்கள். அதைத் துண்டிப்பது முடிகிறபோது இணைப்பதும் முடிகிறதுதானே. மற்றவர் அதைத் துண்டித்தார்கள் என்றால் அதற்குக் காரணம் அவர்களும் அதே முறையில் கற்பிக்கப்பட்டவர்கள் என்பதுதான். ஆனால் நீங்கள் மறுபடியும் இணைப்பேற்படுத்திக் கொள்ள முடியும்.

என்னுடைய அத்தனை தியானங்களும் பாய்ந்தோடும் ஆற்றலை உங்களுக்கு வழங்குவதாகவே இருக்கும். அதனால்தான் நான் அவற்றை ஆற்றல்மிக்க தியான முறைகள் என்கிறேன். எதையும் செய்யாமல் அப்படியே அமைதியாய் அமர்ந்திருப்பது பழைய தியானமுறை. நான் உங்களுக்கு சுறுசுறுப்பான செயல்முறைகளைக் கொடுத்திருக்கிறேன் காரணம், ஆற்றல் உங்களுக்கு பிரவகிக்கிற பொழுது நீங்கள் அமைதியாக அமர்ந்திருக்கக்கூடும் என்றாலும் தற்போது நீங்கள் முதல்முறையாய் உயிரோட்டமுடையவராகி விடுகிறீர்கள்.

'இதிலிருந்து உடலானது மனத்தின் வேகத்தோடு இயங்கக்கூடிய ஆற்றலும், புலன்கள் உடலில் இருந்து பிரிந்து தனித்து இயங்கக்கூடிய ஆற்றலும், இயற்கையை வெல்கிற ஆற்றலும் உண்டாகின்றன.

உங்களுடைய புலன்களின் நுட்ப ஆற்றலை – தன் மாத்திரையை உங்களால் புரிந்து கொள்ள முடியுமெனில் ஒழுங்கற்ற கருவிகள் இல்லாமல் உங்களுடைய அறியும் ஆற்றலைப் பயன்படுத்திவிடும் திறமை பெற்றவராகி விடுவீர்கள் நீங்கள். கண்களின் பின்னே திரண்ட ஆற்றல் ஒரு நீர்த்தேக்கம் போல் இருப்பதை நீங்கள் தெரிந்து கொண்டால், உங்கள் கண்களை மூடிக் கொண்டு அந்த ஆற்றலை நேரடியாய் பயன்படுத்தத் தொடங்கி விடுவீர்கள். அந்நிலையில் உங்களுடைய கண்களைத் திறவாமலேயே நீங்கள் காண்பீர்கள். அதைத்தான் புலன்களின் தொடர்பின்றி உள்ளத்தில் உள்ள எண்ணங் களைச் செயல்படுத்துதல் (telepathy) தொலைவில் உள்ளதைக் காணல் (clarivoyance), தொலைவில் உள்ளதைக் கேட்டல் (clairaudience) என்கிறார்கள்.

சோவியத் ரஷ்யாவில், ஒரு பெண்மணி எந்தவொரு பொருளிட மிருந்தும் இருபது அடி தொலைவில் இருந்து கொண்டு தன்னுடைய ஆற்றலால் அந்தப் பொருளை இழுத்ததை அறிவியல் பூர்வமாய் ஆராய்ந்திருக்கிறார்கள். இருபது அடி தொலைவில் இருந்து கொண்டு தனது கைகளை மட்டுமே அவள் அசைக்கிறாள், இழுப்பது போன்ற அசைவுகளை மேற்கொள்கிறாள் அறிதுயில் நிலையை ஏற்படுத்துகிற வரை (hypnotist) போன்று. பதினைந்து நிமிடங்களுக்குள் பொருட்கள் அவளை நோக்கி நகரத் தொடங்குகின்றன அவற்றை அவள் தொடவில்லை. என்ன நிகழ்கிறது என்பதை அறிய விசாரணைகள் செய்யப்பட்டன. அந்தப் பெண்மணி அரைமணி நேரப் பரிசோதனை யில் தன்னுடைய எடையில் அரைபவுண்டை இழந்தாள். ஆக ஏதோவோர் ஆற்றலை அவள் இழந்து கொண்டிருக்கிறாள் என்பது உறுதியாகி விட்டது.

யோகாவில் இதுதான் தன்மாத்திரை என்று அழைக்கப்படுகிறது. ஒரு கல்லை, பாறைத்துண்டை நீங்கள் மேலே தூக்கும் போது உங்களுடைய ஆற்றலைக் கையின் வழியே பயன்படுத்துவதுதான் வழக்கம். அதைச் சுமக்கும் போதும் அதே ஆற்றலைக் கைகளின் வழியே பயன்படுத்துகிறீர்கள். அந்த ஆற்றலை நீங்கள் நேரடியாகத் தெரிந்து கொண்டிருந்தால், கைகளைப் பயன்படுத்துவதை நீங்கள் விட்டிருப்பீர்கள். ஆற்றல் நேரடியாகவே பொருளை அசைத்துவிடும். அதேபோலத்தான் டெலிபதியிலும், மக்களின் எண்ணங்களை நீங்கள் கேட்கவோ, புரிந்து கொள்ளவோ (read) முடியும். தொலைதூரக் காட்சிகளைக் காண முடியும். தன்மாத்திரை என்கிற நுட்ப ஆற்றலை நீங்கள் அறிந்து கொண்டு விட்டால், கண்களால் பயன்படுத்தப்படுகிற அந்த ஆற்றலை நீங்கள் கண்டு கொண்டு விட்டால், கண்களை நீங்கள் தள்ளிவிடலாம். செயல்படுவது புலனல்ல, ஆற்றல் என்பதை நீங்கள் அறிந்து கொண்டுவிட்டால், புலனில் இருந்து விடுபட்டு விடுவீர்கள்.

நான் கேட்டறிந்த கதை:

கோஹன் அண்டு கோல்டுபர்க் என்கிற மொத்த வியாபாரம் செய்யும் நிறுவனத்துக்கு அவன் ‘போன்’ செய்தான்.

‘தயவு செய்து மிஸ்டர். கோஹனுக்கு இணைப்பு கொடுங்கள்.’

‘ஐயா, அவர் வெளியில் போயிருக்கிறார்’ என்றாள் மின்விசைப் பலகையைக் கையாள்கிற பெண்.

'அப்படியானால் மிஸ்டர் கோல்டுபர்க்கிற்கு தொடர்பு ஏற்படுத்திக் கொடுங்கள்'

'மிஸ்டர். கோல்டுபர்க் உங்களுடன் பேச இயலாத நிலையில் இருக்கிறார்.'

'சரி. நான் பிற்பாடு அழைக்கிறேன்.'

பத்து நிமிடம் கழித்து, 'மிஸ்டர். கோல்டுபர்க்குடன் பேச வேண்டும்'

'சார், மிஸ்டர் கோல்டுபர்க் இன்னமும் கட்டிப்போடப்பட்ட நிலையில் இருக்கிறார்.'

அடுத்த அரைமணி நேரம் சென்றபின், 'கோல்டுபர்க்!'

'சார்! இன்னமும் அவர் விடுபட்டபாடில்லை'

'ஆனால் இதென்ன வேடிக்கையா இருக்கு. எப்படி ஒரு தொழிலை நீங்க நடத்தறீங்க? ஒரு கூட்டாளி காலை முழுக்க வெளியில போயிடறார், இன்னொருத்தர் விடுபட்டபாடில்லைங்கறீங்க. அப்படி என்னதான் நடக்குது அங்கே?'

'சார், மிஸ்டர். கோஹன் வெளியில் போறப்போலாம் மிஸ்டர். கோல்டுபர்க்கை கட்டிப்போட்டு விடுகிறார்.'

உங்கசுளுக்குள்ளும் இதுதான் நடக்கிறது. நீங்கள் வெளியே செல்கிறபோதெல்லாம் கண்களின் வழியேயும், கைகளின் வழியேயும், பிறப்புறுப்புகள் மூலமாகவும், காதுகள் மூலமாகவும் - நீங்கள் வெளியே செல்கிறபோதெல்லாம் ஒரு குறிப்பிட்ட வகை தளையை - கட்டிப்போவதை நீங்கள் உண்டு பண்ணிக் கொள்கிறீர்கள். கொஞ்சம் கொஞ்சமாய் ஒரு குறிப்பிட்ட புலனுடன் - கண்கள், காதுகள் - இறுக்கமாகி தப்ப இயலாத சூழ்நிலை ஏற்பட்டு விடுகிறது. வெளிச் செல்லும் ஆற்றலை நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் மறந்து விடுகிறீர்கள்.

இன்னொரு கதை:

சீடன் ஒருவன் தன்னுடைய குருவைப் பின்பற்றவும், உலகைத் துறக்கவும் விரும்பினான். ஆனால், தன்னுடைய மனைவி மக்கள் தன்னை வெகுவாய் நேசிப்பதாகவும் தன்னால் வீட்டை விட்டு வெளியேறுவது இயலாது என்றும் அவன் கூறினான்.

குரு ஒரு திட்டம் தீட்டினார். அந்த மனிதனுக்குச் சில யோக ரகசியங்களை அவர் கற்பித்திருந்தார். அதைக்கொண்டு தன்னுடைய உடம்பை பார்க்கிறவர்கள், கண்ணுக்கு செத்துவிட்ட மாதிரி தோன்றச் செய்ய அவனால் முடியும். மறுநாள், குருவின் அறிவுறுத்தலை அவன் பின்பற்றவும், அவனுடைய குடும்பத்தினர் அழுகை ஓலத்துடன் அவனது உடம்பைச் சூழ்ந்து நின்றனர்.

குருவானவர் ஒரு மாயாஜாலக்காரன் வேடத்தில் வாசலில் வந்து நின்றார். குடும்பத்தினர் அவனை மிகவும் நேசித்ததால், அவனுடைய உயிரை மீட்டுத் தருவதாய் சொன்னார். தம்மிடமுள்ள நச்சுப் பானத்தைக் குடித்து அவனுக்குப் பதில் உயிர்துறக்க யாரேனும் தயாராயிருந்தால் அவன் உயிர் பிழைப்பான் என்றார்.

குடும்ப உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் ஆளாளுக்கு ஒரு சமாதானம் சொன்னார்கள், மனைவி சொன்னாள், 'அவர்தான் போயாச்சே, நாங்க எப்படியாவது சமாளிச்சுக்கறோம்.'

யோக நிலையில் இருந்தவன் அப்போது எழுந்தான், 'பெண்ணே, நான் இல்லாமல் நீ வாழ முடியும் என்கிறபோது நானும் என் குருவின் பின்னால் சென்றுவிட முடியும்' என்றான். தன்னுடைய குருவைப் பார்த்து அவன் சொன்னான், 'போற்றத்தக்கவரே, நாம் போகலாம். நான் உங்களைப் பின்பற்றுவேன்' என்று.

புலன்களுடனான உங்களுடய பிணைப்பு எப்படி இருக்கிற தென்றால், புலன்களே நீங்களாகவும், புலன்களில்லாமல் நீங்கள் வாழ முடியாது என்கிற மாதிரியல்லவா இருக்கிறது. உங்களுடைய ஒட்டு மொத்த வாழ்க்கையும் அவற்றின் கட்டுப்பாட்டில் இருப்பதாகவே படுகிறது. உங்களால் அவற்றைத் துறந்தும் வாழ முடியும், இன்னும் உயர்ந்த நிலையில் வாழ முடியும். சிரமந்தான். ஒரு விதையிடம், 'நீ இறந்துவிடு, உன்னில் இருந்து சீக்கிரமே ஒரு அழகான செடி தோன்றும்' என்று அறிவு சார்ந்த தர்க்கத்தின் மூலம் அதை இணங்க வைப்பதுபோலத்தான் இதுவும். தன்னுடைய இறப்பின் மூலம் ஒரு புதிய முளை தோன்றும் என்பதை எந்தச் செடியும் அறிந்திருப் பதில்லை. அல்லது ஒரு முட்டையைப் பார்த்து அதனுள் இருக்கும் குஞ்சை 'வெளியே வா' என்று நீங்கள் சொல்வதாக வைத்துக் கொள்வோம்.

முட்டைக்கு வெளியே ஒரு வாழ்க்கை இருக்கிறது என்பதை அது எப்படி நம்பிக் கொள்ளும்? அல்லது ஒரு தாயின் கருவில்

இருக்கும் குழந்தையிடம், 'பயப்படாதே. வெளியில் வா' என்று நீங்கள் சொல்வதாக வைத்துக் கொள்வோம். ஆனால், கருவறைக்கு வெளியே எதையும் அது அறிந்திருப்பதற்கில்லை. கருவறையே அதன் வாழ்க்கையாக இருக்கும். அந்த அளவுதான் அதற்குத் தெரிந்திருக் கும். அவன அச்சப்படுவான். அதே நிலையில்தான், புலன்களால் சூழப்பட்ட நாமும் ஒருவகைக் கட்டுப்பாட்டில், சிறையில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

ஒருவர் கொஞ்சமாவது துணிச்சலாய், இடர்ப்பாடுகளைச் சமாளிக்கும் மனப்பாண்பு உடையவராயிருக்க வேண்டு. இந்தக் கணத்தில் நீங்கள் எங்கிருந்தாலும் எதுவாயிருப்பினும் உங்களுக்கு ஒன்றும் நடந்துவிடப் போவதில்லை. அந்நிலையில் நீங்கள் துணிந்து உங்களை ஆபத்துக்குட்படுத்தி (risk) க் கொள்ள முடியும். அறிந்திராத ஒன்றினுள் நுழைந்து பாருங்கள். ஒரு புதிய வாழ்க்கை முறையைக் கண்டுபிடிக்க முயலுங்கள்.

இதனைத் தொடர்ந்து, உடம்பைப் பயன்படுத்தாமலே உடனடி யாய் அறியும் ஆற்றல் உண்டாகிறது. அத்துடன் பருப்பொருள் சார்ந்த உலகில் (material world) - 'ப்ரக்ருதி'யின் பேரில் முற்றான ஆதிக்கம் ஏற்படுகிறது. இதுவரையில் பொருள் சார்ந்த உலகின் பிடியில் நீங்கள் இருந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கென்று சொந்தமாய் ஆற்றல் இருப்பதை நீங்கள் அறிந்து கொண்டால் பொருள் சார்ந்த உலகில் இருந்து முற்றாக விடுபட்டு, ஒரு குருவாகிவிடுவீர்கள். உலகம் அதற்குமேலும் உங்களைத் தனது பிடியில் வைத்திராது, நீங்கள் அதனைச் சுவாதீனப்படுத்திக் கொண்டு விடுவீர்கள். துறக்கிறவர்கள் மட்டுமே குருமார்களாகிறார்கள்.

**'சத்துவத்திற்கும், புருடனுக்கும் உள்ள**
**வேறுபாட்டைத் தெரிந்து கொண்ட பிறகே**
**இருப்புணர்வின் அத்தனை நிலைகளிலும்**
**மேம்பட்டதன்மையும், அறிவும் உண்டாகிறது'**

சத்துவத்திற்கும் புருடனுக்கும் இடையில் - அறிவுத் திறனும் விழிப்புணர்விற்கும் இடையே ஒரு நுட்பமான வேறுபாட்டை உண்டாக்க வேண்டும். இரண்டையும் வேறுபடுத்தி உணர வேண்டும். உங்கள் உடம்பில் இருந்து உங்களைப் பிரித்து வேறாகப் பார்ப்பது எளிது. யார் கண்களின் வழியே, அதன் பின்னாக இருந்து கொண்டு பார்க்கிறாரோ அவர்தான் நீங்கள். இல்லையேல் வேறுயார் அந்தக்

கண்களின் வழியே பார்க்கபோவது? உங்களுடைய கண்ணாடியால் பார்க்க முடியாது. கண்ணாடிக்குப் பின்னால் கண்கள் தேவைப்டும். உங்களுடைய கண்களும் கண்ணாடி போன்றவைதாம். அவற்றால் பார்க்க முடியாது. பார்ப்பதற்கு ஏதோ ஓர் இடத்தில் நீங்கள் தேவைப் படுகிறீர்கள்.

ஆனால், அறிவுத்திறனைக் கொண்டே அந்த நுட்பமான அடையாளம் காட்டப்படுகிறது. உங்களுடைய சிந்தனைத் திறன், அறிவுத் திறன், மனதால் உணரும் திறன் இவையே அந்த நுட்பமாகும். அறிவுத்திறனையும், விழிப்புணர்வையும் பிரித்துப் பார்ப்பது கடினம். ஆனாலும் அவை பிரித்தறியக் கூடியவைதாம்.

முதலில், நீங்கள் உடம்பல்ல என்பதை படிப்படியாய் தெரிந்து கொள்ளுங்கள். அந்தப் புரிதலை ஆழமாய் வளர்த்துக் கொள்ளுங்கள், பளிங்கு போலாக்கிக் கொள்ளுங்கள். புலன்களல்ல நீங்கள் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். உங்களுடைய மனத்தால் உணரும் திறனை வளர்த்துக் கொண்டு, பளிங்குபோல் தெளிவுடையவராயிருங்கள். அந்நிலையில் புலன்களின் பின்னே ஊற்றெடுக்கும் சக்தி - தன்மாத்திரைகள் நீங்களல்ல என்பதைப் புரிந்து கொள்வீர்கள். அதை வளர்ப்பதுடன் பளிங்காக்கிக் கொண்டு விடுங்கள். அறிவுத் திறனும் ஓர் ஆற்றலின் தேக்கந்தான் என்பதைக் கண்டு கொள்ளும் திறமை அப்போது உங்களிடம் இருக்கும். அது பொதுவானதோர் நீர்நிலை போன்றது. அதில் கண்கள் தங்களுடைய ஆற்றலைப் பாய்ச்சும், காதுகள் தங்களுடைய ஆற்றலைப் பாயும்படிச் செய்யும், கைகள் தங்களுடைய ஆற்றலை அதில் ஊற்றிக் கொண்டே இருக்கும். புலன்களனைத்தும் ஆறுகளைப் போன்றவை. அறிவு நுட்பமே அதில் மையமாயிருக்கும். அதனுள்ளேதான் தகவல்களை அவை கொண்டு சேர்க்கும்.

உங்கள் மனம் அறிந்து வைத்திருப்பதையே புலன்கள் வழங்குகின்றன. நீங்கள் வண்ணங்களைக் காண்கிறீர்கள், உங்கள் மனம் அவற்றைத் தெரிந்து கொள்கிறது. நீங்கள நிறக் குருடராயிருந்தால், பச்சை நிறத்தை உங்களால் பார்க்க முடியவில்லை என்றால் அப்போது உங்கள் மனதுக்குப் பச்சையைப் பற்றி எதுவும் தெரிந்திருக்காது.

பெர்னார்ட்ஷா தம்முடைய வாழ்க்கை நெடுகிலும் தாம் ஒரு நிறக்குருடு என்பது தெரியாமலே வாழ்ந்திருக்கிறார். அதைப் பற்றித் தெரிந்து கொள்வது கடினமாயிருந்தது. ஆனால் தற்செயலான ஒரு

நிகழ்வின் மூலம் அவர் அதனை அறிந்து கொண்டார். அவருடைய ஒரு பிறந்த நாளின்போது யாரோ ஒருவர் வெளியில் அணியும் உடைத்தொகுதி (suit) யை அவருக்குப் பரிசாக அளித்திருந்தார். ஆனால் கழுத்துப்பட்டை (tie) யைக் காணவில்லை. எனவே அந்த உடைத் தொகுதிக்குப் பொருத்தமான கழுத்துப்பட்டை வாங்க அவர் கடைத் தெருவிற்குச் சென்றார். அந்த உடைத்தொகுதி பச்சை நிறத்தில் இருந்தது. அவரோ மஞ்சள் நிற கழுத்துப்பட்டையை வாங்க முனைந்திருந்தார். அவருடைய செய்கையைக் கவனித்துக் கொண்டிருந்த செயலாளினி, அவரிடம் சொன்னாள், 'நீங்கள் என்ன பண்ணிட்டிருக்கீங்க? அது சரியா இருக்கா. 'சூட்' பச்சை நிறத்திலும், 'டை' மஞ்சள் நிறத்திலுமா?' என்று. அவர் சொன்னார், 'இரண்டுக்கும் இடையே ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா?' என்று. தன்னால் பச்சை நிறத்தைக் கண்டுகொள்ள முடியாது என்பது தெரியாமலே அவருடைய வாழ்க்கையில் எழுபது ஆண்டுகள் கழிந்து விட்டிருக்கிறது! அவர் பச்சைநிறத்தைப் பார்த்தார். மஞ்சளோ அல்லது பச்சையோ இரண்டு வண்ணங்களுமே அவருக்கு பச்சையாகத்தான் தெரிந்தது. தற்போது மஞ்சள் அவருடைய மனதில் ஒரு பகுதியாகி விட்டது. கண்கள் அந்தச் செய்தியை மனதுக்குள் பாய்ச்சவேயில்லை.

கண்கள் வேலைக்காரர்கள், செய்தி சேகரிக்கிறவர்கள், மக்கள் தொடர்பாளர்கள் (பி.ஆர்.ஓ) மாதிரி. அவை உலகெங்கும் சுற்றி செய்திகளைச் சேகரித்து, மனதுக்குள் பாய்ச்சுகின்றன. மனம் சேமித்து வைத்துக் கொள்ளும் ஒரு கிடங்கு போன்றது. அவை தகவல்களை மனதுக்குள் செலுத்தியபடி இருக்கும்.

உங்களுடைய கண்களல்ல நீங்கள் என்பதை முதலில் தெரிந்து கொள்ளுங்கள், கண்களுக்குப் பின்னால் மறைந்து கிடக்கும் ஆற்றலும் நீங்களல்ல என்பதை உணருங்கள். அப்போதுதான் ஒவ்வொரு புலனும் உங்கள் மனதுக்குள் ஏதோவொன்றைப் பாய்ச்சுவதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் அந்த மனமும் அல்ல. அது நிரப்பப்படுவதைக் கவனித்துக் கொண்டிருப்பவர்தான் நீங்கள். நீங்கள் கரையில் நின்று கொண்டிருக்கிறீர்கள். அத்தனை ஆறுகளும் கடலுக்குள் பாய்ந்து கலக்கின்றன. நீங்கள் கவனித்திருப்பவராய, சாட்சியாய் இருக்கிறீர்கள்.

சுவாமிராம் கூறியிருக்கிறார், 'அறிவியல் விளக்குவதற்குக் கடினமானது. ஆனால் அதன் முக்கிய அம்சமே கவனித்திருப்பவருக்கு

வெளியே உள்ள ஒன்றைப்பற்றி ஆய்வு செய்வதாயிருக்கிறது. தம்முடைய அகநிலைக்கு வெளியே ஒருவர் இருந்து கொள்ளத் தேவையான அணுகுமுறையைத் தியான உத்திகள் வழங்கும். 'நீங்கள் அறிந்து கொள்ள முடிகிற எதுவும் நீங்களல்ல' என்பதே தியானத்தின் முடிவான அறிவிப்பு. நீங்கள் அறிந்த ஒரு பொருளின் அளவுக்குக் குறைத்துக் கொள்ளக் கூடிய எதுவும் நீக்ள் ஆகாது. காரணம் ஒரு பொருளாய் உங்களைக் குறைத்துக் கொண்டுவிட முடியாது. நீங்கள் நிலைபேறுடைய ஒரு பிரஜை - அறிகிறவர், அறிகிறவர். அறிகிறவர் மட்டுமே. அறிகிறவர் ஒருபோதும் அறிந்து கொள்ளப்பட்ட ஒன்றின் நிலைக்குக் குறைக்கப்படுவதில்லை.

இதுவே புருடன் - விழிப்புணர்வு. யோகாவில் இருந்து வெளிப் படுகிற நிறைவான புரிதல் இதுவேயாகும். அதன்பேரில் தியானம் செய்யுங்கள்.

**'முழுமை அடைவது பற்றி நான் எதற்காக அஞ்சுவது எப்போதும்? அதில் இருந்து விடுபடும் வழியை எனக்குக் காட்டுங்களேன்'**

இந்த வாழ்க்கை உண்மையாய் வாழப்படுமெனில், சரியாக வாழப்பட்டிருக்குமெனில் மரணம் பற்றி ஒருபோதும் அஞ்ச வேண்டியிருக்காது, மரணத்தை நீங்கள் வரவேற்கவே செய்வீர்கள். அது ஓர் ஓய்வு போன்றது, தரமான உறக்கத்தைப் போன்றது. வாழ்வின் உச்சநிலையை, முக்கியக்கட்டத்தை நீங்கள் அடைந்துவிட்டால் அப்போது மரணம் ஒரு நேர்த்தியான இளைப்பாறலாயிருக்கும், அதுவே பேரின்ப நிலையாகும். ஆனால், நீங்கள் வாழ்ந்திருக்க வில்லையெனில் மரணம் அச்சத்தை உண்டு பண்ணுவதாகவே இருக்கும். நீங்கள் வாழ்ந்திருக்கவில்லையெனில் அப்போது மரணம் உங்கள் கைகளில் இருந்து காலத்தை எடுத்துக் கொண்டுவிடும் என்பது நிச்சயம். வாழ்வதற்கான நாளைய வாய்ப்புகளை அது விழுங்கிவிடும். நேற்று நீங்கள் வாழ்ந்திருக்கவில்லை, அச்சம் தோன்றக் காரணம், எதிர்காலம் இல்லாமல் போய்விட்டதே என்பதால்தான். அச்சம் தோன்றுவதற்குக் காரணம் மரணமல்ல, வாழப்படாத இந்த வாழ்க்கையே அதற்குக் காரணம்.

மரணபயத்தின் காரணமாகவே முதுமையும் பயத்தைக் கொடுக்கிறது, காரணம், அதுவே மரணத்துக்கான முதற்படி. இல்லையேல் முதுமையும் நேர்த்தியாக இருக்கும். அது உங்கள் பழுத்த இருப்புணர்வாய், பக்குவமாய் வளர்ச்சியாய் இருக்கிறது. கணந்தோறும் இந்த வாழ்க்கையின் சவால்களை எதிர்கொண்டு, வாழ்க்கை இடமளிக்கும் வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொண்டு, வாழ்க்கையின் சாகசங்களை நீங்கள் துணிகரமாய் மேற்கொள்கிறபோது முதுமை தனது முழுமையான வளர்ச்சியை அடைகிறது, இல்லையேல் முதுமை ஒரு பிணிதான்.

துரதிர்ஷ்டவசமாக ரொம்பப்பேர் தங்கள் வயதுக்கேற்ற வளர்ச்சியைப் பெறாமலே முதுமையடைந்து விடுகிறார்கள். நீங்கள் உடம்பால் முதுமை கண்டிருப்பீர்கள். ஆனால் உங்களுடைய தன்னுணர்வு (consicousness) இளைஞருக்குரியதாகவே இருக்கிறது. உங்கள் உடம்புக்கு வயதேறிப் போகிறது. ஆனால் உங்களுடைய அகவாழ்க்கையில் நீங்கள் முதிர்ச்சி காணவில்லை. மரணம் ஒவ்வொரு நாளும் நெருங்கிக் கொண்டிருக்கிறது. உள்ளொளியோ அடையப்படாமல் இருக்கிறது. உண்மையில் நீங்கள் நடுக்கமுறு கிறீர்கள். நீங்கள் அச்சப்படுகிறீர்கள். உங்களுக்குள் பெரிய அளவில் வேதனை எழும்.

வாழ்க்கை நேர்மையுடன் வாழப்படுமெனில் நீங்கள் வாழ்க் கையைச் சரியாக வாழ்வீர்களாயின் முதுமையை மனமார வரவேற் பீர்கள். காரணம், முதுமை சொல்கிறது 'இவர்கள் மலர்ச்சியடைந்து விட்டிருக்கிறார்கள், பலனடையும் நிலைக்கு வந்திருக்கிறார்கள் தாங்கள் அடைந்திருப்பது எதுவாயினும் அவற்றை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள இவர்களால் முடியும்' என்று.

சாதாரணமாக முதுமை அருவருப்பாயிருக்கிறது, காரணம் அது ஒரு பிணியாகி விட்டிருப்பதுதான். உங்களுடைய உயிரி (organsim) முழுவளர்ச்சி பெற்றிருக்கவில்லை, அது மேலும் மேலும் நலக் குறைவுற்றதாய், நலிந்ததாய், செயலிழந்ததாய் மாறிக் கொண்டிருக் கிறது. இல்லையேல், முதுமை வாழ்க்கையின் மிக அருமையான காலமாகி விட்டிருக்கும். குழந்தை பருவத்தின் முட்டாள் தனங்கள் போய்விட்டன. இளமையின் அச்சக் கிளர்ச்சியும் வேட்கையும் போயே போயிற்று. ஒரு சாந்தம், அமைதி, தியானம், சமாதிநிலை தோன்றுகிறது.

முதுமை மிகப்பெரிய அளவில் நேர்த்தியாக இருப்பதற்கு வாழ்வின் முழுமை அதைநோக்கி நகர்வதே காரணமாயிருக்கும். அதுவே உச்சமாயிருக்கவேண்டும். உச்சம் என்பது தொடக்க நிலையில் எப்படி இருக்க முடியும்? பலரும் நினைப்பதுபோல் உங்களுடைய குழந்தைப் பருவமே உங்கள் உச்சமென்று நீங்கள் நினைத்தால் அப்போது உங்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையுமே துன்புறுவதாய், துயரப்படுவதாயிருக்கும், காரணம் உங்கள் உச்சநிலையை நீங்கள் அடைந்துவிட்டதுதான். தற்போது எல்லாமே முக்கியத்துவம் குறைந்து, வீழ்ச்சியடையும். இளமைப்பருவமே உச்சம்

என்று நீங்கள் நினைத்தால், உண்மையில் முப்பத்து ஐந்து வயதுக்குப் பிறகு நீங்கள் கவலையும், மனச்சோர்வும் கொண்டவராகி விடுவீர்கள், காரணம் ஒவ்வொரு நாளும் நீங்கள் இழப்பீர்கள் இழப்பீர்கள் இழந்து கொண்டேயிருப்பீர்கள், எதையும் அடைகிறதில்லை. ஆற்றல் இழக்கப்படும், நீங்கள் பலவீனமடைவீர்கள், உங்களுடைய இருப்பில் நோய்கள் நுழைந்துவிடும், மரணம் வந்து வாசற்கதவைத் தட்டத் தொடங்கிவிடும். வீடு கண்ணை விட்டகன்று, மருத்துவமனையே கண்ணெதிரில் காட்சியளிக்கும். பிறகெப்படி நீங்கள் மகிழ்ச்சி யாயிருக்க முடியும்? இல்லை, ஆனால் கிழக்கத்தியர்களாகிய நாம் குழந்தைப் பருவத்தைதயோ அல்லது இளமைப்பருவத்தையோ உச்சமாய் கருதிக் கொள்வதில்லை. உச்சம் துல்லியமாய் மரணம் வரை காத்திருக்கும்.

வாழ்க்கை சரியான முறையில தங்கு தடையின்றித் தொடரு மெனில் கொஞ்சம் கொஞ்மாய் மிகச் சிறந்த உச்சங்களை நீங்கள் அடைவீர்கள். வாழ்க்கை அடைகிற முடிவான உச்சம், இசையின் ஒலி ஏற்றம் (crescendo) மரணம்.

ஆனால், வாழ்க்கையை நாம் ஏன் தவறவிடுகிறோம்? போதிய வளர்ச்சி காணும் முன்பே எதற்காக முதுமை அடைகிறோம்? எங்கோ எதுவோ தவறாகிவிட்டிருக்கிறது. ஏதோ ஓர் இடத்தில் நீங்கள் தவறான பாதையில் விடப்பட்டிருக்கிறீர்கள், அது உங்கள் உடன்பாட்டுட னேயே நடந்தது. அந்த உடன்பாடு தகர்க்கப்பட வேண்டியது. அந்த ஒப்பந்தம் சுட்டுப் பொசுக்கப்பட வேண்டியது. சந்நியாசம் அதைச் செய்கிறது. 'இதுவரை நான் தவறான முறையில் வாழ்ந்து விட்டேன், உண்மையில் நான் வாழவில்லை, என்னுடைய கொள்கைகளைவிட்டு தரக்குறைவான கொள்கைகளை மேற்கொண்டிருந்தேன்' என்கிற புரிதலையே நான் சந்நியாசம் என்பேன்.

நீங்கள் சின்னஞ்சிறுவராய் இருந்தபொழுது இணக்கமாய் இருந்திருப்பீர்கள். எந்தவோர் அனுகூலத்தையும் பெறாமல் உங்கள் இருப்புணர்வை விற்றிருப்பீர்கள். எதையும் அடைந்திருக்க மாட்டீர்கள், அப்படி அடைந்திருந்தாலும் அவை பைசா பெறாததாகவே இருந்திருக்கும். அற்பமானவற்றுக்காக உங்கள் ஆன்மாவை விற்றீர்கள். நீங்கள் யார்யாருக்காகவோ விட்டுக் கொடுத்தீர்கள் உங்களுக்காக அல்ல, அதனால்தான் உங்களுடைய பாதையை நீங்கள் தவறவிட்டீர்கள். நீங்கள் குறிப்பிடத்தக்கவராக

வரவேண்டும் உங்கள் தாய் விரும்பினாள். நீங்கள் முக்கியமானவராய் திகழ வேண்டும் என்று உங்கள் தந்தை விரும்பினார். நீங்கள் முக்கியத்துவம் பெற வேண்டும் என்று சமுதாயம் விரும்பியது. நீங்களும் அதற்கு ஒப்புக் கொண்டீர்கள். காலப்போக்கில் நீங்கள் நீங்களாக இருப்பதில்லை என்று முடிவெடுத்துவிட்டீர்கள். அப்போதிலிருந்து வேறு யாராகவோ உங்களை பாவித்துக் கொண்டு போலியாக நடக்கிறீர்கள்.

யாரோ ஒருவர் வளர்ச்சியடையவில்லை என்பதற்காக நீங்களும் வளர்ச்சியடைய முடியாது என்பதல்ல, அது தவறானது. நான் ஒரு முகமூடியை அணிந்திருப்பதாக வைத்துக் கொள்வோம், அந்த முகமூடிக்கு ஏது வளர்ச்சி. அது உயிரற்றது. என்னுடைய முகம் வளர்ச்சியடையக்கூடும், முகமூடி அல்ல. உங்கள் முகமூடிக்கு மட்டும் வயதேறிக் கொண்டே போகிறது. முகமூடிக்குப் பின்னே மறைந்து கொண்டிருக்கும் நீங்கள் வளர்ச்சியடையவில்லை. வேறுயாராகவும் இல்லாமல், நீங்கள் நீங்களாகவே இருப்பதென்று உங்களை ஏற்றுக் கொண்டால் மட்டுமே உங்களால் வளரமுடியும்.

ரோஜாப்புதர் ஒரு யானையாகிவிட ஒப்புக் கொண்டது. யானை ஒரு ரோஜாப்புதராக ஒப்புக் கொண்டது. கழுகொன்று உளவியல் நிபுணரிடம் ஆலோசனை கேட்குமளவிற்குக் கவலையில் ஆழ்ந்திருந்தது காரணம் அது நாயாகிவிட விருப்பம் கொண்டது. நாயோ கழுகைப்போல் பறக்க விரும்பி மருத்துவமனையில் சேர்ந்திருந்தது. மனித குலத்துக்கும் இதுதான் நேரிட்டிருக்கிறது. வேறுயாரோவாகிவிட இணங்குவதால்தான் இந்தப் பேராபத்து ஏறிட்டிருக்கிறது. நீங்கள் வளர்ச்சியடைவதற்கில்லை.

வேறொருவரைப் போல் நீங்கள் எப்படி வளர்ச்சி அடையக் கூடும். உங்களைப் போலத்தான் நீங்கள் வளர்ச்சியடைய முடியும். 'இது சரி, இது தவறு' போன்ற அறிவுரைகளைக் கைவிட வேண்டும். மற்றவர்கள் சொல்வது பற்றிய உங்களுடைய அதீதக் கவலைகளை நீங்கள் விட்டொழிக்கவேண்டும். அவர்களுடைய கருத்து என்ன? யார் அவர்கள்? நீங்கள் நீங்களாகவே இருக்கவே இங்கிருப்பது. மற்றவர்களுடைய எதிர்பார்ப்புகளை நிறைவேற்றுதற்காக இங்கே நீங்கள் இருக்கவில்லை. எல்லாரும் அதைத்தான் முயன்று கொண்டிருக்கிறார்கள். தந்தை இறந்து போயிருப்பார், அவருக்கு நீங்கள் கொடுத்த வாக்குறுதியை எப்படியாவது நிறைவேற்றப்

பார்ப்பீர்கள். அவர் தம்முடைய தந்தைக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்ற முயன்றிருப்பார். அவருக்கு முன்னால் இருந்தவர்களும் அப்படித்தான். ஆதியில் இருந்தே தொடர்கிறது முட்டாள்தனம்.

புரிந்து கொள்ள முயலுங்கள். துணிவை மேற்கொள்ளுங்கள். வாழ்க்கையை உங்கள் கையில் எடுத்துக் கொள்ளுங்கள். ஓர் ஆற்றலின் எழுச்சியை நீங்கள் உடனடியாய் கண்டு கொள்வீர்கள். 'நான் நானாக இருக்கப் போகிறேன். வேறு யாராகவும் அல்ல. அதற்காக எந்த விலை கொடுக்க நேர்ந்தாலும் பரவாயில்லை. நான் நானாகவே இருப்பேன்' என்று நீங்கள் முடிவெடுக்கும் கணத்தில் - மிகச்சரியாக அந்தக் கணத்தில் ஒரு மகத்தான மாற்றத்தை நீங்கள் காண்பீர்கள். நீங்கள் வலிமையாய் உணர்வீர்கள். ஆற்றல் உங்களுக்குள் பாய்ந்தோடுவதை உணர்வீர்கள்.

அதுமட்டும் நேராதிருப்பின், முதுமை குறித்து நீங்கள் பயந்து நடுங்கியிருப்பீர்கள். காரணம், நீங்கள் வாழாமல், நேரத்தை வீணடித்துக் கொண்டிருக்கிறீர்கள். முதுமை நெருங்கிக் கொண்டிருக் கிறது அதன் பிறகு உங்களால் வாழ முடியாது என்கிற உண்மையைக் கண்டு கொள்ளாமல் நீங்கள் எப்படித் தவிர்க்க முடியும்? மரணம் காத்திருக்கிறது. ஒவ்வொரு நாளும் அது மேலும் உங்களை நெருங்கிக் கொண்டிருக்க, நீங்களோ இன்னும் வாழ்ந்தபாடில்லை என்பதைப் புரிந்து கொள்வதை நீங்கள் எப்படித் தவிர்க்க முடியும்? நீங்கள் கடுமையான வேதனையில் பிணைக்கப்பட்டிருக்கிறீர்கள்.

ஆக, என்ன செய்ய வேண்டும் என்று நீங்கள் என்னிடம் கேட்டால், அடிப்படையான ஒன்றையே நான் யோசனையாக கூறுவேன். எப்போதுமே அடிப்படைகள்தாம் பிரச்சினை. இரண்டாம் பட்சமானவற்றைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை காரணம் உங்களால் அவற்றை மாற்ற முடியும் எதுவும் மாறிவிடாது. அடிப்படையை மாற்றுங்கள்.

உதாரணமாக, எது இரண்டாம் பட்சமானது (முக்கியத்துவமற்றது)? 'நான் எதற்காகத் தொடர்ந்து முதுமை குறித்து அஞ்ச வேண்டும்? அதில் இருந்து நான் விடுபடுவதற்கான வழியை எனக்குக் காட்டுங்கள். இந்தக் கேளவியே அச்சத்தில் எழுந்ததுதான். நீங்கள் 'அதில் இருந்து விடுபட' விரும்புகிறீர்கள். புரிந்து கொள்வதற்காக அல்ல. ஆக,

அதில் இருந்து உங்களை விடுவிக்க உதவும் எந்த ஒரு நபருக்கோ அல்லது கருத்தியலுக்கோ நீங்கள் பலியாகப் போகிறீர்கள்

என்பதே உண்மை. அதில் இருந்து விடுபடுவதில் நான் உங்களுக்கு உதவமுடியாது. உண்மையில் அதுதான் பிரச்சினை. உங்களுடைய வாழ்க்கையை நீங்கள் புரிந்து கொள்வதுடன், மாற்றிக் கொள்ளவும் வேண்டும் என்று நான் விரும்புகிறேன். பிரச்சினையில் இருந்து விடுபடுவது பற்றியது அல்ல கேள்வி. உங்களுடைய முகமூடியில் இருந்து, உண்மைக்கு ஒத்துவராத நபரில் இருந்து (false persona) விடுபடுவதுபற்றித்தான் கேள்வி. உண்மையற்ற ஒரு செயல்முறையை அல்லவா நீங்கள் மேற்கொள்ள முயல்கிறீர்கள். நீங்கள் அதிகாரப் பூர்வமானவராக (authentic) இருக்கவில்லை. உங்களுக்கு நீங்களே நேர்மையில்லை, உங்களுடைய இருப்புணர்வை நீங்கள ஏமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள்.

நீங்கள் கேட்பதாயின் – சமயகுருமார்களும், தத்துவ மேதைகளும், பெரும் பேச்சுவன்மை உடையவர்களும் இருக்கவே இருக்கிறார்கள் – நீங்கள், அதிலிருந்து விடுபடுவது எப்படியென்று அவர்களிடம் கேட்டால் அவர்கள் சொல்வார்கள், ‘ஆன்மா ஒரு போதும் முதுமை அடைவதில்லை. கவலைப்படாதீர்கள். நீங்களே ஆன்மா என்பதை – ஆன்மாவே நீங்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள், உங்களுடைய உடம்பல்ல நீங்கள்’ இப்படிஅவர்கள் உங்களை அமைதிப்படுத்தலாம், உற்சாகப்படுத்தலாம் உங்களுக்கு ஆறுதல் அளிக்கலாம். கணப்பொழுதுக்கு நீங்கள் தகுதியாய் உணரலாம், ஆனால் அது பயனிக்காது. அது உங்களை மாற்றிவிடாது. மறுபடியும் அந்த சமயகுரு ஏற்படுத்திய பாதிப்பில் நாளையும் அதே படகில் பயணிப்பீர்கள்.

இதில் வேடிக்கை என்னவெனில் அந்தச் சமயகுருவை நீங்கள் கூர்ந்து கவனித்ததில்லை, அவரே நடுங்கிக் கொண்டிருக்கிறார் அச்சத்தில். அந்தத் தத்துவ மேதையை நீங்கள் ஆராய்ந்து பார்க்கவில்லை, அவரே அச்சத்தில் நடுங்கிக் கொண்டிருக்கிறார்.

நான் கேட்டறிந்தது இது:

புதிதாய் வந்த வட்டார மதகுரு கடுமையாய் உழைக்கிறவரா யிருந்தார். அவருடைய நுரையீரல்கள் இடர்மிக்க விளைவுகளை ஏற்படுத்துமளவு பாதிக்கப்பட்டிருந்தது. அவர் நீண்ட ஓய்வில் இருப்பது முக்கியம் என்று மருத்துவர் கண்டிப்பாய் சொல்லிவிட்டார். சமயகுருவோ தம்முடைய வேலைகளை ஒதுக்கி வைப்பது சாத்தியமில்லை என்று மறுப்பு தெரிவித்தார்.

'நல்லது. சுவிட்ஸர்லாந்தா அல்லது விண்ணுலகமா என்பதைத் தாங்கள் தெரிவு செய்து கொள்ளுங்கள்' என்று மருத்துவர் சொல்லி விட்டார்.

கொஞ்சநேரம் அறைக்குள் உலவிய சமயகுரு. 'நீங்கள் வென்றீர்கள். நான் சுவிட்ஸர்லாந்தையே தெரிவு செய்து கொள்கிறேன்' என்றார்.

வாழ்வா சாவா என்ற கேள்வி எழுகிறபோது அது சமயகுரு வாட்டும். தத்துவமேதையாகட்டும். நீங்கள் யாரிடம் வேண்டுமானாலும் கேட்டுப்பாருங்கள். அவர்களும் வாழ்ந்திருக்க மாட்டார்கள். நீங்கள் வாழ்ந்த அளவுகூட அவர்கள் வாழாதிருக்க சாத்தியம் உண்டு. இல்லையேல் அவர்கள் சமயகுருமார்களாகியிருக்க முடியாது. ஒரு சமய குருவாவதற்காகத் தங்களுடைய வாழ்க்கையை முற்றாகவே அவர்கள் மறுத்திருப்பார்கள். துறவிகளும், சாதுக்களும், மகாத் மாக்களும் தங்களுடைய இருப்புணர்வை முழுமையாக மறுத்ததுடன், சமுதாயம் தங்களை எப்படி இருக்கவேண்டும் என்று விரும்பி யிருந்தாலும் அதனை அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் முழுமையாகவே அதற்கு உடன்பட்டிருக்கிறார்கள். தங்களையும், தங்களுடைய உயிர்ச் சக்தியையும் ஒப்புக் கொள்ள மறுத்தலோடு பொய்யான அறிவற்ற செயல்களுக்கு - பாராட்டு. மரியாதை இவற்றுக்கு இசைவாக அவர்கள் இருந்து விட்டனர்.

நீங்கள் அவர்களிடம் சென்று கேட்டுப் பாருங்கள். அவர்கள் தங்களுக்குள் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். அடியாழத்தில் அவர்கள் அச்சத்தில் உறைந்து கிடக்கிறார்கள். அவர்களும் அவர்களுடைய சீடர்களும் ஒரே படகில் பயணம் செய்கிறவர்கள்தாம்.

இது நான் கேட்டறிந்தது:

வாடிகனில் போப் நோய்வாய்ப்பட்டு மரணப்படுக்கையில் இருந்தார். செயிண்ட் பீட்டர்ஸ் தேவாலயத்தின் 'பால்கனி'யில் இருந்தபடி விசேஷ அறிவிப்பு ஒன்றை கார்டினல் (முக்கிய மதகுரு) வெளியிடுவார் என்ற தகவல் தெரிவிக்கப்பட்டது.

அடுத்தநாள் - பொழுது விடிந்ததும் அந்தப் புகழ்பெற்ற சதுக்கமே சமயக் கோட்பாடு உறுப்பினர்களால் நிரம்பி வழிந்தது.

வயதான கார்டினல் தம்முடைய நடுங்கும் குரலில் சொன்னார். 'புனிதத் தந்தை அவர்கள் இருதயமாற்றுச் சிகிச்சையால் மட்டுமே

உயிர்பிழைக்கும் நிலையில் இருக்கிறார். இன்று இங்கே கூடியிருக்கும் நற்பண்புடைய கத்தோலிக்கர்களாகிய உங்களிடம் நான் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். யாரேனும் ஒருவர் தம்முடைய இருதயத்தை நன்கொடையாய் வழங்க வேண்டும் என்று'.

அவர் ஓர் இறகை உயர்த்திக் காண்பித்து. 'இந்த இறகை நான் நழுவ விடுகிறேன். அது யார் மீது விழுகிறதோ அவரே புனிதத் தந்தையின் உயிரைக் காப்பாற்றித்தர இறையருளால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்' என்றார்.

அவர் இறகை நழுவவிட்டார். அங்கிருந்த இருபதாயிரம் சமயப்பற்று கத்தோலிக்கர்களும் ஸ்... என்று தங்கள் மூச்சை சிறுமூச்சாக வெளியேற்றும் ஓசை கேட்டது.

ஒவ்வொருவரும் அச்சத்தில் இருந்தனர். புனிதத் தந்தை உயிர்பிழைக்க விரும்பினால் இந்தப் பரிதாபத்துக்குரியவர்கள் நன்கொடையாளர்களாகிவிட வேண்டுமா?

நான் எந்தவொரு சமாதானத்தையும் உங்களுக்கு வழங்கப் போவதில்லை. 'இந்த ஆன்மா சாசுவதமானது. கவலைப்படாதீர்கள். நீங்கள் சாகமாட்டீர்கள். சரீரம் மட்டுமே செத்துப்போகும்' என்று நான் சொல்லப் போவதுமில்லை. அதுதான் உண்மை என்பதை நான் அறிவேன். ஆனால், அந்த உண்மையை ஒருவர் எளிதாய் எட்டிவிட முடியாது. ஒருவருடைய நிலையான வலியுறுத்தலையோ அல்லது விவரவுரையையோ கொண்டு நீங்கள் அதைத் தெரிந்து கொள்ள முடியாது. அது ஒரு விவரவுரை (statement) அல்ல. அது ஓர் அனுபவம். நான் அதுபற்றி அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால் உங்களுக்கோ அது முற்றிலும் பொருளற்ற ஒன்றாய் தெரிகிறது. வாழ்க்கை இன்னதென்று நீங்கள் அறிந்திருக்கவில்லை. எதுநிலை பேறுடையது என்பதை உங்கள்ால் எப்படி அறியமுடியும்? உரிய காலத்தில் வாழ்வதற்குக் கூட உங்களால் முடியவில்லையே. உங்களால் எப்படி நிலைபேற்றினை அடைய முடியும்?

ஒருவரால் மரணத்தை ஏற்க முடிகிறபோதுதான் மரணமற்ற தன்மையையும் அறிந்து கொள்ள முடியும்.

மரணத்தின் வாசல் வழியே தான் மரணமற்ற நிலை தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. தன்னை வெளிப்படுத்திக் கொள்வதற் காக இறவாமை மேற்கொள்ளும் செயல்முறையே இறப்பு... ஆனால்,

நீங்களோ அச்சத்தில் கண்களை மூடிக் கொள்வதுடன், தன்னுணர் வற்றவராகவும் ஆகிவிடுகிறீர்கள்.

இல்லை. ஒரு செய்முறையையோ, கோட்பாட்டையோ நான் உங்களுக்கு வழங்கப் போவதில்லை, நீங்கள் அதில் இருந்து விடுபடுவதற்கு. அது தனிப்படக் குறித்துக் காட்டுவது (symptomatic). நீங்கள் பொய்யான வாழ்க்கை வாழ்கிறீர்கள் என்பதை அது உங்களுக்குச் சுட்டிக் காட்டிக் கொண்டேயிருக்கிறது. அதனால்தான் அவ்விடத்தில் அச்சம் இருக்கிறது. குறிப்புணர்ந்து நடந்து கொள் ளுங்கள். அந்தக் குறிப்பை மாற்ற முயலாதீர்கள். அதைவிட அடிப்படைக் காரணத்தை மாற்றப் பாருங்கள்.

தொடக்கதில் இருந்தே ஒவ்வொரு குழந்தைக்கும் தவறான தகவலளிக்கப்பட்டிருக்கிறது. தவறான தகவலளிக்கப் பட்டதுடன், தவறான வழி காண்பிக்கப்பட்டு, தவறான வழியில் செலுத்தப்படவும் செய்கிறார்கள். வேண்டுமென்றேயல்ல, காரணம் அவர்களுடைய பெற்றோர்களும் அதே பொறியில் அகப்பட்டுக் கொண்டிருப் பவர்கள்தாம், அவர்களும் தவறான வழியில் செலுத்தப்பட்டிருக்கிறார் கள். உதாரணமாக, ஒரு குழந்தை ரொம்பவும் செயலூக்கமுடையதாய் (energetic) இருக்கும், குடும்பத்தினருக்கு அது அசவுகர்ய உணர்வை ஏற்படுத்தக்கூடும், காரணம், அதன் துருதுருப்பு வீட்டையே தலைகீழாய் புரட்டிப் போட்டுவிடும். எதுவும் பத்திரமாயிருக்காது, எவ்வகையிலும் பத்திரமாயிருக்காது. குழந்தையின் செயலூக்கம் எல்லாவற்றையும் பாழ் பண்ணிவிடும். அவனைத் தடுத்து நிறுத்தியாக வேண்டும் அவனுடைய வேகம் தடைப்படுத்தப்பட வேண்டும், அவனுடய துடிப்பு குறைக்கப்பட வேண்டும். அவனைக் கண்டனம் செய்யவும், தண்டிக்கவும் வேண்டும். அவன் நல்ல முறையில் நடந்தால் மட்டுமே அவனுக்கு வெகுமதி வழங்கப்பட வேண்டும் என்று குடும்பமே எண்ணிக்கொள்ளும். நீங்கள் எதிர்பார்ப்பது என்ன? அவன் பெரியவர்களைப் போல் நடந்து கொள்ள வேண்டும், நீங்கள் மதிப்பு மிக்கதாய் கருதுகிற பொருளுக்கு அவனால் தீங்கு ஏற்பட்டு விடக் கூடாது என்றுதானே எதிர்பார்க்கிறீர்கள்.

ஒரு கடிகாரத்தைக் காப்பாற்றுவதற்காக அவனை நீங்கள் உதவாக்கரையாக்கிவிடுவீர்கள். ஒரு மண்பாண்டத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவனைப் பயனற்றவனாக்கி விடுவீர்கள். அல்லது ஒரு மேசை நாற்காலி போன்ற வீட்டுப் பொருளை அவன்

நாசப்படுத்தாதிருக்க அவனைப் பாழ்பண்ணி விடுவீர்கள். புதிதாய் தோன்றிய ஒரு ஜீவனை - கடவுளின் வெகுமதியை நீங்கள் சர்வநாசம் பண்ணி பண்ணி விடுவீர்கள். மேசை நாற்காலியில் கீறல் விழுந்துவிடக் கூடாது என்பதற்காக அந்தக் குழந்தையின் இருப்புணர்வை நீங்கள் பிறாண்டித் தள்ளி விடுவீர்கள்.

காலப்போக்கில், உங்களைப் பின்பற்றுவதற்கு அவன் கட்டாயப்படுத்தப்படுவான், காரணம் அவன் உதவியற்றவனாய் இருக்கிறான். அவன் உங்களைச் சார்ந்திருக்கிறான். அவனுடைய வாழ்தல் உங்களை நம்பியிருக்கிறது. உயிர் வாழ வேண்டுமே என்பதற்காக. அவன் மரத்துப்போய் விட ஒப்புக் கொள்கிறான் உணர்ச்சியற்றிருக்கும் நிலையை ஏற்கிறான். காரணம் அவன் பிழைத்திருப்பதற்கான உணவையும், பாலையும் கவனிப்பையும் நீங்கள் வழங்குகிறீர்கள். நீங்கள் அவனுக்கெதிராகி விட்டால் அவன் எங்கே போவான். தன்னுடைய இருப்புணர்வை அவன் கொஞ்சம் கொஞ்சமாய் உங்களிடம் விற்றுக் கொண்டிருக்கிறான். நீங்கள் எதைச் சொன்னாலும், அவன் காலப்போக்கில் ஏற்றுக் கொண்டு விடுகிறான். உங்களுடைய வெகுமதிகளும், தண்டனைகளும் அவனைத் தவறான வழியில் செலுத்தும் செயல் முறையாகிறது.

தன்னுடைய ஆன்மாவின் குரலைவிட உங்களையே அவன் நம்புகிறான். காரணம் தனக்குள் இருந்து ஒலிக்கும் குரல் தன்னை இன்னலுக்குக்குள்ளாக்கிவிடும் என்று அவன் அறிந்து கொள்வதுதான். அவனுக்குள் இருந்து ஒலிக்கும் குரல் எப்போதுமே தண்டனையைக் கொண்டு வந்து மெய்ப்பித்திருக்கிறது. ஆக, தண்டனையும் அவனுள் இருந்து ஒலிக்கும் குரலும் ஒன்றோடொன்று இணைந்ததாகவே இருக்கிறது. அவன் எப்போதெல்லாம் தனக்குள் ஒலிக்கும் குரலைக் கேட்காதிருக்கிறானோ அப்போதெல்லாம் அவன் கண்ணைமூடிக் கொண்டு உங்களைப் பின்பற்றுகிறான், அவனுக்கு வெகுமதி கிடைக்கிறது. அவன் அவனாக இருக்கும் போதெல்லாம் அவனுக்குக் கிடைப்பது தண்டனைதான். அவன் அவனாக இல்லாத போதெல்லாம் அவனுக்கு வெகுமதி கிடைக்கிறது. தர்க்கம் விளங்குகிறதுதானே.

நீங்கள் அவனுடைய சொந்த வாழ்க்கையில் இருந்து அவனது கவனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் திருப்பி விடுகீறர்கள். தனக்குள் இருந்து ஒலிக்கும் குரலை அவனும் மெள்ள மெள்ள மறந்து விடுகிறான். நீங்கள் நீண்டகாலத்துக்கு அதைக் கேட்காமல்

இருந்துவிட்டால், உங்களால் அதைக் கேட்க முடியாமலே போய்விடும்.

ஏதாவதொரு கணத்தில் உங்களுடைய கண்களை மூடிக் கொள்ளுங்கள். உங்களுடைய தந்தையின் குரலையோ, தாயின் குரலையோ அல்லது உங்கள் தகுதிக் கொப்பானவருடைய குரலையோ, ஆசிரியருடைய குரலையோ நீங்கள் கேட்பீர்கள். உங்களுடைய குரலை ஒருபோதும் கேட்கமாட்டீர்கள். என்னிடம் பலரும் வந்து சொல்கிறார்கள், 'தாங்கள் உள்ளிருந்து ஒலிக்கும் குரலைப்பற்றிக் கூறுகிறீர்களே, நாங்கள் ஒருபோதும் அதைக் கேட்டதில்லை' என்று.

கூடியிருந்த கூட்டத்தை நோக்கி இயேசு சொல்கிறார், 'உங்களுடைய தந்தையிடமும், தாயிடமும் வெறுப்பு கொள்ளுங்கள்' என்று. அவர் உண்மையிலேயே உங்கள் தந்தையையும் தாயையும் வெறுக்கும்படி சொல்லவில்லை. உங்களுக்குள் மனச்சாட்சிகளாய் மாறிவிட்டிருக்கும் தந்தை தாயைத்தான் அவர் வெறுக்கும்படி சொல்கிறார். நீங்கள் ஏற்படுத்திக் கொண்ட மிகவும் அருவருப்பான உடன்படிக்கை என்பதால் வெறுத்திடுங்கள். அது தற்கொலைக்கு ஒப்பான ஒப்பந்தம். அந்தக் குரல்களை வெறுத்திடுங்கள், அப்போதுதான் விடுபடும், தடையற்றதாகும், அப்போதுதான் நீங்கள் யார் என்பதையும், நீங்கள் என்னவாக விரும்புகிறீர்கள் என்பதையும் உணர முடியும்.

தொடக்கத்தில் உண்மையிலேயே முற்றிலும் தொலைந்து விட்டதாய் நீங்கள் உணர்வீர்கள். தியானத்தில் அதுதான் நடக்கிறது. பலரும் என்னிடம் வந்து சொல்கிறார்கள். "ஒரு பாதையை கண்டடைவதற்காக நாங்கள் வருகிறோம். மாறாக தியானங்கள் அதைத் தொலைத்து விட்டதாகவே எண்ணச் செய்கிறது' என்று. மற்றவற்றின் பிடி தளர்ந்துவிட்டதையே அது காட்டுகிறது. அது ஓர் சரியான சுட்டிக்காட்டல்தான். அதனால்தான் நீங்கள் தொலைந்து விட்டதாய் (வழிதவறுதல்) உணர்கிறீர்கள். காரணம் மற்றவர்களுடைய குரல்கள் உங்களுக்கு வழிகாட்டலை வழங்கியிருந்தன, நீங்கள் அவற்றை நம்பத் தொடங்கியிருந்தீர்கள். அவர்களை உங்களுடைய வழிகாட்டியாகவே கொண்டு நீங்கள் ரொம்ப காலமாகவே அவர்களிடம் நம்பிக்கை வைத்திருந்தீர்கள். தற்போது நீங்கள் தியானிக்கிறபோது அந்தக் குரல்கள் பயனற்றதாகிவிடுகின்றன. நீங்கள்

பொறியில் இருந்து விடுபட்டவராகிறீர்கள். நீங்கள் மறுபடியும் ஒரு குழந்தையாகிறீர்கள். எங்கே போவதென்று நீங்கள் அறிந்திருக்கவில்லை. காரணம், அத்தனை வழி காட்டிகளும் எங்கோ மறைந்து விட்டார்கள். தந்தையின் குரல் அங்கே ஒலிக்கவில்லை, தாயின் குரல் ஒலிக்கவில்லை. ஆசிரியர் அங்கே இருக்கவில்லை, பள்ளிக்கூடமும் அங்கே இருக்கவில்லை. சற்றும் எதிர்பாராதவிதமாய் நீங்கள் தனித்திருக்கிறீர்கள். 'என்னுடைய வழிகாட்டிகள் எங்கே? என்னை எப்போதும் சரியான பாதையில் வழிநடத்திச் சென்றவர்கள் எங்கே இருக்கிறார்கள்?' என்று ஒருவர் அச்சமாய் உணரத் தொடங்குவார்.

உண்மையில் யாரும் உங்களைச் சரியான பாதையில் வழிநடத்திச் செல்லவில்லை, காரணம் எல்லா வழிநடத்துலுமே தவறாகிவிடும். எந்த ஒரு தலைவரும் தகுதியான தலைவராய் இருக்கமாட்டார். காரணம் அத்தகைய வழிநடத்தல் தவறாகி விடும். நீங்கள் வழி நடத்துவதற்கு யாரை அனுமதித்திருந்தாலும் அவர் கெடுதலாய் ஏதேனும் ஒன்றைச் செய்து வைப்பார், ஓர் அமைப்பை வலுக்கட்டாயமாய் உங்கள் மீது திணிப்பார். நீங்கள் ஒழுக்க அமைவற்ற வாழ்க்கையை வாழும்படி ஆகும். அந்த வாழ்க்கை பண்பற்றதாய், குறிப்பிட்ட அமைவு இல்லாததாய், குறிப்புரைகளோ, தொடர்புகளோ இல்லாததாயிருக்கும்.

ஆக, வழிகாட்டிகள் எல்லாருமே தவறான வழிகாட்டிகள்தாம். நீங்கள் நீண்ட காலமாய் நம்பியிருந்தவர்கள் மறையவும், நீங்கள் சூன்யமாய், அத்தனை பாதைகளும் போய்விட்டதாய் உணர்வீர்கள், எங்கே போவது?

ஒரு சீவனின் வாழ்க்கையில் இந்தக் கட்டம் பெறும் மாறுதல் சார்ந்த கட்டமாகும். துணிவோடுதான் ஒருவர் அதனைக் கடந்தாக வேண்டும். நீங்கள் கொஞ்சமும் பயப்படாமல் அதிலேயே தங்கியிருந்தால், ரொம்ப காலமாய் அடக்கி வைக்கப்பட்டிருந்த உங்கள் குரலை நீங்கள் கேட்பீர்கள். விரைவிலேயே நீங்கள் அதனுடைய மொழியை - கருத்து வெளியிடும் முறையைத் தெரிந்து கொள்வீர்கள். காரணம் அந்த மொழியைத்தான் மிகச் சரியாக நீங்கள் மறந்து விட்டிருந்தீர்கள். உங்களுக்குக் கற்பிக்கப்பட்ட மொழியை மட்டுமே நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். இந்த மொழி, உள்ளார்ந்த இந்த மொழி சொற்கள் சார்ந்ததல்ல. அது உணர்வுகளைக் கொண்டது. எல்லா சமூக அமைப்புகளுமே உணர்வுகளுக்கு மாறானவை காரணம், உணர்வு என்பது உயிரோட்டம் உடையது, ஆபத்தானது. ஓர் எண்ணமோ

செயலற்றது. அது ஆபத்தானதல்ல. ஆக, ஒவ்வொரு சமுதாயமும் எண்ணம் அறிவு இவற்றின் மூலத்தை நோக்கி உங்களை உந்திச் செல்லும். உங்கள் உடம்பின் எல்லாப் பக்கங்களிலும் இருந்து உங்கள் தலையின் உள்ளாக (அறிவு) உங்களைக் கட்டாயமாய் செலுத்தும்.

தலையில் இருக்கிறது உங்கள் வாழ்க்கை, நீங்கள் தலையைக் கொண்டே வாழ்கிறீர்கள். உங்கள் தலை துண்டிக்கப்படுமாயின், தலையில்லாத உங்கள் உடம்பை சற்றும் எதிர்பாராவிதமாய் நீங்கள் எதிர்கொள்ளும்படியானால் அதை உங்களால் அடையாளம் கண்டு கொள்ள முடியாது. முகத்தை வைத்துத்தான் அடையாளம் காண்கிறோம். உங்கள் உடம்பு தனது பளபளப்பையும், மிருதுத் தன்மையையும், நீர்மத்தையும் இழந்து, சுருங்கி விட்டது. அது மரக்காலைப்போல உணர்வற்றது. நீங்கள் அதைப் பயன்படுத்து கிறீர்கள், இயக்கம் சார்ந்த வகையில் அது தொடர்கிறது. ஆனால், அதில் உயிரோட்டம் இல்லை. உங்கள் ஒட்டுமொத்த வாழ்க்கையும் தலைக்குள் போய்விட்டது. நீங்கள் மரணம் பற்றி அஞ்சுகிறீர்கள், நீங்கள் வாழக்கூடிய ஒரே இடம் உங்களுடைய காணக்கூடிய முழு உடம்பாய் இருக்க வேண்டும். உங்கள் உயிரானது உங்களுடைய உடம்பெங்கும் பாய்ந்தோடிப் பரவியிருக்க வேண்டும். அது ஒரு ஆறாகப் பாய்ந்தோட வேண்டும்.

ஒரு குழந்தை தனது பிறப்புறுப்பைத் தொட்டு விளையாடிக் கொண்டிருக்கிறது. பெற்றோர்கள் உடனே கவலைக்குள்ளாகிறார்கள். 'நிறுத்து அதை' கூவுகிறார்கள். அவர்களுடைய சொந்த அடக்குதல்களில் (repressions) இருந்தே அந்தக் கவலை வந்து அவர்கள் அடக்கி வைக்கப்பட்டார்கள். திடீரென்று அவர்கள் பதற்றத்துக்குள்ளாகிறார்கள். ஒரு பதற்றம் வந்து விடுகிறது அவர்களுக்கு. இது தவறானது - ஒழுக்கவகையில் கண்டிக்கத்தக்கது என்று அவர்கள் போதிக்கப்பட்டிருக்கிறார்கள். தங்கள் பிறப்புறுப்பைத் தொடுவதற்கு அவர்கள் அனுமதிக்கப்பட்டதில்லை. அந்தக் குழந்தையை மட்டும் எப்படி அனுமதிக்க முடியும்? அவர்கள் குழந்தையை நிர்ப்பந்திக்கிறார்கள், தண்டிக்கிறார்கள், தன் பிறப்புறுப்பை அந்தக் குழந்தை தொடக்கூடாது என்று.

குழந்தை என்ன செய்யும்? பிறப்புறுப்பைத் தவறானது என்று சொல்வது ஏன், குழந்தைக்குப் புரியவில்லை. அவனுடைய கைகளைப் போலவும், மூக்கு, பாதவிரல்கள் போலவும் அதுவும் அவனுடைய

உடம்பின் ஓர் அங்கம்தானே. தன் உடம்பில் எதைவேண்டுமானாலும் அவன் தொடலாம். ஆனால் பிறப்புறுப்பை அவன் தொடக்கூடாதாம். திரும்பத் திரும்ப அவன் தண்டிக்கப்பட்டால், தன்னுடைய ஆற்றலை பிறப்புறுப்பில் இருந்து அவன் வலுக்கட்டாயமாய் திருப்பத் தொடங்கி விடுவான். அது அங்கே பாய்ந்தோடினால் தன் பிறப்புறுப்புடன அவன் விளையாட விரும்புவான். அது மகிழ்ச்சியூட்டுகிறது. அதில் தவறேதும் இல்லை. அதில் எந்தத் தவறையும் குழந்தை காண்பதில்லை. உண்மையில் உடம்பிலேயே உவகைக்குரிய இடம் அதுதான்.

ஆனால் பெற்றோர்கள் அஞ்சுகிறார்கள், குழந்தையால் அவர்களுடைய முகங்களை, கண்களைப் பார்க்க முடிகிறது. அவர்கள் இயல்பான மனிதர்களாகத்தான் இருந்தார்கள். தன்னுடைய பிறப்புறுப்பை அவன் தொட்டதும் அவர்கள் இயற்கைக்கு மாறானவர்களாகி விடுகிறார்கள், கிட்டத்தட்ட பைத்தியம் பிடித்த மாதிரி. அவர்களுக்குள் ஏதோ ஒன்று இருக்கவேண்டும், 'ஏதோ தப்பாயிருச்சி'. குழந்தையும் அஞ்சி நடுங்குகிறது. தவறு பெற்றோர்களின் மனதில் இருக்க வேண்டும், குழந்தையின் உடம்பில் இல்லை, ஆனாலும் அந்தக் குழந்தை என்ன செய்ய முடியும்?

இந்தச் செயல்நிலையை திகைப்பூட்டும் இந்த நிலையைத் தவிர்ப்பதற்காகத்தான் ஓர் அருமையான நடப்பு, புலன்களால் அறியக்கூடிய நடப்பு அடக்கிவைக்கப்பட்டு விடுகிறது. பெண்கள் அதனால்தானே என்னவோ உச்சக்கட்ட இன்பத்தை அடைவதே இல்லை. இந்தியாவில் பெண்கள் இன்னமும் பாலுணர்வின் உச்சகட்டத்தை (orgasm) உணராமலே இருக்கிறார்கள். அவர்கள் அதுபற்றிக் கேள்விப்பட்டிருக்கவில்லை. உண்மையில் பால் சார்ந்த மகிழ்ச்சி ஆணுக்கானதேயன்றி, பெண்ணுக்கல்ல என்பது தான் அவர்கள் அறிந்து வைத்திருப்பது. இது அறிவுக்கு ஏற்புடையதன்று, காரணம், கடவுள் ஒன்றும் ஆணாதிக்க வெறியரல்லர், அவர் பெண்ணுக்கு எதிராய் ஆணிடம் பட்சமாக நடந்து கொள்பவரல்லர். அவர் எல்லாருக்கும் சமமாகவே வழங்குகிறார். ஆனால், ஆணாதிக்க சமூகம் பெண்களைத் தடை செய்துவிடுகிறது. அதனால்தான் அவர்கள் சொல்கிறார்கள், 'பையன்கள் பையன்கள்தாம், நீங்கள் அவர்களைத் தடுத்தால்கூட அவர்கள் ஏதாவது ஒன்றைச் செய்து முடிப்பார்கள்' என்று. ஆனால் பெண்கள்மட்டும் கலாசாரம், ஒழுக்க முறைமை, புனிதம், கன்னித்தன்மை இவற்றின் வடிவங்களாய் இருக்க வேண்டும். அவர்கள் எவ்வகையிலும் தங்கள் பிறப்புறுப்பைத்

தொடுவதற்கு அனுமதிக்கப்படவில்லை. நிலைமை இப்படியிருக்க, பிறகெப்படி அவர்கள் உச்சகட்டத்தை (orgasm) அடைவது. காரணம் அந்தச் சக்தி அவ்வழியில் செல்வதில்லையே.

அந்தச் சக்தி அவ்வழியில் செல்வதில்லை என்பதால் ஆயிரத்தியொரு பிரச்சினைகள் தோன்றும். பெண்கள் இசிப்பு நோய் அல்லது மிகை உணர்ச்சிக் கோளாறால் பாதிக்கப்படுகிறார்கள். பெண்கள் கவலையும் உளச்சோர்வும் கொள்வதற்குக் காரணம் பால்சார்ந்த மகிழ்ச்சியை அவர்களால் அனுபவிக்க முடியாமல் போகிறது என்பதுதான். அவர்கள் கிட்டத்தட்ட முரணாகி விடுகிறார்கள். ஆணுக்குப் பாலுறவில் அதிக ஆர்வம் ஏற்படக் காரணம், எல்லா அனுபவங்களும் ஏதோ ஒன்றை விட்டுச் செல்லும் என்பதுதான். இழக்கிற உணர்வு மனிதனுக்குள் தொடர்ந்து இருந்தபடி இருக்கிறது. அதனால்தான் கூடுதலான பெண்கள், கூடுதலான பாலுறவு அனுபவம் வேண்டியிருக்கிறது அவனுக்கு. நீங்கள் தொடர்ந்து ஒன்றாய், பலதாய் இழந்து கொண்டே இருப்பீர்கள். பிரச்சினை உங்களுக்குள் இருக்கிறது. உங்களுடைய சக்தி பிறப்புறுப்புகளின் வழியே பாய்ந்து செல்வதில்லை.

காலப்போக்கில் ஒட்டுமொத்த சக்தியும் இப்படித்தான் தலைக்குள் வலுக்கட்டாயமாய் செலுத்தப்பட்டுள்ளது. எப்போதுமே தலை பாராட்டுக்குரியதாயிருக்கிறது. தலைமை எழுத்தர், தலைமைக் கண்காணிப்பாளர், தலைமை ஆசிரியர் என்று நம்மிடம் இருப்ப தெல்லாம் தலைகள்தன். உழைப்பாளர்களை - தொழிலாளர்களைப் பற்றிச் சொல்லும்போது 'கரங்கள்' என்ற சொல்லைப் பயன்படுத்து கிறோம். கைகள்? - கைகளால் வேலை செய்பவரைக் குறிப்பது. 'தலைகள்' - மேம்பட்டவர்கள். இந்தியாவில் பிராமணர்கள் முதன்மை பெற்றிருக்கிறார்கள், பாவப்பட்ட சூத்திரர்களோ கைகளாய்க்கூட இருக்கவில்லை - கால்களாய் பாதங்களாய் கிடக்கிறார்கள். இந்து மறைநூல்களில் இப்படிச் சொல்லப்படுகிறது. கடவுள் பிராமணர்களை தலைகளாகவும் (அறிவாளிகள்) சூத்திரர்களை பாதங்களாகவும் (உழைப்பாளிகள்), சத்ரியர்களை கைகளாகவும் (போர் செய்பவர்கள்), வைசியர்களை (வியாபாரிகள்) வயிறாகவும் படைத்திருக்கிறார் என்று. ஆனால், பிராமணர்கள் தலைகளாய் இருக்கிறார்கள்.

ஒட்டுமொத்த உலகமுமே பிராமணத்தன்மை கொண்டுவிட்டதாய் தெரிகிறது. எல்லாரும் தலையாய் வாழ்ந்து கொண்டிருக்க, முழு

உடம்பும் சுருங்கிவிடுகிறது. அதுதான் பிரச்சினை. ஒரு நிலைக் கண்ணாடி முன்பாய் கொஞ்சநேரம் நின்று. உங்கள் முழு உடம்புக்கும் என்ன நேரிடுகிறது என்று பாருங்கள். உங்கள் முகம் சுறுசுறுப்பாய் உயிரோட்டத்துடன் சிவந்து காணப்படும். ஆனால் உங்களுடைய மார்புப்பகுதி? சுருங்கி விட்டிருக்கும். உங்கள் வயிறு? - கிட்டத்தட்ட இயந்திரத்தனமாய். இயந்திரத்தனமாய் செயல்பட்டுக் கொண்டிருக்கும். உங்கள் முழு உடம்பும்...

மனிதர்கள் நிர்வாண நிலையில் நிற்பார்களாயின் அவர்களுடைய உடம்பைப் பார்த்தே தங்களுடைய வாழ்க்கையில் அவர்கள் செய்யும் வேலை வகைகளை நீங்கள் புரிந்து கொள்ள முடியும். அவர்கள் தொழிலாளிகளாக இருந்தால் அவர்களுடைய கைகள் தசைப்பற்றோடு சுறுசுறுப்பானதாயிருக்கும். அவர்கள் அவர்கள் தலையைப் பயன்படுத்துபவர்களாயின் -அறிவாளிகள், பேராசிரியர்கள். துணை வேந்தர்கள் போன்ற அபத்தங்களெனில் - அவர்களுடைய தலை செந்நிறத்தில் பளபளப்பதை நீங்கள் காண்பீர்கள். அவர்கள் தபால்காரர்களாகவோ, போலீஸ்காரர்களாகவோ இருந்தால் அவர்களுடைய கால்கள் உரம் பெற்றவைகளாயிருக்கும். ஆனால் ஒரு முழுமையான உடம்பை நீங்கள் காண்பதற்கில்லை, காரணம் யாரும் அத்தனை உறுப்புகளையும் பயன்படுத்தி வாழ்ந்து கொண்டிருக்கவில்லை.

தம்முடைய அத்தனை உறுப்புகளையும் ஒருங்கிணைத்துக் கொண்டு ஒருவர் வாழ வேண்டும். ஒட்டுமொத்த உடம்பையும் பயன்படுத்த வேண்டும். காரணம், உங்கள் பாதங்கள் மூலம் நீங்கள் நிலத்தோடு தொடர்புடையவராகிறீர்கள், நிலை நிறுத்தப்படுகிறீர்கள். உங்கள் கால்களையும் அவற்றின் வலிமையையும் இழந்து, அவை முடங்கிவிட்டால் நீங்கள் அதற்குப் பிறகும் நிலவுலகத்தோடு நிலைப்பட்டிருப்பதில்லை. மரித்துப்போன, அழுகிப்போன, நலிவுற்ற வேர்களை உடைய ஒரு மரம் போலாகிவிடுகிறீர்கள் நீங்கள். அந்நிலையில் அந்த மரம் நீண்டகாலம் வாழ்வதில்லை என்பதோடு அது ஆரோக்கியமாய், முழுமையாய் நிறைவாக வாழ முடியாமல் போய்விடுகிறது. உங்கள் கால்கள் நிலத்தில் நிலைபெற்றிருக்க வேண்டும். அவைதாம் உங்களுடைய வேர்கள்.

எப்போதாவது இந்தச் சிறிய சோதனையை செய்து பாருங்கள். கடற்கரை அல்லது ஆற்றங்கரையில் ஆடையின்றி, நிர்வாணமாய்,

சூரிய வெளிச்சத்தில் நில்லுங்கள். குதியுங்கள் அல்லது சீராக ஓடுங்கள். உங்கள் பாதங்களின் வழியே. உங்கள் கால்களின் வழியே உங்களுடைய ஆற்றல்கள் பூமிக்குப் பாய்ந்தோடுவதை உணர்வீர்கள். சீராக ஓடியபடி உங்கள் கால்களின் வழியே உங்களுடைய சக்திகள் பூமிக்குள் பாய்வதை உணர்வீர்கள். சற்றும் எதிர்பாராத விதமாய் நீங்கள் வேரூன்றியிருப்பதை, நிலைப்பட்டிருப்பதை உணர்வீர்கள். நிலம் உங்களுடன் தகவல் தொடர்பு கொள்வதை, நீங்கள் நிலத்துடன் தகவல் தொடர்புடையவராவதை உணர்வீர்கள் - நிலத்துக்கும் உங்களுக்கும் இடையே ஓர் உரையாடல் உருப்பெறுவதைக் கண்டு கொள்வீர்கள்.

இந்த நிலைப்படுத்தல் இழக்கப்பட்டது. மக்கள் வேரற்றவர்களாகி விட்டார்கள். அவர்கள் இனியும் நிலைப்பட்டவர்களாயிருப்பதில்லை. அந்நிலையில் அவர்களால் உயிர்வாழ முடியாமல் போகும். காரணம் உயிர் என்பது அனைத்து உறுப்புகளுக்கும் உரியதே அன்றி தலைக்கு மட்டுமானதல்ல.

மேற்கில் உள்ள ஆய்வுக் கூடங்கள் சிலவற்றில் ஒரு சில சோதனைகள் மேற்கொள்ளப்படுகின்றன. அங்கு சோதனைக்குப் பயன்படுத்தப்படும் ஒரு சில தலைகள் உயிரோட்டத்துடன் காணப்படுகின்றன. உடம்பில் இருந்து துண்டிக்கப்பட்ட ஒரு குரங்கின் தலை, உடம்பைப்போல இயங்கக்கூடிய எந்திர நுட்பமுள்ள கருவிகளுடன் பிணைக்கப்பட்டிருக்கிறது. தலை சிந்தித்தபடி கனவு கண்டபடி இருக்கிறது. தலை எவ்வகையிலும் அது காரணமாய் பாதிக்கப்படுவதில்லை.

இப்படித்தான் நடக்கிறது. மேற்கில் உள்ள சில ஆய்வுக்கூடங் களில் மட்டுமல்ல, ஒவ்வொரு மனிதனுக்கும்கூட அப்படித்தான் ஆகிவிடுகிறது. உங்களுடைய ஒட்டுமொத்த உடம்பும் இயந்திர நுட்பத்துடன் கூடிய ஒன்றாகிவிடுகிறது. உங்கள் தலை மட்டுமே உயிரோட்டத்துடன் காணப்படுகிறது. அதனால்தான் உங்கள் தலைக்குள் எண்ணற்ற கனவுகள், ஏராள சிந்தனைகள் ஏகப்பட்ட போக்குவரத்து. மக்கள் என்னிடம் வந்து கேட்கிறார்கள் ‘அதை எப்படி நிறுத்துவது?’ என்று. அதை எப்படி முடிவுக்குக் கொண்டு வருவது என்பதல்ல பிரச்சினை, அதை எப்படி உடம்பெங்கும் சிதறச் செய்வது என்பதுதான். உண்மையில் அது பெருமளவில் நெரிசலுற்றிருக்கலாம் காரணம் ஒட்டுமொத்த ஆற்றலும் அங்கேதான் கொட்டிக் கிடக்கிறது

– அத்தனை ஆற்றலையும் கைப்பற்றிக் கொள்ளும் என்பதற்கில்லை. அதனால்தான் நீங்கள் கிறுக்குப் பிடித்தவர் போலாகி விடுவது. ஓர் இடத்திலும் நிலைப்படாத குக்கூ பறவையாய் அலைவது.

பித்து என்கிற உளப்பிணி நம்முடைய உயர்ந்த நாகரிகத்தால் வந்தது. அது கலாசாரம் சார்ந்த ஒரு பிணி. இவ்வுலகில் ஒரு சில கலா சாரங்கள் ரொம்பவும் தொன்மையானவை, அவற்றில் பைத்தியக் காரர்கள் இருந்ததில்லை, பைத்தியம் என்பதே இருந்திருக்கவில்லை. பொருளாதாரம் சார்ந்த வகையில் செழிப்புற்றிராத, கல்வி சார்ந்த விதத்தில் வளம் பெற்றிராத சமூகங்களில், எங்கே மக்கள் தலைகளில் மட்டும் ஆற்றலைக் கொண்டிராமல், உடம்பெங்கும் ஆற்றல் சிதறடிக்கப்பட்டவர்களாய், பரவியிருக்கப் பெற்றிருக்கிறார்களோ அவர்களிடையே பித்து நிலை அரிதாகவே இடம் பெறுகிறது. ஒரு சமூகம் எத்தனைக்கு தலை சார்ந்ததாயிருக்கிறதோ அத்தனைக்குப் பைத்தியமாகிவிடுகிறது.

110 மின்னியக்க விசை (volt) யுடைய கம்பியில் 1000 மின் அலகு (volt) மின்சாரத்தைச் செலுத்துவது போலத்தான் அதுவும். எல்லாமே வன்முறைச் செயல் போலாகிவிடும். தலைக்கு சிறிதளவு ஆற்றல் போதும் நன்றாகச் செயல்படுவதற்கு. தலையில் அளவுக்கு மீறிய ஆற்றல் இருந்தால் அந்நிலையில் அது தொடர்ந்து செயல்படும். அதற்கு முடிவே இருக்காது, காரணம் அத்தனை ஆற்றலையும் அது எப்படிச் செலவிட்டுத் தீர்க்கும்? அது முடிவற்ற சிந்தனையும், கனவும் கொண்டுவிடும். இரவு பகலாய் ஆண்டுக்கணக்கில் சிந்தித்தபடி கனவு கண்டபடி இருக்கும். வாழ்க்கை இந்த மட்டும்தான்.

அந்நிலையில் முதுமை குறித்த அச்சம் வந்து விடுகிறது. காலம் ஓடுகிறது. உண்மையில் மரணம் பற்றிய பயம் ஒருவருக்கு இயல்பாகவே வந்து விடுகிறது. மரணம் எந்த நொடியிலும் வந்துவிடும் என்கிற நிலையில் நீங்களானால் தலைக்குள் சுழன்று கொண்டிருக் கிறீர்கள். நீங்கள் வேறெங்கும் நகரவில்லை என்பதால் வாழ்க்கையின் முழுப்பரப்பும் தீண்டப்படாததாக நின்றுவிடுகிறது.

முழு உடம்பையும் செயல்படுத்தி வாழுங்கள். ஆழ்ந்த நேசத்துடன் அதை ஏற்றிடுங்கள். உங்கள் உடம்பின் மீது ஏறக்குறைய காதலே கொண்டுவிடுங்கள். அது இறைவனின் நற்கொடை, இறைவன் விரும்பி வீற்றிருக்கும் கோயில். அப்போது முதுமை குறித்த அச்சம் இருக்காது, நீங்கள் முதிர்ச்சி (பக்குவம்) அடையத் தொடங்குவீர்கள்.

உங்கள் அனுபவங்கள் உங்களை முதிர்ச்சியுடையவராக்கும். அதன்பிறகு முதுமை ஒரு பிணியைப்போல் இருக்காது. அது ஒரு நேர்த்தியான நிகழ்வாயிருக்கும். ஒட்டுமொத்த வாழ்க்கையும் அதற்கான ஆயத்தம் என்றே சொல்லலாம். அது எப்படி ஒரு பிணியாயிருக்க முடியும்? ஒட்டு மொத்த வாழ்க்கையையும் நீங்கள் அதை நோக்கிச் செலுத்துகிறீர்கள். அது படிப்படியான ஒலி ஏற்றத்தை (crescendo) க் கொண்டதாயிருக்கும். அதுவே நீங்கள் செய்யவிருக்கிற கடைசிப் பாடலும் கடைசி நடனமும்.

எந்த ஓர் அற்புத நிகழ்வுக்காகவும் நீங்கள் காத்திருக்காதீர்கள். நீங்கள் ஏதாவது செய்தே ஆக வேண்டும். ஏதோவொன்று நிகழப் போவதாகவும், எல்லாமும் சரியாகிவிடும் என்றும் உங்கள் மனம் சொல்கிறது. அந்த முறையில் அது நடக்கப் போவதில்லை. அற்புதங்கள் தானாக நிகழ்வதில்லை.

ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

'ஏப்' என்பவனுடைய இரண்டு கால்களும் ஒரு விபத்தில் உடைந்து போயிற்று. எலும்புகளைச் சரி பண்ணியதும், விபத்துக்குக் காரணமான நிறுவனத்தின் மீது ஏப் வழக்கு தொடுத்தான். தான் நிரந்தரமாக முடமாகி விட்டதாகவும், வாழ்க்கை முழுவதும் சக்கர நாற்காலியிலேயே இருந்தாக வேண்டியிருக்கிறது என்று பழி சுமத்தினான். நிலையை மதிப்பிடுவதற்கு 'சர்ஜன்'களை நியமித்தது ஆயுள் காப்பீட்டுக் கழகம். எலும்புகள் குணமடைந்து சரியான நிலையில் இருப்பதாக அவர்கள் அறிக்கையளித்தனர். கோஹன் நன்றாக நடக்க முடியும். அவர் பாதிக்கப்பட்டவர்போல் பாசாங்கு செய்கிறார் என்று தங்கள் அறிக்கையில் அவர்கள் குறிப்பிடிருந்தனர். எனினும், வழக்கு விசாரணைக்கு வந்தபோது, சக்கரநாற்காலியில் இருந்த அந்த ஆளிடம் இரக்கம் கொண்டவராய், பத்தாயிரம் பவுண்ட்களை அவனுக்கு இழப்பீடாய் தரும்படி நீதிபதி தீர்ப்பு செய்தார். ஏப், சக்கர நாற்காலியிலே சென்று தனது காசோலையைப் பெற்றுக் கொண்டார்.

மேலாளர் சொன்னார், 'மிஸ்டர். கோஹன், நீங்கள் இத்தோடு யாவும் முடிந்து விட்டதாய் நினைக்க வேண்டாம். நீங்கள் பாசாங்கு பண்ணுகிறீர்கள் என்பது எங்களுக்குத் தெரியும். உங்களுடைய கடந்த காலம் பற்றி பெரிய அளவில் ஒரு ஆவணத்தை நாங்கள் தயாரிக்கப் போகிறோம். இரவும் பகலும் உங்களைக் கண்காணித்து வருவோம்.

உங்களைப் புகைப்படம் எடுப்போம். நீங்கள் நடக்க முடியும் என்பதற்கு ஒரேயொரு சான்றினை நாங்கள் முன் வைத்தாலும் நீங்கள் இழப்பீட்டைத் திருப்பிச் செலுத்துவதோடு, பொய் சொன்னதற்காக உள்ளே இருக்க வேண்டியிருக்கும்'

'மிஸ்டர். மேனேஜர். நான் நிரந்தரமாகவே இந்தச் சக்கர நாற்காலியில்தான் இருந்து கொண்டிருக்கிறேன்.'

'ரொம்ப சரி. இதோ பத்தாயிரம் பவுண்ட்களுக்கான காசோலை. இதை வைத்துக் கொண்டு நீங்கள் என்ன செய்கிற நோக்கத்தில் இருக்கிறீர்கள்?'

'நல்லது மேனேஜர் சார். நானும் என் மனைவியும் பயணம் மேற்கொள்வதை எப்போதுமே விரும்பியிருந்தோம். எனவே நாங்கள் நார்வேயில் தொடங்கி, ஸ்காண்டிநேவியா வழியாக (கைவிரல்களின் அசைவில் எஃபெக்ட் கொடுத்து) சுவிட்சர்லாந்து, இத்தாலி, கிரீஸ் சென்று - உங்கள் ஏஜன்ட்கள் என்னைத் தொடர்ந்து உளவு பார்த்தாலும் கவலையில்லை, நான் சக்கரநாற்காலியில் முடங்கிக் கிடந்தாலும் நாங்கள் இயல்பாகவே இஸ்ரேல், அப்புறம் பெர்ஸியா மற்றும் இந்தியா சென்று ஜப்பானுக்கும் பிலிப்பைன்சுக்கும் (எஃபக்ட் கொடுப்பதற்காக அசைந்தான்) போகப் போகிறோம் - என்னை உங்களுடைய ஒற்றர்கள் காமிராவுடன் பின் தொடர்ந்து வந்தாலும், சக்கர நாற்காலியில் இருக்கும் நான் கவலைப்படப் போவதில்லை, அங்கிருந்து நாங்கள் ஆஸ்திரேலியா தென்அமெரிக்கா என்று மெக்ஸிகோ வரை போகத்தான் போகிறோம் (பயணப் பாதையை சைகையாய் உணர்த்துதல்) - நான் இன்னமும் சக்கரநாற்காலியிலே இருக்கிறேன் என்கிறபோது, அமெரிக்காவில் இருந்து கனடா போவோம், உங்கள் அறிவாளிகளாலும், கேமிராக்களாலும் ஒண்ணும் பண்ணமுடியாது. அங்கிருந்து நேரா ஃபிரான்ஸ் போய் அங்கே லார்ட்ஸ் என்கிற இடத்துக்குச் செல்வோம். அங்கே ஒரு அற்புதத்தை நீங்கள் காண்பீர்கள்' என்றான் அவன்.

நிஜ வாழ்க்கையில் அற்புதங்கள் நேரிடுவதில்லை. உங்களுக்கு லார்ட்ஸ் இருப்பதில்லை. நீங்கள் முடமாகி இருந்தாலும் எதையாவது நீங்கள் செய்ய வேண்டியிருக்கும் - கார்ணம், உங்களை நீங்களே முடமாக்கிக் கொண்டு விட்டிருக்கிறீர்கள். முற்றிலும் அபத்தமான ஒன்றை ஏற்றதன் மூலம் உங்களை முடமாக்கியது நீங்கள் அல்லவா.

ஆனால், நீங்கள் அதை ஏற்கத்தான் வேண்டியிருந்தது என்பதை நான் அறிவேன். நீங்கள் தொடர்ந்து வாழ்வதற்காக செத்தவர் போல் செயலற்றிருப்பதென்று தீர்மானித்து விடுகிறீர்கள். பிழைத்துக் கிடப்பதற்காக உங்களுடைய இருப்புணர்வை நீங்கள் விற்று விட்டீர்கள்.

அந்த முட்டாள்த்தனமான காரியத்தை நீங்கள் தொடர்ந்து செய்து கொண்டிருக்க வேண்டும் என்பதில்லை. நீங்கள் அதில் இருந்து வெளியே வர முடியும்.

*'பெரும்பாலான நேரங்களிலும் என்னுடைய கண்கள் வேறு எதையோ தேடிக் கொண்டிருப்பதாய் தெரிந்தாலும், நான் பால்சார்ந்த நாட்டத்துடன் இருப்பதாகவே உணர்கிறேன். என்னுடைய மனம் முழுக்க அதுதான் வியாபித்திருக்கிறது. எனக்குத் தெரிந்தவரை இம்மூன்றுந்தான் என்னுடைய பிரச்சினைகள். இந்தப் பிரச்சினைகளால் நான் மூடப்பட்டிருக்கிறேன். நீங்கள் சொல்வதைக் கவனமுடன் கேட்டாக வேண்டிய நான் கவனமற்றவனாயிருக்கிறேன். தயவு செய்து எனக்கு வழிகாட்டுங்கள்.'*

இவையெல்லாம் பிரச்சினைகளல்ல. நீங்கள்தான் அவற்றைப் பிரச்சினையாக்கிக் கொள்கிறீர்கள். ஒரு சின்ன விஷயத்தை நீங்கள் பிரச்சினையாகப் பார்த்தவுடன் அது பிரச்சினையாகி விடுகிறது. பிரச்சினை அதுவல்ல, உங்களுடைய பார்வையும் மனோபாவமும் தான்.

'பெரும்பாலான நேரங்களிலும் என்னுடைய கண்கள் வேறு எதையோ தேடிக் கொண்டிருப்பதாய் தெரிந்தாலும், நான் பால்சார்ந்த நாட்டத்துடன் இருப்பதாகவே உணர்கிறேன். அவ்வாறெனில் அதில் என்ன பிரச்சினை இருக்கிறது? எது பிரச்சினையாகிறது? பசித்த ஒருவன் உணவகங்களைத் தேடுவது போலத்தானே அதுவும். அதில் என்ன தவறு? அவன் ஒரு பிரச்சினையில் இருக்கிறான், அதில் இருந்து அவன் வெளியேற வேண்டும் என்று நீங்கள் சொல்வீர்களா? தன்னுடைய பிரச்சினையில் இருந்து வெளியே வந்தால் அவன் செத்துப்போவான். அவன் உணவைக் கண்டடைய வேண்டும். அன்பு உணவாய், நுட்பமான உணவாயிருக்கிறது.

'பெரும்பாலான நேரமும் நான் பால்சார்ந்த நாட்டத்துடன் இருக்கிறேன், என்னுடைய கண்கள் மட்டுமே வேறு எதையோ நாடிச்

செல்வதுபோல் இருக்கிறது? இயல்புதானே. நீங்கள் உணவைத் தேடுவது பசித்திருப்பதால் அல்லவா. ஆனால் பாலுறவு ஒரு பிரச்சினை என்று மக்கள் உங்களுக்குக் கற்பித்திருக்கிறார்கள், அது சரியல்ல. அது முழுக்க முழுக்க ஆற்றலாயிருக்கிறது. பிரச்சினையால் எதையும் தன்னுள் அது வைத்துக் கொண்டிருக்கவில்லை. அந்த ஆற்றலை நீங்கள் ஏற்கவில்லை, அது உங்களுக்குள் தடையின்றி தொடர்ந்திருக்கவில்லை என்றால் நீங்கள் அதனை ஒரு பிரச்சினையாக்கலாம். நீங்கள் அதனுடன் பாய்ந்தோடும் பட்சத்தில் ஒருநாள் அதைக் கடந்து செல்வீர்கள். நீங்கள் மேலெழுவீர்கள், அதன்மீது சவாரி செய்வீர்கள், மிக உயர்ந்த நிலையை அடைவீர்கள். அது ஒரு நேர்த்தியான சக்தி, மிக உயர்ந்த இடத்துக்கு உங்களைக் கொண்டு செல்லும். ஆனால் அதில் இருந்து ஒரு பிரச்சினையை நீங்கள் உண்டு பண்ணுவீர்களாயின், உங்களுக்குள் ஒரு மன உறுத்தல் ஏற்பட்டுவிடும் எப்போதைக்குமாய். நீங்கள் எந்த அளவுக்கு அதனுடன் போரிட்டு எதிர்த்து நிற்கிறீர்களோ, அந்த அளவுக்கு பாலுணர்வும், பால்சார்ந்த ஆற்றலும் திருப்பித் தாக்கும். அது சண்டையிட்டுத் தானாக வேண்டும், காரணம் அது தொடர்ந்து இருப்பதற்கான ஆற்றல்.

பால்சார்ந்த ஆற்றலாய் உருவாக்கப்பட்டவர் நீங்கள். அது ஒரு பிரச்சினை என்று உங்கள் தந்தையும், தாயும் நினைத்திருந்தால் நீங்கள் இங்கே இருந்திருக்க மாட்டீர்கள். ஒரு பிரச்சினையால் அல்லவா நீங்கள் வாழ்ந்து கொண்டிருப்பது. அந்தப் பிரச்சினையை உங்கள் தாய் தந்தையரால் தீர்க்க முடியாத காரணத்தால் தானே நீங்கள் இங்கிருப்பது.

பாலுறவை ஒரு பிரச்சினையாய் கருதுகிறவர் தம்முடைய பெற்றோர்களிடம் மதிப்பு வைத்திருக்கமாட்டார் என்பது என்னுடைய குறிப்புரை ஆகும். அவர் எப்படி இருக்க முடியும்? கொஞ்சம் கவனித்துப் பாருங்களேன். அது ஓர் எளிய கணக்குதான். உங்கள் தந்தையிடம் நீங்கள் எப்படி மரியாதை காட்ட முடியும்? அருவருக்கத்தக்க ஒன்றை உங்கள் தாய்க்கு செய்தவராயிற்றே அவர். உண்மையில் அந்த ஆளை உடனே கொன்று போட வேண்டும் என்றுதான் நீங்கள் நினைப்பீர்கள். உங்கள் தாயைத்தான் நீங்கள் எப்படி மதிப்பீர்கள். அவளும் ஒரு சாதாரணப் பெண்ணைப் போலவும் புலனிச்சை விஞ்சிய பால்சார்ந்த ஜீவன்தானே. உங்கள் தாயின் பாதங்களை உங்களால் எப்படித் தொட முடியும்? முடியாது. உங்கள்

பாலுணர்வை ஒரு நற்கொடையாக நீங்கள் நம்பாதவரை உங்களுடைய தந்தையையோ, தாயையோ உங்களால் மதிக்க முடியாது.

குருட்ஜீவ் தம்முடைய சீடர்களுக்குச் சொல்வார், தம் வீட்டில் எழுதி வைக்கவும் செய்தார் - 'உங்கள் தாய் தந்தையரை நீங்கள் மதிக்காவிடில் இங்கே பிரவேசிக்காதீர்கள்' என்று. பார்ப்பதற்குச் சாதாரணமாகத்தான் தெரியும். குருட்ஜீவ் மாதிரியான ஒருவருக்கு இதைவிட சிறந்த கருத்து தோன்றவில்லையா எழுதி வைக்க என்று? 'உங்கள் தந்தை தாயை மதிக்காவிடில் இங்கே நுழையக்கூடாது?' - ஆனால், பல விஷயங்களை அவர் எளிமையான முறையில் சொல்லியிருக்கிறாரே. பாலுறவுக்கான ஆற்றலை யார் ஒப்புக் கொள்கிறாரோ அவரால்தான் தம்முடைய தந்தை, தாயை மதிக்க முடியும். இல்லையேல் நீங்கள் பாசாங்கு செய்வீர்கள், மதிக்க மாட்டீர்கள்.

பாலுணர்வை ஒரு பிரச்சினையாக, பிணியாக, விலக்கப்பட வேண்டிய ஒன்றாக நீங்கள் கருதினால், உங்கள் குழந்தைகளை நேசிக்கக்கூடியரவாய் நீங்கள் இருப்பீர்களா? அவர்கள் ஒரு பிரச்சினையில் இருந்து, பிணியில் இருந்து வெளியே வந்தவர்கள். நீங்கள் அவர்களை வெறுப்பீர்கள். அவர்களை நேசிப்பதுபோல் பாசாங்கு செய்வீர்கள். ஆனால், அவர்கள் உங்களுடைய பிரச்சினையின் யதார்த்தங்கள் - நடைமுறைகள் (actualization) என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்களை ஒரு பால் சார்ந்த ஜீவனாகவே அவர்கள் சுட்டிக் காட்டுவார்கள். உங்களால் பாலுணர்வைக் கடந்து செல்ல முடியாது. நீங்கள் புலனிச்சை விஞ்சியவர் (animalistic) என்பதற்கு ஒரு நிரூபணம்போல் அவர்கள் தொடர்வார்கள். அவர்கள் ஒரு சான்றாக, உங்கள் கீழ்நிலைக்கு ஒரு நிரந்தர சான்றாக இருக்கிறார்கள்.

இல்லை. நான் உங்களுக்குக் கூற விரும்புவது பாலுணர்வு ஒரு பிரச்சினையல்ல என்பதைத்தான். அது ஓர் தூய ஆற்றல். நீங்கள் அதைத் தவிர்த்தால், பிறகெப்போதும் அதைத் தேடிக் கொண்டிருப்பீர்கள் என்பதே உண்மை. அந்நிலையில் அது ஓர் மனஉறுத்தல் ஆகிவிடும். அப்போது, அதன்பிடியில் நீங்கள் முற்றாகச் சிக்கிக் கொண்டிருப்பீர்கள் என்பதுடன் அது ஓர் உள இயல்புப் பிறழ்வாக (தவறான போக்கு)வும் ஆகிவிடும். பிறகு, நீங்கள் எதைப் பார்த்தாலும் அதில் பால் சார்ந்த விஷயங்கள் மட்டுமே உங்கள்

கண்ணுக்குத் தெரியும், வேறெதுவும் தெரியாது. நீங்கள் மன உறுத்தல் அதிகரித்த நிலையில் பைத்தியமாகவும் நேரிடலாம்.

பித்துப் பிடித்தவர்களில் நூற்றுக்கு தொண்ணூறு பேர் பாலுணர்வு காரணமாய், பாலுணர்வை அடக்கி வைத்ததால், அந்த நிலைக்கு ஆளானார்கள் என்று ஃப்ராய்டு தெரிவித்திருக்கிறார். பாலுணர்வு புரிந்து கொள்ளப்பட வேண்டியது, ஆக்கத் திறனுடன் பயன்படுத்தப் பட வேண்டியது. அது வாழ்க்கைக்கு இன்றியமையாதது. உயிரோட்டமுடையது. அதுவோர் வேகம்மிக்க உணர்ச்சி (fire). நீங்கள் அதைக் கொண்டே உருவாக்கப்பட்டீர்கள், எல்லாரும் அவ்வாறே உருவாக்கப்பட்டார்கள். இதனைத் தவிர்ப்பதற்காகவே, ஜீஸஸ் கன்னி மரியாளிடம் இருந்து தோன்றியதாக மெய்ப்பிக்க முயல்கின்றனர். அப்படிச் செய்ய முடியாதென்பதும் அவர்களுக்குத் தெரியும்.

நான் ஒரு கதையை வாசித்துக் கொண்டிருந்தேன்.

அழகான இளம் பெண்ணொருத்தி ஒரு மருத்துவரிடம் சென்றாள். மருத்துவர் அவளைப் பரிசோதித்துவிட்டுச் சொன்னார், 'மிஸ், நீங்கள் கருவுற்றிருக்கிறீர்கள்' என்று.

அந்தப் பெண் சொன்னாள், 'இல்லை, ஒருபோதும் அப்படி இருக்க முடியாது. அது நடவாத காரியம். நான் எந்தவோர் ஆணுடனும் இருந்ததில்லை என்கிறபோது அது எப்படி இருக்க முடியும்?'

மருத்துவர் சொன்னார், 'ஆனால், அது முற்றிலும் உண்மை', என்று.

அந்தப் பெண் மறுத்தாள், 'அது நடவாத காரியம். அப்படி நடந்திருக்க முடியாது. நான் எவனுடனும் இருந்ததில்லை' என்று.

அப்போது மருத்துவர் சொன்னார், 'கொஞ்சம் பொறு. என்னுடைய பொருள்களை மூட்டை கட்டிவிடுகிறேன். நானும் உன்னோடு வருகிறேன்' என்று.

'என்னது? எதற்காக?' என்று கேட்டாள் அந்தப் பெண்.

அவர் சொன்னார், 'இந்த முறைநான் நழுவவிடப் போவதில்லை. கன்னி மரியாளைப் பார்ப்பதற்காக கிழக்கில் இருந்து மூன்று அறிவாளிகள் வந்திருக்கிறார்களாம். இந்த முறை நான் தவறவிட மாட்டேன். நான் வருகிறேன். அந்த மூன்று அறிவாளிகளை நான் காண விரும்புகிறேன்' என்று.

இந்தியாவில் அத்தகைய முட்டாள்தனத்தை நாம் ஒருபோதும் செய்ததில்லை. புத்தர், மகாவீரர், ராமர், கிருஷ்ணர் எல்லாம் பால்சார்ந்த உறவில் தோன்றியவர்கள் என்பதை நாம் ஒப்புக் கொள்கிறோம். பாலுறவை மிருகத்தனம் என்று நாம் ஒருபோதும் எண்ணியதில்லை. ஒரு புத்தர்கூட அதில் இருந்துதான் தோன்றினார். தாமரை தான் பிறந்த சேற்றில் இருந்து முற்றிலும் வேறுபட்டது என்பதை நாம் அறிவோம். ஆனால் அது சேற்றில் இருந்து வந்ததுதான். சேற்றை மதிக்கவேண்டும். சேற்றை மதிக்காவிடில் தாமரைகள் காணாமல் போய்விடும். சேறு கலந்த நீரில்தான் நீங்கள் வாழ்ந்தாக வேண்டும். அந்த அனுபவத்தை நீங்கள் மேற்கொள்ள வேண்டும். அதைக் கடந்து செல்ல வேண்டும். நீருக்கு மேல் தாமரையாய் மலர்வதற்கு.

அழுக்கான சேற்றில் இருந்து அழகான தாமரை மலரும் என்று எவருமே கற்பனை செய்திருக்கமாட்டார்கள். அதுவோர் உருமாற்றம், மாற்றப்பட்ட ஒன்று.

பதஞ்சலியின் ஒட்டுமொத்த முயற்சியும் இதுதான். ஒரே சக்திதான் பால் சார்ந்த மையத்தில் இருந்து சஹஸ்ர தளத்துக்கு, புதுப்புது மாற்றங்களுடன் சென்றடைகிறது. ஒரு புதிய காட்சி, ஒரு புதிய நிகழும் தன்மை, ஒரு புதிய சிறகு கொண்டுவிடுகிறது. மேலும் மேலும் இதழ்களுடன் அது மலர்கிறது என்று உங்களுக்குச் சொல்கிறார் அவர். பால்சார்ந்த மையத்தில் நான்கே இதழ்களுடைய ஒரு தாமரையாய் அது இருந்தது. நான்கு இதழ்களுடன் இருந்தாலும் அது தாமரைதான். சஹஸ்ர தளத்தில் அது ஆயிரம் இதழ்களுடைய உடைய தாமரையாயிற்று. ஆயிரம் இதழ்களுடன் இருந்தாலும் அது தாமரைதான். அது ஆயிரம் சூரியர்கள் ஆயிரம் சந்திரர்களின் சந்திப்பு போன்றது. ஆற்றலின் கூட்டிணைவு (synthesis) மிகப்பெரிய பங்கீடு எனலாம். ஆனால் அதே ஆற்றல்தான் இரண்டிலும். ஒரே ஆற்றல்தான் முதிர்ச்சி பெற்று, வளர்ச்சி பெற்று மலர்ச்சியடைகிறது.

ஆக, நான் முதலில் உங்களுக்குச் சொல்லக்கூடியது இதுதான். தயவு செய்து பாலுணர்வை ஒரு பிரச்சினையாய் எடுத்துக் கொள்ளாதீர்கள். அது சரியாகாது. இல்லையேல் அது ஓர் பிரச்சினை ஆகிவிடும்.

உங்கள் மீது வீசப்பட்ட சில முட்டாள்தனமான உபதேசங்களின் காரணமாய், நீங்கள் அவற்றுக்குக் கட்டுப்பட்டு அதை உங்கள் வாழ்க்கையில் இருந்து தவிர்க்க முயன்றால் அது ஒரு

பிரச்சினையாகவே மாறிவிடும். அது உங்கள் மனதுக்குள் அடிக்கடி வந்து போகும். அது கிட்டத்தட்ட ஒரு பேய் மாதிரி தொடர்ந்து உங்களுடன் இருக்கும். உங்களுடன் பேசிக் கொண்டிருக்கும். அதுவோர் உள்ளார்ந்த பேச்சாகிவிடும். நீங்கள் எல்லா இடங்களிலும் பார்வையைச் சுழற்றுவீர்கள். அதிருப்தி உணர்வோடு ஆழ்ந்து சிந்திப்பீர்கள். நீங்கள் ஒரு யாசகனாகி விடுவீர்கள். யாசித்துக் கொண்டேயிருப்பீர்கள், ஒரு குற்றவாளியைப்போல் குற்ற உணர்வை அடைவீர்கள்.மோசமாய் உணர்வீர்கள். ஒரு மனோபாவந்தான் காரணம். சமயவாதிகள் உங்கள் மீது பெரிய அளவில் பாதிப்பை உண்டு பண்ணிவிட்டார்கள் என்று தெரிகிறது.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

அனுபவ வைத்தியர் ஒருவருடைய மகன், அப்போதுதான் மருத்துவக் கல்லூரியில் பட்டம் பெற்ற வந்த அவனுக்குத் தொழிலைப் பற்றிச் சில யோசனைகள் சொல்வதென்று தீர்மானித்தார். ஒருநாள் தந்தையுடன் மகனும் மருத்துவமனை ரவுண்ட்ஸிற்குச் சென்றிருந் தான். அவர்கள் முதலில் சென்று பார்த்த நோயாளிக்கு அவனுடைய தந்தை அறிவுரை சொன்னார், 'நீ சிகரெட்களை நிறுத்திவிடு' என்று.

'நீங்கள் எப்படி அந்த முடிவுக்கு வந்தீர்கள்' மகன் கேட்டான்.

'அறையைச் சுற்றி நிறைய சிகரெட் துண்டுகள் கிடப்பதைக் கவனித்தேன்' என்று பதில் வந்தது.

'இரண்டாவது நோயாளிக்கு நிறைய சாக்லெட் சாப்பிடுவதை நிறுத்திக் கொள்' என்று ஆலோசனை வழங்கப்பட்டது. புது மருத்துவன் குழம்பிப் போனான், 'இது எப்படி?' அவன் கேட்டான்.

'நீ பார்க்கவில்லையா, நீ பார்த்திருந்தால் அந்த இடத்தில் சாக்லெட் உறைகள் சிதறிக் கிடந்தது உன் கண்ணில் பட்டிருக்கும்'

'எனக்குப் புரிந்து விட்டதென்று நினைக்கிறேன். நான் ஒன்றை ஆய்வு செய்கிறேனே' என்றான் மகன்.

மூன்றாவது நோயாளியான ஒரு பெண்ணிடம் தேவாலயம், மதம், குருமார்கள் தொடர்பான சில செயல்களை நிறுத்திக் கொள்ளும்படி சொன்னான் மகன். இப்படியொரு முடிவுக்கு அவனை வரவிட்டது எதுவென்று மகனிடம் கேட்டார். பேச்சுவாக்கில் கூட தேவாலயம் குறிக்கப்படவில்லை. எல்லா இடத்திலும் தேவாலயத்தைப் பார்ப்பதற் கில்லையே என்று நினைத்தார் அவர்.

'நல்லது அப்பா. நான் தெர்மா மீட்டரைக் கீழே நழுவ விட்டதை நீங்கள் கவனித்தீர்களா? நான் அதைக் கையில் எடுக்கக் குனிந்தபோது படுக்கைக்குக் கீழே இருந்த சமயகுருவை பார்க்காமல் இருக்க முடியவில்லை' என்றான் மகன்.

அதைத்தான் நானும் பார்க்கிறேன். உங்கள் படுக்கைக்குக் கீழே சமயப் பிரசங்கி இருக்கிறார். உங்கள் படுக்கைக்கு மேலும் சமயப்பிரசங்கி இருக்கிறார். எங்கு பார்த்தாலும் தேவால்யங்கள், கோயில்கள், எல்லாவற்றையும் குறைத்துக் கொண்டு கொஞ்சம் சுயேச்சையாய் செயல்படப் பாருங்களேன்.

'பெரும்பாலான நேரங்களில் நான் பாலுணர்வு மிக்கவனாயிருக் கிறேன். என்னுடைய கண்கள் மட்டும் வேறு எதையோ நாடிச் செல்கின்றன. மனம் முழுக்க அதுதான் நிரம்பி வழிகிறது'. நீங்கள் அந்நிலையில்தான் இருக்க வேண்டும். காரணம், பாலுணர்வுக்கு எதிராக நீங்கள் சண்டையிட்டால் வேறு எங்குதான் நீங்கள் செல்ல முடியும்? அப்போது பாலுணர்வு முழுவதும் உங்கள் கவனத்தை எடுத்துக் கொண்டு விடும். பிறகு அது தலைக்குள் நகர்ந்து சென்றுவிடும். அப்போது அதைப்பற்றியே நீங்கள் சிந்திப்பீர்கள், கற்பனை செய்வீர்கள், கனவு காண்பீர்கள். அந்தக் கனவுகள் நிறைவளிப்பதாய் இருக்காது. உணவு தரும் நிறைவைக் கனவு தந்துவிடுமா என்ன? நீங்கள் உணவைப் பற்றியும், அரண்மனை விருந்துகளுக்கு அழைக்கப்படுவதாகவும் கற்பனை செய்து கொண்டிருப்பீர்கள், ஆனால் அது வேலைக்காகாது. அந்தக் கனவு முடிந்தால் மறுபடியும் நீங்கள் பசியை, முன்னைவிட அதிகமாகவே உணர்வீர்கள். கனவுக்குப் பிறகு நீங்கள் மிகவும் அதிருப்தியுற்ற வராகவே உணர்வீர்கள். காரணம் நீங்கள் ஏற்கப்பட வேண்டிய, பயன்படுத்த வேண்டிய ஒரு மெய்ம்மையை, வாழ்வின் நடை முறையைத் தவிர்த்துக் கொண்டிருக்கிறீர்கள்.

உங்களுடைய ஆற்றல் சஹஸ்ர தளத்துக்குள் நுழைவது ஒருநாள் சாத்தியப்படும் என்பதை நான் அறிவேன், ஆனால் ஒரு முதிர்வு பெற்ற ஆற்றலாக அதைச் செல்லவிடுங்கள். ஒருநாள் சற்றும் எதிர்பாராத விதமாய் பாலுறவு உங்கள் வாழ்க்கையில் இருந்து மறைந்துவிடும். அப்போது அதைப்பற்றி நீங்கள் சிந்தித்திருக்க மாட்டீர்கள். அதன்பிறகும் அது ஓர் இன்பக்கனவாய் இருக்காது உங்களுக்கு. அது எளிதாய் மறைந்துவிடும். அதே ஆற்றலின் சிறந்த

உச்சக்கட்ட பாலுணர்வை நீங்கள் அடைகிற பொழுது தாழ்நிலையில் உள்ளவை (lower orgasms) உங்களை ஈர்க்கும்படியாய் இருக்காது. அது தலைக்குரிய (அறிவு) ஒன்றாக மாறிவிடும்.

பாலுணர்வு பிறப்புறுப்போடு இருந்துவிடுவது நல்லது. காரணம், அதுதான் அது இருக்க வேண்டிய சரியான இடமும் ஆகும். அது தலையில் இருக்குமாயின் நீங்கள் குழப்பத்துக்குள்ளாக நேரிடும். ஒவ்வொரு சக்கரமும் உரிய இடத்தில் இருந்து செயல்பட்டால் மனிதன் ஆரோக்கியமாய் இருப்பான் என்று குருட்ஜீவ் தம்முடைய சீடர்களுக்குச் சொல்வதுண்டு. சக்கரங்கள் ஒன்றின் மீது ஒன்று கவிந்து, இயல்பாக இருக்க வேண்டிய இடம் இழக்கப்படுகிற பொழுது, ஆற்றலானது திட்டமின்றிச் செல்லும். மக்களின் தலைகளில் சன்னல் வைத்துப் பார்த்தீர்களானால் அவர்களுடைய பிறப்புறப்புகளைக் காண்பீர்கள், காரணம் பாலுணர்வு அங்கே சென்று விட்டிருக்கிறது. உண்மையிலே நீங்கள் குழப்பத்துக்குள்ளானால் அதில் ஆச்சரியப்பட ஏதுமில்லை. அது அப்படித்தான் இருக்க வேண்டியிருக்கிறது.

உங்கள் ஆற்றலை இயல்பான மையத்துக்கு, ஒவ்வோர் ஆற்றலையும் அதற்குரிய இடத்துக்குக் கொண்டு வாருங்கள். அப்போது அது நன்றாகவே செயல்படும். அந்நிலையில் அனைத்து உறுப்புகளும் ஒட்டுமொத்தமாய் செயல்படுவதன் ரீங்கார ஒலியை (haumming sound) நீங்கள் கேட்பீர்கள். அது நேர்த்தியாகச் செயல்படுகிற ஒரு காரைப் போன்றிருக்கும். ம்ம்... நீங்கள் காரைச் செலுத்தும்போது உங்களைச் சுற்றி ஒரு ரீங்கரிப்பை நீங்கள் கேட்பீர்கள்.

ஆனால், செயல்நிலைகள் தவறாகி விடுகிறபோது நீங்கள் உண்மையிலேயே தலைகீழாகி விட்டதை உணர்வீர்கள். எதுவுமே இருக்க வேண்டிய இடத்தில் இருக்கவில்லை. ஒவ்வொன்றும் அதன் இயல்பான இடத்தை இழந்து, வேறெங்கோ இடம் பெற்றிருக்கிறது, மேற்சென்று கவிகிறது, மறைகிறது, நழுவியோடுகிறது. நீங்கள் குழப்பநிலையை அடைகிறீர்கள். இதுதான் பைத்தியம் எனப்படுவது.

ஒருமுறை இப்படி நடந்தது.

செத்துப்போன சமயகுரு ஒருவர், தாம் பேர்லி கேட்ஸில் (Pearly gates) இருப்பதைக் கண்டார். வாயிற் காவலர்கள் வாசலைத் திறந்து அவரை உள்ளே அனுமதித்தனர். மிகப்பெரிய எக்காள முழக்கம்

கேட்டது. எல்லா தேவதைகளும், முக்கியத்துவம் வாய்ந்த தேவதூதர்களும் சிறகுடைய தெய்வக் குழந்தைகளும், கடவுளின் அரியாசனத்துக்கு மேலே காற்றில் மிதந்து கொண்டிருக்கும் தேவதைகளும், புனிதர்களும், சமயத்திற்காக உயிர்துறந்த தியாகிகளும் அவருக்கு மரியாதை செலுத்த அணிவகுத்திருந்தனர். அவர் புனித பீட்டரிடம், 'நல்லது, நான் கௌரவிக்கப்பட்டேன். ஆமாம், சொர்க்கத்துக்கு வருகிற மதகுரு ஒவ்வொருவருக்கும் இத்தகைய வரவேற்பை நீங்கள் அளிப்பதுண்டா?' என்று கேட்டார்.

'ஓ, அதெல்லாம் இல்லை. நீங்கள் இங்கே வந்திருக்கிற முதலாவது நபர் என்பதால்தான்' என்றார் புனித பீட்டர்.

எனக்கு அதில்கூட ஐயந்தான். சமயகுருமார்களால் சொர்க்கத்தில் பிரவேசிக்க முடியாது, காரணம் அவர்கள் முழுமையானவர்களல்லர். பிறகெப்படி அவர்களைக் கடவுளோடு சேர்த்துக் கருத முடியும்? நடவாத காரியம்.

தற்போது என்னைக் கேட்கிறீர்கள், 'நான் இத்தகைய பிரச்சினைகளால் மூடப்பட்டு, தங்கள் சொல்வதை முறைப்படி கவனித்துக் கேட்க இயலாதவனாய் இருக்கிறேன். தயவு செய்து எனக்கு வழிகாட்டுங்கள்' என்று. வழிகாட்டிகள் இன்னும் உங்களுக்கு திகட்டவில்லை போலும். அதுதான் உங்கள் பிரச்சினை. அறிவுரைகளும் உங்களுக்குத் திகட்டியபாடில்லை என்றே தெரிகிறது. அதுதான் உங்களுடைய துன்பம், முழுமையான துன்பமும். எல்லா அறிவுரைகளையும் விடுங்கள், எல்லா வழிகாட்டிகளையும் விட்டுவிடுங்கள். அதுதான் நான் உங்களுக்கு வழங்கக்கூடிய வழிகாட்டுதல். உங்களுக்குள்ளிருந்து ஒலிக்கும் குரலைக் கேட்டபடி, முற்றிலும் வாழ்க்கை நேர்த்தியாயிருப்பதுடன், இயற்கையாகவே மதிக்கத்தக்கதாயும் இருக்கிறது. வாழ்க்கைக்கு மாறாக நீங்கள் வேறெதைக் காது கொடுத்துக் கேட்டாலும், வழிதவறிப் போக வேண்டியதுதான்.

உங்களுடைய உள்ளார்ந்த குரலை நீங்கள் திரும்பப் பெற உதவுகிற மனிதனையே நான் உண்மையான கடவுள் என்று அழைக்கிறேன். அவன் தன்னுடைய குரலை உங்களுக்குக் கொடுப்பதில்லை. உங்களுடைய தொலைந்துபோன உட்குரலை நீங்கள் மீட்டெடுப்பதற்கு மட்டுமே அவன் உதவுகிறான். அவன் உங்களுக்கு வழிகாட்டுவதில்லை, உண்மையில் எல்லா

வழிகாட்டிகளையும் மெள்ள மெள்ள உங்களிடமிருந்து அவன் எடுத்துச் சென்று விடுகிறான். அவ்விதமாய் உங்களுக்கு நீங்களே வழிகாட்டியாகிறீர்கள். உங்களுடைய வாழ்க்கையை உங்கள் கைகளிலேயே நீங்கள் எடுத்துக் கொண்டு விடுகிறீர்கள் அத்துடன் நீங்கள் பொறுப்புணர்ச்சி கொண்டவராகிறீர்கள்.

'நான் என்ன செய்யவேண்டும்' என்று மற்றவர்களிடம் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தால் அது பொறுப்பற்றதனம். அதனால்தான் என்னோடு இருப்பது உங்களுக்கு இடர்ப்பாடாய் தெரிகிறது. நான் உங்களுக்கு ஊட்ட வேண்டும் என்று நீங்கள் விரும்பியிருக்கலாம், அதனால்தான் நீங்கள் எதையுமே செய்யாமல் இருப்பது. நான் உங்களுக்கு (உணவை) எடுத்து ஊட்டுவதோடு அதை மென்று, அரைப்பது உட்பட எல்லாவற்றையுமே செய்ய வேண்டியிருக்கும், இல்லையா. நான் அதைச் செய்ய மாட்டேன், மற்றவர்கள் அதைத்தான் செய்து உங்களை நாசமாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

நான் உங்களை நேசிப்பவன், என்னால் அதைச் செய்ய முடியாது. நான் பெரிய அளவில் உங்களை நேசிக்கிறேன், அது என்னால் முடியாத காரியம். உங்கள் வாழ்க்கைக்கு நீங்கள் பொறுப்பேற்க வேண்டும். நீங்கள் செய்கிற எதற்கும் நீங்களே பொறுப்புடையவராக வேண்டும் என்பதே நான் விரும்புவது. உங்கள் வாழ்க்கைக்கு எப்போது நீங்கள் பொறுப்பேற்கப் போகிறீர்கள்? குழந்தைகளல்ல நீங்கள். உங்களை வகையற்றவர் என்று சொல்லமுடியாது.

நான் இப்படித்தான் உங்களுக்கு உதவப் போகிறேன். நீங்கள் நீங்களாக இருக்கவும் உங்கள் பயண இலக்கை நீங்கள் அடைவதற்கும் உதவுகிறேன்.

*ஒருவருக்குள் நிகழும் சூரியன் மற்றும் சந்திரனின் சேர்க்கை பற்றியும், அதற்கப்பால் செல்வது பற்றியும் நீங்கள தெரிவித்தீர்கள். தனக்கு வெளியே ஓர் இணையைப் பெறுவது அதன் தகுதிக்கு மீறிய சிக்கல்களையும், இடர்ப்பாட்டையும் ஏற்படுத்துவதாய் இருக்கலாம். ஒரு இணையைப் பெற்றிருப்பதும் அல்லது பெறாமல் இருப்பதும் எப்படி ஒருவருடைய உள்ளியல்பு நிலை மற்றும் ஆன்மா சார்ந்த வளர்ச்சியை அதிகரிக்கிறது அல்லது குறைக்கிறது என்பதைத் தயவு செய்து கூறுங்களேன்.*

கேள்வி ஒன்றும் சிக்கலானதல்ல. அனுபவத்தின் வளம் தெரிகிறது கேள்வியில். உங்களிடம்தான் சிக்கல் இருக்கிறது. நீங்கள் ஒரு சிநேகிதி அல்லது சிநேகிதனை ஒரு ஆண் அல்லது ஒரு பெண்ணைக் கண்டடைகிறபோது இரண்டு சிக்கல் பேர்வழிகள் சேர்ந்து கொள்கிறார்கள். அது ஒன்றும் இணைத்தலாயிருக்காது. பெருக்க லாயிருக்கும் (multiplication). காரியங்கள் சிக்கலாகி விடும் என்பது நிச்சயம்.

அந்தச் சிக்கலினூடேதான் ஒரு வழியை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டியிருக்கும். அது ஒரு சவால். நீங்கள் தொடர்புப் படுத்திக் கொள்கிற ஒவ்வொரு பெண்ணும், அல்லது ஆணும் மிகப்பெரிய சவாலாயிருப்பார்கள். அந்தச் சவால்களை நீங்கள் தவிர்க்க முடியும். துறவிகள் அதைத்தான் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறார்கள் - உலகத்தில் இருந்து நழுவி விடுவது. சவாலைத் தவிர்ப்பது என்று. உண்மையில் நீங்கள் அமைதியாய், நிசப்தமாய் உணர்வீர்கள். உங்கள் வாழ்க்கை சிக்கலாயிருக்கிறது, ஆனால் நீங்கள் மோசமான நிலையில் இருப்பீர்கள். 'மோசமான நிலை' என்றால் அனுபவமற்றவராய், பக்குவமற்றவராயிருப்பது. முதிர்ச்சி (maturity) யை நீங்கள் எங்கிருந்து பெறுவீர்கள்? வாழ்க்கையும், அனுபவமும் வழங்கக்கூடிய வளமையை நீங்கள் எங்கிருந்து அடைவீர்கள். வேறு வழியிருக்கவில்லை. அதை வாங்க முடியாது, இரவலாய் பெற முடியாது. அது ஒன்றும் இமயமலை அடிவாரத்தில் ஒளித்து வைக்கப்படவில்லை, நீங்கள் சென்று தோண்டி எடுப்பதற்கு. அது அங்கேயில்லை. அது வாழ்க்கையில் இருக்கிறது, மக்களிடம் இருக்கிறது, உறவுகளில் இருக்கிறது.

ஆக அது சிக்கலானது என்பதை நான் அறிவேன். ஆனால் அந்தச் சிக்கல்களின் பொருட்டு தனித்திருப்பதே நல்லது என்று நீங்கள் எண்ணுவீர்களாயின், அந்தத் தனிமை ஆன்மா சார்ந்ததாய் இருக்காது. அந்த ஒதுக்கல் (aloneness) ஒரு கோழையினுடையதாய் இருக்குமேயன்றி துணிவுமிக்க ஒருவனுடையதாய் இருக்காது.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

கேட்கும் திறனற்ற ஒருவன் தன்னுடைய மருத்துவரைக் காணச் சென்றான். அவனைப் பரிசோதித்த மருத்துவர் சொன்னார், எழுபது வயதிலும் நல்ல உடலமைப்புடன் இருப்பதாக.

'நீர் புகை பிடிப்பதுண்டா?' மருத்துவர் கேட்டார்.

'தாங்கள் என்ன சொல்கிறீர்கள்?' அந்தக் கிழவன் கேட்டான்.

'நீர் புகை பிடிப்பதுண்டா என்று கேட்டேன்' உரக்கக் கத்தினார் மருத்துவர்.

'ஆகா' என்றான் கிழவன்.

'மிகுதியான அளவிலா?' மருத்துவர் விசாரித்தார்.

'யார்?' கிழவன் கேட்டான்.

'புகைப்பதுண்டா என்று உம்மைத்தான் கேட்கிறேன்' என்றார் மருத்துவர்.

'சிகரெட்டுகள், சுருட்டுகள் ம்... சிலநேரம் பைப்பிலும். ஆமாம். நான் எப்பவும் புகைப்பதுண்டு' என்றான் அவன்.

'குடிப்பதுண்டா?' மருத்துவர் கேட்டார்.

'ஒன்பது மணிக்குப் பிறகு' கிழவன் பதிலளித்தான்.

'என்னது, குடிப்பீரா?' கிழவன் பதிலளித்தான்.

'ஓ. குடிப்பேனே. எதை வேண்டுமானாலும் குடிப்பேன்' என்றான் அவன்.

'இரவு ரொம்ப நேரமாகிவிடுமோ? விருந்துகள் உண்டா? பெண்களுடன் கும்மாளம் போடுவீரா?' கொஞ்சம் கோபத்தோடு கேட்டார் மருத்துவர்.

'நிச்சயமா. ரொம்பநேரம் அப்படியே இருப்பது பிடிக்கும்.'

'நல்லது, நீர் அதைத் துண்டிச்சிருக்க வேண்டியிருக்கும்னு பயப்படறேன்.'

'என்னது?' திகைப்புடன் கூவினான் கிழவன்.

'நீர் அதையெல்லாம அடியோடு நிறுத்திரணும்னு சொல்றேன்' உரக்கக் கூவினார் மருத்துவர்.

'காது நல்லா கேக்கணும்கறதுக்காகவா, வேணாம்சாமி ஆளைவிடு' என்றான் கிழவன்.

சிக்கல்கள் தவிர்க்கப்பட வேண்டும் என்பதற்காகவா? இல்லை, ஒருபோதும் இல்லை. அது கோழையின் செயல்முறை. ஒருபோதும் பிரச்சினைகளில் இருந்து நழுவப் பார்க்காதீர்கள். அவை உதவி

செய்வதாயிருக்கும், பெரிய அளவில் பயனுடையதாகும். அவை வளர்ச்சி நிலைகள்.

நீங்கள் ஒரு பெண்ணைக் கண்டடைவதாயின், ஒரு பசுவை அடைய முயற்சிக்காதீர்கள். அது கொஞ்சம் சிக்கல் குறைவானது, அவ்வளவுதான்.

எல்லா வகையான தொல்லைகளையும் உங்களுக்குக் கொடுக்கக் கூடிய ஓர் உண்மையான பெண்ணைக் கண்டுபிடியுங்கள். உங்களுடைய மனஉறுதி அங்கே சோதிக்கப்படும்.

இளைஞன் ஒருவன் சாக்ரடீஸிடம் கேட்டான், 'ஐயா, நான் திருமணம் செய்து கொள்ள வேண்டுமா?' என்று.

கல்யாணம் செய்து கொள்ள வேண்டாம் என்று எண்ணமிட்டபடி தான் அவன் சாக்ரட்டீஸைக் கேட்டிருக்க வேண்டும். சாக்ரட்டீஸ்தான் அந்தக் கேள்விக்குப் பதிலளிக்க சரியான ஆள் காரணம் பெண்டாட்டி கையில் சிக்கி அவதிப்பட்டுக் கொண்டிருப்பவராயிற்றே அவர். அவள் உண்மையிலேயே பயங்கரமானவள் - முதலையின் மூர்க்கத்தனம் கொண்டவள். அவள் கெட்டிலில் கொதிக்கிற நீரை அவருடைய முகத்தில் வீசி, தாக்கியிருக்கிறாள். அவருடைய முகத்தில் பாதியளவு கருகிப்போனது. புண் ஆறினாலும் அவரது வாழ்க்கை நெடுகிலும் அந்த வடு நிலைத்து விட்டிருந்தது. அத்தனை அருமையான மனிதர் சாக்ரட்டீஸ், அவருக்கு அப்படியோர் அரக்கி மனைவியாக வாய்த்திருந்தாள். அதனால்தான் அந்த இளைஞன் அவரிடம் வந்து கேட்டது. சாக்ரட்டீஸ் சொன்னார், 'ஆகா, நான் சொல்வதை நீ கேட்பாயானால் திருமணம் செய்து கொள். இரண்டு சாத்தியங்கள் இருக்கின்றன. என்னுடைய பெண்டாட்டி மாதிரி உனக்கும் அமைந்து விட்டால், என்னைப்போல் நீயும் தத்துவமேதை ஆகிவிடலாம். அல்லது, ஒரு நேர்த்தியான பெண் மனைவியாக அமைந்துவிட்டால், உண்மையிலேயே உன் வாழ்க்கை மகிழ்ச்சியாயிருக்கும், இரண்டு சாத்தியங்களுமே விரும்பத்தக்கவைதாம்' என்று.

அவர் சொன்னார், 'நீயும் என்னைப்போல் தத்துவமேதை ஆகிவிடலாம்' என்று. பெண்டாட்டி குறை கூறுவதும், தொல்லை கொடுப்பதும் தொடர்ந்தால் அது ஆழ்ந்து சிந்திப்பதற்கு உதவி யாயிருக்கும். போகப் போக பிணைப்பற்ற உணர்வு தொடங்கிவிடும். பாதிப்புற்ற நபர், 'எல்லாமே பிரமை, மாயை' என்று எண்ணத் தொடங்கி விடுவார்.

எனவே, வாழ்வின் சிக்கல்களைத் தவிர்க்க முனையாதீர்கள். காரணம், வாழ்க்கை என்றாலே பெரும்சிக்கல் என்றுதான் அர்த்தம். அவற்றைக் கடந்து செல்லக் கற்றுக் கொள்ளுங்கள். காரணம் அதுவே வளர்ச்சிக்கான வழி.

நாடோடி ஒருவன் ஒரு வீட்டுக் கதவைத் தட்டினான். கதவைத் திறந்த பெண்மணி இறுகிய முகத்துடன், தடிமனாய் இருந்தாள்.

'மகிழ்ச்சியற்ற நாடோடியே, மரியாதையாக இங்கிருந்து போய்விடு. நீ போகலேன்னா என் புருசனைக் கூப்பிடுவேன்' என்று கூவினாள் அவள்.

'நான் அப்படி நினைக்கலை. அவன் வீட்டிலிருக்க மாட்டானே' என்று சொன்னான் நாடோடி.

'அது உனக்கெப்படித் தெரியும்' பெண்மணி கேட்டாள்.

'ஏன்னா, உன்னைப் போன்றவளைக் கல்யாணம் செய்து கொண்டவன் சாப்பாடு நேரத்தில் மட்டும்தான் வீட்டில் இருப்பான்' என்றான் அந்த நாடோடி.

கேள்வி அலோக்கிடம் இருந்து. அலோக், உண்மையிலே ஒரு பயங்கரமான பெண்ணைக் கண்டுபிடியப்பா.

> *'தற்போது நான் உணர்கிறேன், ஒருவர் தயார் நிலையில் இல்லாவிடில் எதுவுமே சாத்தியமில்லை என்று. நான் பல ஆண்டுகளாக அந்தத் திறவுகோலைத் தேடிக் கொண் டிருந்தேன். தங்களிடமும் பலமுறைக் கேட்டுவிட்டேன். தாங்களோ அமைதியாயிருந்தீர்கள். திடீரென்று ஒருநாள் அந்தத் திறவுகோலை எனக்கு வழங்கினீர்கள். பகவானே, தற்போது அந்தத் திறவுகோல் என்னிடம் உள்ளது. ஆனால், அதைக்கொண்டு என்னால் திறக்க முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. என்னுள் தடைகள் இருக்கின்றன.*
>
> *என்னிடம் பூட்டு இருக்கிறது, பூட்டைத் திறப்பதற்கான திறவுகோலும் இருக்கிறது. அப்படியிருக்க ஏன் இவ்வாறு நடக்கிறது? தாங்கள் இங்கே இருக்கிறீர்கள். என்னுடைய வகையற்ற நிலையைப் பாருங்களேன். ஒருசமயம் என்னிடம் திறவு கோல் இல்லையே என்ற நினைப்பில்*

*அமைதியற்றவனாயிருந்தேன். தற்போது என்னிடம் திறவுகோல் இருந்தாலும் முன்னைவிட அமைதிக் குலைவுக் குள்ளாகியிருக்கிறேன். பகவானே, தப்வு செய்து உதவுங்கள். தாங்கள் எப்போதுமே உதவிக் கொண்டிருப் பவர் என்பதை நான் அறிவேன். என்னுள் தடைகள் இருக்கின்றன. அவற்றை எப்படி அகற்றுவது என்பதைத் தயைகூர்ந்து எனக்குச் சொல்லுங்கள். எனவே.. எனவே...'*

முதலாவது: நான் உமக்குத் தந்த திறவு கோல் போலியானது. காரணம், அசலான திறவுகோலை வழங்க இயலாது. நீங்களாகத்தான் அதைத்தேடி, முயன்று அடைந்தாக வேண்டும். நீங்கள் மிகுதியான அளவில் என்னருகே இருப்பதால், 'ரொம்பசரி, இந்தா பெற்றுக்கொள்' என்று சொல்லிவிடுகிறேன். தற்போது உங்கள் தலையை சுவரில் மோதிக் கொண்டிருக்க வேண்டாம். அந்தத் திறவுகோலை எறிந்து விடுங்கள். உங்களிடம் தவறேதுமில்லை, திறவுகோல்தான் தவறானது.

எல்லாத் திறவுகோல்களுமே தவறானவைதாம். காரணம், பூட்டு உங்களுடையது. அதற்கான திறவுகோலை எப்படி நீங்கள் பிறரிடம் இருந்து பெற முடியும்? பூட்டு நீங்கள்தான். பூட்டை உருவாக்கிய நீங்களே உங்களுக்குள் திறவுகோலையும் உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

நீங்கள் திறவுகோலை உருவாக்கிக் கொண்டதுமே பூட்டு மறைந்துவிடுகிறது. அந்தத் திறவுகோல்தான் அதைத் திறந்தாக வேண்டும் என்பதில்லை. நீங்கள் அறிந்து கொண்டதுமே பிரச்சினை மறைந்துவிடுகிறது. புரிதல் இருக்கும் இடத்தில் பிரச்சினை இருப்ப தில்லை. திறவுகோல் ஒருபோதும் பூட்டை எதிர்கொள்வதில்லை. திறவுகோல் இல்லாத காரணத்தால்தான் பூட்டு இருக்கிறது. திறவுகோல் அங்கிருக்கும் பொழுது பூட்டு இருப்பதில்லை, அது மறைந்து விடுகிறது.

அத்துடன், நான் அந்தத் திறவுகோலை வழங்க முடியாது. இரவலாய் பெறப்படுகிற எல்லாமே தொல்லை தருவதாகிவிடும். காரணம், நீங்கள் முன்பே இடர்மிக்கவராயிருக்கிறீர்கள், தற்போது இரவல் வாங்கிய ஒன்றால் உங்களுடைய இடர்ப்பாடு மேலும் அதிகரித்துவிட்டிருக்கும்.

நான் கேட்டறிந்த ஒன்று:

அதிகநேரம் வேலைபார்க்கும் நிர்வாக அதிகாரி ஒருவர் மருத்துவரிடம் சென்றார். அவர் வரம்பு மீறி செயல்பட்டுக் கொண்டிருப்பதால், கண்டிப்பாய் உடற்பயிற்சி செய்ய வேண்டும் என்று அவரிடம் சொல்லப்பட்டது.

நீங்கள் அலுவலகம் போய் வருவதில் காரை நம்பிராமல் ஒரு *ஹூப் (hoop)பை உருட்டியபடி போய்வர வேண்டும் என்றார் மருத்துவர். 'அது உங்களைப் புதிய மனிதனாக்கிவிடும்' என்றும் தெரிவித்தார்.

எனவே அந்த அதிகாரி ஒரு வளையத்தை வாங்கி உருட்டியபடி அலுவலகம் சென்று வந்தார். அவர் வேலைபார்க்கும் நேரங்களில் அந்த வளையம் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கும். ஒருநாள், வீட்டுக்குத் திரும்புகையில் அந்த வளையம் எப்படியோ காணாமல் போய்விட்டது. வாகனங்களை நிறுத்தும் இடத்தில் உள்ள காவலர், 'தவறுதலாக வேறுயாரிடமோ அதுபோய்ச் சேர்ந்துவிட்டது' என்று சொன்னார். 'ஆனாலும் கவலை வேண்டாம் நாங்கள் எந்தத் தொகையும் பெறாமல் வேறொன்றைக் கொடுத்து விடுகிறோம்'

அதிகாரி கேட்டார், 'என்னது, நாளைக்கா? நான் இன்னைக்கு ராத்திரி எப்படி வீட்டுக்குப் போய்ச் சேருவதாம்?' என்றார்.

புரிதல் இல்லையென்றால் எல்லாச் செயல்முறைகளுமே உதவுவதற்குப் பதிலாக உபத்திரவமாகிவிடும்.

புரிந்து கொள்ளும் திறன் இல்லையெனில், என்னுடைய கண்களின் வழியே நீங்கள் காணத் தொடங்குவீர்கள். உங்கள் கண்கள் பார்ப்பதை நிறுத்தப் போவதில்லை. என்னுடைய கண்களின் மூலம் அவை பார்த்துக் கொண்டேயிருக்கும். அது ஒரு பெரிய சிக்கலாகி விடும்.

மற்றொரு குட்டிக்கதை.

அந்தப் பெண்மணி தன் சிநேகிதியிடம் கேட்டாள். 'வீட்டில் தீப்பிடித்து உன்னுடைய கணவரின் புருவங்கள் எரிந்து பொசுங்கி விட்டதாய் கேள்விப்பட்டேனே' என்று.

---

* *ஹூப் (hoop) - பீப்பாய் போன்றவற்றைச் சுற்றிப் பிணைக்கப் பட்டிருக்கும் உலோக அல்லது மரவளையம்*

'ஆமாம். ஆனால், மருத்துவர் ஓர் அதிசயம் பண்ணிவிட்டார். அவர் ஒரு நாயின் பின்னங்காலில் இருந்து எடுத்த முடியைக் கொண்டு அவருக்குப் புதிய புருவத்தை ஒட்டி வைத்துவிட்டார்' என்று பதில் வந்தது.

'நம்பவே முடியலை. ஆமாம். இப்போ அவர் எப்படி இருக்கார்?'

'ஓ. அப்படியொன்றும் மோசமில்லை. ஆனாலும் ஒரு சின்ன பிரச்சினை. அவர் விளக்குக் கம்பத்தைக் கடந்து செல்கிற போதெல்லாம் அதிர்ச்சிக்குள்ளான மாதிரி இருக்கார்.'

*சூத்திரம் - 51* *'தத் வைராக்யதபிதோஷ பீஜட்சயே கைவல்யம்'*

'இத்தனை ஆற்றல்களையும் விடுவதன் மூலம் தீமையின் விதை நசிந்து விடுகிறது. அதனால் கைவல்யம் (விடுதலை) கிடைக்கிறது'

*சூத்திரம் - 52* *'ஸ்தான்யுப நிமந்த்ரணே*
*சங்கஸ் மயாகரணம்*
*புணர நிஷ்ட ப்ரசங்காத்'*

தேவர்களின் தூண்டுதலால் யோகி மகிழவோ மயங்கவோ கூடாது. அதனால் தீமை ஏற்படுகின்ற அச்சம் உள்ளது.

யோகிகளால் தங்கள் பதவிக்குத் தீங்கு வந்துவிடுமோ என்று பயந்து, தேவர்கள் பல உபாயங்களின் மூலம் அவர்களை நிலையிழக்கச் செய்ய முயல்வார்கள்.

இந்த உலகில் எவ்வித பிணைப்பும் இல்லாமல் இருப்பது ரொம்பக் கடினம், ஆனால் அதைவிடவும் கடினம், ஆன்மா சார்ந்த உலகம் தனது வாசல்களைத் திறக்கும்பொழுது பிணைப்பற்றவராய் இருப்பதென்பது. இரண்டாவதில் உள்ள சிரமம் பத்துலட்சம் மடங்கு அதிகமாகும், காரணம் உலகாயத அதிகாரங்கள் உண்மையான அதிகாரங்களல்ல. அவை போதுமான விளைவை உண்டுபண்ண இயலாதவை. அவை ஒருபோதும் உங்களை நிறைவடையச் செய்வதில்லை. உண்மையில் இவ்வுலகில் செய்யப்படும் புதிய சாதனைகளே விருப்பங்களை மேலும் அதிகரிக்கும். உங்களை நிறைவடையச் செய்வதற்குப் பதிலாக அது உங்கள் மனத்தைப் புதிய பயணங்களில் செலுத்தும். ஆக, இவ்வுலகில் நீங்கள் முயன்று அடைகிற அதிகாரம் எதுவாயினும் அதைப் பயன்படுத்தி புதிய ஆசைகளைத் தோற்றுவிக்கிறீர்கள்.

உலகில் நீங்கள் எவ்வளவுதான் பணத்தைச் சேகரித்தாலும், இன்னும் அதிகப்பணத்தைப் பெறுவதற்கு முதலீடு செய்வீர்கள். அந்நிலையில் பணம் மிகுதியாய் வந்தடைகிறது. இன்னும் கூடுதல் பணத்துக்காக மேலும் முதலீடு செய்கிறீர்கள். இப்படியே அது தொடர்கிறது. வழிகள், விளைவுண்டாக்கும் வழிகள் மட்டுமே தொடர்ந்து கொண்டிருக்கின்றன. எல்லை என்பதே இல்லாமல், எதுவும் முடிவுக்கு வந்தபாடில்லை. சற்று முன்பின்னாக என்றாலும் முட்டாள் கூடம் அறிந்து கொள்வான், தான் ஒரு தவறான வட்டத்தில் சுழன்று கொண்டிருக்கிறோம். அதைக் கைவிட்டாலன்றி வேறு வழியில்லை அதில் இருந்து விடுபடுவதற்கு என்பதை. தன் வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கிற, அறிவுநுட்பம் உள்ள ஒருவருக்கு அது ரொம்பத் தெளிவாகவே தெரியும்.

ஆக, உலகாயத விஷயங்களில் பிணைப்பற்றிருப்பது ஒன்றும் அத்தனை இடர்ப்பாடாயிருக்காது. ஆனால் உள்ளார்ந்த ஆற்றல்கள் என்று வருகிறபோது, மனம் சார்ந்த ஆற்றல்கள், அவை உங்கள்

இருப்புணர்வுக்கு மிக நெருக்கமானவை என்பதோடு எல்லையற்ற நிறைவளிப்பதும் ஆகும் அவற்றில் இருந்து விடுபட்டிருப்பது நடவாத ஒன்று. ஆனால், நீங்கள் பிணைப்புற்றவராயிருந்தால், அந்நிலையில் நீங்கள் மறுபடியும் ஓர் உலகைத் தோற்றுவித்துக் கொண்டு முடிவான குறிக்கோளாய் அமைகிற விடுதலை (ultimate liberation) யில் இருந்து வெகுதொலைவுக்குச் சென்று விடுவீர்கள்.

காரணம், நீங்கள் எதை உங்கள் சுவாதீனத்தில் வைத்திருந்தாலும் அவை உங்களைச் சுவாதீனப்படுத்தி (possess)க் கொண்டுவிடும். உங்களால் வைத்துக் கொள்ளக்கூடிய எல்லாவற்றையும் நீங்கள் விட்டுவிட வேண்டும் - உங்களுடைய உண்மையான இயல்பைத் தவிர எல்லாவற்றையும். எதை உங்களால் விடமுடியாதோ அதை விட வேண்டும். நீங்கள் பெரிதும் விரும்புகிறவற்றை மனமாற விட்டுக் கொடுக்க வேண்டும்.

இந்தச் சூத்திரத்தில் கிட்டத்தட்ட சாத்தியமற்ற ஒன்றையே பதஞ்சலி வேண்டுகிறார். ஆனால், புரிதலின் மூலம் அதுவும் சாத்தியந்தான். அது மிகவும் நிறைவளிப்பது, திருப்தி செய்வது அது தன் முனைப்பின் (ego) நுட்பமான மகிழ்ச்சியை, தூய்மையான ஒன்றை உங்களுக்கு வழங்குகிறது. அதில் எந்தவொரு கடுமையான வலியையும் நீங்கள் உணர மாட்டீர்கள். அது உங்களை ஏமாற்றுவதில்லை. உலகாயத விஷயங்களோ ஏமாற்றத்தைக் கொண்டவை. ஏமாற்றமின்றி வேறெதுவும் இருக்காது. மக்கள் இதைப்புரிந்து கொள்ளாமல் தவிர்ப்பது வியக்கத்தக்கதுதான். தங்களைத் தாங்களே அவர்கள் தொடர்ந்து ஏமாற்றிக் கொண்டிருப்பதும், அதில் இன்னும் கொஞ்சம் நம்பிக்கை இருப்பதாய் நம்பிக் கொள்வதும் வியப்பளிக்கிறது.

எவ்வளவு பெரிய வீட்டை உங்களால் உருவாக்க முடிகிறது என்றாலும், அரசியல் சார்ந்த விதத்திலும், பொருளாதாரம் சார்ந்த விதத்திலும், சமூகம் சார்ந்த விதத்திலும் நீங்கள் எவ்வளவுதான் அதிகாரம் பெற்றவராயின் மரணம் உங்களிடமிருந்து எல்லாவற்றையும் அபகரித்துச் சென்றுவிடும். இதனைப் புரிந்து கொள்ள பெரிய அளவில் அறிவு நுட்பம் எதுவும் தேவைப்படாது. ஆனால் உள்ளார்ந்த ஆற்றல்கள் தேவைப்படும். மரணத்தால் அவற்றை எடுத்துச் செல்வதில்லை. அவை மரணத்தை விஞ்சியவை. அவை ஒருபோதும் உங்களை ஏமாற்றுவதில்லை. அவை உங்களுடைய

ஆற்றல்கள். உங்களுடைய நிகழ்த்தும் தன்மைகள் மலர்ச்சி அடைகின்றன. அவற்றை நீங்கள் விட்டுவிடத் தேவையில்லை. அவற்றைத் துறப்பதற்கான அவசியம் இல்லை. ஆனால், பதஞ்சலி சொல்கிறார் அவையும் துக்கப்பட வேண்டியவைதாம் என்று. இல்லையேல் நீங்கள் கற்பனை உலகில் பயணிக்கத் தொடங்கி விடுவீர்கள். மறுபடியும் அதிகாரப் பயணம். ஆனால் சமயம் ஓர் அதிகாரப் பயணமல்ல.

நீங்கள் அகந்தையை நாடிச் செல்ல வேண்டியதில்லை, முழுமை (பரம்பொருள்)யைக் கண்டடைய முயற்சிக்கலாம். அகந்தையின் அத்தனை வகைப்பயணங்களையும் விட்டுவிடுவதன் மூலம் முழுமையை அடைவது சாத்தியமாகிறது. நீங்கள் இல்லாதபோது கடவுள் இருக்கிறார்.

புகழ்பெற்ற சூஃபி கதையொன்றைச் சொல்கிறேன் உங்களுக்கு: 'புனிதநிழல்' என்கிற கதை.

முன்பொரு காலத்தில் அருட்தொண்டர் ஒருவர் வாழ்ந்து வந்தார். ஒரு மனிதரிடம் அத்தனை தெய்விகத் தன்மை இருப்பதை அறிந்து, அவரைக்காண தேவதூதர்களும் விண்ணில் இருந்து இறங்கி வந்தனர். நட்சத்திரங்கள் ஒளியைப் பரவச் செய்வது போல், மலர்கள் நறுமணத்தைப் பரப்புவது போல் அந்தப் புனிதரும் தம்மையறியாமலே ஒழுக்கத்தைப் பரப்பி வந்தார். இரண்டே வார்த்தைகளில் அவருடைய நாளைச் சுருக்கிவிடலாம் - அவர் வழங்கினார், அவர் மன்னித்தார் என்று - இருந்தாலும் அந்த வார்த்தைகள் அவருடைய வாய் வழியே வந்ததில்லை. அவருடைய புன்னகையில், இரக்கத்தில், பிறரை நேசிப்பதில், துன்பங்களை மன அமைதியோடு தாங்கிக் கொள்வதில் அவை வெளிப்பட்டன.

தேவதூதர்கள் இறைவனிடம் சொன்னார்கள், 'பிரபோ, அற்புதங்கள் நிகழ்த்தும் ஆற்றலை அவருக்கு வழங்கிடும்' என்று.

'அந்த மனிதன் எதை விரும்புகிறான் என்று கேளுங்கள்' பதில் வந்தது இறைவனிடமிருந்து.

அவர்கள் அருட்தொண்டரிம் சென்று, 'உம்முடைய கரத்தால் பிணியாளர்களைத் தொட்டுக் குணப்படுத்துவதை விரும்புகிறீரா?' என்று கேட்டனர்.

'இல்லை, உண்மையில் கடவுளே அதைச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன்'

'குற்றப் பழியுடையவர்களை மாற்றவும், திரிந்தலையும் ஆன்மாக்களை நல்வழிக்குக் கொண்டுவரவும் விரும்புகிறீரா?'

'இல்லை. அது தேவதூதர்களின் வேலைத்திட்டம். என்னுடைய நோக்கமாகாது.'

'பொறுமையின் முன் மாதிரியாகவும், உம்முடைய நற்பண்பின் சுடரொளியில் மக்களை ஈர்ப்பவராகவும், அவ்விதமாய் இறைவனிடம் இருந்து பிரிக்கப்பட்டவர்களாகி விடுவார்கள்'

'அப்படியானால் எதைத்தான் விரும்புகிறீர்?' தேவதூதர்கள் கேட்டனர்.

'நான் எதை விரும்புவது?' புன்னகையுடன் கேட்டார் புனிதர். 'இறைவன் தம்முடைய அருளை எனக்கு வழங்குகிறார். அதுவே நான் அனைத்தையும் பெற்றார்போலத்தான்' என்றார் அவர்.

தேவதூதர்கள் தெரிவித்தனர், 'நீர் ஏதாவது அற்புதச் செயலைக் கோரிப் பெற்றாக வேண்டும். அல்லது ஒன்றை உமக்கு வலுக்கட்டாயமாய் வழங்கும்படி ஆகும்' என்று.

'ரொம்ப நல்லது, நான்தான் செய்தேன் என்று அறியாமலேயே நல்ல காரியங்களை நான் செய்ய வேண்டும்'

தேவதூதர்கள் குழப்பமுற்றனர். அவர்கள் ஆலோசித்து கீழ்க்கண்ட திட்டத்தை தீர்மானித்துக் கொண்டனர். புனிதரின் நிழல் பக்கவாட்டிலோ, பின்னாடியோ விழுகிற போதெல்லாம் அவர் அதனைப் பார்க்க முடியாது. அந்த நிழலுக்கு நோயைக் குணப் படுத்துகிற, வலியைத் தணிக்கிற, வருத்தத்தில் ஆறுதல் அளிக்கிற ஆற்றல் இருக்கும்.

புனிதர் ஓரிடத்தில் இருந்து இன்னோரிடத்துக்கு நடந்து செல்லும்போது நிலத்தில் விழுகிற அவருடைய நிழல் வறண்ட பாதைகளைப் பசுமையாக்கியது, வாடிய செடிகளை மலர வைத்தது, காய்ந்து கிடந்த சிற்றாறுகளில் பளிங்கு போன்ற நீரைப் பாயச் செய்தது, வெளிறிய மங்கலான நிறமுடைய குழந்தைகளுக்கு பளபளப்பான நிறத்தைக் கொடுத்தது, வருத்தமுற்ற ஆண்களுக்கும், பெண்களுக்கும் பெருமகிழ்ச்சியைத் தந்தது.

அந்த அருட்தொண்டர் தம்முடைய அன்றாட வாழ்வில் நட்சத்திரங்கள் ஒளியைப் பரப்புவதுபோல், பூக்கள் நறுமணத்தைப் பரவச் செய்வதுபோல் தம்மையறியாமலேயே தம்முடைய நற்பண்பை அவர் பரவச் செய்து கொண்டிருந்தார். அவருடைய அடக்கத்தைக் கண்ட மக்கள், அவரை மரியாதையுடன் பின்பற்றினர். வெகு விரைவிலேயே அவருடைய பெயர் மறக்கப்பட்டு, 'புனிதநிழல்' என்றே அவர் அழைக்கப்பட்டார்.

இதுதான் நிறைவான குறிக்கோள்: ஒருவர் புனித நிழலாக கடவுளின் நிழலாக மாற வேண்டும். இதுவே ஒரு மனிதனிடத்து நிகழக்கூடிய மகத்தான மாறுதலாயிருக்கும். மையத்தின் இடமாற்றம். இனியும் உங்களுடைய மையமாய் நீங்கள் இருக்கமாட்டீர்கள். கடவுள் உங்களுடைய மையமாகிறார். அவருடைய நிழலைப் போன்று நீங்கள் இருப்பீர்கள். நீங்கள் ஆற்றல் மிக்கவரல்லர், காரணம் ஆற்றல் மிக்கதாய் எந்தமையமும் உங்களிடம் இல்லை. நீங்கள் மாசற்றவரல்லர், மாசற்றதாய் ஒரு மையம் உங்களுக்குள் இல்லை. நீங்கள் சமயப்பற்று உடையவருமல்லர், சமய நம்பிக்கைக்கான எந்த மையமும் உங்களிடம் இல்லை. நீங்கள் மிகப்பெரிய சூன்யமாய் (வெறுமை) இருக்கிறீர்கள். தடுப்புச் சுவர்களோ தடைகளோ இல்லாத பெரு வெளியாய் இருக்கிறீர்கள். இறைவன் உங்களுக்குள் பிரவேசிக்கிறான் எவ்விதத் தடங்கலோ, குறுக்கீடோ இல்லாமல். இறைவன் நீங்கள் விரும்புகிறபடிக்கு இல்லாமல், தாம் இருக்கிறபடிக்கே உங்களுக்குள் தங்கு தடையின்றி நுழைகிறார். அவர் உங்களுடைய மையத்தினூடே நுழையவில்லை, அங்கே எதுவும் இல்லை. மையமே தொலைந்து போயிற்று.

இந்தச் சூத்திரத்தின் பொருள் இதுதான்: நிறைவாக உங்கள் மையத்தை நீங்கள் விட வேண்டியிருக்கும். அப்போதுதான் மறுபடியும் அகந்தையின் வரையறைக்குள் சிந்திக்க மாட்டீர்கள். உங்களால் 'நான்' என்ற சொல்லை உச்சரிக்க முடியாது, உங்களை முழுமையாய் நிர்மூலமாக்கிக் கொள்ள, உங்களை முழுமையாய் துடைத்தெறிய உங்கள் மையத்தை நீங்கள்விட வேண்டும். எதுவும் உங்களுக்குரியதாகாது. மாறாக நீங்கள் கடவுளுக்கு உரியவராகிறீர்கள். நீங்கள் ஒரு புனித நிழலாகி விடுகிறீர்கள்.

அதை நம்புவது சிரமந்தான், காரணம், நீங்க்ள் பயனற்ற பொருள்களில் வைத்த பற்றை அகற்றுவது கடினம். நீங்கள் தேடிக்

குவிக்கிற எல்லாமும் உங்களுக்கு நிறைவைத் தரும் என்ற நம்பிக்கையில் சேர்த்துக் கொண்டே போகிறீர்கள். அறிவு, பணம், அதிகாரம், கவுரவம் என்று திரட்டியபடி இருக்கிறீர்கள். உங்கள் வாழ்க்கையே கண்டதையெல்லாம் உள்ளே திணிப்பதாகிவிடுகிறது. உண்மையல் ஒரு பிணத்தைப்போல் நீங்கள் கனத்தாலும் அதில் ஆச்சரியப்படுவதற்கில்லை. அதைத்தானே நீங்கள் செய்து கொண்டிருக்கிறீர்கள். தூசியையும் புழுதியையும் சேர்த்துக் கொண்டு சொக்கத்தங்கமாய் எண்ணிக் கொள்கிறீர்கள்.

அகந்தையின் வழியே பார்க்கும்போது பைசா பெறாதது எல்லாம் மதிப்பு மிக்கதாகிவிடுகிறது. அகந்தை எதையும் மாற்றி அமைக்கும், உண்மையை மறுக்கும், அது மிகப்பெரிய ஏமாற்றுக்காரன். அது உங்களிடம் பொய் சொல்லியபடி இருக்கும், மாயைகளையும், கனவுகளையும் தோற்றுவிக்கும். அதைக் கவனியுங்கள். அது நுட்பமானது. அதன் வழிமுறைகள் தந்திரமானவையுங்கூட. அது ஒரு வழியில் செல்வதை நீங்கள் நிறுத்தினால் வேறு வழியில் செல்லும். நீங்கள் ஒரு பாதையைத் துண்டித்தால் அது வேறொரு பாதையைக் கண்டுபிடித்துக் கொள்ளும். அது அகந்தையின் இன்னொரு பாதை என்பதை நீங்கள் எண்ணிக்கூட பார்த்திருக்க மாட்டீர்கள். அத்தகையதோர் தந்திரமான முறையை அது மேற்கொள்ளும்.

மாடிப் படிகளில் விழுந்து காலை உடைத்துக் கொண்ட ஒரு முதியவளைப் பற்றி நான் கேட்டறிந்திருக்கிறேன்.

மருத்துவர் அவளுடைய காலை ஒரு மாவுக்கட்டு கட்டி (cast) வைத்து, படிகளில் மேலும் கீழுமாய் நடக்கக்கூடாது என்று எச்சரித்து அனுப்பினார். அது சரியாவதற்கு ஆறுமாதம் பிடித்தது. அதன்பிறகு அந்த வார்ப்பை எடுத்து விடலாம் என்று மருத்துவர் தெரிவித்தார்.

'நான் இப்போது படிகளில் ஏறலாமா?' முதியவள் கேட்டாள்.

'ரொம்ப சந்தோஷம். எனக்கு சாக்கடைக் குழாயைப் பிடிச்சு ஏறி இறங்கினதில் வெறுத்துப் போச்சு' என்று பண்பற்ற விதத்தில் சிரித்தாள் அவள்.

நீங்கள் மாடிப்படியில் இருந்து வருகிற அகந்தையைத் தடுத்தால், அது சாக்கடைக்குழாய் வழியே வரும் - ஆம், அது வந்துவிடும்.

தங்களைச் சமயப்பற்றுடையவர்களாய் சொல்லிக் கொள் பவர்களைப் பாருங்கள். அவர்கள் எல்லாவற்றையும் துறந்தாலும்,

துறவை (தகுதிகள், உரிமைகளை)த் துறப்பதில்லை. எல்லாவற்றையும் துறந்தவர்கள் துறவைப் பற்றிக் கொண்டார்கள். துறவே அவர்களுடைய செல்வமாகிவிட்டது - சாக்கடைக்குழாய் தற்போது அதே அகந்தையின் இடத்துக்குத்தான் ஆனால் வெகுதந்திரமான, நுட்பமான வழியில் அவர்கள் ஏறிக் கொண்டிருக்கிறார்கள். மற்றவர்களை ஏமாற்றுவது மட்டுமல்ல, தங்களைத் தாங்களே அவர்கள் ஏமாற்றிக் கொள்ளும் அளவிற்கு அதிநுட்பமானது அது.

கவனியுங்கள். உலகாயதமான (wordly) மனிதர் நீங்கள், பின்பொரு நாள் விரக்தியடைகிறீர்கள். ஒருநாள் எல்லாருமே அதை உணரத்தான் செய்கிறார்கள். அதில் பிரத்யேகமாய் எதுவும் இல்லை. அப்போது சமயப்பற்றுடையவராய் நீங்கள் மாறத் தொடங்குகிறீர்கள், அதுபற்றித் தற்பெருமை கொண்டவராகிறீர்கள். மற்றவர்களைப் பாவிகளாகவும் உலக வாழ்வுடன் தொடர்புடையவர்களாகவும் பார்க்கத் தொடங்குகிறீர்கள். நீங்கள் சமயப்பற்றுடையவராயிருக்கிறீர்கள, ஒரு சந்நியாசியாகி விடுகிறீர்கள், துறந்து விட்டீர்கள்.

சற்றே கவனியுங்கள். பகைவன் மற்றொரு வாசல் வழியாய் பிரவேசித்திருக்கிறான். இந்த உலகம் துறக்கப்பட வேண்டியதல்ல, அகந்தைதான் துறக்கப்பட வேண்டியது. ஆக, அதனை அனுமதிக்காதபடிக்கு ஒருவர் ரொம்ப ரொம்பக் கவனமாயிருக்க வேண்டும்.

நினைவில் கொள்ளுங்கள், அகந்தையை அடக்கி வைக்க முடியாது. புரிதல் என்கிற வெப்பத்தின் மூலம், புரிதல் (understanding) என்கிற தீயின் வழியே அது அப்படியே ஆவியாகிவிட வேண்டியது தான். நீங்கள் அதை அடக்கி வைபபது எளிதுதான். நீங்கள் அடக்கமானவராய், எளிமையானவராய் மாற முடியும், ஆனால் உங்கள் எளிமையின் பின்னே அது (அகந்தை) மறைந்திருக்கும்.

ஓர் ஆபத்தான நோய் தன்னைப் பாதித்திருக்கிறதென்றுதான் நம்புவதாக ஒரு பெண் மருத்துவரிடம் தெரிவித்தாள். அவளுக்கு அத்தனை முட்டாள்தனம் கூடாது, நோய் இருக்கிறதா இல்லையா என்பதை அவளால் தெரிந்து கொள்ள முடியாது, காரணம், 'நோய் எதுவாயினும் தன்னுடன் அமைதியின்மையை, அசவுகரிய உணர்வை அது கொண்டுவருவதில்லை' என்றார் அவர்.

"ஆக, நோய் பற்றித் தெரிந்து கொள்வதற்கு எந்த வழியும் இல்லை அவளுக்கு."

'ஆனால் டாக்டர், நானும் அதையேதான் உணர்கிறேன் எந்த அசவுகரியமும் இல்லை, நோய் இருக்கு.'

உங்களை நீங்கள் ஏமாற்றிக் கொண்டேயிருக்கவும், அத்துடன் அறிவுக்கு ஏற்புடையவாறு விளக்கம் கொடுக்கவும் உங்களால் முடியும். மேலோட்டமாய் பார்க்கிறபோது அவை அறிவுக்கு ஏற்புடையதாய் தெரியலாம். மேற்பரப்பில் அவை கிட்டத்தட்ட சான்றுகளாகவே தோற்றமளிக்கலாம். ஆனால், அவற்றைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

அது வேறு யாருடைய வேலையும் அல்ல. நீங்கள்தாம் கண்டறிய வேண்டும். ஒட்டுமொத்த உலகமும் பார்க்க முடியும். ஆனால், அதை நீங்கள் பார்க்க வில்லையென்றால் அது பயனற்றதுதான்.

தற்போது நவீன உளவியல் மெள்ள மெள்ள தனிநபர் சிகிச்சை யில் இருந்து கூட்டு சிகிச்சைக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறது. அதற்கு ஒரேயொரு காரணத்தை மட்டுமே சொல்ல முடியும். உளப்பகுப்பாய்வு செய்பவர்களுக்கு நோயாளியை நம்பச் செய்வது ரொம்பவும் கடினமான வேலையாய் இருக்கிறது. நோயாளிபற்றி, அவருடைய மனநிலைகள் பற்றி, பகுத்தறிவிற்கு ஏற்றவாறான விளக்கங்கள், அடக்கிவைத்தல்கள், ஏமாற்ற நிலைகள் அவற்றின் விளைவுகள், முட்டாள்தனங்கள் பற்றி தனியொருவராய் நம்பிக்கையூட்டுவது ரொம்பவும் கடினம். ஆனால் ஒரு குழுவாக இருந்து விளக்கும்போது அது எளிதாகும். காரணம், ஒட்டுமொத்த குழுவும் அந்த முட்டாள்தனத்தை அதன் வெளிப்படையைப் புரிந்து கொள்ள முடியும். அவர் ஏதோ ஒன்றைப் பற்றிக் கொண்டிருப்பதை, தேவையில்லாமல் துன்பப்படுவதை அவர்கள் கண்டு கொள்வார்கள். ஒரு நபரின் புரிதல் உங்கள்மீது செயல்படுவதைவிட, ஒரு குழுவாய் பலரின் புரிதல் உங்கள்மீது செயல்படும்போது அது பெரிய அளவில் இருக்கும். அதனால்தான் தனிநபரால் அளிக்கப்படும் சிகிச்சையை விட குழுவாக அளிக்கும் சிகிச்சைமுறை வளர்ச்சி கண்டிருக்கிறது.

குழு சிகிச்சை வெற்றி பயக்கும் வலிமை கொண்டது: இருபதுபேர் ஒரு குழுவாக செயல்படுகிறார்கள், பத்தொன்பது பேர் உங்களுக்கு விருப்பமில்லாத ஒன்றை நீங்கள் செய்வதை, இன்னமும் அதைப் பற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு எச்சரிக்கைக் கொள்கிறார்கள்.

என்னிடம் ஒரு சந்நியாசி வந்தார். ரொம்பவும் நல்ல மனிதர். ஆனால் அவருக்கு ஓர் அழகான பெயரை நான் வழங்கினேன் என்பதில் அவர் ரொம்பவும் மகிழ்ச்சியாய் காணப்பட்டார். நான் எல்லாருக்குமே அழகான பெயர்களைச் சூட்டுகிறேன். அவர் தம்முடைய பெயர் குறித்து தற்பெருமை கொண்டுவிட்டார். அவர் சொன்னார், 'பகவானே, நீங்கள் வியத்தற்குரியவர். என்ன மிகச் சரியாக உருப்படுத்தும் (represent) ஒரு அழகான பெயரை எனக்கு வழங்கி விட்டீர்கள்' என்று. உங்கள் பெயர் உங்களைப் பற்றி எடுத்துரைப் பதில்லை. இவை என்னுடைய நம்புதல்களேயன்றி நடைமுறைக்கு உரியன அல்ல. இவை என்னுடைய கனவுகளேயன்றி மெய்ம்மைகள் அல்ல. நான் அந்தச் சந்நியாசியை 'சத்யானந்தா' என்று அழைத்தேன். வாய்மையின் அனுபவத்தில் இருந்து கிடைக்கிற ஆனந்தம். ம்ம்... அதுவே முடிவான குறிக்கோள் இல்லையா ஆனால் அவர் சொன்னார், 'பகவானே, சத்யானந்தா என்றதன் மூலம் என்னை மிகச்சரியாக, இம்மியும் பிசகாமல் கண்டு கொண்டுவிட்டீர்கள். உங்களுடைய புரிந்து கொள்ளும் திறன் என் மனதில் ஆழப்பதிந்து விட்டது' என்று.

இது ரொம்பத் தவறு என்று நான் தற்போது எச்சரிக்கையாகி விட்டேன். அது ஒரு தவறான புரிதல். இந்தப் பெயரை அவருக்கு நான் வழங்கியிருக்கக் கூடாது. அவருடைய நன்னிலை உணர்வில் (Euphoria) இருந்து நான் அவரைக் கீழே தள்ளிவிட விரும்பினேன்.

ஒரு சில நிமிடங்களுக்குப் பிறகு அவர் பேசத் தொடங்கினார், 'பேராசை, கோபம் போன்ற சமாசாரங்கள் எனக்குப் பிடிக்காது. அவையெல்லாம் விலங்குத்தன்மைகள்' என்று. 'ஒரு கோழையாகி இருக்கக்கூடாது' என்றேன் நான். அவர், 'என்னது கோழையா? நீங்கள் என்னைக் கோழை என்றா சொல்கிறீர்கள்?' என்று கூவியே விட்டார். 'சத்யானந்தா' என்பதன் பொருளையே மறந்து அவர் கூச்சல் போட்டார், என்னைத் தாக்கவே தயாராகிவிட்டார். 'என்னையா கோழை என்றீர், நான் ஒன்றும் கோழையல்ல' என்று இரைந்தார். நான் அவரிடம் சொன்னேன், 'நீங்கள் கோழையில்லை என்றால் ஏன் உங்களைத் தற்காத்துக் கொள்கிற முயற்சியில் இறங்குவது? நீர் சொல்வது தவறு' என்று சொல்லிவிட வேண்டியதுதானே. அதுகூட அவசியமில்லைதான். நீங்கள் கோழையில்லை என்றால் அதைப்பற்றி ஏன் வருத்தப்படுவது? இத்தனை கோபப்பட வேண்டுமா? ஏன் இப்படி உச்சஸ்தாயியில் வீறிடுவது? பைத்தியம் பிடித்தமாதிரி ஆகி விட்டீரே?' என்று.

தற்போது அங்கிருக்கிற ஒருவர் ஏதோ இந்த மனிதர் வன்முறையில் இருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முயல்வதாய் வெறியிடித்த மாதிரி நடந்து கொள்வதாய் உணர்வார். ஆனால் அவர் அதைப் புரிந்து கொண்டிருக்க மாட்டார்.

ஒரு குழுவில், நீங்கள் நீண்ட நேரம் செயல்படுவீர்களாயின், அந்தக்குழு. ஓர் அபத்தமான காரியத்தை உங்கள் விருப்பத்துக்கு மாறான ஒன்றை நீங்கள் செய்வதைப் பார்த்துக் கொண்டிருப்பது மெள்ள மெள்ள உங்களுக்குத் தெரியவரும். உங்கள் மனநிறைவுக்கு எதிரான, உங்கள் வளர்ச்சிக்கு எதிரான ஒன்றை நீங்கள் செய்து கொண்டிருப்பது புலனாகும். ஒரு பிணியை நீங்கள் பற்றியிருப்பதுடன், 'அதில் இருந்து நான் விடுபட விரும்புகிறேன்' என்றும் சொல்கிறீர்கள்.

உங்களுடைய செயலில் எது தவறாகிப் போனது என்பதை உங்களைத் தவிர கிட்டத்தட்ட எல்லாருமே அறிவார்கள். நீங்கள் ஒரு தற்பெருமைக் காரர் என்பது உங்களைத் தவிர எல்லாருக்குமே தெரியும். உங்களை மிகவும் அடக்கமானவர், எளிமையானவர் என்று நீங்கள் மட்டுமே எண்ணிக் கொள்கிறீர்கள். உங்களிடமுள்ள சிக்கல் எல்லாருக்கும் தெரிந்தே இருக்கிறது. உங்களுடைய பித்துநிலையை உங்களைத் தவிர எல்லாருமே அறிந்திருக்கிறார்கள். நீங்கள் தொடர்ந்து அதைப் பாதுகாத்துக் கொள்ள முற்படுகிறீர்கள். ஒரு பண்பாடு, ஒழுங்குமுறை, சம்பிரதாயம் கருதி சமூகத்தில் யாரும் உங்களிடம் தெரிவிப்பதில்லை. இந்தக் காரணத்துக்காகத்தான் குழுவின் செயல்பாடு பயன்தருவதாயிருக்கும் என்பது. காரணம் அது பண்பாடு கருதி சும்மா இருந்துவிடாது. அது உண்மை பேசுவதாகவே இருக்கும். 'இதுதான் உங்களுடைய பிரச்சினை என்று பலரும் சுட்டிக்காட்டி, உங்களுடைய மனப்புண்ணைச் சீண்ட அது வேதனையளிக்கும் இல்லையா... நேருக்கு நேராய் தனிநபர் உங்களுக்கு எச்சரிக்கை செய்ய முயல்கிறபோது அது சிரமமாயிருக்கும், காரணம் இவர் சொல்வது தவறாக இருக்கும் என்று நீங்கள் நினைக்கலாம், ஆனால் இருபதுபேர் என்கிறபோது அதில் தவறு இருக்க முடியாதுதானே. இருபது பேரில் தவறு நிகழ்வதற்கான சாத்தியம் குறைவு. அத்துடன் உங்களையே நீங்கள் சார்ந்திருந்து அதன் முக்கியக் கருத்தைப் புரிந்து கொள்கிறீர்கள்.

அதனால்தான் புத்தர் 'சங்கம்' என்கிற ஒரு பெரிய அமைப்பை உருவாக்கியது. பத்தாயிரம் துறவிகள் கொண்ட ஒரு சிறந்த அமைப்பு

அது. குழுச் சிகிச்சை முறையில் மேற்கொள்ளப்பட்ட முதல் பரிசோதனை.

அதைத்தான் நானும் செய்கிறேன். பதினாயிரம் சந்நியாசிகள் - சிகிச்சை முறையில் மேற்கொள்ளப்பட்ட மிகப் பெரிய சோதனைகளுள் ஒன்று. ஒரு கோட்பாட்டைக் கொண்ட ஒரு இனம் - ஒரு சமூகம். அதில் நீங்கள் உணர்வோடு இருந்தாக வேண்டும். இல்லையேல் அந்த மன்றத்தின் ஓர் அங்கமாய் நீங்கள் இருப்பதற்கில்லை. அதில் உள்ள ஒவ்வொருவரும் உங்கள் தவறைக் கண்டு கொண்டவர்களாகவும், சுட்டிக் காட்டுகிறவர்களாகவும் இருப்பார்கள். காரணம், சந்நியாசிகள் பண்பாட்டுடனும், மரபு சார்ந்தும் இருக்க வேண்டும் என குறிக்கப்படவில்லை. ஒரு சந்நியாசியாய் இருப்பது தன்னை மாற்றிக் கொள்ளவும், அடுத்தவருடைய மாற்றத்துக்கான சூழ்நிலையை ஏற்படுத்தித் தருவதற்கும்தான்.

யாரேனும் உங்களிடம் தவறு கண்டு, அதைச் சுட்டிக் காட்டினால் அவர் மீது கோபப்படாதீர்கள். அதனால உங்களுக்கு எந்தப் பயனும் இல்லை. பித்துப்பிடித்தவராகி விடாதீர்கள். அது எந்த விதத்திலும் உங்களுக்கு உதவாது. சமயத்தில் அடுத்தவர் கூற்று உண்மையாயிருக் கலாம். அவர் உண்மையாய் இருப்பதற்குச் சாத்தியங்கள் அதிகம் காரணம் அவர் உங்களிடம் இருந்து விலகி இருப்பவர், உங்களைவிட்டு வெகுதொலைவில் இ ருப்பவர். அவர் உங்களுக்குள் உட்படுத்தப்பட்டிருக்கவில்லை. மக்கள் உங்களைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்பதைக் கவனமுடன் கேட்டிருங்கள். அவர்கள் சொல்வதில் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் சரியாகவே இருக்கும். அவர்கள் தவறிவிட ஒரு சதவிகித சாத்தியம் மட்டுமே இருக்கிறது. அவர்களுடைய காட்சிமுறை உங்களிடம் இருந்து விலகியிருப்பது.

அதனால்தான் ஒரு குரு அவசியப்படுவது. உங்களுடைய ரணங்களைச் சுட்டிக் காட்டுவதற்கு அவர் தேவை. நீங்கள் ஆழ்ந்த மரியாதையும், நம்பிக்கையும் கொண்டிருந்தால் மட்டுமே அது சாத்தியம். நீங்கள் கோபத்துடன் சண்டையிடத் தொடங்கினால் அந்நிலையில் நம்பகத்தன்மையும் இருக்காது, மதிப்பும் இருக்காது. உங்களுடைய நலக்குறைவையும், பிணிகளையும் பாதுகாத்துக் கொள்வதற்காக நீங்கள் இருந்திருப்பீர்களாயின் - இங்கே இருப்பது உங்களுக்கு சரிப்பட்டு வராது. என் வரைக்கும் அந்தத் தொடர்பு முடிந்து போனதுதான். தற்போது நான் உங்களுக்குத் துணைபுரிய

முடியாது. நான் உங்களிடம் ஒன்றைச் சொல்கிற பொழுது, அதில் உள்ள உண்மையை நீங்கள் கவனிக்க வேண்டும். 'உங்களை ஒரு கோழையென்று நான் எதற்காகச் சொல்கிறேன்? உங்களுக்குள் எவ்வித முதலீடும் இல்லை, அத்துடன் உங்கள் கோழைத்தனத்தின் பேரில் நான் எந்த முதலீட்டையும் செய்யவில்லை. நான் உங்களுடைய நலக்குறைவைப் புரிந்து கொண்ட காரணத்தால் உண்டான இரக்கத்தில் சொல்கிறேன். நீங்கள் அதை அறியா விட்டால் அது நோய்நிர்ணயம் (diagonse) செய்யப்படாவிடில், நீங்கள் எப்படி அதில் இருந்து விடுபடுவீர்கள்?

உங்களுடைய நாடியின் மீது கைவைத்துப் பார்த்து மருத்துவர் சொல்கிறார், 'உங்களுக்குக் காய்ச்சல் இருக்கிறது' என்று. நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? எனக்கெப்படிக் காய்ச்சல் வர முடியும்? இல்லை, நீங்கள் சொல்வது தவறு. நான் ஆரோக்கியமாகத்தான் இருக்கிறேன்' என்று கூவியபடி அவரிடம் சண்டை போடுவீர்கள். அப்படியானால் நீங்கள் முதலில் மருத்துவரிடம் சென்றது எதற்காக? ஒரு நலச் சான்றிதழைப் பெற்று வருவதற்காகவா?

நீங்கள் இங்கே இருப்பது உங்கள் நோய்களுக்கு அங்கீகாரம் பெறுவதற்காகவோ, எவ்விதநோயும் இல்லை என்று சான்றிதழ் பெறுவதற்காகவோ அல்ல. இங்கே நீங்கள் நோய்நிர்ணயம் செய்யப்பட்டு, சோதனைக்காகப் பகுதி பகுதிகளாய் வெட்டப்பட்டு, அழிக்கப்படுவீர்கள். அவ்வாறாக உங்களுடைய உண்மையான இயல்பு மேலெழும், மலர்ச்சியடையும். ஆனால் நீங்கள் தற்பாதுகாப்பு செய்து கொண்டிருந்தால் அதை நீங்களாகவே செய்து கொள்ள வேண்டியதுதான். அது என்னுடைய வேலையல்ல. ஆனால், அந்நிலையிலும் நீங்கள் துயருறும்படியாகவே இருக்கும். பிறகு என்னிடம் வந்து, 'நான் வருத்தத்தில் இருக்கிறேன், இறுக்க உணர்வில் இருக்கிறேன்' என்று சொல்லாதீர்கள்.

புறஉலகில் இருந்து உள்நோக்கிச் செல்வது கடினம். காரணம் உள்ளுக்குள் பல நோய்களையும், உபாதைகளையும் நீங்கள் மறைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அவை உங்களை வெளியே செல்லும்படி நிர்ப்பந்திகும். அது கவனத்தைத் திசை திருப்புகிற ஒரு வழி. அதனால்தான் குருமார்கள் பலரும் 'உள்ளே போங்கள், உங்களை அறிந்து கொள்ளப்பாருங்கள்' என்று உபதேசிப்பது. ஆனால் நீங்கள் அங்கே போகிறதில்லை. நீங்கள் அதைப்பற்றி பேசுகிறீர்கள்,

படிக்கிறீர்கள். அந்த யோசனையைப் பாராட்டுகிறீர்கள். ஆனால் ஒரு போதும் உள்நோக்கிச் செல்வதில்லை காரணம், உங்களுக்குள் இருப்பது அறியாமையும், காயங்களும், நோய்களுந்தான். உங்களுக்கு நலமளிக்காத, தகுதியற்ற பலதையும் உங்களுக்குள் நீங்கள் மறைத்து வைத்திருக்கிறீர்கள். அவற்றை அழித்தொழிப்பதற்குப் பதிலாக நீங்கள் அவற்றைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறீர்கள். தற்போது நீங்கள் வாசலைத் திறக்கிறீர்கள். ஒரு கடுமையான வீச்சத்தை, அழுக்கை, அருவருப்பை உணர்கிறீர்கள். நரகத்தின் வாயில் திறந்து கொண்டது. நீங்கள் உடனே அந்தக் கதவை மூடிவிட்டு சிந்திக்கத் தொடங்குகிறீர்கள், 'என்ன விஷயமாயிருக்கும்?' என்று.

புத்தரும், இயேசுவும், கிருஷ்ணரும் உபதேசித்துக் கொண்டிருக் கிறார்கள். 'உள்ளே செல்லுங்கள், நீங்கள் பெரிய அளவில் ஆனந்திப்பீர்கள், நிலையான பேரானந்தத்தைப் பெறுவீர்கள்' என்று. ஆனால், நீங்களோ வாசலைத் திறந்து, ஒரு கெட்ட கனவுக்குள் நுழைகிறீர்கள். இந்தக் கெட்டக் கனவு உங்களுடைய அடக்கி வைத்தல்களால் (Depressions) தோற்றுவிக்கப்பட்டது. மேற்பரப்பில் நீங்கள் எளிமையாயிருக்கிறீர்கள், அடியாழத்தில் ஏகப்பட்ட சிக்கல்கள். மேற்பரப்பில் ஓர் அப்பாவியினுடைய முகத்தோடு காட்சியளிக்கிறீர்கள், அடியாழத்திலோ அருவருக்கத்தக்க வராயிருக்கிறீர்கள்.

'அடக்கி வைத்தல்கள்' காரணமாய் உங்களால் கவனத்தை உள்நோக்கித் திருப்ப முடியாமல் போகிறது. அத்துடன் தொடர்ந்து வானொலி கேட்பது, தொலைக்காட்சி பார்ப்பது, நாளேடுகளை வாசிப்பது, நண்பர்களைக் காணச் செல்வது என்று உங்களைத் திசை திருப்பியபடி இருக்கிறீர்கள். உறங்கச் செல்லும்வரை உங்களுடைய நேரத்தை எப்படியெல்லாமோ வீணடித்துக் கொண்டிருக்கிறீர்கள். விழிப்புற்ற கணத்தில் இருந்து மறுபடியும் ஓடத் தொடங்கி விடுகிறீர்கள். யாரிடம் இருந்து நீங்கள் ஓடத் தொடங்குகிறீர்கள்? உங்களிடம் இருந்தே நீங்கள் ஓடிக் கொண்டிருக்கிறீர்கள்.

உங்கள் இருப்புணர்வைக் கண்டு கொள்வதற்காகவேனும் கொஞ்சம் இடைவெளி விடுங்கள். அப்போது பொருள்களுடன் எவ்வித பிணைப்பும் இல்லை என்பதை நீங்கள் கண்டு கொள்வீர்கள். எப்படி இருக்க முடியும்? அது நகைக்கத்தக்கதாகும்.

ஒரு அருமையான கதையை, சூஃபி கதையொன்றை நான் கேட்டறிந்திருக்கிறேன்: 'தங்கமான வாசல்'

இரண்டு பேர் பிரார்த்தனை செய்து விட்டு, தத்தமது வழியில் சென்றனர். ஒருவர் செல்வத்தையும், அதிகாரத்தையும் சேர்த்துக் கொண்டு மக்களிடையே புகழ்பெற்றவராயிருந்தார். ஆனால் அவருக்குள் சிறிதளவும் அமைதி இல்லை. மற்றவரோ மக்களின் இதயங்களை – அச்சத்தில் இருண்டிருந்தாலும் அவை தீபங்களைப் போல் சுடர்விட்டுப் பிரகாசிப்பதைக் கண்டார். அவரும் செல்வ வளத்தை, அதிகாத்தைக் கொண்டவர்தாம். அன்பே அவருடைய செல்வமும், அதிகாரமுமாய் இருந்தது. அவர் எளிமையும், கருணையும் மென்மையும் கொண்டு தம்முடைய சக மனிதர்களைத் தொடுகிற போதெல்லாம் அந்த அன்பின் ஆற்றலால் உள்ளொளி யானது முழுவதும் விளங்குவதாயிற்று, அமைதியும் துணிவும் ஒளியை அதிகரித்தது.

அந்த இரண்டு மனிதர்களும் ஒருநாள் தங்க வாசலின் முன்பாய் நின்றார்கள். மரணத்துக்குப் பின் மகத்தான வாழ்க்கை வாழ்வதற்கு எல்லாரும் அவ்வழியேதான் செல்ல வேண்டும். தூதர்கள் ஒவ்வோர் ஆன்மாவிடமும் கேட்டனர், 'உம்முடன் நீர் எதைக் கொண்டு வந்திருக்கிறீர்? உம்மிடம் கொடுப்பதற்கு என்ன இருக்கிறது?'

இறைவன் எப்போதும் கேட்பது, 'உன்னுடன் நீ கொண்டு வந்ததென்ன? கொடுப்பதற்கு உன்னிடம் என்ன இருக்கிறது?' என்பதைத்தான். இறைவன் எப்போதும் உங்களுக்கு வழங்கியபடி இருக்கிறார். ஆனால் கடைசியில், இறுதித் தீர்ப்பு நாளில், தம்முடைய சந்நிதிக்குள் நீங்கள் நுழைவதற்கு முன் அவர் கேட்கிறார், 'இப்போது எனக்காக என்ன கொண்டு வந்திருக்கிறாய்? எனக்கு நீ கொடுக்க விரும்பும் வெகுமதி என்ன?'

.... புகழ்பெற்று விளங்கியவர் தம்முடைய அருஞ்செயல்களை கணக்கற்ற மக்களால் தாம் அறியப்பட்டிருப்பதை, எண்ணற்ற இடத்தில் தாம் இருந்திருந்ததை, தாம் செய்த அநேக செயல்களை, தாம் சேகரித்தவற்றை அவர் விரிவாகவே எடுத்துரைத்தார்.

ஆனால் தேவதூதன் சொல்லிவிட்டான், 'இவையெல்லாம் ஏற்கக்கூடியவை அல்ல. நீர் செய்த இந்தச் செயல்கள் எல்லாம் உமக்காகச் செய்து கொண்டவை. அவற்றில் நான் அன்பைக் காணவில்லை...' என்று.

அகந்தையுள்ள இடத்தில் அன்பிருக்காது. இதனை நினைவில் கொள்ளுங்கள். நான் இதுகுறித்து பிற்பாடு ஆய்வுரை செய்கிறேன். காரணம் அதிமுக்கியமானவற்றுள் இதுவும் ஒன்று: அகந்தை இருக்குமெனில் அன்பிருக்காது.

.... புகழ்பெற்ற அந்த மனிதர் தங்க வாயிலுக்கு வெளியே தாழ்நிலையுற்றவராய், அழுது கொண்டிருந்தார்.

தம்முடைய அத்தனை முயற்சிகளும் முதல்முறையாய் பலனற்றுப் போனதை அவரால் புரிந்து கொள்ள முடிந்தது. அது கடந்து சென்ற கனவானது, அவருடைய கைகள் வெறுமையுற்றது. நீங்கள் பொருள்களால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தால், என்றாவதொரு நாள் உங்கள் கைகள் ஒன்றும் இல்லாமல் இருப்பதைப் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் கற்பனைப் பொருள்களைத் தாம் கைநிறைய சுமந்திருப்பீர்கள். அவை தொடர்ந்து காலியாகத்தான் இருக்கின்றன. அதில் ஏதோ இருப்பதாக நீங்கள் கற்பனை செய்து கொண்டீர்கள். காரணம் வெறுமை பற்றிய அச்சம் இருந்தது உங்களிடம். உண்மையில் அது இருக்கிறதா இல்லையா என்பதைக்கூட நீங்கள் கூர்ந்து கவனித்திருக்கவில்லை.

... அந்தப் புகழ்பெற்ற மனிதர் தங்கவாசலுக்கு வெளியே கனம் குறைந்தவராய், கதறியழுதார்.

...பிறகு, மற்றொருவரின் ஆன்மாவிடம் தேவதூதன் கேட்டான், 'நீர் எதைக் கொண்டு வந்திருக்கிறீர்? உம்மிடம் கொடுப்பதற்கு என்ன இருக்கிறது?' என்று.

அந்த மனிதர் பதிலளித்தார், 'என்னுடைய பெயர் யாருக்கும் தெரியாது. அவர்கள் என்னை நாடோடி, கனவு காண்பவன் என்பார்கள். என்னுடைய இதயத்தில் இருக்கும் சிறு ஒளியை நான் மற்ற ஆன்மாக்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்' என்று.

பைத்தியக்காரர்களின் உலகில் அசலான மனிதர்கள் கனவு காண்பவர்களாகத்தான் காட்சியளிப்பார்கள். மேதைகள் எப்போதுமே நாடோடிகளாகவும், கனவு காண்பவர்களாகவும் கவிஞர்களாகவும், கற்பனை பண்ணுகிறவர்களாகவுமே அறியப்பட்டிருக்கிறார்கள். அசலான மனிதர்களுக்கு அளிக்கப்பட்ட முத்திரைகள் இவை. காரணம் இந்த உலகம் காகித மனிதர்களுக்கு உரியதாயிருக்கிறது. காகித மனிதர்கள் உண்மையான மனிதர்களை எதிர்பாராது சந்திக்கிறபோது, 'கனவு காண்பவர்', 'கவிஞர்' இப்படித்தான்

குறிப்பிடுவார்கள். அதுதான் அவரைக் கண்டனம் செய்ய அவர்கள் கையாளும் முறை. தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் அதே முறையை அவர்கள் கையாள்கிறார்கள்.

... அவர் பதிலளித்தார், ' என்னுடைய பெயர் யாருக்கும் தெரிந்திருக்காது. என்னை நாடோடி, கனவு காண்பவன் என்றே அவர்கள் அழைப்பார்கள். என்னுடைய இதயத்தில் சின்னதாய் ஒரு ஒளியை நான் கொண்டிருக்கிறேன் - வேறெதுவும் இல்லை. சின்னதாய் ஒரு ஒளி மட்டுமே - என்னிடம் எது இருந்ததோ அதனை மற்ற ஆன்மாக்களுடன் நான் பகிர்ந்து கொண்டிருக்கிறேன். '

அப்போது தேவதூதன் சொன்னான், 'புனிதமானவரே, உம்மிடம் இருப்பதே மிகச்சிறந்த வெகுமதியாகும். அதுதான் அன்பு. அதை வழங்கிக் கொண்டே இருக்கலாம், அது ஊற்றாய் பெருகிக் கொண்டே இருக்கலாம். வாருங்கள் உள்ளே...' என்று.

அதுவே அன்பின் அழகு. நீங்கள் எந்த அளவு கொடுக்கிறீர்களோ அந்த அளவு பெறுகிறீர்கள். இதனை உங்கள் வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவமாய் கொள்ளுங்கள். கொடுத்ததுமே மறைகிற எதையும் சேர்த்துக் கொண்டிருக்க வேண்டாம். பகிர்ந்து கொண்ட பின்னும் எது அதிகரிக்குமோ, வளருமோ அதனைச் சேர்க்கப் பாருங்கள். அதுவே தகுதியானது. எதை நீங்கள் பகிர்ந்து கொள்ள முடியுமோ, பகிர்ந்து கொண்டதன் மூலம் எது முன்பிருந்ததைவிட அதிகரிக்குமோ அதுவே தகுதியானது.

'.... எப்போதும் போதுமான அளவு இருக்கிறது. தேவைக்கு அதிகமாகவே இருக்கிறது. பங்கேற்றிட வாருங்கள்' அந்நிலையில் அந்த நாடோடி கூறுவார், 'ஆனால், என்னிடம் எஞ்சியிருப்பதை முதலில் எனது சகோதரருக்குத் தந்துவிடுகிறேன். நாங்கள் இருவரும் இந்த வாசல் வழியே வருகிறோம்' என்று.

தேவதூதன் அமைதியாய் இருந்தான். அந்தக் கணத்தில் ஒரு பேரொளி அந்த நாடோடியைச் சுற்றிப் பிரகாசித்தது. மெல்லிய திரை போன்ற அவ்வொளியானது அவரையும் அவருடைய நண்பரையும் மூடியது.

தங்கவாசல் விரியத் திறந்திட, அவர்கள் அதன் வழியாக உள்ளே நடந்தனர்.

இறுதிக் கணத்திலும் அவர் பகிர்ந்து கொண்டார். இதுவல்லவா உண்மையான செல்வம். கருமி ஒருபோதும் பணக்காரனில்லை. உலகப் பொருள்களிடம் பற்று வைத்த நீங்கள் பணக்காரரல்லர். செல்வம் இதயத்தில் இருந்து வெளிப்படுவது. வளமை இதயத்தின் பண்பு. அது அன்பால் ஒளிவீசும் செந்தணலாய்.

இந்தியக் கவிஞர்களுள் மிகச்சிறந்தவரான ரவீந்திரநாத் தாகூர், 'அன்புக்குரிய என் இதயத்துக்கு' என்ற தலைப்பில் ஒரு கவிதை எழுதினார். அந்தக் கவிதையின் சாரமாய் இந்த வரிகள்.

வங்காளத்தில் ஒரு சிறிய கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெண் *ஆன்மஞானி, அயலில் இருந்து என்னைக் காண வந்தாள். இது ஒரு கவிதை மட்டுமல்ல, ஓர் உண்மை நிகழ்வின் அடிப்படையில் அமைந்ததுமாகும்.

.... அவளுடைய பெயர் சர்வகிபி. கிராமத்தார் அவளுக்கு வழங்கிய அந்தப் பெயரின் பொருள் 'எதைக் கண்டாலும் களிவெறி (mad) கொள்ளும் பெண்' என்பதாகும்.

சர்வகிபி - சகலத்திலும் பைத்தியமாகிறவள். ஒன்றில்தான் என்றில்லை எல்லாவற்றிலும் பைத்தியமாகிறாள் - கட்டுக் கடங்காத பைத்தியம்.

தன்னுடைய நட்சத்திரம் போன்ற கண்களை அவள் என்மீது பதித்து, ஒரு கேள்வியின் மூலம் என்னைத் திடுக்கிடச் செய்தாள். 'நீங்கள் என்னை மரத்தடியில் எப்போது சந்திக்க வருகிறீர்கள்?' நான் என்னமோ யாரையும் சந்திக்க முடியாதபடிக்கு, கற்சுவர் நடுவே சிறைவைக்கப் பட்டிருப்பதுபோல் என்மீது அவள் இரக்கம் கொண்டாள்.

அந்தக் கணத்தில் என்னுடைய தோட்டக்காரன் தன்னுடைய கூடையுடன் வந்தான். என்னுடைய மேசைமீதுள்ள பூக்கிண்ணங்களில் இருந்து பழைய பூக்களை எறிந்துவிட்டு, புதிய பூக்களைச் செருகப் போகிறான் என்பது அவளுக்குப் புரிந்திருக்க வேண்டும். அவள் வேதனையோடு என்னை நோக்கி, 'நீங்கள் எப்போதுமே வாசித்துக் கொண்டும், எழுதிக் கொண்டும் இருக்கிறீர்கள். ஏறிட்டுப் பார்ப்பதேயில்லை' என்றாள். பிறகு, அவள் தூக்கியெறியப்பட்ட

* ஆன்மஞானி - இச்சை அகற்றி, உடல் வருத்தி அஞ்ஞான வழியறுத்து மெய்ஞ்ஞானப் பாதை நடக்கும் ஒருவர்.

பூக்களை எடுத்துத் தனது உள்ளங்கையில் வைத்துக் கொண்டாள். தனது நெற்றியால் அவற்றை ஒற்றியபடி, 'என் அன்பான இதயமே' என்று பயபக்தியுடன் முணுமுணுத்தாள்.

இவள் எல்லாவற்றின் இதயங்களையும் ஊடுருவிப் பார்க்கக் கூடிய எல்லையற்ற ஆளுமை கொண்டவள், கிழக்கத்திய ஆன்மாவை உண்மையிலேயே உருப்படுத்துகிறவள் என்றுநான் எண்ணிக் கொண்டேன்.

அன்பே கிழக்கின் ஆன்மா. அன்புதான் மனிதனின் ஆன்மா. அதுவே கடவுளின் ஆன்மாவும். அன்பு என்கிற செல்வம் மட்டுமே அங்கிருக்கிறது. அங்குள்ள ஒரே மகிழ்ச்சி அதுதான்.

தற்போது, நீங்கள் பொருள்களில் பற்றுக் கொண்டுவிட்டால் உங்களால் ஒரு காதலனாக முடியாது. பற்றற்ற ஒருவனே அன்பென்கிற வானத்துக்குத் தன்னை உயர்த்திக் கொள்ள முடியும். இது குறித்து தவறான பொருள் கொள்ளல் (misunderstading) நிறையவே உண்டு.

கிட்டத்தட்ட எல்லாவற்றையும் விலக்கி, உலகைத் துறப்பவர்கள், அதே சமயத்தில் அன்பற்றவர்களாகவும் மாறிவிடுகின்றனர். அந்நிலையில் ஏதோ ஒன்று தவறாகிவிடுகிறது. காரணம் அன்பு ஓர் அளவு கோல் - அடிப்படை, தேர்வாய் (test), உரைகல். இந்த உலகத்தின்மீது உங்களுக்குள்ள பிணைப்பை அகற்றியதும் நீங்கள் அன்பற்றவராகிறீர்கள். ஏதோவொன்று வெறுப்பை உண்டு பண்ணுகிறது. உங்களுடைய பிணைப்பற்ற தன்மை உண்மையானதோ, நம்பத்தக்கதோ அல்ல. காரணம், அன்பு குறித்த அச்சம் இருக்கிறது உங்களிடம். பந்த பாசங்களில் நீங்கள் பயந்து போனீர்கள் என்பதையே அது காட்டுகிறது. எனவே, அன்பு மலரக்கூடிய அத்தனை சூழ்நிலை களையும் நீங்கள் தவிர்க்கிறீர்கள் - காரணம் அன்பு மலர்ந்தால் நீங்கள் மறுபடியும் பிணைப்புக்குள்ளாகி விடக்கூடும் என்கிற அச்சம் இருக்கிறது அடியாழத்தில்.

அதனால்தான் உங்களுடைய மகாத்மாக்கள் (போலிகள்) அன்பைப்பற்றி அச்சம் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் மூன்று நாட்களுக்குமேல் ஒரே இடத்தில் தங்குவதில்லை. ஏன் அத்தனை பயம்? நீங்கள் ஒரே இடத்தில் பலநாட்கள் தங்கினால், மக்களை நேசிக்கத் தொடங்கி விடுவீர்கள். யாரோ ஒருவர் தினமும் வந்து உங்கள் பாதங்களைப் பிடித்து விடுவார். யாரோ ஒரு பெண் தினமும்

உங்களுக்கு உணவு கொண்டு வருவாள். நீங்கள் அவள் பால் நேசம் கொண்டு விடுவீர்கள். ஒரு நிச்சயமான பிரியம் தோன்றிவிடும். மறுபடியும் பிணைக்கப்பட்டு விடுவோம் என்கிற அச்சமும்தான். பிணைப்பு ஏற்படுமுன் இடத்தைக் காலி பண்ணிவிட வேண்டும்.

பற்றற்றவர்களாய் தங்களைக் காட்டிக் கொள்பவர்கள் எல்லாம் உண்மையிலேயே பயந்து கொண்டிருப்பவர்கள்தாம். அவர்கள் கடுமையான அச்சத்தில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். வாழ்வின் உண்மையான உள்ளகப் பகுதியை (core) அவர்களால் ஒருபோதும் தொடமுடிவதில்லை. காரணம் அது எப்போதும் அன்பைத் தொட்டுக் கொண்டிருக்கிறது.

ஞாபகமிருக்கட்டும், பொருள்களின்மீது உங்களுக்குப் பற்றில்லை என்பது உண்மையானால், அது புரிந்து கொள்ளும் திறனால் விளைந்ததாயின், விழிப்புணர்வில் வளர்ந்ததாயின் நீங்கள் மேலும் அன்பு செய்பவராகிவிடுவீர்கள். காரணம் . பாசப்பிணைப்புக் குட்பட்டிருந்த அதே ஆற்றல்தான் விடுவிக்கப்படுகிறது. அது எங்கே போகும்? நீங்கள் பயன்படுத்துவதில் மிகுதியான ஆற்றலைப் பெறுவீர்கள். பாசப்பிணப்பு அன்பாகாது. அது அகந்தையின் பயணம் – அது ஆளுகைக்குட்படுத்தும், அதிகாரம் செலுத்தும், சூழ்ச்சித் திறமுடன் செயல்படும். அது ஒரு வன்முறை, அன்பாகாது. இந்த ஆற்றல் விடுவிக்கப்பட்டதும், உடனே அன்பு செய்வதற்கான அந்த ஆற்றலை இன்னும் மிகுதியாய் பெறுவீர்கள். உண்மையிலேயே பிணைப்பற்றவரிடம் முழுமையான அன்பு இருக்கும், தொடர்ந்து கொடுப்பதற்கு மிகுதியான அளவில் அதைப் பெற்றிருப்பார். அன்பின் தோற்றுவாய்களை அவர் தொடர்ந்து கண்டுபிடித்துக் கொண்டேயிருப்பார்.

"இந்த ஆற்றல்களிலும்கூட இணைப்பற்றவராய் இருப்பதன் மூலம்..." நீங்கள் அற்புதம் நிகழ்த்தும் சில ஆற்றல்களை, சித்திகளை அடைகிற பொழுது இந்தப் பற்றின்மை வருகிறது. நம்ப முடியாத செயல்களை, வியக்கத்தக்கவற்றைச் செய்கிற பொழுது இந்தப் பிணைப்பற்ற தன்மையைப் பெறுகிறீர்கள். நீங்கள் அவற்றுடன் பிணைப்பேற்படுத்திக் கொண்டால் சற்று முன்பாகவோ அல்லது பின்பாகவோ இந்த உலகாயத வாழ்க்கைக்கே மறுபடியும் நீங்கள் திரும்பி விடுவீர்கள். கவனமாயிருங்கள். அது உங்கள்மீது அகந்தையின் கடைசித் தாக்குதலாயிருக்கும், அகப்பட்டுக்

கொள்ளாதீர்கள். அகந்தை தனது கடைசி வலையை உங்கள் மீது வீசிக் கொண்டிருக்கிறது.

“இந்த ஆற்றல்களிலும்கூட இணைப்பற்றவராய் இருப்பதன் மூலம், அடிமைத்தளைக்கான விதை அழிக்கப்பட்டுவிடுகிறது.” பாசமே அடிமைத் தளைக்கான விதை. விடுதலைக்கான விதை அன்பு. அவை பார்ப்பதற்கு ஒரே மாதிரி இருந்தாலும் முழுக்கவும் எதிரிடையானவை. பற்று அன்பற்றதாயிருக்கிறது. அன்பு பற்றற்றதாயிருக்கிறது. எங்கிருக்கிறது வேறுபாடு?

ஓர் ஆணை அல்லது பெண்ணை விரும்புகிறீர்கள், அன்பால் பிணைக்கப்பட்ட உணர்வை அடைகிறீர்கள். நாளையும் இந்தப் பெண் உங்களுடன் இருக்க வேண்டும் என்பதையே குறித்துக் காட்டுகிறது பிணைப்பு. நாளையும் அதற்கடுத்த நாட்களிலும் அவளை ஆளுகையில் வைத்திருக்க நீங்கள் விரும்புகிறீர்கள். உங்களால் இன்று நேசிக்க முடியவில்லை என்பதையே அது காட்டுகிறது, இல்லையேல் நாளை வந்திருக்காது. நாளையைப் பற்றி யார் கவலைப்பட போகிறார்கள்? நாளையைப் பற்றி அறிந்தவர் யார்? நாளை ஒருபோதும் வருவதில்லை. இன்று வாழ்ந்து கொண்டிருக்காத வர்கள் மனதில்தான் அது நுழைந்து கொண்டிருக்கிறது. இந்தப் பெண்ணை இன்று நீங்கள் நேசிக்கவில்லை, எனவேதான் நாளை அவளை நேசிக்கக்கூடும் என்று நீங்கள் காத்திருக்கிறீர்கள். உங்களுடைய அன்பு அரைகுறையாய், பூர்த்தி அடையாமல் இருக்கிறது. நிறைவேறாத அன்பின் பொருட்டே பிணைப்பு தோன்றுகிறது. அந்நிலையில் அது இயல்பாகவும், தர்க்கத்திற்கு உகந்ததாகவும் தெரிகிறது. நீங்கள் ஓவியம் வரைகிறீர்கள், அந்த ஓவியம் முழுமை அடையாததாகவே இருக்கிறது. அதைப் பூர்த்தி செய்வதற்காக அந்த கான்வாஸை (canvas) நாளையும் உங்களிடம் வைத்திருக்க விரும்புவீர்கள்.

வாழ்க்கையின் மிக உள்ளார்ந்ததாய் ஒரு நடைமுறை நியதி இருக்கிறது. அது எல்லாவற்றையும் முழுமை செய்ய விரும்புகிறது. மொட்டு மலர விரும்புகிறது. விதை முளைவிட விரும்புகிறது.

எல்லாமே முழுமையை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றன, ஆக நீங்கள் அரைகுறையாய் விடுகிற எதுவும் உங்கள் மனதில் ஓர் ஆசையாகி விடுகிறது. ‘இந்தப் பெண்ணை உன்பிடியில் வைத்திரு. நீ இன்னமும் நேசிக்கவில்லை, அவளுடைய இருப்புணர்விற்குள்

முழுமையாய் சென்றடையவில்லை. அவளுக்குள் இன்னும் அறியப் படாத எல்லை இருக்கிறது. இன்னும் நடைமுறைப்படுத்தப்படாத ஆற்றல் நிறையவே இருக்கிறது. பாட வேண்டிய கீதங்கள், ஆடி முடிக்கப்பட வேண்டிய நடனங்கள்' என்று உங்கள் மனம் சொல்கிறது. பிணைப்பு உண்டாகிறது. நாளை என்பது அவசியப்படுகிறது. நாளைக்கு மறுநாளும் எதிர்வரும் நாட்களும் அவசியப்படுகின்றன. நிகழில் (present) உங்களால் வாழமுடியவில்லை என்றால் வருங்காலம் தேவைப்படுகிறது. 'நாம் இனிவரும் காலத்திலும் தம்பதிகளாகவே இருப்போம்' என்று மக்கள் ஒருவருக்கொருவர் நம்பிக்கையூட்டிக் கொள்கின்றனர். இவர்கள் முற்றிலும் வாழும் திறனற்றவர்களாய் இருப்பதையே இது காட்டுகிறது.

இந்தக் கணத்தில் உங்கள் அன்பை நீங்கள் முழுமையாக்கிக் கொண்டிருந்தால், உங்களுடைய முழு இதயத்தோடும் நீங்கள் நேசித்திருந்தால், அதில் உங்களை ஒப்புவித்துக் கொண்டு கரைந்து விட்டிருந்தால், திரும்பவும் ஒன்றைப் பற்றியிருக்க மாட்டீர்கள் - அந்நிலையில் நாளைப்பற்றிய எண்ணம் ஒருபோதும் தோன்றாது. ஏதோ ஒன்று நிறைவேற்றப்படாத நிலையில்தான் அது வருகிறது. அந்நிலையில் வருங்காலத்தின் மீது நீங்கள் பெருவிருப்பம் கொண்டு விடுகிறீர்கள. உங்களுடையவளை இன்று நீங்கள் நேசித்திருந்தால், மரணம் வரும்போது அதை ஏற்றுக் கொள்ளத் தயாராயிருப்பீர்கள். அல்லது அந்தப் பெண் வேறொருவரை நேசிப்பாளெனில் அவளுக்கு நீங்கள் 'குட்பை' சொல்லி விடுவீர்கள். கொஞ்சம் துயரம் இருக்கும் ஆனால் பரிதாபம் மிக்கதாய் இருக்காது. துயரத்தில் ஓர் அழகு இருக்கிறது. பரிதாப நிலையோ அருவருப்பானது. துயரம் பிணைப்பால் வந்ததல்ல, உங்கள் அன்பு இன்னமும் மேலெவில்லை என்பதால் வந்தது. அதைப் புரிந்து கொள்ளக் கூடியவர் விலகிச் செல்கிறார். துயரம் இருந்தாலும் குற்றச்சாட்டோ, வெறுப்போ இல்லை.

ஆனால் நீங்கள் முழுமையாக நேசித்திருந்தால் ஒருபோதும் இப்படியாவதில்லை. அதாவது ஆண் பெண்ணிடமிருந்தோ, பெண் ஆணிடமிருந்தோ பிரிந்து போகிறநிலை. நீங்கள் முழுமையாய் நேசித்திருந்தால் அது சாத்தியப்பட்டிருக்காது. காரணம் முழுமையான நேசம் ஆழ்ந்த திருப்தியை ஏற்படுத்துகிறது. அந்நிலையில் வேறொன்றைப் பற்றி எண்ணிப் பார்க்கவே முடியாது. வேறொருவரைப் பற்றிக் கன்வு காண்பதும் முடியாத காரியம். இவருடன் அதிருப்தியுற்ற

காரணத்தால் மட்டுமே கனவு தோன்றுகிறது. உங்கள் உரிமைப் பெண்ணிடம் உள்ள உறவு திருப்தியளிக்காதபோதுதான் மற்ற பெண்களைப் பற்றி நீங்கள் எண்ணமிடுகிறீர்கள். உங்கள் மனம் தன்னை அப்படியேக் கொட்டிக் கவிழ்க்க விரும்புகிறது, தற்போதைய உறவில் அது நடக்கவில்லை என்பதால் நீங்கள் மற்ற ஆண்களைப் பற்றி எண்ணுகிறீர்கள். ஆக, உங்கள் மனம் வெளியெங்கும் திரியலாயிற்று. வீதியில் போகிற பெண்ணைப் பார்த்ததுமே அவள் மீது உங்களுக்குக் காதல் வந்துவிடுகிறது.

உங்கள் அன்பு மிகுந்த ஏமாற்றத்துக்குள்ளானால், நீங்கள் கற்பனையே செய்திராத அளவு விரக்தியடைந்துவிட்டால் அப்போது எந்தவொரு மனிதரிடத்தும் ஏன் நாய், பூனையிடத்தும் உங்களுக்கு நேசம் உண்டாகிவிடுகிறது. சிக்கல் குறைந்து விட்டதாய் தோன்றுகிறது. அலோக் இதுபற்றிக் குறித்துக் கொள்ள வேண்டும். சிக்கல் குறைந்துவிட்டதாகவே தெரிகிறது.

ஒரு நாயை நேசிப்பது ரொம்ப எளிது... ஒரு பூனையை நேசிப்பது கொஞ்சம் கடினம். அதனால்தான் ஆண்கள் பெண்களை 'பூனைகள்' என்று அழைக்கிறார்கள். நாய் இன்னது செய்யும் என்று ஊகிக்கிற அளவு பூனையை ஊகித்துவிட முடியாது. அது நாயைவிட சாமர்த்தியமானது – சுயசிந்தனை உடையது. நீங்கள் நாயை உதைத்தால் அது மீண்டும் உங்களிடம் வரவே செய்யும். பூனையை உதைத்தால் அது மறுபடியும் வராது. அவ்வளவுதான். அது உறவை முறித்துக் கொள்ள எப்போதுமே தயார்.

மனிதர்கள் விலங்குகளை நேசிக்கிறார்கள். எத்தனை துரதிர்ஷ்டம்! விலங்குகளை நேசிக்கவேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அவற்றை மனிதர்களுக்கு பதிலியாக்கி (substitute) விடாதீர்கள் என்றுதான் சொல்கிறேன். உங்கள் அன்பு ஒரு பிரவாகமாகி மனிதர்களிடமே காட்டியபோது விலங்குகளிடத்தும் பாய்ந்தோட வேண்டும். அந்நிலையில் அது முற்றிலும் மாறுபட்ட தாயிருக்கும். உங்களில் வழிந்தோடுகிற அன்பு பாறைகளையும் சென்றடையட்டும். அன்பின் மூலம் ஓர் எல்லைக்குட்படாதது. உங்கள் அன்பை யாரும் பிடித்து வைத்துக் கொள்ளவோ, தடுத்து நிறுத்திவிடவோ முடியாது. அது நிரம்பி வழிந்தபடி, வழிந்தோடியபடி இருக்கும். அப்போது அது விலங்குகளைச் சென்றடைகிறது, முற்றிலும் வேறான தன்மையைக் கொண்டு விடுகிறது.

மனிதர்களிடம் உள்ள வாசல்கள் மூடியிருக்கின்றன. நேசிப்பதற்கு யாரேனும் ஒருவரை நீங்கள் கண்டுபிடித்தாக வேண்டும். இல்லையேல் நீங்கள் ரொம்பவே விரக்தியடைந்து விடுவீர்கள். ஒரு உறவு தேவை. அந்நிலையில் நீங்கள் நாய்களிடமும், பூனைகளிடமும் தொடர்புடையவராகிறீர்கள்.

சில நேரங்களில் அதுவும்கூட திருப்தியற்றதாகிவிடும், காரணம் நாய்களும் ஓர் இனம் சார்ந்தவை, பூனைகளும் இனம் சார்ந்தவை. மனிதர்களைப் போல் அவற்றுக்கும் கருத்தியல்கள், யோசனைகள் உண்டு. தாங்கள் விரும்பியபடியே அவை செயல்படும். எந்த நாயும் உங்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்வதற்கே இருக்கவில்லை. நாய் உங்களுடைய ஆளுகைக்குட்பட்டிருப்பதால், அதை நீங்கள் பழக்கி வைத்திருப்பதால், அதை உங்கள் விருப்பம்போல் 'வாக்கிங்' கூட்டிப் போகிறீர்கள், நாய் என்ன நினைக்கிறது என்பது பற்றி நீங்கள் கவலைப்படுவதில்லை. நாய் நினைக்கிறது, 'இந்த மனிதன் நம்முடைய பிடியில் இருக்கிறான், இவனை நாம் பழக்கப் படுத்தியிருக்கிறோம்' என்று. நாய்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

விலங்குகளை நேசிப்பதும் சிரமமாகிவிடுகிறபோது, மக்கள் வீடு, கார், பைக் இவற்றை நேசிக்கத் தொடங்கி விடுகிறார்கள். இவற்றைப் பற்றிய அவர்களின் கற்பனையும் மிகவாகிவிடுகிறது.

என் வீட்டுக்குக் கொஞ்சம் முன்னாடி வசித்துக் கொண்டிருந்த ஒருவனை நான் பார்த்திருக்கிறேன். தன்னுடைய ஸ்கூட்டர் மீது அலாதி பிரியம் அவனுக்கு. ரொம்பவும் மென்மையான முறையில் அதைத் துடைத்துக் கொண்டிருப்பான். தன்னுடைய காதலியைத் தடவிக் கொடுப்பதுபோன்று. அதை இப்படியும், அப்படியுமாய் பார்த்துப் பார்த்து மகிழ்ச்சியடைவான். அது அழுக்காகிவிடக் கூடும் என்ற அச்சத்தில் அதை எப்போதும் பயன்படுத்த மாட்டான். தன்னுடைய பழைய 'பைக்'கில்தான் வெளியில் போகிறான். நான் அவனிடம் பலமுறை சொல்லி விட்டேன், 'உன்னிடம் அழகான ஸ்கூட்டர் இருக்கு, நீ என்ன பண்ணிட்டிருக்கே?' என்று. அவன் சொல்லுவான், 'இருந்தா என்ன மழை வரலாம்னு படுது. அதோ பார், மேகக் கூட்டத்தை' என்று. அல்லது கடுமையான வெயிலில் அவனுடைய ஸ்கூட்டர் பளபளப்பை இழக்க நேரிடலாம். ஊகூம், அவன் அந்த வண்டியை உபயோகித்து நான் பார்க்கவேயில்லை.

அதைத் துடைத்து வைப்பதில் அக்கறை காட்டுவதோடு சரி. அந்த ஸ்கூட்டர் அன்புக்குரியது.

இது மனித உணர்வைக் கீழ்நிலைப்படுத்துகிற செயலாகும். நீங்கள் எத்தனைக்குப் பிணைப்புற்றவராகிறீர்களோ அத்தனைக்குக் கீழ்நிலை அடைந்துவிடுகிறீர்கள். பிணைப்பு குறைவாக இருந்தால் அத்தனைக்கு நீங்கள் உயர்கிறீர்கள், உயரப் பறக்கிறீர்கள்.

உங்களுக்கு ஏற்படும் ஆன்மா சார்ந்த ஆற்றல்களைப் பற்றிப் பதஞ்சலி பேசுகிற ஒரு கட்டம் வருகிறது. நினைவில் வையுங்கள், அவற்றுடன் பிணைத்துக் கொள்ள வேண்டாம். அவை உண்மையிலேயே அழகானவை, நிறைவளிப்பவை. நீங்கள் அவற்றைப் பிடியில் வைத்துக் கொள்ள விரும்புகிறீர்கள்.

பலருக்கு யோகாவில் ஆர்வம் ஏற்படக் காரணம் யோகாவுக்காகவோ, மோட்சத்துக்காகவோ, விடுதலை பெறுவதற்காகவோ அல்ல. அதன் மூலம் அடைகிற சித்திகளுக்காகத்தான், அனுபூதிக்காகத்தான் (பிரமாணங்களைக் கொண்டடைகிற அறிவு). அவர்கள் ஆசானிடம் சென்று, யோகா பயில்கிறார்கள் – அற்புதங்கள் செய்ய விரும்புகிறார்கள்.

'இந்த ஆற்றல்களுடனும் இணைப்பேற்படுத்திக் கொள்ளாமல் இருப்பதன் மூலம், அடிமைத் தளைக்கான விதை அழித்தொழிக்கப்படுகிறது'. அடிமைத் தளையில். அகப்பட்டுக் கொள்ளக்கூடிய கடைசி சாத்தியம் இது. நீங்கள் இதனைக் கடக்க முடியுமெனில், அந்த விதை கருக்கப்பட்டு விடும்.

பிறகு வருகிறது கைவல்யம் (மோட்சம்) விடுதலை எல்லாம். அந்நிலையில் நீங்கள் முற்றாக விடுபடுகிறீர்கள் – சுதந்திரம் முழுமையான சுதந்திரம். எதனுடனும் அது இணைத்துக் கொள்ளப்படாதாய். அன்பு நிரம்பியதாய், ஒட்டு மொத்த பிரபஞ்சத்தின் மீதும், அன்பைப் பொழிவதாய் இருக்கும். அது பிரபஞ்சத்துக்கும், உங்களுக்கும் ஒரு வாழ்த்துதலாய் அமையும்.

ஆனால், எடுத்து வைக்கிற ஒவ்வோர் அடியிலும் கவனமாயிருக்க வேண்டும். மனம் தந்திரமானது. 'அற்புதங்கள் நிகழும்போது நான் அவற்றுடன் இணைத்துக் கொண்டுவிட மாட்டேன்' என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கக் கூடும். மறுபடியும் எண்ணிப் பாருங்கள். 'அவை வரட்டும், அப்புறம் பார்ப்போம். முதலில்

அவற்றை வரவிடுவோம்' என்று உங்களுக்குள் எங்கோ ஓரிடத்தில் ஆசை செயல்பட்டுக் கொண்டிருக்கும். மோட்சம் விடுதலை பற்றியெல்லாம் யார் கவலைப்படுகிறார்கள்? ஒரு குறிக்கோளைப் போல் தெரிகிறது இல்லையா. விடுதலை, தடையற்றிருப்பது -இதன் மையக்கருத்துதான் என்ன?

மக்கள் என்னிடம் வந்து கேட்கிறார்கள், 'தியானத்தில் இருந்து நாங்கள் பெறப்போவது என்ன?' என்று. நான் சொல்கிறேன், 'அதிக அளவு தியானம்' என்று. அவர்கள் கேட்பார்கள், 'ஆனால் அதன் முக்கியக் கருத்து என்ன? அமைதியா? அமைதி என்றால் சரிதான். ஆனால், ஆனால் அதில் இருந்து நாங்கள் அடையக்கூடிய உண்மையான ஆற்றல் என்ன?' என்று.

அமைதி ஒரு குறிக்கோளைப்போல் தோற்றமளிப்பதில்லை. ஆற்றல் - அதைக்கொண்டு ஏதேனும் ஒன்றை நீங்கள் செய்ய முடியும், உங்கள் தகுதியை நிரூபித்துக் காட்ட முடியும்.

ஓர் அருமையான குட்டிக்கதை, நான் கேட்டறிந்தது:

யூதகுரு ஒருவர் தம்முடைய நண்பரிடம் கேட்டார், 'சொல்லுங்கள், கத்தோலிக்கர்களாகிய நீங்கள் தேவாலயம் கட்டுவதற்கான அத்தனை பணத்தையும் எங்கிருந்து பெறுகிறீர்கள்?' என்று.

'நல்லது, ஏப் (Abe) , கத்தோலிக்கர்களாகிய நாங்கள் பாவ மன்னிப்பு (confession) என்று ஒரு முறையை வைத்திருக்கிறோம். யாரேனும் எப்போதாவது தவறு செய்தால் அவர் தேவாலயத்துக்கு வந்து, தம்முடைய தவறை ஒப்புக்கொண்டு கொஞ்சம் பணத்தை கூட்டு நிதியில் செலுத்துவார், அத்துடன் மன்னிக்கப்படுவார். அவ்வாறு பெரிய அளவில் பணத்தை நாங்கள் சேர்க்கிறோம்.'

'உண்மையிலேயே வியக்கத்தக்க முறைதான். எங்கள் வழிபாட்டுக் கூட்டங்களிலும் இந்த முறையை நாங்கள் பயன்படுத்த முடியும். ஆனால், இன்றிரவு நாம் உங்களுடைய இடத்துக்குச் செல்வோம். நீங்கள் எப்படிச் செயல்படுகிறீர்கள் என்பதை நான் அறிந்து கொள்ள அதுவோர் எடுத்துக்காட்டாக இருக்கும் இல்லையா?'

'நல்லது, ஏப். ஒரு சமயகுரு என்கிற முறையில் உங்களை அழைத்துப் போகும் செயலை நான் செய்யக்கூடாதுதான். ஆனால்

இத்தனை காலமும் ஒரு சிறந்த நண்பராக நீங்கள் இருந்திருக்கிறீர்கள் என்கிற போது இந்த ஒரு முறையேனும் உங்களை அனுமதிக்கத்தான் வேண்டும்.'

அன்று மாலை, பாவமன்னிப்புக்கான கூண்டின் அருகே அவர்கள் அமர்ந்து கொண்டனர். சமயகுருவின் இருக்கை முன்னாடியும், ஆர்வமற்ற ஏபின் இருக்கை அதற்குப் பின்னாடியும் இருந்தது.

நொடிப் பொழுதில், திரைக்குப் பின்னால் இருந்து ஒரு குரல் கேட்டது.

'தந்தையே, வெகுவாய் துன்பம் தரக்கூடிய ஒரு பாவத்தை நான் செய்துவிட்டேன்.'

'நீ என்ன செய்தாய் மகனே?'

'நேற்றிரவு இரண்டு பெண்களுடன் நான் கூட்டாக இணைந்திருந்தேன்.'

'நல்லது. இரண்டு பவுண்ட்களைப் பெட்டியில் போடு. உன்னுடைய பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும்.'

ஏப் ரொம்பவே கிளர்ச்சியுற்றார். அந்த நொடியில் மற்றொருவனுடைய குரல் கேட்டது.

'தந்தையே, நான் இடர்ப்பாடான ஒரு பாவத்தைச் செய்து விட்டேன்.'

'நீ என்ன செய்தாய் மகனே?'

'நேற்றிரவு நான் மூன்று பெண்களுடன் கூடியிருந்தேன்.'

'நல்லது. மூன்று பவுண்ட்களைப் பெட்டியில் போட்டுவிடு. உன் பாவங்கள் மன்னிக்கப்படும் மகனே.'

ஏபினால் அதற்கு மேலும் தன்னைத் தடுத்துக் கொள்ள முடியவில்லை.

'ஆகா, எப்படியொரு வழியில் பணம் பண்ணுகிறீர்கள். அதிசயத்தக்க முறையாய் இருக்கிறதே! எனக்கொரு அனுகூலம் பண்ணுங்கள். அடுத்ததை நான் கவனிக்கிறேனே, சும்மா பயிற்சிக்காகத்தான்!'

'நல்லது ஏப். கண்டிப்பாக இப்படியெல்லாம் அனுமதிக்கக்கூடாது. நீங்கள் இத்தனை காலமும் ஒரு நல்ல நண்பராய் இருந்திருக்கிறீர்கள் என்பதைக் கருத்தில் கொண்டு, இந்த ஒரு தடவை மட்டும் அனுமதிக்கிறேன்.'

ஆக, அவர்கள் இடத்தை மாற்றிக் கொண்டார்கள். ஏப். முன்னால் உட்கார்ந்து கொண்டார்.

அப்போது ஒரு பெண்ணின் குரல் கேட்டது.

'தந்தையே, நான் மிகவும் மோசமான பாவத்தைச் செய்து விட்டேன்.'

'வந்து.... வந்து நீ என்ன பாவம் செய்தாய்?'

'நேற்றிரவு நான் நாலு ஆண்களுடன் இணைந்திருந்தேன்.'

'இப்போது நீ ஐந்து பவுண்ட்களை பெட்டியில் போட்டுவிடு. அந்த ஒருவனுக்கான பற்றுச் சீட்டை நான் கொடுத்து விடுகிறேன்.'

பாருங்கள், மனதின் பணப்பேராசையை. அகந்தை என்பது பேராசையின்றி வேறென்ன?

பதஞ்சலி இந்த அத்தியாயத்தை எழுதினார். இவர் இதனை எழுதாமல் இருந்திருக்கலாமே என்று பலரும் எண்ணிக் கொண்டார்கள். ஆனால் அவர் விஞ்ஞான பூர்வ அறிவுடையவர். இப்படி நடக்கிறதை மக்களுக்கு உணர்த்த வேண்டும் என்பதற்காகவே இந்த அத்தியாயத்தை அவர் எழுதினார். என்னைப் பொறுத்தவரை அவர் இதனைச் சேர்த்தது ரொம்ப சரியென்றே படுகிறது. காரணம் பேராசை உங்களைப் பிடித்தாட்ட ரொம்பவே சாத்தியங்கள் இருக்கின்றன. நீங்கள் எல்லையை அறிந்து கொண்டிருந்தால், அகந்தையின் கடைசித் தாக்குதல் எங்கே நிகழப் போகிறது என்பதைப் புரிந்து கொண்டிருந்தால் மிகக் கவனமுடன் உங்களை ஆயத்தப் படுத்திக் கொண்டிருப்பீர்கள், அது நேரிடுகிறபோது, எதிர்பாராத வகையில் சிக்கிக் கொள்ளும் நிலை இருக்காது.

சித்திகளையும், ஆற்றல்களையும் கொண்ட 'விபூதி பாதம்' என்கிற இந்த அத்தியாயத்தை அவர் சேர்த்ததில் நான் மகிழ்ச்சி அடைகிறேன். காரணம், நீங்கள் அவற்றை எதிர்பார்த்திராவிட்டாலும், தாமாக அவை நிகழவே செய்கின்றன. உங்கள் அக வளர்ச்சிக்கு ஏற்ப, பலதும் தாமாக நிகழத் தொடங்குகின்றன. நீங்கள் விரும்புகிறீர்கள்

அல்லது காத்திருக்கிறீர்கள் என்பதால் அல்ல, அவை விளைவுகள் பலன்கள். ஒவ்வொரு சக்கரமும் அதற்குரிய ஆற்றல்களைப் பெற்றிருக்கும். நீங்கள் அவற்றைக் கடந்து செல்கிறபோது, அவை உங்களுக்கு அனுகூலமாயிருக்கும். கவனமுடன் இருப்பதும், தாம் எங்கே செல்கிறோம் என்பதை அறிந்திருப்பதும் நல்லது.

*வெவ்வேறு தளங்களில் பொறுப்பேற்றிருக்கும் தூலத்துக்கு அப்பாற்பட்ட (super physical) வற்றின் பிணைப்பையும், அவற்றின் அழைப்புகளால் உண்டாகும் தற்பெருமையை யும் தவிர்க்க வேண்டும். காரணம், இதுவே தீங்கு விளை விக்கிற ஒன்று புத்துயிர் பெறுவதற்கான சாத்தியங்களை ஏற்படுத்திக் கொடுத்துவிடும் என்பதுதான்.*

இத்தகைய ஆற்றல்கள் நிகழத் தொடங்கியதும் தூலவடிவற்ற நபர்களிடம் (தேவர்கள்) இருந்து நீங்கள் அழைப்புகளைப் பெறத் தொடங்குவீர்கள். நீங்கள் *'த்யாசபிஸ்ட்'கள் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள் அல்லது படித்திருப்பீர்கள். அவர்களுடைய வேலையே அந்த அருவ சக்திகளுடன் செயல்படுவதுதான். அவர்களை 'குருமார்கள்' என இவர்கள் அழைப்பார்கள். அவர்கள் தேவர்கள், மனிதர்களுடன் தகவல் தொடர்பு வைத்திருப்பார்கள். நீங்கள் மேம்பட்ட நிலையை அடைகிறபோது அவர்களுடன் இசைவிணக்கம் உடையவராவீர்கள். அவர்களால் அனுகூலம் பெறுவீர்கள். பல அழைப்புகளும், செய்திகளும் கிடைக்கும்.

முகமதியர்கள் அதைத்தான் 'பைகாம்' – என்கிறார்கள். அவர்கள் முகமதுவை 'பைகாம்பர்' – 'அறிவிப்பைப் பெறுகிறவர்' என்று அழைக்கிறார்கள். அவரை ஓர் அவதாரம் என்றோ, 'கடவுளின் மறு பிறவி' என்றோ அவர்கள் அழைக்கவில்லை. ஞானம் பெற்ற புத்தர் என்று அவரை அவர்கள் அழைக்கவில்லை. அவரை 'ஜினா' (வெற்றி பெற்றவர்) என்றும் அழைக்கவில்லை. இயேசுவைப் போல் ஒரு மீட்பராகவும் (messiah) அவர்கள் அழைக்கவில்லை. அவர்கள் குறைகளற்ற முழுமையான அறிவியல் சார்ந்த சொற்றொடரையே அதற்குப் பயன்படுத்தினார்கள். அவரை பைகாம்பர் - 'முன்னோடி அறிவிப்பவர்' என்றே அவர்கள் அழைத்தனர். அவர் மேம்பட்ட நிலைக்குச் சென்றுவிட்டார். தற்போது அவர் செயற்பாட்டில் இல்லை.

* *த்யாசபிஸ்ட் (theosophist): ஆத்ம ரீதியில் தெய்விக அருளைக் காண முடியும் என்பதை நம்பும் வேதாந்தி. இறைஞானி.*

சில மேம்பட்ட சக்திகள் அவரைச் சுவாதீனப்படுத்திக் கொண்டு விட்டன. அவர் ஓர் ஊடகமாகி (mediua) விட்டார்.

முகமது எழுதப்படிக்கத் தெரியாதவர். குர்-ஆனின் வெகு அருமையான செய்யுள்களை - திருமறை வாசகங்களை அவர் எழுதியிருப்பார் என்று நம்புவது கடினம். அது ஒப்பிடற்கரிய நூல், மிகச்சிறந்த பாடல்களைக் கொண்டது. யாரேனும் அதைப் பாடிக்கேட்க முடிந்தால் அது உடனடியாய் உங்களுக்குள் மாறுதலை உண்டாக்கும். அதன் பொருளை நீங்கள் புரிந்து கொள்ளாவிட்டாலும், அது மிகப்பெரிய ஆற்றல் கொண்டதாகும். அதன் ஒலியே உங்களைக் கிளர்ந்தெழச் செய்யும் பேராற்றல் உடையது.

முகமது கல்வியறிவில்லாதவர். எப்படிப்படிப்பது எப்படி எழுதுவது என்பதை அறிந்தவரல்லர் அவர். இலக்கியம் பற்றியோ, எழுத்துகள் பற்றியோ அவருக்குத் தெரியாது. ஒரு மலைமீது தியானித்துக் கொண்டிருந்தபோதுதான் திடீரென்று 'அமைதியாகப் படி' என்கிற வார்த்தையை அவர் கேட்டார். 'என்னால் எப்படிப் படிக்க முடியும்?' என்று கேட்டார் முகமது. 'குர்-ஆன்' என்கிற சொல்லுக்கு 'படித்தல்' என்று பொருள். 'எனக்குத் தெரியாதே, நான் எப்படிப் படிப்பேன்?' என்று கேட்டார் அவர். 'படி' என்ற சொல்லை யார் சொன்னது? எங்கும் எவரையும் காணவில்லை. மறுபடியும் அந்தக் குரல் ஒலித்தது, 'படி'. அவருடைய சொந்த இதயத்தில் இருந்தே அது வந்தது. அவர் ஒரு வழி (எண்ணங்களை செய்திகளைப் பரப்பும் வகை)யாயிருந்தார். உண்மையில் அவர் தம்முடைய கடந்த காலத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார். அந்தக் குரலோ அவருடைய எதிர்காலம் பற்றி எதையோ சொல்லிக் கொண்டிருந்தது. 'கவலைப்படாதே, என்னால் பார்க்க முடியும். உன் மூலமாக நான் படித்துக் கொண்டிருப்பேன். நீ ஒப்புவித்திரு (recite). உன் வழியே நான் ஒப்புவித்துக் கொண்டிருப்பேன்.

நீ பேசு - உன் வழியே கருத்துகளை நான் கூறிக் கொண்டிருப் பேன். நீ கொஞ்சம் வழியை விட்டு விலகியிருந்தால் போதும்.'

அது ரொம்பவும் வினோதமானது, சற்றும் எதிர்பாராதது. கடுமையான காய்ச்சல், அவர் வெகுவாய் குழப்பமுற்றிருந்தார். வீட்டுக்கு வந்து படுக்கையில் விழுந்தார். மனைவி கேட்டார், 'என்ன ஆயிற்று? காலையில் நன்றாக இருந்தீர்களே, காய்ச்சல் அனலாய் கொதிக்குதே' என்று. அவர் சொன்னார், 'நான் உன்னிடம் ஒன்று

சொல்வேன். ஒன்று எனக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும். அல்லது என் சக்திக்கு அப்பாற்பட்ட (மேல் உலகம் சார்ந்த) ஏதோவொரு காரியம் நடந்திருக்க வேண்டும். நான் எதையும் செய்யும் திறமை உடையவனாய் இருக்கிறேன் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. ஆனால் எனக்குள் இருந்து ஒரு குரல். 'படி, மனப்பாடமாய் ஒப்புவி' என்றதை நான் கேட்டுக் கொண்டேன். எதை ஒப்புவிப்பது என்று எனக்குத் தெரியவில்லை, ஆனாலும் நான் ஒப்புவிக்கத் தொடங்கிவிட்டேன். ஒருபோதும் என் எண்ணத்தில் இடம் பெற்றிராதவற்றைப் பற்றி நான் சொல்லத் தொடங்கினேன். அவை மிகச் சரியான செய்யுள் வடிவத்தில் வந்தன. சீர், சந்தம் போன்றவற்றைக் கொண்டிருந்தன. என்னால் அதை நம்ப முடியவில்லை. ஒன்று நான் பைத்தியமாகி இருக்க வேண்டும், அல்லது நான் யாருடைய ஆளுகைக்கோ உட்பட்டிருக்க வேண்டும் - ஆனால், இனியும் நான் அதே கணவனாய் இருக்க மாட்டேன். போ, போய் ஒரு மருத்துவரை உடனே அழைத்துவா. எனக்கு சிகிச்சை தேவைப்படு கிறது. 'மனப்பாடமாய் ஒப்புவி' என்ற குரல் ஒலியை நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன். வெகு அருமையான கவிதைகள் எல்லாம் எனக்குள் இறங்கி, என் இதயத்தை நிரப்பிக் கொண்டிருக்கிறது.

மனைவிதான் அவருடைய முதல்சீடர். தம்முடைய கணவரின் பாதத்தை அவர் தொட்டார். அவரைச் சுற்றி பரவியிருக்கும் ஒளியை அவர் கண்டார். அது காய்ச்சல் அல்ல. அவருடைய சிறப்பியல்பு முதல்முறையாய் வெளிப்படுகிறது. அவர் காய்ச்சலாய் உணரக் காரணம் ரொம்பவே கிளர்ச்சியுற்றிருந்ததுதான். அந்தப் புதுமையான அனுபவத்துக்கு அவர் தயாராய் இருந்திருக்கவில்லையென்பதால், அமைதிக்குலைவுக்குள்ளானார். அவர் அதனை எதிர்பார்க்கவே யில்லை, அவர் அதற்காகத் திட்டமிட்டுக் கொண்டிருக்கவில்லை.

அவருக்குப் பதஞ்சலி பற்றித் தெரிந்திருந்தால் இது நடந்திருக் காது. பதஞ்சலி எல்லாவற்றையும் கூர்ந்து கவனித்திருக்கிறார். அவர் பயணத்துக்கான - அகமுகப் பயணத்துக்கான திட்டத்தை முழுமை யாய் வகுத்திருக்கிறார். இந்தச் சூத்திரம் தேவைப்பட்டிருக்கிறது. அதன் தேவை அவருக்குப் புரிந்திருக்கிறது.

'வெவ்வேறு தளங்களில் பொறுப்பேற்றிருக்கும் தூலத்துக்கு அப்பாற்பட்ட (super-physical)வற்றின் பிணைப்பையும், அவற்றின் அழைப்புகளால் உண்டாகும் தற்பெருமையையும் தவிர்க்க வேண்டும்.

காரணம். இதுவே தீங்கு விளைவிக்கிற ஒன்று புத்துயிர் பெறுதற்கான சாத்தியங்களை ஏற்படுத்திக் கொடுத்துவிடும் என்பதுதான்' ஆனால், பதஞ்சலி சொல்வது நினைவில் இருக்கட்டும். நீங்கள் மேம்பட்ட தளங்களின் ஊடகமாகிறபோது பெருமைப்படத் தொடங்கி விடாதீர்கள். நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலருள் ஒருவர் என்றோ அல்லது நீங்கள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதாகவோ எண்ணிக் கொள்ளாதீர்கள். நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்றோ, தெரிவு செய்யப்பட்டவர் என்றோ 'ஸ்பெஷலானவர்' என்றோ எண்ணிக் கொள்ள வேண்டாம். இல்லையேல் அதுவே உங்கள் வீழ்ச்சிக்குக் காரணமாகிவிடும்.

ஒரு சூஃபி கதை:

முர்ஷித்திற்கு மகனாகிய, முர்ஷித்தின் மகனான முர்ஷித் என்கிற இளைஞன் ஒரு கூட்டத்தில் உரையாற்றிக் கொண்டிருந்தான். அந்தக் கூட்டத்தில் பழுப்பு நிறத்தில் எளிமையாய் உடையணிந்திருந்த, பெரிய விழிகளை உடைய இஸ்லாமியத் துறவி ஒருவரும் இருந்தார். இந்தத் துறவி உரையாற்றிக் கொண்டிருப்பவனையே தொடர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார். அவருடைய வெறித்த பார்வையால் குழப்பமுற்ற அந்த இளைஞன் வேறுபக்கம் திரும்பிக் கொண்டான். அவன் சொற்பொழிவை முடித்ததும், அந்தத் துறவி அவனிடம் சென்று தாம் அவனுக்கு தீட்சையளிக்க அனுப்பப்பட்டதாய் தெரிவித்தார்.

'அது முடியாது. என்னுடைய தந்தை எனது தீட்சைக்கு முன்பே ஏற்பாடு செய்து விட்டார்' என்றான் அவன்.

'நான அனுப்பப்பட்டிருக்கிறேன் என்று உன்னிடம் கூறினேன்' என்றார் துறவி.

'அதைப்பற்றிக் கவலை இல்லை. என்னுடைய தந்தையின் விருப்பத்துக்கு நான் கீழ்ப்படிய வேண்டும்.' இளைஞன் இப்படி அழுத்தம் திருத்தமாய் சொல்லியதும் அந்தத் துறவி புறப்பட்டுச் சென்றார்.

அன்றிரவு, அந்தத் துறவியிடம் தீட்சை பெறும்படி தன்னுடைய தந்தை தனக்கு அறிவுறுத்துவதாக அவன் கனவு கண்டான். காலையில் துறவி அவனுடைய அறைக்கு வந்தார். தாம் அவனுக்குத் தீட்சையளிக்க வந்திருப்பதாய் அவர் தெரிவித்தார்.

'என்ன அதற்குள் மறந்து விட்டீரா?, எனது தந்தை என் தீட்சைக் கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறார். நீர் போகலாம்.'

அந்தத் துறவி அவனை நோக்கி புன்னகையுடன் சொன்னார், 'என்ன நீ கண்ட கனவை மறந்துவிட்டாயா?'

அதன்பேரில் அந்த இளைஞன் அவரைப் பணிந்து அவரிடம் தீட்சை பெற்றுக் கொண்டான். பிற்பாடு வந்த நாட்களில் அவன் வாழ்க்கை மற்றும் புனித நூல்கள் சம்பந்தப்பட்ட பல ஆன்மிகக் கேள்விகளை துறவி முன் வைத்தான்.அவரோ வெறுப்புடன் தோள்களை அசைத்து அந்தக் கேள்விகளை விலக்கி விட்டார். ஒரு நாளிரவு தன்னுடைய அறையில் அமர்ந்திருந்தபோது அந்த இளைஞன், 'இந்த ஆசானைக் கொண்டு நான் தெளிவு பெற முடியாது. என்னுடைய கேள்விகளைப் பற்றி இவர் எதுவும் தெரியாதவராய் இருக்கிறார்' என்று எண்ணிக் கொண்டான்.

அவன் அப்படி எண்ணமிட்டபோதே அந்தத் துறவி அவன் முன்பாய் காட்சியளித்தார், 'நானே உன்னுடைய கேள்விகளுக்கு விடையாய் இருக்கிறேன்' என்று முணுமுணுப்பான குரலில், அதே சமயம் திட நம்பிக்கையோடு சொன்னார்.

தற்போது இத்தகைய கதைகள் வெறும் கதைகளாகத்தான் தெரியும் - கட்டுக்கதைகளாய், கற்பனை வடிவங்களாய் உருவகங்களாய், அல்லது குறியீடுகளாவே தெரியும். அப்படியல்ல. அவை. உண்மை சார்ந்தவை. நீங்கள் தயாராயிருந்தால் மேம்பட்டு தளத்தில் இருந்து தகவல்களுக்கு மேல் தகவல்களாய் வந்து கொண்டேயிருக்கும். வரவேற்கும் பண்புடைய மையமாய் மாறும் ஒருவருக்காகத்தான் அவை வெகுநாளாய் காத்திருக்கின்றன. இது நிகழும்போது இவைகளை நீங்கள் மறுத்துவிடாதீர்கள். இது நிகழும்போது எளிதில் ஊறுபடத் தக்கவராயிருங்கள். ஒரு விஷயம் - உங்கள் இதயத்தைத் திறவுங்கள், நம்பிக்கை வையுங்கள். இரண்டாவது - அதுபற்றிப் பெருமைப்பட்டுக் கொள்ளாதீர்கள். இவையிரண்டையும் உங்களால் செய்ய முடிந்தால் கடவுள் உங்கள் மூலம் செயல்படத் தொடங்குவார்.

ஓர் உள்ளீடற்ற மூங்கிலாய், புல்லாங்குழலாய் நீங்கள் மாறிவிடுங்கள். அவர் உங்கள் வழியே கீதமிசைப்பார். ஆனால் செருக்கு உங்களுக்குள் நுழைந்துவிட்டால், பாடல் நின்றுவிடும். நீங்கள்

மேம்பட்டவராய் எண்ணத் தொடங்கியதுமே அந்தப் பாடல் தடுமாறத் தொடங்கிவிடுகிறது. பலருக்கும் இப்படி ஆகியிருக்கிறது. அவர்கள் மேல் உலகத்துடன் தொடர்புடையவராகி தற்பெருமை கொள்ளத் தொடங்கினர். சற்று முன்னதாகவோ அல்லது பின்னதாகவோ அந்தத் தொடர்பு இழக்கப்பட்டது. அவர்கள் சாதாரணமாகிவிட்டனர்.

தங்கள் இழப்பை அவர்களால் ஏற்க முடியவில்லை. அவர்கள் மிகப்பெரிய பாசாங்குக்காரர்களாகி விட்டனர். உண்மையிலேயே அற்புதங்களை நிகழ்த்தக் கூடிய சிலரை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அவர்கள் பிற்பாடு தற்பெருமை கொண்டு விட்டனர். அந்நிலையில், அவர்களுடைய சக்திகள் தொலைந்து போயின. அவர்கள் சாதாரண கண்கட்டி வித்தைக் காரர்களாகிவிட்டனர். காரணம், தங்களால் அதைச் செய்ய முடியாது என்ற கருத்தை அவர்களுக்கு ஏற்க முடிவதில்லை. அது ஒருமுறை நிகழ்ந்தது என்றாலும் அவர்களால் எப்படி விடமுடியும்.

இதுதான் சத்யசாயி பாபாவின் விஷயத்திலும் நடந்தது. அவருக்குத் தொடர்பு கிடைத்திருந்தது. அவர் முதலில் செய்த தெல்லாம் அவரிடம் இருந்து வந்ததல்ல. ஆனால் தற்போது எல்லாமும் அவரிடம் இருந்தே வருகின்றன. முதலில் நடந்தது நியாயமாக நடந்தது. ஆனால் அவர் தற்பெருமை கொண்டு, ஓர் அற்புதங்களை விற்கிற வியாபாரியானார். தற்போது அவர் செய்வது எதுவானாலும் அது பாசாங்குதான், தற்போது தம்முடைய மதிப்பை அவர் காப்பாற்றிக் கொள்ள வேண்டியிருக்கிறது. தற்போது ஒரு மாயாஜாலக்காரரை விடவும் கீழாகப் போய்விட்டார். காரணம் மாஜிக் பண்ணுகிறவர் தான் செய்வது தந்திரவேலைகள் என்பதை ஒப்புக்கொள்ளவாவது செய்கிறார்.

இது தர்க்கமாய் தெரியலாம். ஒருமுறை உங்களால் ஒன்றைச் செய்ய முடிகிறது. அதன்பிறகு உங்களால் அதைச் செய்ய முடியாமல் போய்விடுகிறது. அந்நிலையில் என்ன செய்வது? ஏதோவொன்றை அதற்குப் பதிலி (substitute) யாக்கி விடுகிறீர்கள். நீங்கள் ஏதோ ஒன்றைக் கற்கத் தொடங்குகிறர்கள். ஏதோ ஒன்றைச் செய்கிறீர்கள், உங்களைச் சுற்றி உருவாக்கியிருந்த அந்தஸ்தை, பிம்பத்தை (image) நிர்வாகம் செய்து கொள்கிறீர்கள்.

உங்களுக்கு ஏதோவொன்று நிகழ்கிறபோது - பலருக்கும் அப்படி நிகழத்தான் போகிறது. காரணம் பல உத்திகளை நான் உங்களுக்குக்

கிடைக்கச் செய்திருக்கிறேன், நீங்கள் அவற்றின் அடியாழத்துக்குச் செல்வீர்களாயின், பல சங்கதிகள் உங்களுக்குக் கிடைக்கக் கூடியதாயிருக்கும். முதலாவது - கிடைக்கக் கூடியதாய் இருப்பது. இரண்டாவது அது குறித்து தற்பெருமை கொள்ளாமல் இருப்பது. இதை எப்படி உள்ளதோ அப்படியே புரிந்து கொள்ளுங்கள்.

அது உங்கள்மீது வலுக்கட்டாயமாய் திணிக்கப்பட்டால் அந்தச் சக்திகளிடம், நீங்கள் ஒரு நிழலைப் போல் இருக்க வேண்டும், உங்கள் மூலம் என்ன நிகழ்த்தப்படுகிறது என்பது எந்த வகையிலும் உங்களுக்குத் தெரியக்கூடாது என்று வேண்டுகோள் விடுங்கள். காரணம், நீங்கள் அதைத் தெரிந்து கொண்டால் நீங்கள் வீழ்ச்சியடைய ஒவ்வொரு சாத்தியமும் இருக்கிறது. என்னால் இதைச் செய்ய முடியும், என்னால் அதைச் செய்யமுடியும் என்று அகந்தையைக் குவித்துக் கொண்டே போய், சறுக்கி விழுவீர்கள் அதல பாதாளத்தில்.

*தேகம் மேலும் மேலும நுட்பமுடையதாகிறது, அது துரிதகதியில் அதிர்வுறுவதாய் தெரிகிறது. தன்னுணர்வு மற்றும் விழிப்புணர்வின் பேரில் அதிக செயல்பாடு இருப்பதால் தன்னுணர்வும், விழிப்புணர்வும் குறைகிறது. தியானம் முந்தைய தியான நிலைகளுடனோ, அனுபவங்களுடனோ இனங்காண முடியாத ஒப்பிட முடியாத ஒரு புது வடிவம் கொண்டிருக்கிறது. இரைச்சலுக்கும், குழப்பத்துக்கும் நடுவே இணக்கமான, ஏற்கும் பண்புடைய தியானத்துக்கு நேரமோ, இடமோ, அமைதியான நிலைகளோ மிகக்குறைந்த அளவிலேயே இருக்கின்றன. ஆயினும் ஏதோ நடந்து கொண்டுதான் இருக்கிறது. பெருமளவில் நம்பிக்கை இருந்தாலும் அறிவுக்கு ஏற்புடைய புரிதலை இழந்து விட்டிருக்கிறோம். உண்மையில் என்னதான் நடக்கிறது, இருக்கும் குழப்படிகள் தெளிவாகவே தெரிகிறது, இதற்கு நடுவே இன்னும் உள்ளார்ந்த இடங்களுக்குச் செல்வது எப்படி என்பதைத் தாங்கள் தயவு செய்து தெரிவியுங்கள்.*

முதலாவதும், அதிக முக்கியத்துவம் வாய்ந்ததுமாய் நினைவில் கொள்ளப்பட வேண்டியது குழப்பத்தில் இருந்தே மறுபடியும் பிறக்கிறோம் என்பதுதான். வேறுவழி இருக்கவில்லை. நீங்கள் மீண்டும் பிறக்க விரும்பினால் முழுமையான குழப்பத்தில் நுழைய வேண்டும், காரணம் உங்களுடைய பழைய ஆளுமை அழிக்கப்பட வேண்டியதாயிருக்கிறது. உங்களைப் பற்றி நீங்கள் நம்பிக் கொண்டிருந்த காலம் கொஞ்சம் கொஞ்சமாய் மறையத் தொடங்குகிறது. எப்போதும் நீங்கள் எவற்றைக் கொண்டு உங்களை அடையாளப்படுத்திக் கொள்வீர்களோ அவையெல்லம் மங்கலாய், தெளிவற்றதாய் மாறிவிட்டன. சமூகம் உங்களுக்கு வழங்கிய அமைப்பு, சமூகம் உங்கள் மீது திணித்த குணச்சித்திரம் (character) இவை சுக்குநூறாய் நொறுங்கி விழும். மறுபடியும் நீங்கள் பண்பில்லாதவராய், பிறந்த அன்று இருந்தது போலவே இருப்பீர்கள்.

எல்லாமே ஒரு குழப்பநிலை அடையும். அந்தக் குழப்பத்தில் இருந்து, வெறுமை (nothingness) யில் இருந்து நீங்கள் மறுபடியும் பிறப்பீர்கள்.

அதனால்தான் நான் திரும்பத் திரும்பச் சொல்கிறேன் மதம் ஒரு துணிகரச் செயல் என்று. அது ஒரு மரணம், பெரிய மரணம், தற்கொலை என்றே கொள்ளலாம். என்ன நடக்கப் போகிறது என்று தெரியாமலே மரணத்தை நீங்கள் தேர்ந்தெடுக்கிறீர். என்ன நடக்கப் போகிறது என்று உங்களுக்கு எப்படித் தெரிய முடியும்? நீங்கள் செத்துவிடக் கூடும். இந்தக் காரணத்துக்காகவே நம்பிக்கை தேவைப்படுகிறது.

எனவேதான் தொடர்ந்து உன்னுள் குழப்பமும், நம்பிக்கையும் பக்கம் பக்கமாய் வளர்ந்து கொண்டிருக்கிறது. அந்நிலையில் அச்சப்பட ஏதுமில்லை. அந்த நம்பிக்கையே கவனித்துக் கொள்ளும். பக்கம் பக்கமாய் நம்பிக்கை வளரவில்லை என்றால் பிறகு ஆபத்துதான், அந்நிலையில் ஒருவருக்குப் பைத்தியமே பிடித்துவிடும். எனவேதான் உண்மையில் நம்பிக்கையில்லாதவர்களை தியானத்தில் இறங்க வேண்டாம் என்பது. அவர்கள் தியானத்தில் ஈடுபட்டால் இறக்கத் தொடங்கிவிடுவார்கள், குறிப்பிட்ட நிலையில் நிற்க எந்த அடிப்படையையும் அவர்களால் கண்டுகொள்ள முடியாமல் போகிறது.

மக்களில் பலரும் என்னிடம் வந்து கேட்கிறார்கள், 'நாங்கள் சந்நியாசம் மேற்கொள்ளாவிடில் நீங்கள் உதவமாட்டீர்களா?' என்று. நான் உங்களுக்கு உதவத் தயாராயிருக்கிறேன், ஆனால், நீங்கள்தான் ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை. நான் கொடுப்பது மட்டுமல்ல கேள்வி, நீங்கள் பெறுவது பற்றியதுந்தான் அது. நான் ஊற்றிக் கொண்டேயிருப்பேன், ஆனால் உங்களிடம் ஆழ்நம்பிக்கை இல்லை என்றால் நீங்கள்அதைப் பெற மாட்டீர்கள். ஆழ்நம்பிக்கை எனில், ஊற்றிக் கொண்டேயிருப்பதில் அர்த்தம் இல்லை. உங்கள் ஏற்புத்தன்மையின் அளவே நீங்கள் பெறவும் செய்வீர்கள். உங்களுடைய ஆழ்ந்த நம்பிக்கையின் குறியீடு சந்நியாசம். எல்லா அறிவும் போகாதே என்று சொன்னாலும், 'இது ஆபத்தானது, நீ பாதுகாப்பற்ற ஒரு உலகத்துக்குள் நுழைகிறாய்' என்று உங்கள் மனம் எதிர்த்து நின்றாலும் நீங்கள் என்னோடு இணைந்திருப்பதற்கான குறியீடு அது. உங்கள் மனம் உங்களையும், உங்கள் சிறப்பியல்பையும் அமைப்பையும் பாதுகாக்க முயன்றாலும்கூட நீங்கள் என்னுடன்

இருக்க விரும்புகிறீர்கள் என்றால், உங்களுடைய ஆழ்நம்பிக்கையே அதற்குக் காரணம்.

ஆழ்நம்பிக்கை ஒரு மனக்கிளர்ச்சியல்ல, அது உணர்ச்சிவயப் படுகிறதுமல்ல. அது உணர்ச்சி வயப்படுகிறவர்களுக்கு மட்டுந்தான் என்று மக்கள் எண்ணிக் கொள்கிறார்கள். அது தவறு. ஆழ்ந்த உணர்ச்சிக் கருத்தில் நீங்கள் சொல்வீர்கள், 'நான் நம்புகிறேன்' என்று. ஆனால் அது பெருமளவு உதவியாயிருக்காது, எல்லாமும் மறைந்து கொண்டிருக்கிறது என்கிறபோது முதலில் மறைவது உங்களுடைய உணர்ச்சிக் கருத்தாக (sentment) த்தான் இருக்கும். அது போதிய விளைவை உண்டுபண்ணாத அளவுக்குப் பலவீனமானது. நம்பிக்கை ஆழமாகவும் திடமாகவும் இருக்கவேண்டும். அதுஒரு மென் உணர்ச்சி அல்ல, மனநிலை அல்ல, அது உங்களுக்குள் நிலையாக இருக்கிற ஒன்று, எது நடந்தாலும் குறைந்தபட்சம் உங்களுடைய நம்பிக் கையையேனும் நீங்கள் இழக்காமல் இருக்கவேண்டும்.

நான் அதனால்தான் சொல்கிறேன் பெரிதாய் அல்லாதவற்றைச் செய்யுங்கள் என்று. நான் துறவாடை அணிவதை வலியுறுத்துகிறேன். 'ஏன், என்ன விஷயம், நான் காவியுடையகளில்லாமல் தியானம் பண்ண முடியாதா?' என்று சில சமயம் நீங்கள் எண்ணிக் கொள்வீர்கள். உங்களால் தியானம் பண்ண முடியும். எவ்வகையிலும் அது முக்கியக் கருத்து ஆகிவிடாது. அறிவுக்கு ஏற்புடையதல்லாத சில விஷயங் களை நான் முன்வைக்கிறேன்.

துறவாடைக்கு எந்தக் காரணமும் இல்லை, அறிவியல்பூர்வமான எந்தக் காரணமும் அதற்கில்லை. எந்தவொரு நிறத்திலும் ஒருவர் தியானிக்கவோ, அறிவுத் தெளிவடைவோ முடியும். நீங்கள் என்னோடு உடன் இருக்கிறீர்களா என்பதை ஒரு சோதனையாய், பகுத்தறிவுக்குப் பொருந்தாத ஒன்றை உங்களுக்குக் கொடுக்கிறேன். உங்களை முட்டாளாக்குவதற்காக ஒரு மாலையை உங்கள் கழுத்தில் அணிவிக்கிறேன். ஆக, ஒரு முட்டாளைப் போன்று இந்த உலகத்தில் நீங்கள் நுழைகிறீர்கள். மக்கள் உங்களைப் பார்த்துச் சிரிக்கிறார்கள். உங்களுக்குக் கிறுக்குப் பிடித்துவிட்டதாய் அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். அதைத்தான் நான் விரும்புகிறேன், ஏறக்குறைய ஒரு பைத்தியமாகவே உங்களை நான் ஆக்குகிறபோதும் நீங்கள் என்னோடு உடன் இருக்கிறீர்கள் என்றால், உண்மையான நெருக்கடி வரும்போதும் நீங்கள் நம்பிக்கையோடு இருப்பீர்கள் என்பதை நான் அறிகிறேன்.

இந்த நெருக்கடிகள் எல்லாம் உங்களைச் சுற்றி செயற்கையாய் உண்டுபண்ணப்பட்டவை. அவை தனிச்சிறப்பு பெற்றுவிடுகின்றன - எந்தக் காரணமும் இல்லாமல். அவற்றின் சிறப்பு நம்பிக்கையின் ஆதாரத்தை (reason) விட மிகுதியானது. குருமார்கள் எல்லாருமே அதைச் செய்திருக்கிறார்கள்.

சூஃபி குருவான இப்ராகிம் தம்முடைய குருவிடம் தீட்சை பெறச் சென்றிருந்தபோது, இப்ராகிம் ஓர் அரசனாயிருந்தார். அவருடைய குரு அவரைப்பார்த்துவிட்டுச் சொன்னார், 'உன்னுடைய உடைகளை அகற்றிவிடு. என்னுடைய காலணியை எடுத்துக் கொண்டு நிர்வாணமாய் சந்தைக்குச் செல். அங்கே எனது காலணியைக் கொண்டு உன் தலையில் அடித்துக் கொள்' என்று.

சுற்றியிருந்தவர்களும், அவருடைய சீடர்களும் சொன்னார்கள், 'இது ரொம்பவும் இடர்ப்பாடான ஒன்று. எளிதில் புரிந்து கொள்ள முடியாததாயிருக்கிறது. தாங்கள் ஒரு போதும் இப்படிக் கேட்டதில்லை. 'நிர்வாணமாய் சந்தைக்குச் செல், என் காலணியால் உன் தலையில் அடித்துக்கொள்' என்று ஒருபோதும் நீங்கள் சொன்னதில்லை. இப்ராகிம் மன்னரின் விஷயத்தில் ஏன் இத்தனை கடுமை காட்டு கிறீர்கள்' என்று.

குருநாதர் சொன்னார், 'காரணம், அவருடைய அகந்தை உங்களுடையதைவிட பெரியது. அவர் ஓர் அரசர். நான் அதைக் கைவிடாவிட்டால், மேற்கொண்டு எதுவும் சாத்தியமில்லை' என்று.

ஆனால், இப்ராகிம் ஒரு கேள்விகூட கேட்கவில்லை, அவர் தம் முடைய உடைகளைக் களைந்தார். அது ரொம்பவும் சிரமமாயிருந்தது அவருக்கு. தாம் அரசராயிருந்து கொண்டிருக்கும் அதே தலை நகரத்தில், தம்மை மனிதரில் மேம்பட்டவராய் எண்ணிக் கொண் டிருந்தவர், அதுவரை அறிந்தேயிராத வீதிகளில் நிர்வாணமாய் நடந்து, காலணியால் தலையில் அடித்துக் கொள்ள வேண்டும். ஆனால் அவர் நகரத்துக்குள் அப்படியே நுழைந்தார். மக்கள் அவரைப் பார்த்து நகைத்தார்கள், சிறுவர்கள் அவர்மீது கற்களை வீசினார்கள். ஒரு பெரிய கூட்டமே அவருக்குப் பின்னால் நின்று கொண்டு ஏளனம் செய்தது. அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாய் அவர்கள் எண்ணியிருக்க வேண்டும். ஆனாலும், அவர் நகரத்தைச் சுற்றிவிட்டுத் திரும்பினார்.

குரு சொன்னார், 'நீ ஏற்கப்பட்டு விட்டாய். தற்போது எல்லாமே சாத்தியம். நீ இசைவானவனாகி விட்டாய்' என்று.

இதில் ஆதாரப்பொருள் (reason) என்ன? நீங்கள் புரிந்து கொள்ளும் திறனுடையவராயின், புரிந்து கொள்வீர்கள். இது அகந்தையைத் தகர்த்தெறியும் ஒரு வழியாய் இருந்தது என்பதை. அகந்தை போய்விட்டால் ஆழ்நம்பிக்கை மேலெழும்.

சந்நியாசம் ஒரு செய்முறை, உபாயம் நீங்கள் என்னோடு வருகிறீர்களா என்பதைக் கண்டுபிடிப்பதற்கு. நான் உங்கள் பொருட்டு அதனைக் கடினமாக்கியிருக்கிறேன். எங்கு பார்த்தாலும் என்னைப் பற்றிய வதந்திகள். நான் உங்களுக்குச் சொல்வேன், உங்களால் முடிந்த அளவு நீங்கள் வதந்திகளைப் பரப்புங்கள் என்று. உண்மையைப பற்றிக் கவலைப் படாதீர்கள், வதந்திகளை உண்டு பண்ணுங்கள். என்னைப் பற்றிய வதந்திகள் இருந்தும், என்னோடு தொடர்பு வைக்க முடிகிறவர்கள் தகுதியானவர்கள், துணிவும் வீரமும் கொண்டவர்கள். மிகப்பலவும் அவர்களுக்குச் சாத்தியம்.

ஆக முதல் விஷயம், தெரிந்தேதான் இங்கு குழப்பம் ஏற்படுத்தப்படுகிறது. அதைப் பிரச்சினையில் ஒரு வகையாய் நீங்கள் எண்ணிக் கொள்ள வேண்டாம். இல்லை, அது ஒரு சூழ்ச்சித்திறம் (device) தான்.

நீங்கள் குழப்பத்தைப்பற்றி யாரிடமும் போய், எதுவும் கேட்க வேண்டாம். இல்லையேல் உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாய் அவர் எண்ணிக் கொள்வார். ஓர் உளவியல் நிபுணரிடம் சென்று கேட்டு வைக்காதீர்கள். உளவியல், உளப்பகுப்பாய்வு முழுவதும் மக்களுக்குத் தவறான வழியில் உதவவே முற்பட்டிருக்கின்றன. அவர்கள் உங்களை எதையும் அநுசரித்துக் கொண்டு போகிற சீவனாக மாற்ற முயல் கிறார்கள். நான் 'ஆக்கப்பூர்வமான குழப்பநிலை' என்று சொல்வதை அவர்கள் 'தவறான ஒழுங்குமுறை' என்கிறார்கள். யார் இயல்பானவர் என்பதை எண்ணிப் பார்க்காமல் அவர்கள் எல்லாரையுமே இயல்பாகிவிட வேண்டும் என்று விரும்புகிறார்கள்.

சமூகம், சமூகத்தின் பெரும்பான்மை, மக்கள் கூட்டம் இயல்பாக இருக்கிறதா? அதற்கான அளவுகோல் எங்கே இருக்கிறது? யாரை உருமாதிரியாக – எடுத்துக்காட்டாக கொள்வது? அப்படி அளவுகோல் எதுவும் இல்லை. இந்தியாவில் ஏதோ ஒன்று இயல்பாக எண்ணிக் கொள்ளப்படும். ஆனால் அதே விஷயம் சீனாவில் இயல்பாக எண்ணப்படுவதில்லை. 'இது வழக்கம்' என்று ஸ்வீடனில் கருதப் படுவது இந்தியாவில் 'வழக்கம்' என்று கருதப்படுவதில்லை.

ஒவ்வொரு சமூகமும் தன்னுடைய மக்களில் பெரும்பாலானவர்கள் இயல்பானவர்கள் என்றே நம்புகிறது. அப்படி இருப்பதில்லை. ஒருவரைக் கூட்டத்துடன் அநுசரித்துப் போகும்படி கட்டாயப்படுத்துவது ஆக்கத் திறனுடையதாகாது. அது ரொம்பவும் உணர்ச்சிக் குன்றச் செய்வதாகும்.

சமூகத்தில் அதிகாரம் செலுத்திக் கொண்டிருப்பவர்களுக்கு வேண்டுமானால் அநுசரித்துப் போவது சரியாய் இருக்கலாம். ஆனால் அது உங்களுக்குச் சாதகமாய் இருக்காது. ஒவ்வொரு சமுதாயமும் சமயகுருமார்களை, ஆசிரியர்களை, உளப்பகுப்பாய்வு வல்லுநர்களைப் பயன்படுத்தி கலக்க்காரர்களை சரிக்கட்டி கொண்டு போகவும், தான் விரும்பிய வகையில் மாற்றியமைக்கவும் முயல்கிறது. அவர்கள் நடைமுறை நிலைக்கு நிர்வாகத்துக்கு அனுகூலமாயிருக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் அதிகாரம் பண்ணுகிறவர்களுக்கு உதவியாயிருக்கிறார்கள்.

சோவியத் ரஷ்யாவில் தற்போது அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். யாரேனும் கம்யூனிஸ்டாக இல்லாவிடில் அவர் ஒழுங்குமுறை தவறியவராய் கருதப்படுகிறார். அவரை மனநல மருத்துவமனையில் அவர்கள் சேர்த்து விடுகிறார்கள். அங்கே அவருக்குச் சிகிச்சையளிக்கிறார்கள். சோவியத் ரஷ்யாவில் கம்யூனிஸ்ட்டாக இல்லாமல் இருப்பது ஒருவகை நோயாகக் கருதப்படுகிறது. என்ன அறிவீனம்! ஆனால் அவர்கள் அதிகாரத்தை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் உங்களுக்கு மின் அதிர்ச்சி கொடுப்பார்கள். மூளைச் சலவை செய்வார்கள். அவர்கள் உங்களுக்கு அமைதி ஊக்கிகளை (tranqulizers)க் கொடுத்து உங்களை மந்தமானவராக்கி விடுவார்கள். உங்களுடைய திறமையை, அடிப்படைத்தன்மையை நீங்கள் இழந்து விடுகிறபொழுது, உங்கள் தனித்தன்மை தொலைந்து விடுகிற பொழுது முகமற்றவராகி விடுகிறீர்கள், அவர்கள் உங்களைப் பற்றிச் சொல்கிறார்கள், ‘இப்போது இயல்புநிலையில் இருக்கிறீர்கள்’ என்று.

ஒன்றை நினைவில் வையுங்கள், நான் இங்கே இருப்பது உங்களை இயல்பானவராக்கவோ, சரிக்கட்டுவதற்காகவோ அல்ல. உங்களைத் தனித்தன்மை கொண்டவராக்குவதற்காகத்தான். உங்கள் விதி (destiny)யையன்றி வேறெதையும் - வேறெந்த அடிப்படையையும் நீங்கள் நிறைவுபடுத்த வேண்டும் என்பதில்லை. நான்

நேரடியாக உங்களைக் கூர்ந்து கவனிக்கிறேன். நீங்கள் 'இதுவாக இருங்கள், இப்படி இருங்கள்' என்று நான் சொல்லிக் கொண்டிருக்க வில்லை. அதுதான் உங்களை அழித்துப் போடும். உங்களுடைய சிறப்பியல்பாய் சொல்லப்படுவதை (socalled character) உருவாக்குகிறது. சிறப்பியல்பு - சீரியபண்பு என்பதெல்லாம் ஒரு பிணி. உங்களைத் துன்புறுத்துவது சிறைப்படுத்துவது. நான் அதை உருக்குலைக்க வேண்டும். சர்வநாசம் பண்ண வேண்டும். அப்போதுதான் நீங்கள் தடையற்றவராக முடியும். அப்போதுதான் உங்களுடைய சொந்த இருப்புணர்வின் அடிப்படையில் நீங்கள் சிந்திக்கத் தொடங்குவீர்கள்; அவ்வாறாகத்தான் நீங்கள் தனித்தன்மை கொண்டவராக முடிகிறது.

சமுதாயம் தன்னை மாசுப்படுத்திக் கொண்டுவிட்டது. உங்களை ரொம்பவே தூய்மையற்றவராக்கி விட்டது. அதனால் குழப்பம் உண்டாகிற போதெல்லாம் நீங்கள் அச்சமடைகிறீர்கள்.

'என்ன நடக்கிறது? எனக்குப் பித்துப் பிடித்துவிட்டதா?'

நான், ரொம்பவும் புகழ்பெற்ற ஒரு கதையை - ராணிமேரி அமெரிக்கா சென்றபோது பிரபல்மான மனநல மருத்துவர் ஒருவரைச் சந்தித்தது பற்றியதைக் கேட்டறிந்திருக்கிறேன்.

ராணிமேரியை உள்ளே அழைத்துச் சென்ற நர்ஸ், மனநல மருத்துவரிடம் சொன்னாள், 'தாங்கள் ருமேனியாவின் அரசியைச் சந்திக்க விரும்புவீர்கள் என்று நினைக்கிறேன்.'

மனநல மருத்துவர் ராணியைப் பார்த்தபடி கேட்டார், 'தான் ஒரு ராணி என்று இவர் எவ்வளவு காலமாய் நினைத்துக் கொண்டிருக் கிறார்' என்று.

காரணம் மனநல மருத்துவர் எப்போதுமே தங்களை அலெக்சாண்டராகவும், செங்கிஸ்கானாகவும், இட்லராகவும், கிளியோபாட்ராவாகவும் எண்ணிக் கொண்டிருப்பவர்களுக்குத் தானே சிகிச்சையளிக்கிறார். அப்படியிருக்கிறபோது ருமேனிய அரசி ராணிமேரியே தன்னைச் சந்திக்க வருவார் என்று அவர் எண்ணிப்பார்த்திருக்க மாட்டார். 'பித்துப் பிடித்த இன்னொரு பெண்மணி' என்றுதான் அவர் நினைத்துவிட்டார்.

நான் கேட்டறிந்த இன்னொரு கதை:

ஒரு நோயாளியை மனநல மருத்துவரிடம் அழைத்துவந்த அவருடைய நண்பர்கள், 'இவ உளத்திரிபால் (delusion) அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார், தமக்குப் பெரிய அளவில் செல்வம் கிடைக்கப் போகிறது என்று தவறாக நம்புகிறார்' என மருத்துவரிடம் தெரிவித்தனர். சுமத்ராவில் ஒரு ரப்பர் தோட்டம், தென் ஆப்பிரிக்காவில் ஒரு சுரங்கம் தொடர்பான இரண்டு கடிதங்களை அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவற்றின் மூலம் தமக்கு முழுவிவரங்களும் கிடைக்கும் என்று அவர் நம்பினார்.

அந்த மனநல மருத்துவர் தமது சகாக்களிடம் சொன்னார், 'அது ரொம்பவும் இடர்ப்பாடான 'கேஸ்', எளிதில் கையாள முடியவில்லை. பெரும் முயற்சி தேவைப்பட்டது. அந்த ஆளை நான் குணப்படுத்தியதுமே இரண்டு கடிதங்களும் வந்து சேர்ந்தன.'

கவனமாயிருங்கள், அந்த இரண்டு கடிதங்கள் உண்மையிலே வந்திருக்கலாம்.

அச்சப்படாதீர்கள். நீங்கள் தனியே நடக்கத் தொடங்குகிற போதெல்லாம் அச்சம் வந்து விடுகிறது. ஒருவர் பாதுகாப்பற்றவராய் உணர நேரிடுகிறது. 'நான் சரியாக இருக்கிறேனா?' என்ற சந்தேகம் எழுகிறது, காரணம் ஒட்டுமொத்தக் கூட்டமும் ஒரு திக்கில் போய்க் கொண்டிருக்கிறது, நீங்கள் தனியே நடக்கத் தொடங்குகிறீர்கள். கூட்டத்தில் இருக்கும்போது சந்தேகம் வருவதில்லை, காரணம், 'இலட்சோபலட்சம் பேர் இந்தப் பக்கமாய் போய்க் கொண்டிருக் கிறார்கள். அதில் ஏதாவது இருக்கத்தான் வேண்டும்' என்று நீங்கள் எண்ணிக் கொள்கிறீர்கள். கும்பல் மனப்பான்மை (பொதுமனம்) உங்களை விஞ்சியதாயிருக்கிறது. தொகுக்கப்பட்ட மனம் (collective mind) உங்களைத் தோற்கடித்து விடுகிறது. மிகப்பலர் என்கிறபோது அதில் தவறு இருக்கமுடியாது, அவர்கள் சரியாகவே இருக்க வேண்டும்.

சுற்றுலா சென்ற ஓர் உளப்பகுப்பாய்வாளரைப் பற்றி நான் கேட்டறிந்தது. அவர்கள் தகுதியான இடமொன்றைக் கண்டுபிடிக்க முயற்சிபண்ணிக் கொண்டிருந்தனர். அப்போது குழுவில் ஒருவர் சொன்னார், 'இதோ ஒரு அழகான இடம், வாங்க; வந்து பாருங்க, ஒரு தகுதியான இடம் இது. இங்கே நிழல் தரும் பெரிய மரங்கள், பக்கமாய் ஒரு ஆறு ஓடிக் கொண்டிருக்கிறது, ரொம்ப நிசப்தமானது' என்று.

உளப்பகுப்பாய்வாளர் சொன்னார், 'பத்து மில்லியன் எறும்புகள் தவறாகிவிட முடியாது' என்று.

பத்துமில்லியன் எறும்புகள் தவறாகிவிட முடியாதுதான். சுற்றுலாவிற்கான இடம் எங்கிருந்தாலும் அங்கே ஈக்களும், எறும்புகளும் கூடி விடுகின்றன. பலபேர் என்கிறபோது அவர்கள் தவறாக இருக்க முடியாது என்பது நம்முடைய மனம் போடுகிற கணக்கு. தனித்திருக்கும் ஒருவர் குழப்பமாக உணர்வார். கூட்டத்தில், இந்தப் பக்கம், அந்தப் பக்கம், முன்னாடி, பின்னாடி என்று கடல்போல் மக்கள் சுற்றிலும் இருக்கும்பொழுது ஒருவர் முழுத்தகுதியாய் உணரமுடிகிறது. நிறையபேர் போய்க்கொண்டிருக்கிற பாதை சரியான பாதையாகத்தான் இருக்கும். எல்லாரும் அதையேதான் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

தாங்கள் எங்கே சென்று கொண்டிருக்கிறார்கள் என்பதே யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. எல்லாரும் போகிறார்கள் என்பதால் இவர்களும் போகிறார்கள். நீங்கள் தனித்தனியே ஒவ்வொருவரிடமும் 'நீங்கள் சரியான பாதையில்தான் போய்க் கொண்டிருக்கிறீர்களா?' என்று கேட்டால், அவர் சொல்வார், 'எனக்குத் தெரியாது. ஒட்டுமொத்த உலகமும் போகிறது; நானும் போகிறது' என்று.

என்னுடைய முழுமுயற்சியுமே உங்களை கூட்டு மனத்தில் (collective mind) இருந்து வெளிக் கொண்டுவருவதுதான், உங்களைத் தனித்தன்மை உடையவராக்குவதுதான். தொடக்கத்தில் நீங்கள் குழப்பத்தை எதிர் கொள்ளும்படி இருக்கும். குறிப்பிடத்தக்க அளவில், மிகப்பெரிய அளவில் நம்பிக்கை தேவைப்படுகிறது. இல்லையேல் நீங்கள் கூட்டுமனத்தில் இருந்து வெளிவர முடியுமே தவிர, தனித்தன்மை கொண்டுவிட முடியாது. அப்போது உங்களுக்குப் பைத்தியமே பிடித்துவிடும். அதுதான் ஆபத்து. ஆழ்நம்பிக்கை இல்லாமல் தியானத்தில் இறங்குவது அபாயத்துக்குட்படுத்திக் கொள்வதாகும். உங்களை அதனுள் செல்லும்படி நான் கூறமாட்டேன். இயல்பாக இருந்து விடுவதே நல்லது என்று நான் சொல்வேன், இயல்பு நிலையைக் குறிப்பது எதுவாயினும். சமூகத்துடன் ஒத்துப் போகிறவராயிருங்கள். ஆனால், உண்மையிலேயே மிகப்பெரிய தீரச் செயலில் நீங்கள் இறங்குவதாயிருந்தால் அந்நிலையில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவராயிருங்கள். அதன்பிறகு குழப்பத்தை எதிர்பார்த்திருங்கள்.

நீங்கள் எந்த அளவு உணர்வோடு இருக்கிறீர்களோ அந்த அளவு அதை உணர்கிறீர்கள். விழிப்புணர்வே போதுமானது. விழிப்புணர்வு பற்றிய பிரக்ஞை (consciosness) கடுமையான அழுத்தத்தை உண்டு பண்ணிவிடும். தொடக்கத்தில் அப்படித்தான் இருக்கும். நீங்கள் கார் ஓட்டுவதற்குக் கற்றுக் கொள்கிறீர்கள். உண்மையில் ரொம்பவும் அவதிப்படுத்துகிற சமாச்சாரந்தான். நீங்கள் பலவற்றை - சக்கரம், பல்லிணை (gear), ஊடிணைப்பி (clutch), முடுக்கி (accelerator), பிரேக், சாலை, சமயத்தில் பின்னிருக்கையில் அமர்ந்திருக்கும் மனைவி என்று பலவற்றையும் கவனம் செலுத்த - பலவற்றையும் நிர்வகிக்க வேண்டியிருக்கும். பலவற்றையும் நிர்வகிக்க வேண்டியிருப்பதால் ஒருவர் ரொம்பவும் தன்னுணர்வுடையவராய் இருக்க வேண்டும். தொடக்கத்தில் அது சாத்தியமற்றதாகவே தெரியும். போகப்போக எல்லாமும் ஒருநிலைக்கு வந்து நீங்கள் வண்டி ஓட்டுகிறீர்கள். ஒரு நண்பரிடம் பேசிக்கொண்டோ, வானொலி கேட்டுக்கொண்டோ, பாட்டுப்பாடிக் கொண்டோ, ஏன் சிந்தனை பண்ணியபடியும் உங்களால் வண்டி ஓட்ட முடிகிறது. அதில் பிரச்சினை எதுவும் இருக்காது. தற்போது 'ட்ரைவிங்' தானாக நடக்கிற காரியமாகிவிடுகிறது. அதுபற்றிய தன்னுணர்வு அவசியப்படாது என்பது உங்களுக்குத் தெரியவருகிறது.

நீங்கள் தியானம் செய்கிறபோதும் அதுதான் நடக்கிறது. தொடக்கத்தில் பிரக்ஞை (consciousness) பற்றிய உணர்வு உங்களுக்கு வேண்டியிருக்கிறது. அது மட்டுமீறிய முயற்சியையும், களைப்பையும் கொடுக்கிறது. போகப்போக பிரக்ஞை வளர்ந்து அதுபற்றிய உணர்வோடு இருக்க வேண்டிய அவசியமில்லாமல் போகிறது. அது சுவாசம்போல தன்போக்கில் போய்க் கொண்டிருக்கும். நீங்கள் அதுபற்றிய' உணர்வோடு இருக்கவேண்டும் என்பதில்லை. தனக்கே உரிய விதத்தில் அது போய்க் கொண்டிருக்கும். உண்மையில், தியானத்தின் பிற்பகுதியில், உங்களுடைய பிரக்ஞைபற்றிய உணர்வோடு நீங்கள் இருந்தால் அதுவே அமைதிக்குலைவை உண்டு பண்ணுவதாகிவிடும். அது உங்கள் சுவாசம் பற்றிய உணர்வோடு நீங்கள் இருப்பது போலாகும். அதன் இயல்பான சீர்த்தன்மையை நீங்கள் உடனே குலைத்துவிடுகிறீர்கள். அது இயற்கையாகவே ஓடிக் கொண்டிருக்கிறது. அதில் நீங்கள் நுழைகிற அவசியம் இல்லை.

விழிப்புணர்வு இயல்பானதாகிவிடுகிறது. அந்நிலையில் நீங்கள் உறக்கத்தில் இருந்தாலும் விழிப்புணர்வு சுடரொளி வீசுகிறது. நீங்கள்

அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தாலும் அந்தச் சுவாலை அப்படியே இருக்கிறது.

கேள்விபற்றிய கடைசி விஷயம்: 'பெருமளவில் நம்பிக்கை உங்களுக்குள் இருந்தாலும், அறிவுக்கு ஏற்புடைய புரிதலை இழந்து விட்டிருக்கிறீர்கள்'. அறிவுக்கேற்புடைய புரிதல் எவ்வகையிலும் புரிதல் ஆகாது. அது தவறான சொல்வழக்கு (misnomer) ஆகும். அறிவைப் பயன்படுத்துவதன் மூலம் ஒருவர் எதையும் புரிந்து கொள்வதற்கில்லை. புரிந்து கொள்வது உணர்வு சம்பந்தப்பட்டது. அறிவைப் பயன்படுத்துவ்து என்பது ஒரு பொய். அது ஒரு தவறான உணர்வையே உங்களுக்குத் தரும். 'ஆகா, நீங்கள் புரிந்து கொண்டு விட்டீர்கள்.'

அனுபவங்கள் மூலமே ஒருவர் பொருள் அல்லது இயல்பை அறிந்து (understand) கொள்கிறார். வாழ்தலின் மூலமே அறிதல் சாத்தியமாகிறது.

எடுத்துக்காட்டாக, நான் அன்பைப் பற்றிப் பேசினால், உங்களால் அறிவிற்கேற்புடைய விதத்தில் அதைப்புரிந்து கொள்ள முடிகிறது. காரணம், உங்களுக்குக் கருத்துகளை வெளியிடும் முறை தெரிந்திருக்கிறது. சொற்பொருள் ஆய்வியல் (semantics) தெரிந்திருக்கிறது; சொற்களின் அர்த்தம் தெரிந்திருக்கிறது, சொற்களைக் கொண்டு வாக்கியங்களை உருவாக்கத் தெரிந்திருக்கிறது. நீங்கள் பயிற்சி பெற்றிருக்கிறீர்கள், எனவே, நான் என்ன சொல்கிறேன் என்பது உங்களுக்குப் புரியும், ஆனால் உங்களுடைய புரிதல் 'அன்பு' என்பதைப் பற்றிதான் இருக்கும். எவ்வளவுதான் அன்பு பற்றிய தகவல்களையும், செய்திகளையும் சேர்த்துக் கொண்டே போனாலும், அந்தச் சேகரிப்பை வைத்துக் கொண்டு அன்பை நீங்கள் ஒருபோதும் அறிந்து கொள்வதற்கில்லை. நீங்கள் அன்பிற்குள் நுழைந்தாக வேண்டும், அதைச் சுவைத்தாக வேண்டும், அதில் கரைந்தாக வேண்டும். அந்நிலையில் மட்டுமே அது சாத்தியம்.

அறிவு சார்ந்த புரிதல் என்பது மேம்போக்கான புரிதலே ஆகும். நீங்கள் அன்பைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பினால் அன்பினுள் நுழைந்தாக வேண்டும். நூலகத்தில் நுழைவதைவிட அடுத்தவர் சொல்வதைச் செவிமடுப்பதைவிட அதுவே சிறப்பு. நீங்கள் தியானிக்க விரும்பினால் புத்தகங்களைப் படித்துத் தெரிந்து கொள்வதைவிட நேராகத் தியானத்தில் இறங்கி விடுங்கள். அதை உணருங்கள்,

மகிழுங்கள். அதில் பிரவேசியுங்கள். அது உங்களைச் சுற்றி நிகழ் வதற்கு இடமளியுங்கள். அது உங்களுக்குள் நிகழ அனுமதியுங்கள். அந்நிலையில் நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.

ஆடிப் பார்க்காமல் நடனத்தைப் பற்றி நீங்கள் எப்படி அறிந்து கொள்ள முடியும்? அதனை நூல்களில் இருந்து அறிந்து கொள்வது முடியாத காரியம். ஒருவர் ஆடுவதைப் பார்த்து அறிந்து கொள்வதும்கூட கடினமே. அது அறிந்து கெள்வதாகாது. காரணம், உடல் அசைவுகளை, அதன் புறவடிவை மட்டுமே நீங்கள் காண்கிறீர்கள். நடனம் ஆடுகிற ஒருவருக்குள் என்ன நிகழ்கிறது என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள். அவருக்குள் உண்டாகிற இணக்கத்தை, அவருடைய தன்னுணர்வை, விழிப்புணர்வை நீங்கள் அறிவதற்கில்லை. எது படிகமாகிறது. எது மையம் கொள்கிறது என்பது உங்களுக்குத் தெரிந்திருக்காது. நீங்கள் அதைப் புரிந்து கொள்ளவோ, அனுமானிக்கவோ (infer) இயலாது. ஓர் ஆட்டக்காரனின் அகவுலகில் நீங்கள் நுழைவதென்பது முடியாத காரியம். உள்ளே நுழைவதற்கு ஒரேவழி நீங்களும் ஆட்டக்காரராகி விடுவதுதான்.

நேர்த்தியான, உள்ளார்ந்த, மிகச் சிறந்த எதுவும் வாழ்ந்து பார்க்கப்பட வேண்டியது.

நம்புதல் வாழ்க்கையில் மிகப்பெரிய விஷயம். அன்பைவிடப் பெரியது. காரணம் அன்பு அறிந்திருக்கும் வெறுப்பைப் பற்றி. நம்பிக்கை அதைப் பற்றி அறிந்திருப்பதில்லை. அன்பு இருமை (duality) கொண்டது. வெறுப்பு மறைந்திருக்கும் அதன் ஒரு பகுதியாய். அதை விட்டுவிடுவதற்கில்லை. உங்கள் காதலுக்குரியவரை கணப் பொழுதில் நீங்கள் வெறுத்துவிட முடியும். எது வேண்டுமானாலும் அதற்குக் காரணமாயிருக்கக்கூடும், வெறுப்பு வளர்கிறது, அன்பு குறைகிறது. அன்பில் ஒரு பாதியைத்தான் நீங்கள் அன்பு என்கிறீர்கள். மேற்பரப்புக்கு அடியில் துள்ளிக்குதித்து வெளியே வரவும், உங்களைச் சுவாதீனப்படுத்திக் கொள்ளவும் வெறுப்பு எப்போதும் காத்திருக்கிறது. அது உங்களைத் தனத ஆளுகைக்குட்படுத்தியிருக்கிறது. காதலர்கள் சண்டைபோட்டுக் கொள்கிறார்கள், தொடர்ந்து மோதல்தான். காதலைப் பற்றி யாரோ ஒரு புத்தகம் எழுதியிருந்தார்கள். அழகான தலைப்பு: 'The Intimate Enemy'. காதலர்கள் எதிரிகளாகவும் இருக்கிறார்கள்.

ஆனால், ஆழ்நம்பிக்கை கொண்டிருப்பது அன்பைவிடவும் உயர்வான விஷயம். அது இரட்டைத் தன்மையற்றது. அது வெறுப்பை

அறிந்ததில்லை. அது எதிரிடை நிலைகளையோ, எதிரெதிரான கொள்கைகளையோ கொண்டதல்ல. அது அப்படியே ஒற்றையாயிருக்கிறது. அதுவே தூய்மையான அன்பு. வெறுப்பில்லாத அன்பு. வெறுப்பு என்கிற பகுதியை முற்றாகக் கைவிட்டுவிட்ட அன்பு. ஒரு கசப்பான அனுபவமாகவோ, கடுப்பான அனுபவமாகவோ மாற்ற முடியாத அன்பு. நிலத்தில் இருந்து வேறோர் உலகத்துக்கு உரியதாகி விட்ட அன்பு.

ஆக, அன்பு செய்பவர்கள் ஆழ்நம்பிக்கைக் கொண்டவர்கள். நீங்கள் அன்பையும், நம்பிக்கையையும் தவிர்க்க விரும்பினால் உங்களுடைய நம்பிக்கை கீழ்மையான படிநிலை (status) கொண்டதாகவே இருக்கும் காரணம் அது வெறுப்புப் பகுதியையும் தொடர்ந்து பெற்றிருப்பதுதான். முதலில் உங்கள் ஆற்றலை அன்பின் வழியே செல்லவிடுங்கள் அப்போது அன்பு - வெறுப்பு என்கிற இரட்டைத் தன்மையை நீங்கள் உணர்ந்து கொள்ள முடியும். பின்பு, வெறுப்புப் பகுதியில் இருந்து ஏமாற்றம் வந்தடையும். அனுபவத்தின் வழியே புரிதலை அடைவதுடன் வெறுப்புப் பகுதியையும் விட்டு விடுகிறீர்கள். பிற்பாடு எஞ்சியிருப்பது தூய அன்பும், அன்பின் சாரமும்தான். பூவும்கூட இருப்பதில்லை, இருப்பது நறுமணம் மட்டுமே, அந்நிலையில் நீங்கள் ஆழ்நம்பிக்கை கொண்டவராயிருங்கள்.

உண்மையில் அறிவு சார்ந்த புரிதலுடன் அது ஈடுபட எதுவும் இல்லை. அறிவுக் கேற்புடைய புரிதல் மறைகிறது, ஆழ்நம்பிக்கை மிகுதியான அளவில் எழுகிறது. ஆழ்நம்பிக்கை ஒரு வழியில் குருடுதான். ஒரு வகையில் நம்பிக்கை மட்டுமே தெளிவான பார்வையைக் கொண்டதாயிருக்கிறது. நீங்கள் அறிவின் கோணத்தில் இருந்து சிந்தித்தால் ஆழ்நம்பிக்கை குருடாகத்தான் தெரியும். பகுத்தறிவாளர்கள் எப்போதுமே ‘குருட்டு நம்பிக்கை’ என்று சொல்வார்கள். நீங்கள் நம்பிக்கையின் அனுபவத்தைக் கொண்டு காணமுற்படுவீர்களாயின் நீங்கள் சிரிப்பீர்கள். ‘முதல் முறையாய் நான் பார்க்கும் திறனைப் பெற்றேன்’ என்று சொல்லிக் கொள்வீர்கள். அந்நிலையில் அங்கிருக்கும் ஒரே தெளிவு நம்பிக்கை மட்டுமே. பார்வை கோபம் வெறுப்பு போன்றவற்றால் மங்கிவிடாமல் தெளிவாய், தெள்ளத் தெளிவாயிருக்கிறது.

*இரண்டு மூன்று மாதங்களுக்குமுன், தாங்கள் சொற்பொழிவாற்றும் போது நான் நிறையவே அழுதுவிட்டேன்.*

*தற்போது வேடிக்கையாக எதையும் தாங்கள் சொல்லா விட்டாலும் தங்களுக்கு நெருக்கமாய் இருப்பதாக உணரும் கணங்களில் நான் சிரிக்கவும், தொடர்ந்து சிரித்துக் கொண்டேயிருக்கவும் விரும்புகிறேன், ஏன் அப்படி ஆகிறது?*

'ஏன்' என்று கேட்பது ஏன்? சிரியுங்கள். அதை எதற்காக ஒரு கேள்வியாக்கி, பிரச்சினையாக்குவது?

இது கிருஷ்ணராதாவிடம் இருந்து. முதலில் அவர் கேட்டார், 'நான் எதற்காக அழுகிறேன் என்று?' தற்போது, எப்படியோ – ஏதாவது அற்புதம் நிகழ்ந்திருக்க வேண்டும். அவர் அழவில்லை, சிரித்துக் கொண்டிருக்கிறார், ஆனால் அந்தப் பிரச்சினை தொடர்கிறது.

நாம் பிரச்சினைகளை ஏன் பற்றிக் கொண்டிருக்கிறோம்? நீங்கள் மகிழ்ச்சியாகவே இருந்தாலும் திடீரென்று உங்கள் மனம் கேட்கிறது 'ஏன்?' என்று. மகிழ்ச்சியும் ஒரு பிணிமாதிரி. விளக்கம் தேவைப் படுகிறது. அறிவிற்கு ஏற்புடைய விளக்கம், இல்லையேல் மகிழ்ச்சியும் அதற்குப் பெருமானமற்றதுதான்.

இது தொடர்கிறது. மக்கள் துயருற்றவர்களாய் என்னிடம் வருகிறார்கள். அவர்கள் கேட்கிறார்கள் 'ஏன் இப்படி?' என்று. நீங்கள் துயருற்றிருபபதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. 'ஏன்?' என்று ஒருவர் கேட்கிறபோது என்னால் அதைப் புரிந்துகொள்ள முடியும். அவர்களுடைய துயரத்தைவிட அவர்களுடைய 'ஏன்?' என்கிற கேள்வியின் ஆழம் அதிகம். சீக்கிரமே அவர்கள் மகிழ்ச்சியையும் உணரத் தொடங்கினர். ஆனால், அப்போதும் எழுந்தது 'ஏன்?' என்கிற கேள்வி.

சின்னதாய் ஒரு கதை:

ஒரு மனிதர் உளவியல் நிபுணர் ஒருவருடைய அலுவலகத் துக்குச் சென்றார். 'டாக்டர், எனக்குப் புத்தி பிசகி விடுகிறது. என்னை ஒரு கோவேறு கழுதையாக நான் எண்ணிக் கொள்கிறேன். நிலைக் கண்ணாடியில் என்னுடைய உடம்பைப் பார்க்கிற போதெல்லாம் உடம்பெங்கும் கறுப்பு வரிகளாய் தெரிகிறது' என்று சொன்னார்.

உளவியல் நிபுணர் அவரை அமைதிப்படுத்த முயன்றார். 'நிதானம், நிதானம்' என்றார். 'இப்போ அமைதியா இருங்க. வீட்டுக்குப்

போனதும் இந்த மாத்திரைகளை விழுங்கிட்டு நல்லா தூங்கணும். கறுப்பு வரிகளெல்லாம் கண்டிப்பா மறைஞ்சிடும்'.

அந்தப் பரிதாபமான மனிதர் வீட்டுக்குப்போய், இரண்டு நாள் கழித்துத் திரும்பி வந்தார். 'டாக்டர், இப்போ பரவாயில்லை. ஆமா, வெள்ளை வரிகளுக்கு மருந்து ஏதாவது இருக்கா?'

ஆனால் பிரச்சினை தொடர்கிறது.

ஒருசமயம் இப்படி ஆயிற்று ஓர் பைத்தியக்கார இளைஞனை என்னிடம் அழைத்து வந்தனர். தன்னுடைய உடம்பினுள் ஈக்கள் நுழைந்து விட்டதாக, அவன் கிறுக்குத்தனமாய் எண்ணிக் கொண்டிருந்தான். தான் தூங்கும்போது தன்னுடைய மூக்கு அல்லது வாய்வழியே அவை நுழைந்து விட்டிருக்கும் என்கிற எண்ணம். அவை உள்ளுக்குள் 'கிர்'ரென்று சுற்றிக் கொண்டிருப்பதாய் அவன் நினைத்தான். உண்மையிலேயே, அது தொல்லைதான். அவனால் சரியான நிலையில் உட்கார முடியவில்லை. அவனால் தூங்கக்கூட முடிய வில்லை. ஒரு தொடர் வேதனை. இந்த மனிதனை என்ன செய்ய? நான் அவனிடம் சொன்னேன், 'நீ படுக்கையில் படுத்து, ஐந்து நிமிடம் ஓய்வாக இரு. எதைச் செய்ய முடியுமோ, அதை நாங்கள் செய்கிறோம்.

நான் அவனுக்கு என்ன நடக்கிறது என்று தெரியாதபடிக்கு ஒரு போர்வையால் அவனைப் போர்த்தினேன். நான் வீடு முழுதும் ஓடி சில ஈக்களைப் பிடித்து வந்தேன். நான் அதற்குமுன் அந்த வேலை செய்ததில்லை என்பதால் சிரமப்பட்டேன். சுற்றியிருந்தவர்கள் எனக்கு உதவி செய்தனர். எப்படியோ மூன்று ஈக்ளை நான் பிடித்தேன். அவற்றை ஒரு புட்டியில் அடைத்து, அந்த ஆளிடம் கொண்டு சென்றேன். அவன்மீது ஏதோ ஊர்வதுபோல் ஏமாற்று வித்தை காட்டி விட்டு, பிறகு கண்ணைத் திறக்குமாறு அவனிடம் சொன்னேன். ஈக்கள் இருந்த புட்டியை அவனிடம் காண்பித்தேன்.

அவன் புட்டியைப் பார்த்தான். 'சரிதான், நீங்கள் சின்ன ஈக்களை வெளியே கொண்டு வந்திட்டீங்க. பெரிசெல்லாம் அப்படியேதான் உள்ளே இருக்கு' என்றான். தற்போது அது கடினமாகி விட்டது. பெரிய ஈக்களை எங்கே சென்று பிடித்து வருவது? அவன் சொன்னான், 'நான் உங்களுக்குக் கடமைப்பட்டிருககிறேன். குறைந்தபட்சம் அந்தச் சிறியவற்றிடமிருந்து என்னை விடுவித்தீர்களே. ஆனால், அந்தப் பெரிய ஈக்கள் உண்மையிலேயே ரொம்பப் பெரியவை' என்று.

மக்கள் தொடர்கிறார்கள். நீங்கள் ஒருபக்கம் அவர்களுக்கு உதவினால், அவர்கள் அதே பிரச்சினையை வேறு பக்கத்தில் இருந்தும் கொண்டு வருவார்கள் – ரொம்பவும் அவசியப்படுகிற மாதிரி. அதைப் புரிந்துகொள்ள முயலுங்கள். பிரச்சினை இல்லாமல் இருப்பது ரொம்பவும் கடினம். ஏன்? பிரச்சினை உங்களை அமைதிக்குலைவுக்கு உள்ளாக்குவதுதான் காரணம். பிரச்சினை எந்த வேலையும் இல்லாமலே உங்களைச் சுறுசுறுப்படையச் செய்து விடும். பிரச்சினை உங்களை ஈடுபடுத்தி விடுகிறது. பிரச்சினையே இல்லையென்றால் உங்கள் இருப்புணர்வின் புற எல்லையை உங்களால் பற்றிக் கொண்டிருக்க முடியாது. மையம் உங்களை உறிஞ்சியிழுக்கும்.

உங்கள் இருப்புணர்வின் மையம் வெறுமையாயிருக்கும். அது ஒரு சக்கரத்தின் அச்சு (hub) மாதிரி. ஒட்டுமொத்த சக்கரமும் அந்த அச்சாணி மீது சுற்றுகிறது. உங்களுடைய உள்ளார்ந்த மையம் வெற்றாக இருக்கிறது, சூன்யமாய், படுகுழியாய். அந்த வெறுமையை எண்ணி நீங்கள் அச்சப்படுகிறீர்கள். எனவே, நீங்கள் சக்கரத்தின் வட்ட ஓர விளிம்பை (rim)ப் பற்றிக் கொள்கிறீர்கள். நீங்கள் கொஞ்சம் தைரியம் உள்ளவராய் இருந்துவிட்டாலோ அந்நிலையில் மையத்தில் இருந்து புறவட்ட எல்லைக்கு நீண்டிருக்கும் கம்பிகளை (spokes)ப் பற்றிக் கொண்டு விடுவீர்கள். ஆனால், நீங்கள் சக்கரத்தின் அச்சை நோக்கியும் நகரவில்லையே. ஒருவர் அச்சமும், நடுக்கமுமாய் உணரத் தொடங்கி விடுகிறார்.

பிரச்சினைகள் உங்களுக்கு உதவுகின்றன. மக்கள் என்னிடம் வந்து ‘நாங்கள் உள்நோக்கிச் செல்ல விரும்புகிறோம். ஆனால், பிரச்சினைகள் இருக்கின்றனவே’ என்கிறார்கள். பிரச்சினைகள் காரணமாகவே தாங்கள் உட்செல்ல முடியவில்லை என்று அவர்கள் எண்ணிக் கொள்கின்றனர். உண்மை நிலையோ அதற்கு எதிரிடையாயிருக்கிறது: காரணம், அவர்கள் உட்செல்ல விரும்பவில்லை, அவர்களாகவே பிரச்சினைகளை உண்டுபண்ணிக் கொள்கிறார்கள். இந்தப் புரிதல் உங்களுக்குள் முடிந்த அளவு ஆழத்தைச் சென்றடையட்டும். உங்களுடைய பிரச்சினைகள் எல்லாம் போலியான்வை.

உங்களுடைய பிரச்சினைகளுக்கு நான் விடையளித்துக் கொண்டிருப்பது உங்களிடம் பரிவாக நடந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான். அவையெல்லாம் போலியானவை, அடிப்படையில் அர்த்தமற்றவை, ஆனால் உங்களை நீங்கள் தவிர்ப்பதற்கு

அவை உதவுகின்றன. அவை உங்கள் அமைதியைக் குலைக்கின்றன. முதலில் தீர்க்க வேண்டிய பிரச்சினைகள் எத்தனையோ இருக்கின்றன. ஆனால், ஒன்று தீர்க்கப்பட்டவுடனே மற்றொன்று மேலே குமிழிடுகிறது. நீங்கள் கூர்ந்து கவனித்தீர்களாயின், அந்த மற்றொரு பிரச்சினையும் முதலாவதின் அதே தன்மையைக் கொண்டிருப்பதைக் காண்பீர்கள். அதைத் தீர்க்க முயலுங்கள். உடனே மூன்றாவதாக ஒன்று அதே இடத்துக்கு வந்துவிடும்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு: மனநல மருத்துவர்: பதின்பருவப் பிள்ளைகளான நீங்கள் ரொம்பவும் அபாயமானவர்கள். உங்களிடம் பொறுப்புணர்வு என்பதே கிடையாது. பொருள் சார்ந்தவற்றை மறந்துவிட்டு, அறிவியல், கணிதம் போன்ற மற்ற விஷயங்களைப் பற்றிச் சிந்தியுங்கள். நீங்கள் கணக்கில் எப்படி?

நோயாளி: அத்தனை தகுதியாயில்லை.

'நான் உண்மை சார்ந்த தகவல் ஒன்றைச் சோதனையாய் உங்களுக்குக் கொடுக்கிறேன். இப்போது ஓர் எண்ணை எனக்குக் கொடுங்கள்.'

'ராயல் 3447. அதுதான் என்னோட பெண் வேலைபார்க்கிற கடையினுடையது.'

'எனக்குத் தொலைபேசி எண் வேண்டாம், ஒரு சாதாரண எண் போதும்.'

'ரொம்ப சரி. முப்பத்தியேழு.'

'நல்லது தயவு செய்து மற்றொரு எண்.'

'இருபத்தியிரண்டு'

'மேலும் ஒரு எண்'

'முப்பத்தியேழு'

'நல்லது. உங்கள் மனம் வேறு எதிலாவது ஈடுபட விரும்பினால் நீங்கள் அப்படியே செய்ய முடியும்.'

'சரி. 37-22-37! என்ன மாதிரி ஒரு ஃபிகர்'

இது தொடரும், எல்லையே இல்லாமல்.

முக்கியமான விஷயத்தைக் கவனியுங்கள். நீங்கள் ஏன் தொடக்கத்திலேயே பிரச்சினைகளை உருவாக்க விரும்புகிறீர்கள்? ஒரு முக்கியமான கேள்வியை உங்களுக்கு நீங்களே கேட்டுக் கொண்டதுண்டா. உண்மையிலேயே பிரச்சினைகள் இருக்கிறதா, அல்லது நீங்களாக உருவாக்கிக் கொண்டதா, அப்படி உருவாக்குவதே உங்கள் பழக்கமாகிவிட்டதா, பிரச்சினைகளே இல்லை என்றால் துணையற்றிருப்பதாய் உணர்கிறீர்களா? துயருற்றிருப்பதை நீங்கள் விரும்பக்கூடும், ஆனால், நீங்கள் வெற்றாக இருக்க விரும்ப மாட்டீர்கள். மக்கள், தங்களுடைய துக்கத்தைப் பற்றைக் கொண் டிருந்தாலும் இருப்பார்களேயன்றி சும்மா இருக்க மாட்டார்கள்.

நான் ஒவ்வொரு நாளும் அதைப் பார்க்கிறேன். ஒரு தம்பதி வருகிறார்கள். இருவரும் ஆண்டுக் கணக்காய் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள். கல்யாணமாகி பதினைந்து ஆண்டுகளாய் தொடர்ந்து சண்டைபோட்டு, ஒருவருக்கொருவர் நரகத்தைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படியானால் நீங்கள் ஏன் பிரியவில்லை? துயரத்தை எதற்காகப் பற்றிக் கொண்டிருப்பது? ஒன்று மாற வேண்டும், அல்லது பிரிய வேண்டும். வாழ்க்கையை வீணடித்துக் கொண்டிருப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது? ஆனால் என்ன நடக்கிறது என்பதை என்னால் கண்டு கொள்ள முடிகிறது. அவர்கள் துணையற்றியருக்க விரும்பவில்லை. குறைந்த பட்சம் துயரமாவது துணையாயிருக்கிறது. அவர்கள் ஒருவேளை பிரிந்துவிட்டால், தங்கள் வாழ்க்கையை எப்படிச் சமாளிப்பது என்று தற்போது அவர்களுக்குத் தெரிந்திருக்காது. ஒரு குறிப்பிட்ட முறையில் தொடர்ந்து சண்டைபோட்டுக் கொள்வது, கோபப்படுவது, குறைகாண்பது, மிகுந்த உணர்ச்சி வேகத்துக்குள்ளாவது இவற்றில் தங்களைச் சரிப்படுத்திக் கொண்டு விடுவார்கள். வேறொரு சூழ்நிலையில், மாறுபட்ட ஆளுமை கொண்ட வேறொருவருடன் எப்படி இருப்பது என்று அவர்கள் அறியமாட்டார்கள். வேறொருவருடன் எப்படி இருப்பது? வேறெதுவும் அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் துன்பத்தை ஒரு குறிப்பிட்ட முறையில் வெளியிடக் கற்றுக் கொண்டவர்கள். தற்போது தாங்கள் அதில் தேர்ச்சி பெற்றிருப்பதாய், அவர்கள் உணர்கிறார்கள் ஒரு புதிய நபருடன் செயல்படுவதெனில் ஆனா ஆவன்னாவில் இருந்து தொடங்க வேண்டியிருக்கும். ஒரு குறிப்பிட்ட தொழிலில் பதினைந்து ஆண்டுகளாய் இருந்துவிட்டு மற்றொன்றுக்கு மாறுவதென்றால் அச்சமாகத்தான் இருக்கும்.

மிகப்பெரிய சினிமா நட்சத்திரம் ஒருவர் மனநல மருத்துவரிடம் சென்று, 'என்னிடம் இசைப்புலமையில்லை, நடிப்புத் திறமையில்லை. நான் அழகாக இல்லை. என்னுடைய முகம் அவலட்சணமாகவும், என்னுடைய தோற்றம் மோசமாகவும் இருக்கிறது. நான் என்ன செய்ய வேண்டும்' என்று கேட்டார். இத்தனைக்கும் அவர் முன்பே புகழ்பெற்ற நடிகர்.

மனநல மருத்துவர் சொன்னார், 'நீங்கள் என் நடிப்பதை விட்டுவிடக் கூடாது. உங்களிடம் எந்தத் திறமையும் இல்லை, நுண்ணறிவும் இல்லை என்றால் நீங்கள் இந்த வேலையை எதற்காகச் செய்வது; பேசாமல் இந்த வேலையை நீங்கள் விட்டுவிடலாமே?' என்று.

அவர் சொன்னார்: 'என்னது? இருபது வருடங்கள் இந்த வேலையைப் பார்த்து நான் புகழ்பெற்ற நட்சத்திரமான பின்பா?'

உங்களுடைய துயரங்களிலும் நீங்கள் முதலீடு செய்கிறீர்கள். பாருங்கள், ஒரு பிரச்சினையை நீங்கள் விட்டுவிடுகிற போது, உண்மையான பிரச்சினை உடனே வேறொன்றுக்கு இடம் பெயர்ந்து விடுகிறது. சட்டையை உரிக்கிற பாம்பு இருக்கிறபடியே இருந்து கொண்டிருப்பது போலத்தான் இதுவும். 'ஏன்?' என்பது பாம்பு. நீங்கள் அழுது புலம்புகிறபோது அது தொடர்புடையதாயிருக்கிறது. தற்போது அழுகை நின்றுவிட்டது. நீங்கள் சிரித்துக் கொண்டிருக்கிறீர்கள். பாம்பு தன்து பழைய சட்டையில் இருந்து நழுவிச் சென்றுவிட்டது. தற்போதைய பிரச்சினை 'ஏன்' என்பதுதான்.

'ஏன்' என்பது இல்லாமல் ஒரு வாழ்க்கையை உங்களால் சிந்திக்க முடியாதா? வாழ்க்கையை ஒரு பிரச்சினையாக நீங்கள் ஆக்கிக் கொண்டிருப்பது ஏன்?

ஒரு மனிதன் யூதர் ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தான், கேள்விக்கு எதிர்க்கேள்வி போடுகிற யூதனின் பழக்கம் அவனுக்குக் கோபத்தை ஏற்படுத்தியது. கோபமுற்ற அந்த மனிதன் கடைசியில் சொன்னான், 'யூதர்களாகிய நீங்கள் ஏன் கேள்விகளுக்குப் பதிலாக எதிர்க்கேள்விகளாய் போடுகிறீர்கள்' என்று.

யூதன் சொன்னான், 'ஏன் கூடாது?'

மக்கள் ஒரு வட்டத்துக்குள்ளாகவே நகர்ந்து கொண்டிருக் கிறார்கள். 'ஏன் கூடாது?' மறுபடியும் ஒரு கேள்வி.

கொஞ்சம் கூர்ந்து கவனியுங்கள். நீங்கள் சிரித்தால் அழகாயிருக்கிறது. உண்மையில் என்னைக் கேட்டால் அழுவதுகூட அழகுதான். அதில் தவறேதும் இல்லை. நீங்கள் உண்மையாகவே என்னிடம் கேட்பீர்களாயின், நான் கூறுவேன் எதுவாயினும் அதை ஏற்றுக் கொள்ளுங்கள் என்று. உண்மையை ஏற்றுக் கொண்டால், அந்நிலையில் அழுவதிலும் அழகு இருக்கும் 'ஏன்?' என்கிற விசாரணைக்குள் செல்ல அவசியமே இல்லை. காரணம், அந்த விசாரணை உண்மை சார்ந்த ஒன்றில் இருந்து உங்களைத் திசை திருப்பிவிடும். அந்நிலையில் அழுகை - நீங்கள் ஏன் அழுகிறீர்கள் என்பது முக்கியத்துவம் பெறாது. காரணத்தை வேண்டுகிறபோது உண்மை தொலைந்து போகிறது. நீங்கள் காரணம் எங்கேயிருக்கிறது என்று நீங்கள் தேடிச் செல்கிறீர்கள். அந்தக் காரணத்தை நீங்கள் எங்கே சென்றடையக்கூடும்! அந்தக் காரணத்தை எப்படிக் கண்டு பிடிப்பீர்கள்? உலகின் மிகத் துல்லியமான தொடக்கத்துக்கு நீங்கள் செல்ல வேண்டியிருக்கும், அங்கே எந்தவொரு தொடக்கமும் இருக்காது.

பாருங்கள். 'ஏன்?' என்பதற்கு விடைசொல்ல உலகின் தொடக்கத்துக்கே செல்ல வேண்டியிருக்கிறது. ஆனால், அங்கு தொடக்கம் என்று எதுவும் இருந்திருக்கவில்லை. உலகம் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறது எப்போதும், எப்போதைக்குமாய்.

வாழ்வதற்கு எந்தக் கேள்வியும் தேவைப்படாது. அத்துடன் விடைகளுக்காகவும் நீங்கள் காத்திருக்க வேண்டியதில்லை. வாழுங்கள், உண்மையுடன் வாழுங்கள். அழுங்கள், அழுவதிலும் மகிழ்ச்சியை அனுபவியுங்கள். அது இறுக்க நிலையைப் போக்கி, தூய்மை செய்கிற ஓர் அழகான நடப்பு. சிரிப்பு அழகானது. சிரியுங்கள். சிரிப்பு உங்களைச் சுவாதீனப்படுத்திக் கொள்ளட்டும். சிரியுங்கள், உங்கள் ஒட்டுமொத்த உடம்பும் அதிர்வுக்குள்ளாகட்டும், இதயம் ஒழுங்காக விரிந்து சுருங்கட்டும். அது தூய்மைப்படுத்துவதாயும், ஆற்றல் உண்டாக்குவதாயும் இருக்கும். அது இளமை வனப்பை மீண்டும் கொடுக்கும்.

ஆனால், உண்மையோடு இருந்துவிடுங்கள். காரணங்களுக்குள் நுழைய வேண்டாம். வாழ்தல் போதும். அது ஏன் அப்படி இருக்கிறது என்று தொல்லைப்படுத்திக் கொள்ளாதீர்கள், காரணம் விடைகாண முடியாது. புத்தர் தமது சீடர்களிடம் பலமுறை சொல்லியிருக்கிறார்.

'கேள்விகள் கேட்காதீர்கள், உண்மை அறிவு பற்றிய கோட்துறை ஆய்வும் (metaphysical) வேண்டாம். காரணம் அவை முட்டாள்தன மானவை. உண்மையோடு நடப்போடு இருந்துவிடுங்கள்.

வாழ்க்கை மிகப்பெரிய அளவில் அழகானது. ஏன் அதை இப்போதே வாழக்கூடாது? அழுவதும் வாழ்க்கையின் ஓர் அசைவுதான். சிரிப்பதும் வாழ்க்யின் ஓர் அசைவேயாகும். சில நேரங்களில் நீங்கள் வருத்தமாக இருக்கிறீர்கள். அதுவும் வாழ்வின் ஓர் அசைவு, மனநிலை. சிலநேரங்களில் நீங்கள் சந்தோசமாய் இருக்கிறீர்கள். மகிழ்ச்சி கொப்பளிக்க ஆடுகிறீர்கள். அதுவும்கூட விரும்பத்தக்கதுதான், அழகானதுதான். எது நடந்தாலும் ஏற்றிடுங்கள். வரவேற்றிடுங்கள், அதனுடன் இருந்திடுங்கள். வாழ்க்கையில் இருந்து பிரச்சினைகளைத் தோற்றுவிப்பதையும், கேள்விகள் கேட்கும் பழக்கத்தையும் நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் விட்டுவிட்டதை நீங்களே புரிந்து கொள்வீர்கள்.

நீங்கள் பிரச்சினைகளை உண்டு பண்ணிக் கொள்ளாவிடில் வாழ்க்கை தன்னுடைய எல்லா ரகசியங்களையும் வெளிப்படுத்துகிறது. கேள்விகளாய் கேட்டுத் துளைப்பவரிடம் அது தன்னை வெளிக்காட்டிக் கொள்வதில்லை. நீங்கள் பிரச்சினையை உண்டு பண்ணவில்லை என்றால் வாழ்க்கை உங்களிடம் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளத் தயாராயிருக்கிறது. நீங்கள் பிரச்சினை உண்டு பண்ணுகிறவராயின் பிரச்சினையின் செயல்முறையே உங்கள் கண்களை மறைத்துவிடும். நீங்கள் வாழ்க்கையுடன் வலுச்சண்டை போடுகிறவராகிவிடுவீர்கள்..

அதுதான் அறிவியல் சார்ந்த முயற்சிக்கும், சமயம் சார்ந்த முயற்சிக்கும் இடையே உள்ள வேறுபாடு. விஞ்ஞானி ஒரு சண்டைக்காரன் மாதிரி, வாழ்க்கையிடம் இருந்து உண்மைகளைப் பறிக்க முயல்வார், உண்மைகளை வழங்கும்படி வாழ்க்கையைக் கட்டாயப்படுத்துவார் – கிட்டத்தட்ட துப்பாக்கி ஏந்திய வன்முறை மாதிரி. சமயம் சார்ந்த மனிதன் வாழ்க்கையின் முன்பாய் துப்பாக்கி ஏந்தி, கேள்வி கேட்டுக் கொண்டு நிற்க மாட்டான். சமய நம்பிக்கை உடையவன் வாழ்க்கையை, இளைப்பாறலாய்க் கொள்கிறான், அதனுடன் மிதக்கிறான், வாழ்க்கை பல விஷயங்களை அவனுக்கு வெளிப்படுத்துகிறது. அது விஞ்ஞானியிடம் ஒருபோதும் வெளிப்படுத்துவதில்லை. விஞ்ஞானி எப்போதுமே மேசையில் சிதறிக்கிடக்கும் சிறுசிறு துண்டுகளைப் பொறுக்கிச் சேர்ப்பவன்தானே.

விஞ்ஞானி ஒருபோதும் விருந்தாளியாய் அழைக்கப்படுவதில்லை. வாழ்க்கையை யார் எந்தக் கேள்வியும் இல்லாமல், நம்பிக்கையுடன் வரவேற்று மகிழ்கிறார்களோ அவர்களே விருந்தினர்களாய் மதிக்கப்படுகிறார்கள்.

*கீழ்க்கண்ட உபாதைகளுக்கு எப்படிச் சிகிச்சை செய்வது?*

*முதலாவது: கருமித்தனம் (miserliness)*

*இரண்டாவது: எதிலும் குறைகாண்பது (nagging) முழுநிறைவை வலியுறுத்தும் கொள்கையால் ஏற்படும் கவலை (worrying of perfection)*

*மூன்றாவது: நடிகரின் தனித்தன்மை, எப்போதும் பகட்டாக நடந்து கொள்வது.*

*நான்காவது: தற்பெருமை*

*இவற்றைக் கையாள்வதற்கு தியானம் போதுமான தாயிருக்குமா? அல்லது உபரியாய் வேறு எதுவும் தேவைப் படுமா. உச்ச அளவில் மனவிருப்பத்துக்கு அடிபணிவது, அல்லது புறக்கணிக்க முயல்வது அல்லது தெரிந்தே அவற்றைத் தவிர்ப்பது என்கிற மாதிரி.*

கருமித்தனம் என்பது கிட்டத்தட்ட உங்களுக்குள் முன்பே உள்ள மைந்த ஒன்றாகிவிடுகிறது. சமூகத்தின் ஒட்டுமொத்த அமைப்பும் அதை உண்டாக்குகிறது. அது மக்களிடமிருந்து பொருள்களை நீங்கள் பிடுங்கிக் கொள்ள வேண்டும், திருப்பிக் கொடுக்க வேண்டாம் என்று விரும்புகிறது. அது உங்களைப் பேராவல் கொண்டவராக்கி விடுகிறது, பேராவல் கொண்ட ஒருவர் கருமியாகிவிடுகிறார். விருப்பம் உலக வாழ்க்கைத் தொடர்புடையதாயினும், இல்லாவிட்டாலும். விருப்பம் கொண்டுவிட்ட மனிதன் கருமியாகிவிடுகிறான். காரணம், அவன் வருங்காலத்துக்கு முன்கூட்டியே ஆயத்தப்படுத்திக் கொள்கிறவன். அவனால் அனுபவிக்கவோ, பகிர்ந்து கொள்ளவோ முடியாது. அவனிடம் பணம் இருந்தால் அது வருங்காலத்துக்கானதாகவே இருக்கும், இப்போதைக்கானதாய் இருக்காது. வருங்காலத்தில் எப்படிப் பகிர்ந்து கொள்ள முடியும்? நிகழில்தானே பகிர்ந்து கொள்வது சாத்தியமாகும். தன்னுடைய முதுமைக் காலத்துக்காக அவன் பணத்தை வைத்திருக்கிறான். அல்லது தங்களுடைய வருங்கால வாழ்க்கைக்காக,

சுவர்க்கத்துக்காக சிறப்பியல்பை, நற்பண்பை வைத்திருப்பவர்களும் இருக்கிறார்கள். வருங்காலத்தின் ஏதோவொரு கட்டத்தில் மிகச்சிறந்த ஒன்று நிகழும் என்பதற்காக அவர்கள் முன்னேற்பாடாய் குவித்துக் கொண்டிருக்கிறார்கள். தற்போது அவர்கள் ஏழைகள்தாம்.

பேராவல் கொண்டவர்களெல்லாம் ஏழைகளே, தங்கள் வறுமையின் காரணமாகவே அவர்கள் கருமிகளாகிவிடுகிறார்கள். எல்லாவற்றையும் தொடர்ந்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். பயனற்றவற்றையே தங்கள் பிடியில் வைத்திருக்கிறார்கள்.

நான் ஒருவனுடன் சேர்ந்து வசிக்கிறேன். அவருடைய ஒட்டுமொத்த வீடும் உபயோகமற்ற பொருள்களையே சேர்த்து வைக்கிற இடமாகவே இருந்தது. அந்த வீட்டில் வசிப்பது ரொம்பச் சிரமம், கொஞ்சம்கூட இடம் விட்டுவைக்கப்படவில்லை. அந்த மனிதர் கிடைப்பது எதுவாயினும் சேர்த்துக் கொண்டேயிருப்பார். ஒருநாள் நான் உலவச் சென்றிருந்தபோது, அவர் சாலையோரத்தில் கிடந்த சைக்கிள் கைப்பிடியைப் பொறுக்கி எடுத்துக் கொண்டிருந்தார். யாரும் பார்க்கிறார்களா என்று சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு அந்த ஹாண்டிலை வீட்டுக்கு எடுத்துச் சென்றார். நான் திரும்பி வந்ததும் அவருடைய வீட்டுக்குச் சென்று, 'எங்கே அந்த ஹாண்டில்?' என்று கேட்டேன்.

அவர் கொஞ்சம் திகைப்புற்றவராய், 'நீங்கள் அதைப் பார்த்து விட்டீர்களா?' என்று கேட்டார்.

'நான் அங்கேதான் இருந்தேன்.'

ஆனால் அவர் சொன்னார், 'இது ஒரு நல்ல பொருள், யார் கண்டது, கொஞ்சம் கொஞ்சமாய் ஒரு சைக்கிளை நான் சேர்த்துவிடுவேன். அதில் என்ன தவறு? யாரோ எறிந்ததை எடுத்து வந்தேன், நான் ஒன்றும் திருடவில்லையே?'

இவ்விதமாய் அவர் பொருள்களைத் தேடிக் குவித்தார் – பயனற்ற பொருக்ள் – ஆனால், அவர் வருங்காலத்தைப் பற்றிச் சிந்திப்பவர். என்றாவது ஒருநாள் இவை பயன்படும். என்றாவது ஒருநாள் அதற்கான தேவை ஏற்படும். யார் கண்டது?

உங்கள் வீட்டில் நீங்கள் அப்படிச் செய்யாமல் இருக்கலாம், ஆனால், நீங்கள் எல்லாருமே உங்கள் இதயத்துக்குள் அப்படிச் செய்து கொண்டுதான் இருக்கிறீர்கள். உங்கள் இதயத்துக்குள், மனதுக்குள்

சென்று பார்த்தால் அது தட்டுமுட்டு சாமான்களைப் போட்டுவைக்கிற இடம் போலத்தான் இருக்கும். எதற்கும் உதவாதவை அங்கே குவிந்து கிடப்பதைக் காண்பீர்கள். நீங்கள் ஒருபோதும் அதைச் சுத்தம் செய்வதில்லை. நீங்கள் குப்பைகளைத் தொடர்ந்து குவித்துக் கொண்டே போகிறீர்கள். பிறகு ஒரேயடியாய் கனத்து விடுகிறது. அந்நிலையில் நீங்கள் சுமையாய் உணர்கிறீர்கள். அப்போது உங்கள் அமைதி குலைந்து விட்டதை உணர்கிறீர்கள். அடுத்து, உள்ளார்ந்த அருவருப்பு தோன்றுகிறது.

ஆனால், கருமித்தனத்தின் அடிப்படையைப் புரிந்து கொள்ள முயலுங்கள் அது வருங்காலத்தில் எங்கோ வாழ்வதுபற்றி கருத்தில் இருக்கிறது. நீங்கள் இந்தக் கணத்தில் வாழ்பவராயின், ஒருபோதும் கருமித்தனத்துடன் இருக்க மாட்டீர்கள், காரணம் உங்களால் பகிர்ந்து கொள்ள முடியும். எதற்காகச் சேர்ப்பது, எதற்காகக் குவிப்பது? நாளை என்பது இருந்தாக வேண்டிய அவசியல் இல்லை, அது இல்லாமலும் போகலாம். ஏன் பகிர்ந்து கொள்ளக் கூடாது? ஏன் மகிழ்ச்சியாயிருக் கக்கூடாது? இந்தக் கணத்தில் வாழ்க்கை உங்களுக்குள் மலர்கிறது. மகிழுங்கள, பங்கிட்டுக் கொள்ளுங்கள். காரணம், பங்கிடப்படுவதன் மூலம் அது தீவிரமடைகிறது. பங்கிட்டுக் கொள்வதன் மூலம் அதுமேலும் ஆற்றலுடையதாகிறது. பங்கிடுதலில் அது அதிகரிக்கிறது, வளர்ச்சியடைகிறது.

ஆக, மொத்தக்கருத்தும் வருங்காலம் இல்லை என்பதைப் புரிந்து கொள்வதுதான். ஆவல்கொண்ட மனம் வருங்காலம் என்கிற ஒன்றைத் தோற்றுவித்துக் கொள்கிறது. வருங்காலம் என்பது காலத்தின் ஒரு பகுதி அல்ல. அது பேராவலின் ஒரு பகுதியாகும். காரணம், பேராவலுக்கு செயல்பட இடம் தேவைப்படுகிறது. உங்களால் தற்போது ஆவலைப் பூர்த்தி செய்துகொள்ள முடியாது. உங்களால் தற்போது வாழ்க்கையைப் பூர்த்தி செய்து கொள்ள முடியும். பேராவல் வாழ்க்கைக்கு மாறானது, அது வாழ்க்கைக்கு முரண்.

கொஞ்சம் உங்களையும், மற்றவர்களையும் அப்படியே பாருங்கள். மக்கள் தயார் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். என்றாவதொருநாள் அவர்கள் வாழ்வை அடையப் போகிறவர்கள். அந்தநாள் வருவதில்லை. அவர்கள் தொடர்ந்து தங்களைத் தயார்ப்படுத்திக் கொண்டேயிருக்கிறார்கள், அத்தோடு மரண மடைகிறார்கள். அது ஒரு போதும் வருவதில்லை, நீங்கள் மிகுதியான

அளவில் முன்னேற்பாடுகளைச் செய்து கொண்டே போனால் அது ஒரு கருத்தாகவேசமாகவே (obsession) ஆகிவிடுகிறது. நீங்கள் பாட்டுக்குத் தயார்ப்பண்ணிக் கொண்டே இருக்கிறீர்கள். அது ஒருவர் உணவுப்பொருள்களை வருங்காலப் பயன்பாட்டுக்குச் சேர்த்து வைத்துக்கொண்டு, நிகழ்காலத்தில் பசிபட்டினி கிடந்து கடைசியில் மடிவது போலத்தான். இலட்சோபலட்சம் பேரின் வாழ்க்கையில் அதுதான் நடக்கிறது. பயன்படுத்தியிருக்கக் கூடிய பொருள்கள் பக்கத்தில் அவர்கள் மடிந்து போகிறார்கள். அவர்கள் நேர்த்தியான முறையில் வாழ்ந்திருக்க முடியுமே.

உங்கள் ஆவலையன்றி வேறுயாரும் - எதுவும் உங்களுடைய பாதையில் தடங்கலாய் இருப்பதில்லை.

ஆக, கருமித்தனம் ஆவலின் ஒரு பகுதியேயாகும்.

இந்தக் கேள்வி போதி தர்மருடையது? அவர் பேராவல் கொண்டவராயிருந்தார். அது உலக வாழ்க்கை தொடர்பானதல்ல. அவருக்குப் பெரிய வீடு தேவையில்லை, அவர் பெரிய காரை விரும்பிடவில்லை. வங்கியில் பெரியதொரு இருப்பும் அவருக்கு வேண்டியிருக்கவில்லை. அந்த வகையில் அவர் ஒரு மகாத்மாவைப் போன்று எளிமையானவர்தாம். அவரிடம் மிகுதியாய் எதுவும் இருக்கவில்லை, அதைப்பற்றி அவர் கவலைப்படவுமில்லை. ஆனால் அவர் ஞானம் பெற விரும்பினார். அதுதான் அவருடைய பிரச்சினை. ஞானம் பெற்றுவிடவேண்டும் என்று அவர் ரொம்ப வேகமாய் செயல்பட்டார்.

அத்தனை முட்டாள்தனங்களையும் விடுங்கள். இந்தக் கணத்தில் வாழுங்கள். வருங்காலத்தில் எந்தவோர் அறிவூட்டலும் தேவைப் படாது. நீங்கள் இந்தக் கணத்தில் வாழ்பவர் என்றால் இப்போதே ஞானம் பெற்றவர்தாம். அப்போது ஒருவர் கடந்தகாலம் பற்றியோ, வருங்காலம் பற்றியோ எண்ணிப் பார்க்கமாட்டார். இந்தக் கணம் தன் வரைக்கும் போதுமானதாய் இருக்கிறது. எல்லாத் துன்பங்களும் மறைந்துவிடுகிறது.

துன்பத்திற்குக் காரணம் நீங்கள் வாழும் திறனற்று இருப்பதுதான். அதனால்தான் சில குறிக்கோள்களைத் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். நீங்கள் முக்கியமானவர், முக்கியமான ஒன்றைச் செய்து கொண்டிருக் கிறீர்கள் என்கிற உணர்வை உங்களுக்குக் கொடுக்கிறது. ஞானம்

என்கிற குறிக்கோள். உங்கள் வாழ்க்கை அர்த்தமுடையதாய் இருக்கிறது. நீங்கள் அர்த்தமற்ற வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கவில்லை. நீங்கள் சிறந்த ஆன்மிக நாட்டம் கொண்டவர். அகந்தையின் பயணம் அது.

ஞானம் என்பது குறிக்கோளாகாது. அது ஒரு விளைவு, பலன். நீங்கள் அதைக் கண்டுபிடிக்க முடியாது. ஒரு குறிக்கோளை அதில் இருந்து நீங்கள் உருவாக்குவதற்கில்லை. அது ஆசையின் ஓர் இலக்காக இருக்க முடியாது. தற்போது ஆசையின்றி நீங்கள் வாழத் தொடங்குகிறபோது, சற்றும் எதிர்பாராத விதமாய் அது அங்கே இருக்கிறது. அது ஒரு விளைவு, பலன். ஒரு சீவனின் இன்றியமையாத வாழ்க்கையின் விளைவு - உயிரோட்டமும், தீவிரமும் கொண்டு சவாலை விட்டபடி இந்தக் கணத்தில் காலத்தின் அடியாழத்துக்குச் சென்று சாசுவதநிலை (eternity) யை அவன் அடைகிறான்.

காலத்துக்கு இரண்டு கணங்கள் இருக்கின்றன. ஒன்று ஒரு கணத்தில் இருந்து மற்றொரு கணத்துக்கு என்று கிடைக்கோடாய் (Horizontal) இருப்பது - 'ஏ'யில் இருந்து 'பி'க்கு, 'பி'யில் இருந்து 'சி'க்கு, 'சி'யில் இருந்து 'டி'க்கு. அப்படித்தான் நீங்கள் வாழ்கிறீர்கள், அப்படித்தான் உங்கள் ஆசையும் செல்கிறது - கிடைக்கோட்டில் , உண்மையிலேயே உயிரோட்டமும், நுட்ப உணர்வும், தெரிநிலையும் கொண்ட ஒருவன் 'ஏ'யில் இருந்து 'பி'க்குச் சென்று கொண்டிருக்க மாட்டான். அவன் 'ஏ'யின் ஆழத்துக்கு, அடியாழத்துக்குச் சென்று கொண்டேயிருப்பான். அவனுடைய செல்லும்முறை செங்கோட்டு நிலை (vertical) யில் இருக்கும்.

இதுவே இயேசுவின் சிலுவைப்பொருள். அந்தச் சிலுவை செங்குத்தாகவும், கிடையாகவும் உள்ளது. இயேசுவின் கைகள் சிலுவையின் கிடைப்பகுதியிலும், முழு உடலும் செங்குத்து நிலையிம் இருக்கிறது. கைகள் செயலின் குறியீடு. இருப்புணர்வு செங்குத்தாய் செல்கிறது.

எனவே, செயலில் ஒரேயடியாய் உள்ளடக்கப்பட்டு விடாதீர்கள். இருப்புணர்வில் முழுமையாய் ஈடுபடுத்திக் கொள்ளுங்கள். அதுவே தியானம் பற்றியதுமாகும். எதையும் செய்யாமல் எப்படி இருப்ப தென்று கற்றுக் கொள்வதுதான் அது. 'உ வெய்' (wu wei) - எப்படி இருப்பது, எதையும் செய்யால் சும்மா இருப்பது. இந்தக் கணத்தினுள்

நீங்கள் வீழ்கிறீர்கள் ஆழத்தில், அடியாழத்தில். காலத்தின் செங்குத்தான நகர்வு சாசுவதமானது.

காலமும் சாசுவதமும் (eternity) உங்களுக்குள் சந்தித்துக் கொள்கின்றன. தற்போது தீர்மானிக்க வேண்டியது நீங்கள்தான். நீங்கள் ஆவலுக்குள் சென்றால் காலத்துக்குள் செல்கிறீர்கள், காலத்தில் மரணம் இருக்கிறது. நீங்கள் ஆசையினுள் சென்றால் காலத்துக்குள் செல்கிறீர்கள், மரணம் காலத்தில் இருக்கிறது. மரணம், தற்பெருமை, ஆசை, ஆவல் எல்லாமே கிடைக்கோட்டில் ஒரு பகுதிதான்.

நீங்கள் கணத்தினுள் வழி ஏற்படுத்திக் கொண்டு செங்குத்தாகச் செல்வீர்களாயின் நீங்கள் தற்பெருமையற்றவராகிறீர்கள், ஆசையற்ற வராகிறீர்கள், பேராவலற்றவராகிறீர்கள். ஆனால், சற்றும் எதிர்பாராத விதமாய் வாழ்க்கையுடன் நீங்கள் கொழுந்து விட்டெரிகிற நிலையில் இருக்கிறீர்கள், நீங்கள் வாழ்க்கையின் ஒரு தீவிர ஆற்றலாய் இருக்கிறீர்கள். கடவுள் உங்களை தமது ஆளுகைக்குட்படுத்திக் கொண்டுள்ளார்.

மேல்நோக்கிச் செல்லுங்கள், அத்தனை கருமித்தனமும் மறைந்து விடும்.

'எதிலும் குறை காண்பது, முழுநிறைவை வலியுறுத்தும் கொள்கையால் ஏற்படும் கவலை. அதுவும் உங்கள் மீது திணிக்கப் பட்டதுதான். நீங்கள் நிறைவுண்டாக்குகிறவராய் (perfect) இருக்கும்படி கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். இதில் உண்மையான விஷயம் நிறைவுண் டாக்குகிறவராய் இருக்க வேண்டும் என்பதல்ல, முழுமையானவராய் இருக்க வேண்டும் என்பதுதான். யாரும் நிறைவுண்டாக்குகிறவராய் இருக்க முடியாது.

முழுநிறைவை உண்டாக்குவதென்பது ஒரு தவறான கருத்து ஆகும். அகந்தை நிறைவை உண்டாக்க விரும்புகிறது. அதனால்தான் உங்களை குறைகூறிக் கொண்டே இருக்கிறது. 'முழுமை அடைவது'. அந்நிலையில் அது மன இறுக்கத்தை, பித்துநிலையை உண்டாக்கு கிறது. அகந்தை தடுமாற்றத்துக்குள்ளாகிறது. அன்றொருநாள் ஒரு சொற்பொருள் விளக்கத்தை நான் படித்தேன். அந்த விளக்கம் சொல்கிறது, 'உணர்ச்சி மிகைப்பு (neurotic) உடைய ஒருவர் ஆகாயத்தில் கோட்டை கட்டுகிறார். மனநோயாளி ஒருவர் அந்தக் கோட்டையில் வாழ்கிறார். மனநல மருத்துவர் அதற்கான வாடகையை

வசூல் பண்ணிக் கொள்கிறார்' என்று. நீங்கள் உணர்ச்சி மிகைப்பு உடையவராய், மனநோயாளியாய் வாழ விரும்பினால் முழுநிறை வாகிட முயலுங்கள்.

உலகில் உள்ள மதங்கள் எல்லாம் குறையற்றவராய் இருங்கள் என்றே கற்பித்துக் கொண்டிருக்கின்றன. இயேசு அதனைச் சொல்லவில்லை, கிறிஸ்துவம் சொல்கிறது. புத்தர் அதனைச் சொல்லவில்லை, புத்தமதம் சொல்கிறது. ஒழுங்கு செய்யப்பட்ட அத்தனை மதங்களுமே குறைகளற்றவராய் இருக்கும்படி போதித்துக் கொண்டிருக்கின்றன. புத்தரும், இயேசுவும், லாவோட்சும் முற்றிலும் மாறுபட்ட ஒன்றைக் கூறினர். அவர்கள் சொன்னது, 'முழுமை அடை யுங்கள்' என்பதுதான். முழுமைக்கும் நிறைவுண்டாக்குகிறதற்கும் என்ன வேறுபாடு? நிறைவுண்டாக்குவது என்பது கிடைக்கோடு. நிறை உண்டாக்குதல், இது வருங்காலத்தில் எப்போதோ நிகழக் கூடியது. முழுமை அடைதல் இந்தக் கணத்தில் இங்கே இப்போதே நிகழ்வதாகும், அதற்கு அவகாசம் தேவையில்லை. முழுமை அடைதல் என்பது நம்பத்தக்க அதிகாரப் பூர்வ நிலையை அடைவது அதாவது நீங்கள் நீங்களாகவே இருப்பது, எத்தகையவராயினும்.

வழக்கமாக ஒரு வரையறுக்கப்பட்ட வாழ்க்கையை வாழ்கிறீர்கள். ஒரு முழுமையான ஆட்டத்துக்கு (play) உங்கள் ஆற்றலை நீங்கள் அனுமதிப்பதில்லை. நீங்கள் ஒருவரை நேசிக்க விரும்புகிறீர்கள். ஆனால் நீங்கள் முழுமையாக நேசிக்கவில்லை. உங்கள் நேசம் முழுநிறைவை உண்டாக்குவதாய் இருக்க வேண்டும் என்று நான் சொல்லமாட்டேன். அது சாத்தியமல்ல. முழுநிறைவு என்றாலே அதற்குமேல் வளர்ச்சியில்லை, வளர்ச்சி கிடையாது என்றாகிவிடும். அது ஒரு மரணமாகிவிடும். நான் கூறுவேன் உங்களுடைய ஒட்டுமொத்த அன்பையும் வெளிப்படுத்துங்கள். முற்றாகக் கொடுங்கள். மிச்சம் மீதம் வைக்காமல். அது ஒன்றே உங்களை முழுமையான வராக்கும்.

நீங்கள் நீந்தினால் முற்றாக நீந்துங்கள். நடைப்பயிற்சி மேற் கொண்டால் முற்றாக நடவுங்கள். நடக்கிறபோது நடையாகவே ஆகிவிடுங்கள். உண்பதாயின் முற்றாக உண்ணுங்கள்.

சாவ்-சவ் ஒரு பெரிய ஜென் குரு. அவரிடம் யாரோ கேட்டார்கள், 'நீங்கள் ஞானம் பெறுவதற்கு முன் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்' என்று.

'நான் விறகு உடைத்துக் கொண்டிருந்தேன், கிணற்றில் இருந்து தண்ணீர் எடுத்து வந்தேன்' என்றார் அவர்.

அந்த மனிதர் கேட்டார், 'தற்போது, ஞானம் பெற்றபின் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'

அவர் சொன்னார், 'அதேதான். விறகு உடைப்பதும், கிணற்றில் இருந்து தண்ணீர் எடுத்து வருவதும்.'

அந்த மனிதர் குழப்பமுற்றவராய் கேட்டார், 'ஆனால் அதில் வேறுபாடாய் என்ன இருக்கிறது?'

சாவ்-சவ் சொன்னார், 'நிறைய வேறுபாடு இருக்கிறது. முன் பெல்லாம் ஒரே நேரத்தில் பலவேலைகளைச் செய்து கொண்டிருந் தேன். விறகு உடைக்கும் போதே பலவற்றைச் சிந்திக்கவும் செய்வேன். கிணற்றில் இருந்து நீர் எடுத்து வரும்போது பலவாறாக எண்ணமிடுவேன். ஆனால் இப்போது, தண்ணீர் கொண்டுவருவதை மட்டும் செய்கிறேன், விறகு உடைப்பதை மட்டும் செய்கிறேன்.'

இது ஒரு முழுமையான உணர்வை உங்களுக்கு அளிக்கும். முழுமை பெறுவதை ஒரு மாறாத தொடர்பாய் கொண்டிருங்கள். நிறைவுண்டாக்கும் எண்ணத்தை விட்டு விடுங்கள். அது உங்கள் பெற்றோர்களாலும், ஆசிரியர்களாலும், கல்லூரிகளாலும், பல்கலைக் கழகங்களாலும், தேவாலயங்களாலும் உங்களுக்குத் தரப்பட்டது. அவர்கள் எல்லாருமே உங்களை உணர்ச்சி மிகைப்பு (new otic) உடையவராக்கி விட்டார்கள். ஒட்டுமொத்த உலகமும் உணர்ச்சி மிகைப்பால் துன்புறுகின்றது.

ஒருதாய் தன்னுடய குட்டிப் பையனை அழைத்துக் கொண்டு மனநல மருத்துவரிடம் சென்றாள், 'டாக்டர், ஒரு பத்துவயதுப் பையன் எலிசபெத் டெய்லர் மாதிரி ஒரு நடிகையை கல்யாணம் செய்து கொள்ள முடியுமா?' என்று அவரிடம் கேட்டாள்.

மருத்துவர் சொன்னார், 'மேடம், உண்மையில் அது நடவாத காரியம்' என்று.

தாய் தனது பையனிடம் சொன்னாள், 'பார்த்தாயா, நான் உன்னிடம் என்ன சொன்னேன். இப்போதே போய் விவாகரத்து பண்ணிவிடு' என்று.

அந்தப் பையன் மட்டும் உணர்ச்சி மிகைப்பு உடையவன் அல்லன், அவனுடைய தாயுந்தான். தாயைப் பொறுத்தவரை அதிக அளவில். உணர்ச்சி மிகைப்புடைய பெற்றோர்கள் உணர்ச்சி மிகைப்புடைய பிள்ளைகளைப் பெறுகிறார்கள்.

மக்கள் பலமுறை என்னிடம் கேட்டிருக்கிறார்கள். ஏன் அனுராக்கூட பலமுறை கேட்டதுண்டு - நான் விடையளித்ததில்லை. 'தாங்கள் ஏன் சந்நியாசியானிகள் குழந்தை பெறுவதை அனுமதிக்க மாட்டேன் என்கிறீர்கள்? டாக்டர் பட்டினிஸ்ஸிற்கு எதற்காகத் தொல்லை கொடுக்கறீர்கள்?' என்று. முதலில், நீங்கள் உணர்ச்சி மிகைப்பற்றவராய் இருக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். இல்லையேல் நீங்கள் உணர்ச்சி மிகைப்புடைய பிள்ளைகளையே பெறுவீர்கள். இந்த உலகமே உணர்ச்சிமிகைப்பு உபாதையால் நிரப்பப்பட்டிருக்கிறது. குறைந்தபட்சம் அதனை அதிகரிக்காமலாவது இருங்கள். நான் மக்கள் தொகை பற்றிக் கவலைப்படவில்லை, அது அரசியல் வாதிகளின் கவலை. என்னுடைய கவலை எல்லாம் உணர்ச்சி மிகைப்பு பற்றியதுதான். நீங்கள் உணர்ச்சி மிகைப்புடையவர், உங்களுடைய உணர்ச்சி மிகைப்பில் இருந்தே பிள்ளைகளைப் பெறுகிறீர்கள்.

அவர்களும் உங்களுக்கு அமைதிக்குலைவை - பைத்தியத்தை உண்டு பண்ணுகிறவர்கள்தாம். காரணம், நீங்கள் உங்களுக்கு திகட்டிப் போய்விட்டீர்கள், கவனத்தை எங்காவது திருப்பவேண்டும்போல் இருக்கிறது. குழந்தைகள் அழகான முறையில் கவனச் சிதறலை உண்டு பண்ணுகிறவர்கள். அவர்கள் நிறைய தொல்லைகளைக் கொடுப்பார்கள். உங்களுடைய கவலைகள் எல்லாம் பழசாகிவிட்டன. அவற்றால் உங்களுக்குப் போதும் போதும் என்றாகிவிட்டிருக்கும். கணவனுக்கு மனைவி சலித்துவிட்டிருப்பாள். மனைவிக்கு கணவன் சலித்து விட்டிருப்பான். தங்களுக்கிடையே யாரேனும் வருவதை அவர்கள் விரும்புவார்கள். ஒரு குழந்தை. பல திருமணங்கள் குழந்தைகளால் இழுத்து பிடிக்கப்பட்டிருக்கிறது. இல்லையேல் அவை முறிந்து போயிருக்கும். குழந்தைகள் வந்ததுமே குழந்தைகள் விஷயத்தில் தன்னுடைய பொறுப்புபற்றி தாய் சிந்திக்கத் தொடங்குகிறாள், தந்தை தன்னுடைய கடமை பற்றிச் சிந்திக்கத் தொடங்குகிறான். தற்போது ஒரு பாலம் உளதாயிருக்கிறது.

தாயும், தந்தையும் தங்களுடைய சொந்த உளப்பிணி, பிரச்சினைகள், தவிப்புகள் என்று சுமந்து கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய குழந்தைகளுக்கு அவர்கள் எதைத்தான் கொடுக்கப் போகிறார்கள்? கொடுப்பதற்கு அவர்களிடம் என்ன இருக்கிறது? அவர்கள் அன்பைப் பற்றிப் பேசுகிறார்கள், ஆனால், வன்முறையைப் பயன்படுத்துகிறார்கள். அவர்களுடைய அன்பு முன்பே நச்சுத்தன்மை அடைந்துவிட்டது. அவர்கள் அன்பு என்றால் என்னவென்றே தெரியாமல் இருக்கிறார்கள். அன்பின் பெயரால் குழந்தைகளை வதைப்பதுதான் நடக்கிறது. அன்பின் பெயரால் குழந்தைகளுடைய ஆர்வத்தை அவர்கள் கொன்று போடுகிறார்கள். குழந்தைகளுடைய வாழ்க்கையை ஒழுக்க அமைவுடைய (sturcture) தாக்குகிறார்கள். அன்பின் பெயரால் குழந்தைகள் மீது ஆதிக்கம் செலுத்தி தங்கள் பிடியில் அவர்களை வைத்துக் கொள்கிறார்கள். உண்மையில் பிள்ளைகள்தாம் வகையற்றவர்களாய் இருக்கிறார்கள். ஆக, நீங்கள் விரும்பியது எதுவாயினும் செய்து கொள்ளுங்கள், அவர்களை அடியுங்கள், அப்படி இப்படி என்று உருக்கொடுக்கப் பாருங்கள். உங்களுடைய நிறைவேறாத உன்னத நோக்கங்களை, விருப்பங்களை அவர்கள் மீது வலுக்கட்டாயமாய் திணியுங்கள். அவ்விதமாய் நீங்கள் செயலற்றுப் போனதும் அவர்கள் உங்களுடைய உன்னத நோக்கங்களை நிறைவேற்றுவதுடன், நீங்கள் செய்யமுயன்ற முட்டாள்தனங்களை அவர்களும் செய்ய முயல்வார்கள்தானே.

நீங்கள் குழந்த்தைகளைப் பெற வேண்டும் என்றுதான் நானும் விரும்புகிறேன், ஆனால் ஒரு தந்தையாயிருப்பதும், தாயாயிருப்பதும் அத்தனை எளிதான காரியமல்ல. ஒருமுறை நீங்கள் முழுமை யடைந்துவிட்டால் பிறகு தாயாகிவிடுங்கள், தந்தையாகிவிடுங்கள். அடுத்து ஒரு குழந்தையைப் பெற்றுக் கொள்ளுங்கள். அந்தக் குழந்தை சுதந்திரமானதாய், ஆரோக்கியமும் முழுமையும் கொண்டதாய், அருள் கொண்டதாய் இருக்கும். அது உலகத்துக்கே வெகுமதி எனலாம். அவன் இந்த உலகத்தை அது இருப்பதைவிட இன்னும் சிறப்பானதாக்குவான்.

நியாயமற்றதைக் கண்டால் கோபப்படுகிற அந்த நோயாளி 'ஏன் என்னை அந்த ஆளுடன் ஒரே அறையில் அடைத்து வைத்திருக் கிறீர்கள்' என்று மருத்துவரிடம் கேட்டான். 'மருத்துவமனையில் ஒரே கும்பல். அவன் என்ன தொல்லை கொடுக்கிறானா?' மருத்துவர் கேட்டார்.

'தொல்லையா? கட்டுப்படுத்தவே முடியாத பைத்தியம். அவனானால் அறையைச் சுற்றிவரப் பார்த்தபடி, 'சிங்கங்களைக் காணோம். புலிகளைக் காணோம், யானைகளைக் காணோம்'னு சொல் றான். எந்நேரமும் அறைமுழுக்க அவையெல்லாம் இருக்கத்தான் இருக்கு!'

பைத்தியக்காரர்கள் மற்றவர்களைப் பைத்தியம் என்று எண்ணிக் கொள்கிறார்கள். தாங்கள் பைத்தியம் என்பதைப் பைத்தியங்கள் ஒருபோதும் எண்ணுவதில்லை. பைத்தியக்காரன் ஒருவன் தான் பைத்தியம் என்பதை உணர்ந்து கொள்கிறபோது, அவன் முனபே நல்லறிவுப்பாதைக்கு (path of sanity) வந்தவனாகிறான்.

'எதிலும் குறை காண்பது, முழுநிறைவை வலியுறுத்தும் கொள்கையால் ஏற்படும் கவலை'. முழுமையாயிருக்க முயலுங்கள். இல்லையேல் முழுநிறைவை வலியுறுத்துக் கொள்கையே உங்களிடம் குற்றம் கண்டுபிடிக்கும். முழுமையாகி விடுங்கள். நீங்கள் செய்ய விரும்புவது எதுவாயினும் அதைச் செய்யுங்கள். அதில் உருகிக் கரைந்து விடுங்கள். மெள்ள மெள்ள உங்கள் இருப்புணர்வின் மலர்ச்சியை நீங்கள் பெறுவீர்கள். பிறகு... பிறகு முழுநிறைவை வலியுறுத்தும் கொள்கை (perfectionism) உங்களுக்குள் இருக்காது.

ஆனால், நீங்கள் முழுமை அடையாதவராய், பலவகைகளாய் பிரிந்தவராய், உடைந்த துண்டுகளாயிருக்கிறீர்கள். அதனால்தான் 'எப்படி நிறைவுண்டாக்குவது?' என்ற எண்ணம் தொடர்ந்து உங்களுக்குள் உண்டாகிறது. முழுமை அடையுங்கள், அந்த எண்ணம் தன்னுடைய சொந்த இசைவுடனே விட்டுச் செல்லும்.

'தற்பெருமை' மற்றும் 'நடிகரின் தனித்தன்மை' நிறைவுண்டாக்க முயல்கிறவர்கள் நடிகரின் தனித்தன்மை கொண்டவராகிவிடுகிறார்கள். தங்களை முகமூடிகளின் பின்னே அவர்கள் மறைத்துக் கொள் கிறார்கள். தங்களுடைய உண்மைத் தன்மையை மற்றவர்கள் கண்டு கொள்ள அவர்கள் இடமளிப்பதில்லை. எப்போதுமே அவர்கள் பாசாங்கு செய்ய முயற்சிக்கிறார்கள். தாங்கள் யார் என்பதை அவர்கள் அறிந்திருந்தாலும், தங்களை வேறு யாரோவாக நிரூபிக்க அவர்கள் முயல்கிறார்கள்.

இதில் உள்ள இடர்ப்பாடு, மற்றவர்களை நம்பவைக்க அவர்களால் முடியவில்லை என்பதுதான். ஆனால், தொடர்ந்து தங்களைத்

தாங்களே நம்பவைக்க அவர்களால் முடிகிறது. அப்படித்தான் உணர்ச்சி மிகைப்பு உண்டாகிறது.

நீங்கள் நீங்களாக இருங்கள் அதற்கு என்ன விலை கொடுக்க நேர்ந்தாலும் சரி. உண்மையாக இருங்கள். தொடக்கத்தில் பெருமளவு அச்சம் ஏற்படக்கூடும், காரணம் உங்களை ஓர் உயர்ந்த மனிதராக நீங்கள் எண்ணிக் கொண்டிருக்க, ஒரு சாதாரண மனிதர் என்று சற்றும் எதிர்பாராத விதத்தில் நீங்களே வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். அச்சம் இருக்கும், அகந்தை புண்ணடைவதாய் உணரும், அது புண்ணடையட்டும் விடுங்கள். அது பட்டினி கிடந்து, சாகட்டும்.

வழக்கமானவராய் இருங்கள், எளிமையாயிருங்கள், நீங்கள் மிகுதியான அளவு முழுமை அடைவீர்கள், இறுக்கம் மறைந்துவிடும், தொடர்ந்து செயல்பட வேண்டிய அவசியம் இருக்காது. தொடர்ந்த செயல்பாடு, தொடர்ந்த காட்சிப் பொருளாய் இருத்தல், மக்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதைக் கவனித்தல், நீங்கள் ஸ்பெஷலான ஆசாமியாய் காட்டிக் கொள்ள என்னவெல்லாம் செய்கிறீர்கள் என்று உங்களைப் பெரிய இறுக்கத்துக்குள்ளாக்குகிறவை எத்தனையோ. ஆனால், மற்றவர்களைப் பற்றியும் எண்ணிப் பாருங்கள், அவர்கள் எல்லாரும் அதையேதான் செய்கிறார்கள்.

ஒட்டுமொத்த உலகமும் ரொம்பவே கவலைக்குள்ளாகி இருக்கிறது, காரணம் ஒவ்வொருவரும் தாம் எதுவாக இல்லையோ அதுவாகத் தம்மைக் காட்டிக் கொள்ள முயற்சிக்கிறார், மேலும் மற்றவர்களும் அதையேதான் செய்கிறார்கள். யாரும் உங்களை உயர்ந்தவராய் காண விரும்புவதில்லை. நீங்கள் அப்படி இருக்கவில்லை என்பது அவர்களுக்குத் தெரியும், உங்களுடைய் உயர்வை அவர்களால் எப்படி நம்ப முடியும்? அவர்கள் தம்மளவில் உயர்ந்தவர்கள்தாம். உங்களைவிட உயர்ந்தவர்கள் இல்லை என்று நீங்கள் எண்ணிக் கொள்கிறீர்கள். நீங்கள் அப்படிச் சொல்லிக் கொள்ளாமல் இருக்கலாம், ஆனால் எல்லாருமே அடியாழத்தில் தொடர்ந்து அதை நம்பிக் கொண்டிருக்கிறார்கள்.

அராபிய நாடுகளில், கடவுள் ஒரு புதுமனிதனைப் படைக்கிற போதெல்லாம் ஒரு தந்திரத்தைச் செயல்படுத்துவதாக ஒரு நகைச் சுவை உண்டு. அவனுடைய (மனிதன்) காதில், 'நான் படைத்த வற்றிலேயே நீதான் சிறந்தவன் - மிகச்சிறந்தவன்' என்று அவர் முணுமுணுப்பாராம். ஆனால், எல்லாரிடமும் அதே செயலைத்தான்

அவர் மேற்கொள்கிறார். எனவே, ஒவ்வொருவரும் தம்மைச் சிறப்பானவராய் நம்புகிறார்.

தரையில் நடக்க முயலுங்கள். நடைமுறைக்கேற்றவராய் இருங்கள். நீங்கள் வழக்கமானவராய் இருந்தால், உங்கள் இறுக்க நிலையால் மூடிக்கிடந்த அத்தனைக் கதவுகளும் உடனே திறப்பதைக் காண்பீர்கள். தணிவடையுங்கள்.

தற்பெருமை திரும்பத் திரும்ப வெவ்வேறு வழிகளில் வருவது உண்மைதான். எனவே கவனமாயிருங்கள். அது நுட்பமான வழிகளில் வரும் என்பது நினைவிருக்கட்டும். எனவே உங்களுடைய கண் காணிப்பு மிகச்சரியாகவும் இம்மியும் பிசகாமலும், எச்சரிக்கையாகவும் இருக்கட்டும்.

ஆம், தியானம் பலனளிக்கும். வேறு எதுவும் தேவைப்படாது. தியானத்தை அதிகரியுக்ள், உங்களால் விஷயங்களைத் தெளிவாகப் பார்க்க முடியும்.

> ***பகவானே, நீங்கள் நானாக இருப்பதை மெள்ள உணர்ந்தேன். ஆனால், தினமும் காலையில் வெண்ணிற உடைதரித்து அந்த ஆசனத்தில் வீற்றிருக்கும் இந்த நபர் யார்?***

G.O.K

தற்போது G.O.K என்கிற இந்தச் சங்கேத வார்த்தையை நான் விளக்குகிறேன். இதுதான் என்னுடைய பதில்.

பல மருத்துவர்கள் பணியாற்றும் லண்டன் மருத்துவமனைக்கு சென்றார் ஒரு மருத்துவர். அங்குள்ள கோப்பு முறையை அவர் பார்வையிட்டபோது அவர்கள் சொற்றொடர் சுருக்கங்களை (abbreviation) பயன்படுத்துவதைக் கண்டார்.

D - diptheria

M - measles

TB - Tuberculosis இப்படி, G.O.K என்கிற குறியீட்டின் மூலம் சுட்டிக்காட்டப்பட்டதைத் தவிர மற்ற நோய்கள் எல்லாமே கட்டுப்பாட்டில் இருப்பதாய் தெரிந்தது.

'G.O.K என்கிற பெரிய அளவில் பரவியிருக்கும் தொற்று நோய் உங்கள் கையில் இருப்பதைக் காண்கிறேன். ஆனால் G.O.K என்றால் என்ன?' என்று கேட்டார் அவர். அவர்களுள் ஒருவர், 'ஓ, அதுவா, எங்களால் நோய் நிர்ணயம் செய்ய முடியாத பொழுது நாங்கள் G.O.K விடம் விட்டுவிடுகிறோம். G.O.K ன்னா 'God only knows' என்றாரே பார்க்கலாம்.

இங்கே ஆசனத்தில் அமர்ந்திருக்கும் இந்த ஆள் உங்களுடன் பேசிக் கொண்டிருக்கும் இவர் யார் என்று அறியவில்லை. G.O.K.

*சூத்திரம் - 53* *'க்ஷண - தத்க்ரமயோ: சம்யமாத்*
*விவேக ஜம் ஞானம்'*

ஒரு கணப்பொழுதின் மீதும், அதன் முன்னும் பின்னும் உள்ள காலத்தின் மீதும் சம்யமம் செய்வதால் விவேகம் உண்டாகிறது.

*சூத்திரம் - 54* *'ஜாதிலட்சண*
*தேனா சரண்யதானவச் சேதாத்'*
*துவ்ய யோஸ்தத: ப்ரதி பத்தி'*

இனம், அடையாளம், இடம் இவற்றால் வேறுபடுத்தி அறிய முடியாதவற்றைக் கூட மேலே கூறிய சம்யமத்தால் பிறக்கின்ற விவேகத்தைக் கொண்டு அறியமுடியும்.

*சூத்திரம் - 55* *'தாரகம் ஸர்வ விஷயம் ஸர்வதாவிஷயமக்ரமம்*
*சேதி விவேகஜம் ஞானம்'*

இந்த விவேகம் ஒருவனை அறியாமையில் இருந்து விடுவிக்கும். பொருள்கள் அனைத்யையும், அவற்றின் வேறுபாடுகளையும் ஒரேகாலத்தில் ஏற்றுக் கொள்ளும் விவேக ஞானமே கரையேற்றும் ஞானம்.

காலம் என்பது என்ன? தற்போது பதஞ்சலி காலப்பகுதிக்குட் படாத கேள்வியை, எப்போதைக்குமாய் நிலைத்திருக்கக்கூடிய ஒரு கேள்வியைக் கேட்கிறார். விபூதிபாதத்தின் நிறைவுப் பகுதியில் அவர் அதனிடம் வருகிறார். காரணம், காலம் என்பது மிகப்பெரிய அற்புதம்.

காலம் பற்றி அறிவது வாழ்க்கையைப் பற்றி அறிவதாகும். காலம்பற்றி அறிவது மெய்ம்மை பற்றி அறிவதாகும். நாம் சூத்திரங்களில் பிரவேசிப்பதற்கு முன் பலவற்றை அறிந்துகொள்ள வேண்டியிருக்கும். அவை சூத்திரங்களுக்கு ஓர் அறிமுகமாயிருக்கும்.

வழக்கமாக நாம் எதை நேரம் என்று அழைக்கிறோமோ அது நேரம் அல்ல. அது கால வரிசைப்படுத்தப்பட்ட நேரமாகும். இந்த நேரம் மூன்று வழிகளில் பிரிக்கப்படுகிறது, வகைப்படுத்தப்படுகிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஒன்று கால வரிசை சார்ந்தது (chronological). மற்றொன்று மனநிலை சார்ந்தது (psychological). மூன்றாவது உண்மையானது (real). காலவரிசைச் சார்ந்தது கடிகார நேரம் ஆகும். அது பயனைக் குறிக்கோளாய்க் கொண்டது. அது உண்மையான தாகாது. அது சமூகத்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு நம்பிக்கை. ஒருநாளை இருபத்து நான்கு மணிகளாய் பிரிப்பதை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். பூமி தன்னுடைய அச்சில் ஒரு முழுச்சுற்று சுற்றுவதற்கு இருபத்து நாலு மணிநேரம் பிடிக்கிறது என்பது அறிவுக்குப் பொருந்தாததாகும். நாம் அதை இருபத்து நான்காகப் பிரிப்பது என்று தீர்மானித்தோம். பின்பு, ஒவ்வொரு மணியையும் அறுபது நிமிடங்களாய் பிரிப்பது என்று தீர்மானித்தோம். அந்த முறையில் பிரிக்க உள்ளார்ந்ததாய் எந்த அவசியமும் இல்லை. நாம் ஒரு மணிநேரத்தை நூறு நிமிடங்களாகவும் பிரித்துக் கொள்ள முடியும். யாரும் வந்து நம்மைத் தடுக்கப்போவதில்லை. பிறகு, ஒவ்வொரு நிமிடத்தையும் அறுபது நொடிகளாய் நாம் பிரித்துக் கொண்டோம். அதுவும் பயனுடைமை சார்ந்தது (Utilization) தான். அது கடிகார நேரம். அது தேவைப்படுகிறது. இல்லையேல் சமுதாயம் துண்டு துண்டாகிவிடும்.

ஒரு பொதுவான அளவீடு அவசியப்படுகிறது - பணம், ரூபாய் நோட்டு மாதிரி. ஒரு நூறு ரூபாய் நோட்டு பத்து டாலர் அல்லது வேறு. சமூகம் அதைப்பயன்படுத்த ஒப்புக் கொண்டிருப்பதாய் பொதுப்படையாய் ஒரு நம்பிக்கை. ஆனால், வாழ்தலில் – பிரபஞ்ச இருப்புணர்வில் இது எவ்விதத்திலும் செயல்படுவதற்கில்லை. மனிதன் இவ்வுலகில் இருந்து மறைகிறபொழுது பவுண்ட், ஸ்டெர்லிங், டாலர், ரூபாய் எல்லாம் உடனடியாய் மறைந்துவிடும். மனிதன் இல்லையென்றாகிறபோது பணமும் இல்லையென்றாகிவிடும். அங்கே கற்பாறைகள் இருக்கும், பூக்கள் இன்னும் பூத்தபடி இருக்கும், வசந்தம் வரும், பறவைகள் பாடும், சருகுகள் உதிர்ந்து விடும். ஆனால், அங்கே பணம் இருக்காது. சாலைகளில் பணம் குவிந்து கிடந்தாலும் அது எவ்வகையிலும் பணமாகாது, காரணம், அதைப் பணம் என்று அழைக்க ஒரு மனிதன் இருக்க வேண்டுமே, பணத்துக்கு மதிப்பளிக்க ஒரு மனிதன் தேவை.

அரசு வாக்குறுதியளித்தபடி இருக்கிறது, ஒவ்வொரு ரூபாய் நோட்டிலும் அந்த வாக்குறுதி எழுதப்பட்டிருக்கிறது. நீங்கள் இந்த நோட்டை வங்கியில் கொடுத்தால் – பத்து ரூபாய் நோட்டு என்று வைத்துக் கொள்ளுங்களேன், பத்துரூபாய் பெறுமானமுள்ள தங்கத்தைக் கொடுக்கவும் நிதி ஆளுநர் வாக்குறுதியளிக்கிறார். வாக்குறுதியளிக்க யாரும் இல்லையென்றால் பணநோட்டு மறைந்து விடும்.

இம்மண்ணுலகில் மனிதன் இல்லையென்றால் கடிகாரம் மணியோசையை எழுப்பியபடி இருக்கும் ஆனால் அது எவ்வகையிலும் 'நேரம்' ஆகாது. யாரும் அவற்றைக் கவனிக்கவோ, கவலைப்படவோ செய்வதில்லை. மனிதன் இல்லையென்றால் கடிகார நேரம் உடனே நின்றுவிடும். ஆக அது மனிதனால் உண்டாக்கப்பட்டது, சமூகம் சார்ந்த துணைப்பொருள் அது.

ஒரு சமுதாயம் எந்த அளவுக்கு மேல்நோக்கிச் செல்கிறதோ அந்த அளவுக்கு அது கால வரிசைப்படியான நேரத்தில் கருத்தாவேசம் உடையதாகிறது. இங்கே 'மேல்நோக்கிச் செல்கிறது' என்று நான் சொன்னது அது கொண்டிருக்கும் மிகுதியான சிக்கலைக் குறிப்பதாகும். ஆதிமனிதன் கடிகாரத்தைப் பயன்படுத்தியதில்லை. அவனிடம் ஒரு கைக்கடிகாரத்தை நீங்கள் கொடுத்தால் அவன் குழப்பத்துக்குள்ளாவான், இது எதற்காகவென்று. அதை வைத்துக்

கொண்டு அவன் என்ன செய்யப் போகிறான். நாகரிகமுற்ற ஒரு மனிதனால் கைக்கடிகாரம் இல்லாமல் வாழ முடியாது. நாகரிக வளர்ச்சியுற்ற ஒரு சமூகத்தில் கைக்கடிகாரம் இல்லாமல் வாழ்வது நடவாத காரியம். ஒட்டுமொத்த சமூகமும் கடிகாரத்துக்கு ஏற்பவே இயங்கிக் கொண்டிருக்கிறது. சில சமயங்களில் இது நகைக்கத் தக்கதாகவே இருக்கும்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

அந்த மருத்துவர் அப்போதுதான் தூங்கச் சென்றிருப்பார், கதவைப் பலமாகத் தட்டுகிற ஒசை கேட்டது. அவர் எழுந்து வந்து, வாசலில் நின்றிருந்தவனிடம் கேட்டார், 'என்ன விஷயம்?' என்று.

'ஒரு நாய் என்னைக் கடித்துவிட்டது' என்றான் அவன்.

'நல்லது, என்னுடைய ஆலோசனை நேரம் பன்னிரண்டில் இருந்து மூன்றுமணி வரைதான் என்பது உனக்குத் தெரியாதா?'

'ஆமாம். ஆனால் அந்த நாய்க்கு அது தெரியாதே. அது மூன்று நாற்பதுக்கல்லவா என்னைக் கடித்தது. அப்படியிருக்க நான் என்ன செய்வது?' என்று வேதனைக் குரலில் பேசினான.

நாய்கள் கடிகாரத்தில் நம்பிக்கை வைப்பதில்லை. செயல்கள் நகைக்கத்தக்கதாகிவிடுகின்றன.

நீங்கள் கடிகார வரையீட்டில் (terms) சிந்தித்தால் இது பயனுடைமை சார்ந்தது (utilization) என்பதை மறந்து விடுவீர்கள். அது உண்மையான நேரம் ஆகாது.

மற்றொரு மருத்துவர் பற்றியது.

மருத்துவமனை வரவேற்புப் பகுதியின் 'டெஸ்க்'கிற்குப் பின்னால் உள்ள அறிவுப்புப் பலகை சொன்னது: 'அவசரகால விபத்து சிகிச்சைப் பதிவுகள்' என்று. ஒரு மனிதன் காயங்களுடன் தள்ளாடிய படி அங்கே வந்தான். மருந்திட்ட துணியால் இரண்டு கால்களிலும் கட்டுப் போட்டிருந்தது. அவன் நொண்டி நடந்தான். பெருகிவரும் இரத்தத்தை கையால் தடுக்க முயன்று கொண்டிருந்தான். அவன் 'டெஸ்க்' அருகே ஊர்ந்து வந்து, 'டாக்டர், டாக்டர்' என்று வேதனைக் குரலில் கூப்பிட்டான்.

வரவேற்பாளினி வந்து 'சார், அப்பாயிண்ட்மெண்ட் இருக்கா?' என்று கேட்டாள்.

இந்த ஆசிரமத்தில்கூட இப்படி ஆகிவிடுகிறது. ஷீலாவின் டெஸ்க்கில் அது நடந்திருக்கக்கூடும்.

காலவரிசையிலான நேரத்தைத் தீவிரமாக எடுத்துக் கொள்கிற ஒருவர் மற்ற எல்லாவற்றையுமே மறந்து விடுகிறார். மேற்கில் உள்ளவர்களை நேரம் பேயாட்டமாய் ஆட்டுவிக்கிறது. எல்லாமே நேரப்படி நடந்தாக வேண்டும் அவர்களுக்கு.

என்னுடைய நண்பர்களில் ஒருவர் தம்முடைய ஆங்கியே நண்பர்களுள் ஒருவருடன் இங்கிலாந்தில் பயணம் செய்து கொண்டிருந்தார். அங்கே எல்லாமே நடைமுறை ஒழுங்கைக் கொண்டிருக்கிறது. 'டீடைம், டின்னர் டைம், லஞ்ச் டைம்' என்பது போன்ற வார்த்தைகள் காதில் விழுந்தபடி இருக்கின்றன. அவை எதைக் குறிக்கிறது? உங்களுக்குப் பசி ஏற்படாவிடில் 'லஞ்சி'ற்கான டயத்தை (நண்பகல் உணவிற்கான நேரம்) நேரம் எப்படித் தீர்மானிக்க முடியும்? நீங்கள் 'லஞ்ச் டைம்' என்று சொல்கிறபோது அது பசியெடுக்கிற நேரத்தைக் குறிக்கிறதுதானே. தற்போது நீங்கள் பசியோடு இருக்கிறீர்கள்! இல்லையென்றால் உங்களுக்கு ஏதோ கோளாறாகி விட்டிருக்க வேண்டும். 'டீ டைம்' என்பது தற்போது தேநீர் பருகத் தயாராயிரு என்பதாகும். உங்களுக்கு அந்த உணர்வு ஏற்படாவிடில் உங்களிடம் ஏதோ கோளாறு என்றாகிவிடும். காலப் போக்கில் மக்கள் தங்களுடைய உண்மையான பசியை, உண்மையான தாகத்தை மறந்து போனார்கள். எல்லாமே நேரப்படி மேற்கொள்ளப் படுகிறது. கடிகாரம் தீர்மானிக்கிறது. கடிகாரம் ஆதிக்கக்கர்த்தாவாகி, அதிகாரம் செலுத்துகிறது. கடிகாரத்தின் ஆதிக்கத்தில் உள்ள மாய உலகம் இது.

உங்கள் குழந்தைக்குக் குறிப்பிட்ட நேரத்தில், ஒவ்வொரு மூன்று மணி நேரத்துக்குப் பிறகும் பால் கொடுங்கள் என்று சொல்கிற கல்வியாளர்களும், உளவியல் நிபுணர்களும் தற்போது இருந்து கொண்டிருக்கிறார்கள். குழந்தை அழுகிறது, குழந்தை பசியாய் இருக்கிறது. தாய் கடிகாரத்தைப் பார்க்கிறாள். இன்னும் நேரமாக வில்லை. குழந்தை பசித்திருக்கிறது. அது ஒன்றும் கவலைக்குரியதல்ல. கடிகாரம் கவனத்துக்குரியதாகிவிடுகிறது. காரணம், குழந்தைக்குப் பசிக்கிறபோது குழந்தையா நம்பப்பட வேண்டியது இல்லை மருத்துவர்தான். தற்போது அது மருத்துவருடைய வேலையும் அல்ல. ஆனால் ஒருமுறை நீங்கள் மாயமான (உண்மையல்லாத) ஒன்றில்

கருத்தாவேசம் கொண்டு விட்டால், பல மாயங்களும் உங்கள் வாழ்வில் பிரவேசித்துவிடும்.

நான் கேட்டறிந்தது:

அயர்லாந்துக் காரர் ஒருவர் ஏணியில் இருந்து விழுந்து விட்டார். அப்படியே உணர்வற்றவராய் தரையில் கிடந்தார். அவரைச் சுற்றி கூட்டம் கூடியது. ஒரு மருத்துவர் அங்கே வரவழைக்கப்பட்டார். அவர் உடனே சொல்லிவிட்டார், அந்த மனிதன் இறந்துவிட்டான் என்று. பாட், தனது கண்களைத் திறந்து, அந்தக் குற்றச்சாட்டை அவசரமாக மறுத்தார்.

பக்கத்தில் நின்று கொண்டிருந்தவர்களில் ஒருவன் சொன்னான், 'உஷ்... பாட் முட்டாள்தனமாக எதுவும் பேசாதே. டாக்டருக்கு நல்லா தெரியும், அவர் சொன்னால் சரியாகத்தான் இருக்கும்' என்று.

நீங்கள் உயிரோடு இருந்தாலும் மருத்துவர் சொல்கிறார் நீங்கள் செத்துப்போய் விட்டீர்கள் என்று, நீங்கள் செத்துப் போய்விட்ட வனாகவே நடந்து கொள்ள வேண்டியிருக்கும் - காரணம், சொல்கிற வர் மருத்துவமனையில் சிறப்பறிவு உடையவர், அவர் தகுதியானதையே சொல்வார்.

சிறப்பறிவுடையவர்களின் உலகம் காலவரிசைப் படுத்தப்பட்ட நேரத்தைக் கொண்டதாகும், காரணம் மெய்ம்மையுடனான உங்களு டைய வேர்களை நீங்கள் இழுத்துவிட்டீர்கள். எடுத்ததற்கெல்லாம் நீங்கள் மற்றவர்களிடம் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். மக்கள் என்னிடம் வந்து, 'பகவானே, நாங்கள் எப்படி உணர்கிறோம் என்பதை எங்களுக்குச் சொல்லுங்கள்' என்று கேட்கிறார்கள். நீங்கள் எப்படி உணர்கிறீர்கள் என்பதை நீங்களல்லவா அறிந்திருக்கவேண்டும். ஆனால், நான் அறிந்திருக்கிறேன். மெய்ம்மையுடனிருந்த தொடுகை (touch), தொடர்பு இணைப்பு எல்லாம் இழக்கப்பட்டு விட்டது என்பதை. நீங்கள் எப்படி உணர்கிறீர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளவும், அறிந்த ஒருவரைத் தேடிச் செல்லும்படி இருக்கிறது. நீங்கள் வேறொருவரைச் சார்ந்திருக்கிறீர்கள். இது துரதிர்ஷ்டமான விஷயம். ஆனால் மனிதகுலம் உணராத அளவு, வெகு நிதானமாகத்தான் அது நடந்திருக்கிறது.

காலவரிசைக்குட்பட்ட நேரம் தற்போது பயன்படுத்தப் படவில்லை. அது இனியும் ஒரு வழிமுறையாயிருக்காது. அது

கிட்டத்தட்ட முடிவுக்கு வந்தாயிற்று. அது பொய்யான, போலியான நேரம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். மெய்ம்மையுடன் அதற்குத் தொடர்பேதும் இல்லை.

அதன் அடியாழத்தில், அதற்கும் கீழே, மற்றொரு நேரம் உண்டு. அது உண்மையற்றது என்றாலும் கால வரிசை சார்ந்த நேரத்தைவிட அதிகம் உண்மையானதுதான். உங்களுக்குள் ஒரு கடிகாரம் -உயிரியல் சார்ந்த ஒரு கடிகாரம் உள்ளது. ஆண்களைவிட பெண்கள் அதில் கவனமாயிருக்கிறார்கள். அவர்களும் நெடுநேரத்துக்குக் கவனமாய் இருப்பதற்கில்லை, காரணம் அவர்கள் எல்லா வழியிலும் ஆண்களைப் பார்த்து, பின்பற்றுகிறவர்களாகவே இருக்கிறார்கள். இருந்தாலும் அவர்களுடைய தேகம் ஓர் உள்ளார்ந்த கடிகாரமாகவே இயங்கிக் கொண்டிருக்கிறது. ஒவ்வோர் இருபத்தியெட்டு நாளைக்குப் பிறகும் மாதவிடாய் வருகிறது. உடம்பு ஓர் உள்ளார்ந்த கடிகாரமாய், உயிரியல் கடிகாரமாய் செயல்படுகிறது.

நீங்கள் கவனித்தீர்களானால், தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் உங்களுக்குப் பசி எடுப்பது தெரியவரும், நீங்கள் நன்றாக ஆரோக்கியத்துடன் இருந்தால் உங்களுடைய தேவைகள் ஒரு குறிப்பிட்ட அமைப்புக்குப் பழக்கப்பட்டுவிடும், திரும்பவும் அந்த அமைப்பே தொடரும். நீங்கள் நலமிழக்கிறபோதுதான் அதன் தொடர்ச்சி தடைப்படும், இல்லையேல் உடம்பு மென்மையாய் எவ்விதத் தடங்கலுமின்றிச் செயல்பட்டுக் கொண்டிருக்கும். அந்த அமைப்பை ([attern) நீங்கள் தெரிந்து கொண்டிருந்தால் கடிகாரப்படி (நேரம்) வாழ்கிறவர்களைவிட துடிப்புடையவராகி விடுவீர்கள். நீங்கள் மெய்ம்மைக்குச் சமீபமாயிருக்கிறீர்கள்.

காலவரிசைப்படுத்தப்பட்ட நேரம் நிலையானது, அது நிலையாகத்தான் இருக்க வேண்டும், காரணம், அது சமூகத்தின் கட்டாயத்தேவை. ஆனால், உளவியல் சார்ந்த நேரமோ நிலைத்திராதது. காரணம் ஒவ்வொருவரும் தமக்கேயுரிய மனதை, மனநிலை ஆயும் அறிவியலை (psychology) ப் பெற்றிருப்பர். நீங்கள் கவனித்தது உண்டா? நீங்கள் மகிழ்ச்சியாயிருக்கும் நேரம் துரிதகதியில் செல்லும், உங்கள் கடிகாரம் வேகமாய் செல்வதில்லை கடிகாரத்துக்கும் உங்களுக்கும் தொடர்பில்லை. அது தன்னுடைய சொந்த அசைவுகளில் இயங்கிக் கொண்டிருக்கிறது. அறுபது நொடிகளில் ஒரு நிமிடமாகிறது. அறுபது நிமிடங்களில் அது ஒரு மணியாகிறா அது

தொடர்கிறது. உங்களுடைய மகிழ்ச்சியை அல்லது மகிழ்ச்சியின் மையை அது பொருட்படுத்துவதில்லை. நீங்கள் மகிழ்ச்சியற்றிருந்தால் உங்கள் மனம் வேறானதொரு காலப்பகுதியில் இருக்கும். நீங்கள் மகிழ்ச்சியாயிருந்தால் உங்கள் மனம் வேறொரு காலப்பகுதியில் இருக்கும். உங்களுக்குப் பிரியமானவர் திடீரென்று வந்து, எதிர்பாரத்விதமாய் உங்கள் கதவைத் தட்டுகிறார், காலம் அப்போது ஏறக்குறைய நின்று விட்டிருக்கும். மணிகள் கடந்தபடி இருக்கும் - நீங்கள் எதுவும் செய்யாமல் கைகளைப் பற்றிக் கொண்டு, நிலவைப் பார்த்தபடி அமர்ந்திருக்கக்கூடும். மணிகள் கடந்து செல்லும், இருந்தாலும் நிமிடங்கள் சென்ற மாதிரி இருக்கும். நீங்கள் மகிழ்ச்சியாயிருக்கும் போது நேரம் ரொம்பவும் வேகமாய் செல்லும். உங்களுக்குப் பிரியமான ஒருவர் இறந்து, நீங்கள் கவலையாய் இருக்கும்போது அந்நிலையில் நேரம் மெள்ளவே ஊர்ந்து செல்கிறார்போல் இருக்கும்.

ஒரு நாளிரவு மீரா வந்தாள். அவளுடைய கணவன் சில மாதங்களுக்கு முன்புதான் இறந்துவிட்டிருந்தான். அவனுடைய மரணத்துக்குப் பிறகு அவள் என்னைப் பார்க்க வந்தாள். கவலைப்பட வேண்டாம், மனக்காயம் ஆறிவிடும் என்று நான் அவளிடம் சொன்னேன். ஏறக்குறைய ஒரு மூன்று மாத கால அவகாசமேனும் அதற்குத் தேவைப்படும். ஆனால் மூன்று மாதங்கள் என்றது ஒரு சராசரிதான், காரணம் அது நபரைப் பொறுத்தது. தற்போது அவள் நேற்றிரவு மறுபடியும வந்தாள், 'இப்போ ஐந்து மாதங்களான பின்பும் வலி இன்னமும்தான் இருக்கிறது. உண்மையில் ஓரளவு குறைந்திருக்கலாம், ஆனாலும் இருக்கவே செய்கிறது, அதுபோய் விடவில்லை, நீங்கள் சொன்னீர்கள் மூன்று மாதங்களில் போய்விடும் என்றீர்களே' எனக் கேட்டாள். நான் சொன்னேன், 'எனக்குத் தெரியும். சில நேரங்களில் அதற்கு ஓராண்டு ஆகலாம், சிலநேரம் ஆறுமாதம் பிடிக்கும். சிலநேரம் மூன்றுமாதம்கூட ஆகாது, மூன்று நாட்களே போதுமானதாயிருக்கும். அது காலவரிசைப்படியானதல்ல, அது உளவியல் சார்ந்ததாயிருக்கிறது' என்று. 'அது உன்னைப் பொறுத்தது, உறவைப் பொறுத்தது. உனக்கும், உன் கணவனுக்கும் இடையே இருந்த உறவு எப்படிப்பட்டது என்பதைப் பொறுத்தது' என்றேன்.

அந்த உறவு அத்தனை விரும்பத்தக்கதாயில்லை என்பது எனக்குத் தெரியும். அதனால்தான் அவளுடைய காயம் ஆற கூடுதல்

அவகாசம் தேவைப்பட்டிருக்கிறது. இது குழப்பமூட்டுவதாய் தெரியலாம். ஆனால் இப்படித்தான் அது இருக்கிறது. நீங்கள் ஒருவரை நேசிக்கிறீர்கள், அவர் இறந்து போய்விடுகிறார், நீங்கள் துயரத்துக்குள்ளாகிறீர்கள். ஆனால் சீக்கிரமே அதில் இருந்து மீண்டு விடுகிறீர்கள். அங்கே மனக்காயம் ஆறிவிட்டிருக்கும். அந்த மனிதரை நீங்கள் நேசித்தீர்கள், எதுவும் அரைகுறையாய் இருந்ததில்லை.

ஆனால், மீராவுக்கும் அவளுடைய கணவனுக்கும் இடையே யான உறவு அத்தனை சரியாயில்லை. அவர்கள் ஆண்டுக்கணக்கில் விலகியிருந்தவர்கள். அவள் நேசமாயிருக்க விரும்பினாள், ஆனால் நேசிக்க முடியவில்லை. அவனுடன் இருப்பதற்கு அவள் விரும்பினாள், ஆனால் முடியவில்லை. தற்போது அவளுடைய கணவன் போய்விட்டான், அவனுடன் இருக்க வேண்டும் என்கிற அவளது நம்பிக்கையும் அவனோடு போயிற்று. அவள் பெரிதும் விரும்பினாள், ஆசைப்பட்டாள், அது நடக்கவில்லை. தற்போது அவன் போய்விட்டான், இனி எந்தச் சாத்தியமும் இல்லை. தற்போது அவளுடைய தனிமை முத்திரைக் குத்தப்பட்டு விட்டது; இனி, அந்த மனிதனை நேசிப்பதற்கு வழியேதும் இல்லை. அவன் உயிரோடு இருந்தபோது அவளால் நேசிக்கமுடியவில்லை, அவர்களுக்கிடையே பிரச்சினைகள் இருந்தன, தற்போது அவன் போயாயிற்று எனவே எந்தச் சாத்தியமும் இல்லை. தற்போதைய காயம் ஆறுவதற்கு காலங்கள் ஆகும், மெதுவாகத்தான் ஆறும். அப்படியே குணம் பெற்றாலும், ஒரு துயரம் தங்கியிருக்கும் எப்போதைக்குமாய்.

அரைகுறையான எதையுமே விடுவதற்குச் சிரமமாகத்தான் இருக்கும். முழுமையானவை பழுத்து, தங்களுடைய இசைவின் பேரிலேயே விழும். பழுத்த பழம் விழுகிறது. உண்மையில் ஏதோ ஒன்றை இழந்துவிட்ட உணர்வு கொஞ்ச நேரம் மரத்துக்கு இருக்கும், பிறகு அது மறைந்துவிடும். தீர்ந்தது. பழுத்த பழம் விழ வேண்டியதுதான். எல்லாரும் சாக வேண்டியவர்கள்தாம். அவன் உயிரோடு இருந்தபோது நீ நேசித்தாய் - பெரிய அளவில் முழுமையாக நேசித்தாய். நீ ஏறக்குறைய நிறைவுற்றாய். இன்னும் அதிகமாய் வேண்டுமென்று நீ கேட்க முடியாது. முன்பே அது மிகுதியாகத்தான் இருந்திருக்கிறது. அந்த அளவு அவகாசம் கொடுத்ததற்கு, நீ கடவுளிடம் நன்றியுணர்வோடு இருக்கவேண்டும். அவர் அந்த மனிதனை இன்னும் முன்பாகவே எடுத்துச்

சென்றிருக்கக்கூடும். ஆனால் அவர் போதிய அவகாசத்தை உனக்குக் கொடுத்தார். நீ தீவிரமாகவே நேசித்தாய். காதலில் ஒவ்வொரு கணமும் சாசுவதமானது. ஒரு சிறிய வாழ்க்கை முடிவற்றதாகிவிடுகிறது. ஆனால் அது நடக்கவில்லையே. மீராவின் துன்பத்தை என்னல் புரிந்து கொள்ள முடிகிறது.

ஆனால், அவள் அதனை எதிர்கொள்ளவேண்டும், புரிந்து கொள்ள வேண்டும். அது கணவனின் மரணம் பற்றிய பிரச்சினை மட்டுமல்ல. அது ஒன்றும் அந்த அளவு பெரிய பிரச்சினையாகாது. கணவர்கள் இறக்கிறார்கள், மனைவிகள் இறக்கிறார்கள், அது இயல்பானதே. அது ஒன்றும் பெரிய பிரச்சினை அல்ல. நேசம் நிகழ முடியாமல் போவதுதன் பிரச்சினை. அது ஒரு கனவாய், ஆசையாய் இருந்தது. தற்போது அது நிறைவேறாமலே நின்றுவிட்டது. அந்த மனிதனை நீ மீண்டும் கண்டடைய முடியாது. ஆக அந்த அத்தியாயம் நிறைவு காணமுடிவதில்லை. இந்த நிறைவுறாமை (incompletion) ஒரு காயமாகவே இருக்கும். அதனால்தான் அது ஆறுவதற்கு நீண்ட காலமாகிறது. அது இன்னும் கொஞ்சம் அவகாசம் எடுத்துக் கொள்ளக்கூடும்.

மனநிலை சார்ந்த நேரம் உங்களுடைய உள்ளார்ந்த நேரம் ஆகும். அத்துடன் காலவரிசைப்படுத்தப்பட்ட நேரத்துடனும் சேர்ந்து நாம் வாழ்கிறோம். 'கிரீன் விச்' நேரம் தனிப்பட்டதாகாது. மனநிலை சார்ந்த நேரம் தனிப்பட்ட ஒருவருக்கான (personal) ஒவ்வொருவரும் தமக்குரியதைக் கொண்டிருக்கிறார் நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தால் உங்கள் நேரஉணர்வு நிதானமாயிருக்கிறது. நீங்கள் மகிழ்ச்சி யற்றிருந்தால் நேரம் நீள்கிறது. நீங்கள் ஆழ்ந்த தியானத்தில் இருந்தால் நேரம் நின்றுவிடுகிறது. உண்மையில் கிழக்கிந்தியர்களாகிய நாம் மனநிலைகளை நேரத்தைக் கொண்டு அளவிடுகிறோம். நேரம் முற்றாக நின்று விடுவது பேரின்பநிலை. நேரம் துயரநிலையில் ரொம்பவே நிதானப்பட்டுவிடும்.

நரகம் நிலைபேறுடையது (eternal) என்கிறது கிறிஸ்துவம். 'நான் ஏன் கிறிஸ்தவனல்லன்' என்கிற தலைப்பில் ஒரு நூலை எழுதினார் பெர்ட்ராண்ட் ரஸ்ஸல். அந்த நூலில், தாம் ஏன் கிறிஸ்தவனாக இல்லையென்பதற்கு பல வாதங்களை அவர் முன்வைத்திருக்கிறார். அந்த வாதங்களுள் ஒன்று. 'நரகம் நிலைபேறுடையது என்று என்னால் நம்ப முடியாது. காரணம் பாவங்கள் எதுவாயினும் ஒரு

எல்லைக்குட்பட்டவையே' என்பதுதான். அவர் மேலும் சொல்கிறார், 'எல்லையற்ற பாவத்தை உங்களால் செய்ய முடியாது. அக் எல்லைக்குட்பட்ட பாவங்களுக்கு எல்லையற்ற தண்டனை என்பது அநியாயம்' என்று. அந்த வாதம் ரொம்ப எளிமையானது. பெர்ட்ராண்ட் ரஸ்ஸலுக்கு எதிராக யாரும் வாதிட முடியாது. ஓர் எளிய உண்மையையே அவர் கூறுகிறார். அவர் சொல்கிறார், 'என்னுடைய வாழ்க்கை முழுவதிலுமாய் நான் செய்த பாவங்களுக்கு என்னைத் தண்டிப்பதாயிருந்தால் நான்காண்டு சிறைவாசத்துக்குமேல் போகாது. என்னுடைய பாவச் செயல்களோடு பாவ எண்ணங்களுக்கும் சேர்த்து தண்டனை கொடுத்தாலும் எட்டு ஆண்டுகளைத் தாண்டாது அல்லது எல்லைக் கோட்டை கொஞ்சம் அதிகரித்தாலும் பத்து ஆண்டுகள்தாம். ஆனால் நரகமோ எல்லையற்றது, நிலைபேறுடையது இல்லையா? அப்போது, கடவுள் சிறந்தவராய் தெரியமாட்டார், பழிவாங்குகிற வராகவே தெரிவார். அவர் கடவுட்தன்மையுடன் காட்சியளிக்க மாட்டார், கோரமான பேய்த்தன்மையுடவராகத்தான் காட்சியளிப்பார்.'

காரணம், நீங்கள் ஒரு பெண்ணை, உங்கள் மனைவியல்லாத ஒருத்தியை விரும்பினீர்கள், தற்போது அதனால் துன்புறுகிறீர்கள். எப்போதைக்குமாய். இது ரொம்ப அதிகம் இல்லையா? அப்படி யொன்றும் ஒரு பெரிய பாவத்தை நீங்கள் செய்துவிடவில்லை. காதலில் விழுவது மனிதனுக்குரியதுதான். காதலில் விழுகிறவன் இவள் மாற்றான் மனைவியா இல்லையா என்று பார்த்துக் காதலிக்க முடிவு செய்வது கடினம். ம்ம்ம்.. காதல் ஏறக்குறைய குருடுதான். அது உங்களைத் தனது ஆளுகைக்குட்படுத்திக்கொண்டு விடுகிறது.

ஆம், பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் நியாயமானவராகத்தான் தெரிகிறார். அவருடைய வாதமும் தகுதியாகவே தெரிகிறது. ஆனால் நான் சொல்கிறேன் அவரதுவாதம் சரியல்லவென்று. அவர் ஒட்டுமொத்த கருத்தையும் தவறவிட்டார். மேலும், எந்தவொரு கிறிஸ்தவ இறைமையாளரும் (theoogian) அதுபற்றி அவருக்கு இன்னமும் பதிலளிக்கவில்லை. அவர்களால் பதில்ளிக்க முடியாது. அவர்கள் மறந்தும் போவார்கள். ஆனால் மெய்ம்மைகளை மறந்து விட்டார்கள். இயேசுவானவர் நரகத்தை நிலைபேறுடையது என்று சொல்கிறபோது மனநிலை சார்ந்த நேரத்தைக் கருத்தில் கொண்டாரேயன்றி கால வரிசைப்படுத்தப்பட்ட நேரத்தை அல்ல, ஆம், அவர் காலவரிசைப் படுத்தப்பட்ட நேரத்தைக் கருத்தில் கொண்டிருந்தாரெனில் அது

முற்றிலும் அறிவுக்கு ஏற்புடையதாயிருக்காது. ஒரு மனிதனை எப்போதைக்குமாய் நரகத்தில் தள்ளுவது எப்படி அறிவுக்கு ஏற்புடைமையாகும்? அவர் மனநிலை சார்ந்த நேரத்தையே குறித்திருக்கிறார். ஒரு கணமே என்றாலும் அது நரகத்தில் முடிவற்றது என்றே அவர் கருதியிருக்க வேண்டும். உங்கள் வேதனையில் அது மெள்ளச் செல்வதாகி, ஒற்றைக் கணமும் முடிவற்றதாய் தோன்றியிருக்கும். ஒருபோதும் அது முடியப் போவதில்லை என்றே நீங்கள் எண்ணுவீர்கள். அது தொடர்கிறது, தொடர்கிறது தொடர்கிறது என்றே நீங்கள் எண்ணிக் கொள்வீர்கள்.

அது காலத்தைப் பற்றி எதுவும் கூறவில்லை, நீங்கள் கடுமையான வலியில், வேதனையில் இருக்கும்பொழுது எப்படி உணர்கிறீர்கள் என்பதைப் பற்றியே அது கூறுகிறது. நரகம் வேதனையின் முடிவாக இருக்கும் என்பதே உண்மை. இயேசு முற்றிலும் சரியாக இருக்கிறார், பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் தவறாகி விட்டிருக்கிறார். ரஸ்ஸல் அதைத் தவறாகப் புரிந்து கொண்டதற்குக் காரணம் இயேசு, 'மனநிலை சார்ந்து நேரம்' என்று கணக்காகச் சொல்லவில்லை.

'மனநிலை சார்ந்த நேரம்' என்பது தனிநபருக்கானது, உங்களுடையதை நீங்கள் பெற்றிருக்கிறது, உங்கள் மனைவி தமக்கென்று உரியதைப் பெற்றிருக்கிறார். எல்லாமே வேறுபடுகின்றன. உலகின் முரண்பாடுகளுக்கான காரணங்களில் அதுவும் ஒன்று. நீங்கள் காட்டுவாத்துபோல கூச்சலிட்டுக் கொண்டிருக்கிறீர்கள், உங்கள் மனைவி சன்னல் வழியே 'இதோ வந்துவிட்டேன்' என்கிறாள். ஆனாலும், தொடர்ந்து நிலைக்கண்ணாடி முன்பாகவே நின்று கொண்டிருக்கிறாள். 'நேரமாச்சு, இரயிலைத் தவறவிட்டுவிடுவோம்' என்று நீங்கள் கூச்சலிடுகிறீர்கள். அவளுக்குக் கோபம் வருகிறது. நீங்களும் கோபப்படுகிறீர்கள். என்ன நடக்கிறது? தான் ஓட்டுநர் இருக்கையில் அமர்ந்து, ஒலிப்பானை அழுத்தி பேரொலி எழுப்பிக் கொண்டிருக்க மனைவியானவள் 'இதோ தயாராகிறேன்' என்றபடி நேரத்தைக் கடத்திக் கொண்டிருந்தால் எந்தக் கணவனுக்குத்தான் கோபம் வராது? அவள் இன்னமும் சேலையைத் தேர்வு செய்தபடி இருக்கிறாள். தற்போது நீங்கள் எந்த சேலை உடுத்தியிருக்கிறீர்கள் என்பதுபற்றி இரயில்கள் கவலைப்படுவதில்லை. அவை நேரத்தில் புறப்பட்டு விடுகின்றன. 'அட, என்னதான் நடக்கிறது,' கணவன் குழம்பிப் போகிறான். இரண்டு 'மனநிலை சார்ந்த நேரங்கள்' ஒன்றோடொன்று மோதிக் கொள்கின்றன.

ஆண் காலவரிசைப்படுத்தப்பட் நேரத்தில் இயங்குகிறான், பெண்ணோ இன்னமும் மனநிலைகள் சார்ந்த நேரத்திலேயே வாழ்ந்தபடியே இருக்கிறாள். நான் அறிந்தவரைக்கும் பெண்கள் கைக்கடிகாரம் கட்டியிருந்தாலும், அது அழகுக்காகத்தான் இருக்கும். அவர்கள் அதை உண்மையிலேயே பயன்படுத்துவதாய் எனக்குத் தெரியவில்லை, குறிப்பாக இந்தியாவில். மணி சொல்லத் தெரியாத எத்தனையோ பெண்களை நான் எதிர் கொண்டிருக்கிறேன். அவர்கள் மிகவும் நேர்த்தியான தங்கக்கைக் கடிகாரங்களை அணிந்திருக் கிறார்கள், அவர்களிடம் அதற்கான பணம் இருக்கிறது.

குழந்தை முற்றிலும் வேறானதோர் உலகில் வாழ்கிறது. குழந்தை தனக்கென்று மனநிலைகள் சார்ந்த நேரத்தை ([sychological time) க் கொண்டிருக்கிறது. முற்றிலும் விரைவு கொள்ளாததாய், ஏறக்குறைய ஒரு கனவில் அது இருந்து கொண்டிருக்கும். அவனால் உங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை, உங்களால் அவனைப் புரிந்து கொள்ள முடி.யவில்லை. நீங்கள் தொலைவில் தனித்தனியாக இருக்கிறீர்கள். பாலமிடுவதற்கு வழி இல்லை. வயசான ஒருத்தர் குழந்தையிடம் பேசுகிறபொழுது, அவர் வேற்றுகிரகத்தில் இருந்து பேசிக் கொண்டிருக்கிறார், அது குழந்தையைச் சென்றடைகிறதில்லை. ஏன் இத்தனை வேகம், எதற்காக என்று குழந்தையால் புரிந்து கொள்ள முடிவதில்லை.

மனநிலைகள் சார்ந்த நேரம் முற்றிலும் தனிப்பட்ட முறையி லானது. அதனால்தான் காலவரிசையிலான நேரம் (chronological time) முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. இல்லையெனில் எங்கே சந்திப்பது, எப்படிச் செயல்படுவது, எப்படித் திறமையாயிருப்பது? ஒவ்வொரு வரும் தம்முடைய சொந்த உணர்வுடன் அலுவலகம் வந்தால் அந்நிலையில் அலுவலகத்தை நடத்துவது நடவாத காரியமாகிவிடும். அவரவரும் தமக்கு வசதிப்பட்ட நேரத்தில் இரயில் நிலையத்துக்கு வருவார்களாயின், இரயில்கள் ஒருபோதும் புறப்படுவதற்கில்லை. கட்டுப்பாடற்ற ஒன்று நிலைப்படுத்தப்பட வேண்டும்.

காலவரிசைப்படுத்தப்பட்ட நேரம் வரலாறாகவும், மனநிலைகள் சார்ந்த நேரம் கட்டுக்கதைகளாகவும் இருக்கிறது. அதுதான் வரலாற்றுக்கும், புராணக் கதைகளுக்கும் உள்ள வேறுபாடு. மேற்கில் வரலாறு எழுதப்பட்டிருக்கிறது, கிழக்கில் புராணக்கதை. கிருஷ்ண பகவான் எப்போது பிறந்தார், சரியான தேதியுடன் சொல்லுங்கள் என்று

நீங்கள் கேட்டால் எங்கிருந்தும் எந்தவொரு பதிலும் வராது. நீங்கள் காலவரிசைப்படுத்தப்பட்ட நேரத்தின்படி கிருஷ்ணா எங்கே, எந்த நாளில், எந்த நேரத்தில் பிறந்தார் என்று தெளிவுபடுத்தவில்லை என்றால் கிருஷ்ணர் பிறந்தாரா இல்லையா என்பதை சந்தேகமாயிருக் கிறது என்று வரலாற்று வல்லுனர்கள் அடித்துச் சொல்லிவிடுவார்கள்.

கிழக்கு ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. அது அறிவின்பால் ஒத்திராமையைக் கண்டு சிரிப்பதோடு சரி. கிருஷ்ணருடைய பிறப்பில் காலவரிசைப்படுத்தப்பட்ட நேரத்தைத் தொடர்புப்படுத்தி என்ன ஆகப்போகிறது. நம்மிடம் எந்தப் பதிவேடுகளும் இல்லை. அல்லது பதிவேடுகளை வைத்திருப்போம். அவை ஒன்றுக்கொன்று முரண்பட்டதாய் இருக்கும்.

ஆனால் பாருங்கள், நான் டிசம்பர் பதினொன்றில் பிறந்தேன். நான் டிசம்பர் பதினொன்றில் பிறக்கவில்லையென்று நிரூபிக்கப்பட்டால், நான் பிறக்கவேயில்லை என்று நிரூபிக்க அது போதிய சான்றாகி விடுமா?

கிழக்கில் எவரும் தம்முடைய பிறந்தநாளை நினைவில் வைத்திருப்பதில்லை. அன்றொரு நாள் விவேகா அவளுடைய தந்தையின் பிறந்தநாள் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். எங்கே தான் எழுதிக் கேட்டால் அவர்களுடைய உள்ளத்தைப் புண்படுத்தியதாகிவிடுமோ என்று அவள் கவலைப்பட்டாள். என்னுடைய தாயின் பிறந்த நாள் தந்தையின் பிறந்த நாள் எனக்குத் தெரியாதென்று நான் அவளிடம் சொன்னேன். அவர்களுக்கே அது தெரியுமா இல்லையா என்பதும் எனக்குத் தெரியாது என்றேன். ஆனால் அதற்காக அவர்கள் இருந்திருக்கவில்லை என்று அது நிரூபித்துவிட முடியாது.

கிழக்கத்திய நாடுகளில் புராணமே எழுதப்பட்டிருக்கிறது.. புராணம் முற்றிலும் வேறானது. அது மனநிலைகள் சார்ந்த நேரத்துடன் கூடியது.

காலவரிசைப் படுத்தப்பட்ட நேரம் நீண்ட கோட்டுவரிசையில் இருப்பது. அதனால்தான் சூரியனுக்குக் கீழே எதுவும் இல்லை என்று மேற்கு சொல்கிறது. ஆனால் வரலாறு எதையும் திரும்பச் சொல்வதில்லை. காலம் ஒரு கோட்டில் செல்கிறது. அவ்வாறெனில் வரலாறு எப்படித் திரும்பிச் செல்ல முடியும்? ஒவ்வொரு நிகழ்வும்

ஒப்பற்றதாயிருக்கிறது. கிழக்கேயுள்ள நாம் சொல்கிறோம் காலம் ஒரு சக்கரம் என்று. அது நேர்கோட்டில் செல்லவில்லை. அதன் இயக்கம் வட்டவடிவில் அமைந்தது என்று. கிழக்கிந்தியர்களாகிய நாம் வரலாறு சொன்னதையே மீண்டும் சொல்லும். செய்ததையே மீண்டும் செய்யும். சூரியனுக்குக் கீழே புதிதாய் எதுவும் இல்லை என்று சொல்கிறோம். அது எல்லாமே கூறியது கூறலாய் இருக்கும்போது கிருஷ்ணர் எப்போது பிறந்திருப்பார் என்று எதற்காகக் கவலைப்படுவது?

பகவான் கிருஷ்ணர் ஒவ்வொரு யுகத்திலும் மீண்டும் மீண்டும் அவதரிக்கிறார் என்று கிழக்கில் உள்ள நாம் சொல்கிறோம். அது ஒரு சக்கரம். சிருஷ்டிக்கும் பிரளயத்துக்கும் இடையே ஒவ்வொரு காலகட்டமும் கிருஷ்ணர் திரும்பத் திரும்ப அவதரிக்கிறார். அவருடைய உருவம் மாறலாம், பெயர் மாறலாம் ஆனால் அவர் மறுபடியும் மறுபடியும் அவதாரம் பண்ணுகிறார். அதற்காக ஏன் கவலைப்பட வேண்டும்? அவர் யார் என்று விவரித்தால் போதும். தேவையில்லாத விவரங்களைப் பற்றியெல்லாம் எதற்காக மண்டையைப் பிய்த்துக் கொள்வது? கிருஷ்ணரின் வடிவம் குறிப்பாக எந்தக் கிருஷ்ணருக்கும் உரியதாய் இருக்காதுதான். அது எல்லா கிருஷ்ணருடைய கூட்டிணைவாக இருக்கும். அப்படித்தான் அது இருக்கிறது.

'புத்தருடைய சிலை அவருடைய உண்மையான உருவத்தை ஒத்திருக்குமா?' என்று நீங்கள் கேட்டால் - அது இருக்காது. ஆயினும் அது உண்மை காரணம் புத்தர் அந்தச் சிலையைப் போல் இருந்திருக்கக்கூடும். கபிலவஸ்துவில் சுத்தோதனுக்கு, குறிப்பிட்ட தேதியில் மகனாய் பிறந்த கவுதம சித்தார்த்தர் என்கிற புத்தர் அந்தச் சிலையைப்போல் இருப்பாரா என்பதல்ல கேள்வி. இல்லை, அதுவல்ல முக்கியக்கருத்து. ஆனால் புத்தர்கள் எல்லாருடைய கூட்டிணைவிலும் இந்தச் சிலை அமைந்திருக்கிறது என்பதுதான். இது புத்தத்தன்மை கொண்டது. குறிப்பாக எந்த புத்தரையும் உருப்படுத்துவதல்ல. எல்லா புத்தர்களையும் இது உள்ளடக்கியிருக்கிறது.

தற்போது இதுதான் இடர்ப்பாடு மேற்கத்தியர்களுக்கு. புத்தருக்கும் மகாவீரருக்கும் இடையில் அவர்களுடைய பாதங்களின் அருகே உள்ள ஒரு சிறிய குறியீடு (symbol) தவிர்த்து வேறு எந்த வேறுபாட்டையும் நீங்கள் காட்ட முடியாது. அவர்களிடையே பெரிதாக எந்த வேறுபாட்டையும் நீங்கள் உண்டுபண்ணுவதற்கில்லை. ஒரு

ஜைன கோயிலுக்குச் சென்று, கவனித்துப் பாருங்கள். எல்லா சிலைகளும் ஒரே மாதிரிதான் இருக்கும். இருபத்து நான்கு பேர்களும் ஒரேமாதிரியிருக்க சாத்தியமில்லை, அது நடவாத காரியம் இரண்டுபேர் ஒன்றுபோல் இருப்பதில்லை. ஆனால் அந்தச் சிலைகள் புறத்தோற்றத்தை உருப்படுத்தவில்லை. அவை உள்ளார்ந்த அனுபவங்களையே உருப்படுத்துகின்றன. ஆம். இரண்டு நபர்கள் ஒரே மாதிரி இருக்கமுடியாது, ஆனால், இரண்டு அனுபவங்கள் ஒன்றுபோல் இருக்கமுடியும். நீங்கள் காதல் வயப்படுகிறபொழுது, வேறொருவரும் காதல் வயப்படுகிறார். அந்தக் காதல் ஒன்றுபோல் இருக்கும். நீங்கள் தியானம் செய்கிறபொழுது மற்றொருவரும் தியானம் செய்கிறார். தியானம் ஒரேமாதிரிதான். நீங்கள் ஞானம்பெறுகிறபொழுது, வேறு யாரோ ஒருவரும் ஞானம் பெறுகிறார். ஞானம் ஒத்ததாகவே இருக்கும். ஜைன குருமார்க?ளுடைய இருபத்து நான்கு சிலைகளும் இருபத்து நான்கு நபர்களுடையவை அல்ல, ஆனால் ஒரே நிலை இருபத்து நான்கு தோற்றங்களில் பிரதிபலிக்கப்பட்டிருக்கிறது. அவையனைத்தும் பிரதிநிதி ஆகும்.

ஜைன தீர்த்தங்கரர்களை நீங்கள் காண்கிறபொழுது அவர் களுடைய தோள்வரை தொடுகிற நீண்ட காதுகளைக் காண்பீர்கள். தற்போது ஜைனர்கள் தெரிவிக்கிறார்கள் அத்தனை தீர்த்தங்கரர்களும் நீண்ட காதுகளை உடையவர்கள் என்று. உண்மையிலேயே மகாவீரருக்கு அத்தகைய நீண்ட காதுகள் இருந்திருக்கும் என்று முட்டாள்தனமானவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள்.

ஆச்சார்யதுளசி என்கிற ஜைனர் ஒருத்தர் தம்முடைய மாநாடு ஒன்றிற்கு என்னை அழைத்திருந்தார். அவருடைய காதுகள் நீளமானவை. அவரது சீடர்களில் ஒருவர் என்னிடம் வந்து, 'பாருங்கள், ஆச்சார்ய துளசி மகராஜின் காதுகள் எத்தனை நீளமாக இருக்கிறது. ஒரு சிறந்த குருவிற்கான குறியீடு அது. சீக்கிரமே அவருடைய பிறவிகளுள் ஒன்றில் அவர் தீர்த்தங்கரராகிவிடுவார்' என்றார். அப்போது ஒத்த நிகழ்வாகவோ என்னவோ ஒரு கழுதை அந்தப் பக்கமாய் சென்றது. நான் சீடரிடம் சொன்னேன், 'இதோ போகிறாரே டாங்கி மகராஜ் இவர் முன்பே தீர்த்தங்கரராகிவிட்டார்' என்று. அந்தச் சீடர் கோபமுற்றிருப்பார், அதில் இருந்து என்னிடம் அவர் வரவேயில்லை.

இவர்கள் கேட்கும் திறனுடையவர் என்பதற்கு வேண்டுமானால் நீண்ட காதுகள் குறியீடாக இருக்கலாம். அவை ஒசையை, ஓசையற்ற ஓசையை, ஒருகை ஓசையைக் கேட்கும் வல்லமை பெற்றிருந்தன. அவை உண்மையைக் கேட்கும் திறமை பெற்றிருக்கும். இந்தச் சிலைகள் வெறும் குறியீட்டுத் தன்மை கொண்டவைதாம். நிஜத்தில் ஒருவரை அப்படியே உருப்படுத்துவதாகாது. தவறான விளக்கம் கொடுப்பது முட்டாள்தனம். ஆனால், அப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. புராணங்கள் குறியீட்டுத் தன்மை கொண்டவை. இராமன் அயோத்தியில் பிறந்ததாய் சொல்லப்படுகிறது. தற்போது அயோத்தி உள்ளார்ந்த அமைதியுடன் காணப்படுகிறது. அயோத்தியின் உள்ளார்ந்த நிலையை உருப்படுத்தவே அந்த நகரம் பெயரிடப்படுகிறது. அமைதி நிறைந்த, பேரின்பநிலை உண்மையில் இராமன் அதில் இருந்தே பிறந்திருப்பான்.

அதுதான் இயேசுவின் பிறப்பிற்கான பொருளும் - கன்னி யிடத்துப் பிறந்தவர். அவர் உண்மையிலேயே கன்னி மரியாளுக்குப் பிறந்தவர் என்றாகாது. கன்னித்தன்மையில் இருந்து, தூய்மையில் இருந்து, களங்கமற்றத் தன்மையில் இருந்து, ஒழுக்கம் கெடாத புனிதத்தில் இருந்து அவர் பிறந்தார் என்பதாகும். அதுதான் அவருடைய உண்மையான கருவறை.

இவையெல்லாம் குறியீடுகள். அவை காலவரிசைப்படுத்தப் பட்டவை அல்ல.

வரலாற்று ஆசிரியர்கள் குப்பைகளை, தேவையில்லாத தகவல்களைத் திரட்டிக் கொண்டிருப்பவர்கள், நீங்கள் எந்தவொரு வரலாற்று நூலை வேண்டுமானாலும் ஆய்ந்து பாருங்கள். அப்படியே அதிர்ச்சிக்குள்ளாகி விடுவீர்கள். ஏன் இத்தனை பேர் இத்தகைய முட்டாள்தனமான செயல்களில் ஈடுபட்டார்கள்? தேதிகள், தேதிகள், பெயர்கள், பெயர்கள் தொடர்ந்து தேதிகளும் பெயர்களும்தாம். ஆயிரக்கணக்கானவர்கள் ஆராய்ச்சி என்ற பெயரில் தங்கள் வாழ்க் கையையே வீணடித்திருப்பது தெரிகிறது. அடுத்து பத்திரிகையாளர் கள், ஆசிரியர்கள், செய்தித்தாள் அலுவலர்கள் அவர்கள் காலவரிசை சார்ந்தவர்கள். அவர்கள் செய்திக்காக, உலகெங்கும் தேவையற்ற தகவல்களைத் தேடியலைந்து கொண்டிருக்கிறார்கள்.

உண்மை என்பது ஒருபோதும் செய்தியல்ல காரணம் அது (உண்மை) எப்போதுமே இருந்து கொண்டிருப்பது. அது

நிகழ்வதில்லை, முன்பே நிகழ்ந்துவிட்ட ஒன்று, எது பொய்யோ, அதுதான் செய்தியாயிற்று.

ஜார்ஜ் பெர்னார்ட்ஷாவிடம் யாரோ கேட்டார்கள், 'செய்தி என்றால் என்ன?' என்று. அவர் சொன்னார், 'ஒரு மனிதனை நாய் கடித்துவிட்டால் அது செய்தி ஆகாது. ஒரு மனிதன் நாயைக் கடித்தால் அது செய்தி ஆகிவிடும்' என்று. காரணம், செய்தி என்பது புதுமையான ஏதோ ஒன்றைக் கொண்டிருக்கவேண்டும். ஒருநாய் மனிதனைக் கடிப்பது செய்தியல்ல, காரணம் அதில் புதுமையாய் எதுவும் இல்லை. அது எப்போதும் நடக்கிறதுதான். ஆனால், ஒரு மனிதன் நாயைக் கடிக்கிற பொழுது கண்டிப்பாய் அது செய்தியாகி விடுகிறது.

பத்திரிகையாளர்களைவிட மேம்போக்கானவர்களை, முக்கியத்துவமற்றவர்களை நீங்கள் கண்டிருக்கமாட்டீர்கள். அவர்கள் பயனற்ற விஷயங்களை சாமர்த்தியமாய் கண்டு பிடிக்கிறார்கள். பத்திரிகையாளர்களை போதுமான விளைவை உண்டுபண்ணாத அரசியல் வாதிகள் எனலாம். அரசியல்வாதிகள் செய்திகளை உருவாக்குகிறார்கள். பத்திரிகையாளர்கள் செய்திகளைத் திரட்டுகிறார்கள். அவர்கள் அரசியல்வாதிகளின் நிழல்களைப் போன்றவர்கள். அதனால்தான் செய்தித்தாள்கள் இந்தக் கோடியில் இருநது, அந்தக் கோடிவரை, முதல் பக்கத்தில் இருந்து கடைசிப் பக்கம்வரை அரசியல்வாதிகளைப் பற்றியதாகவும், அரசியல் பற்றியதாகவுமே இருக்கிறது. முழுக்க முழுக்க அரசியுல்தான். பத்திரிகையாளர் என்பவர் செய்திகளை உருவாக்குவதில் தோற்றவர், தற்போது அதைத் திரட்டிக் கொண்டிருக்கிறார். அரசியல்வாதியுடன் அவருக்குள்ள தொடர்பு, ஒரு கவிஞனுக்கும் விமர்சகனுக்கும் இடையே உள்ள தொடர்பு போன்றதாகும். கவிஞனாகத் தவறியவன் விமர்சகனாகி விடுகிறான்.

பிரபலமான நடிகர் ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டது. ஒரு படத்தில் குதிரை தேவைப்பட்டது. குதிரைக்குச் சொந்தக்காரர் தம்முடைய குதிரையைக் கொண்டு வந்திருந்தார். அது ஒரு சாதாரண குதிரை. ஆனால் அதன் சொந்தக்காரர் அதை வெகுவாய் புகழ்ந்து தள்ளிவிட்டார். 'இது ஒன்றும் சாதாரண குதிரையல்ல. உருவத்தை வைத்து எடைபோட்டு விடாதீர்கள். அதன் ஆர்வத்தைக் கவனியுங்கள். இது மிகச் சிறந்த குதிரை, பல படங்களில்

வந்திருக்கிறது. கிட்டத்தட்ட ஒரு நடிகர் என்றே அதை நீங்கள் சொல்லலாம்' என்றார் அவர்.

மிகச் சரியாக அந்த நிமிடத்தில், குதிரை கனைத்தபடி காற்றைச் சாடியது.

நடிகர் சொன்னார், 'எனக்குப் புரிஞ்சுட்டுது. இந்தக் குதிரை நடிகன் மட்டுமல்ல, விமர்சகனும்கூட' என்று.

பத்திரிகையாளர்கள், விமர்சகர்கள், வரலாற்று ஆசிரியர்கள், அரசியல்வாதிகள் - இவர்கள் எல்லாமே கால வரிசைப்படியான நேரத்தைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பவர்கள். வாழ்வின் புறவெல்லையைச் சார்ந்திருப்பவர்கள் இவர்கள். ஒன்றுக்கும் உதவாத பயனற்ற முயற்சிகள் தாம் உலகில் அதிமுக்கியத்துவம் பெற்றவையாகி விடுகின்றன. கடிகாரம் வாழ்க்கையாகிவிடாது என்பதை மறந்து விட்ட காரணத்தால் நாம் அவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறோம்.

மனநிலைகள் சார்ந்த நேரத்தை 'கனவு நேரம்' எனலாம். புராணம், கவிதை, காதல், கலை, ஓவியம், நடனம், உள்ளுணர்வு இவை எல்லாமே மனநிலை சார்ந்த நேரத்துக்குரியவை. நீங்கள் மனநிலை சார்ந்த நேரத்தை நோக்கி நகரவேண்டியிருக்கும். காலவரிசைப் படுத்தப்பட்ட நேரம் (chrological time) புறப்பொருள்களில் அக்கறை மிக்கவர்களுக்கானது. (இவர்கள் தமது உணர்ச்சிகளையும், எண்ணங் களையும் விட புறப்பொருள்களில் அக்கறை கொண்டவர்கள் - extrovert). மனநிலைகள் சார்ந்த நேரம் தன் உள்ளத்தைத் தன்பால் திருப்பி ஆய்வு செய்பவர்களுக்கானது (introvert).

மனநிலை சார்ந்த நேரத்திலும் (psychological time) ஆபத்து இல்லாமலில்லை. அதனால்தான் காலவரிசைப்படியான நேரத்தில் தீவிரம் காட்டுகிறவர்கள் மனநிலை சார்ந்ததற்கு மாறாக இருப்பது. ஆபத்துகள் இருக்கின்றன. நீங்கள் அதில் சிக்கிக் கொள்கிற ஆபத்தும் அவற்றுள் ஒன்று. அந்நிலையில் நீங்கள் கிட்டத்தட்ட பித்துநிலை கொண்டுவிடுவீர்கள், காரணம், நீங்கள் உலகத்திடம் இருந்தும், மக்களி டம் இருந்தும், சமூகத்திடம் இருந்தும் தொடர்பற்றவராகியிருப்பீர்கள்.

சின்னதாய் ஒரு சில கதைகளைச் சொல்கிறேன்:

மனதைப் புண்படுத்தத் தெரியாத ஒருவன், தன்னுடைய பழைய சிநேகிதனுடன் நேரம்போவதே தெரியாமல் பேசிக் கொண்டிருந்தான்.

திடீரென்று தன் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு. 'நண்பா, மணி மூன்று ஆகிறது. என்னுடைய மனநல மருத்துவரிடம் எனக்கு ஒரு சந்திப்புத் திட்டம் இருக்கிறது. மூன்று மணிக்கு அங்கிருக்க வேண்டும். ஆனால், அங்கு போய்ச் சேரவே, பதினைந்து நிமிடம் ஆகிவிடும் போலிருக்கிறது' என்றான்.

அவனுடைய நண்பன் சொன்னான், 'கவலைப்படாதே. சில நிமிடங்கள்தான் தாமதமாகும்' என்று.

'உனக்கு அவரைப் பற்றித் தெரியாது. நான் உரிய நேரத்தில் அங்கில்லாவிடில், நான் இல்லாமலேயே அவர் ஆரம்பித்து விடுவார்'

கனவை நிஜமாய்க் கருதிக் கொள்கிற ஆபத்தும் இருக்கிறது. உங்கள் கற்பனையை நீங்கள் அளவுக்கதிகமாய் நம்பிவிடுகிற அபாயமும் இருக்கிறது. உங்கள் உள்ளார்ந்த கற்பனையில், கனவுலகில் நீங்கள் ரொம்பவே கருத்தாவேசம் கொண்டு விடுகிறீர்கள். பனிமூட்டம் போன்ற ஒரு தெளிவற்ற நிலையில் உங்களால், வாழ முடிகிறது. அந்த ஆபத்துகளைப் புரிந்து கொண்டு, அதைக்கடந்து செல்வது முக்கியம். நீங்கள் கடப்பது ஒரு பாலம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் அதைக் கடந்ததும் உண்மையான நேரத்தை எதிர்பாராது சந்திப்பீர்கள்.

காலவரிசைப்படுத்தப்பட்ட நேரம் உடம்புடன் தொடர்புடையது. மனநிலைகள் சார்ந்த நேரம் மனதுடனும், உண்மையான நேரம் சீவனுடனும் (இருப்புணர்வு) தொடர்புடையதாயிருக்கிறது. கால வரிசைப்படுத்தப்பட்ட நேரம் பரந்தமனம் உடையவருக்கான (extroverted) மனநிலை சார்ந்த நேரம். தன்னைப்பற்றியே எண்ணுபவருடையது (introverted) உண்மையான நேரம் மனமற்றது.

ஆனால், ஒருவர் மனநிலை சார்ந்த நேரத்தைக் கடந்து செல்ல வேண்டியிருக்கும். அந்தப் பரப்பு முழு கவனத்துடன் கடக்கப்பட வேண்டியது. அங்கே உங்களுடைய இருப்பிடத்தை நீங்கள் உருவாக்கிக் கொள்ள முடியாது. அது கடக்கப்பட வேண்டிய ஒரு பாலம். உங்கள் வசிப்பிடத்தை அங்கே நீங்கள் ஒழுங்கு செய்து கொள்வதற்கில்லை. அங்கே வீடு கட்ட முயன்றால் நீங்கள் பைத்தியக்காரர்தான். பைத்தியக்கார விடுதியில் இருக்கும் பலருக்கும் அப்படித்தான் ஆயிற்று. அவர்கள் காலவரிசைப்படியான நேரத்தை மறந்துவிட்டவர்கள், அவர்கள் உண்மையான நேரத்தை

அடையவில்லை. அவர்கள் பாலத்தில் - மனநிலை சார்ந்த நேரத்தில் வசிக்கத் தொடங்கி விட்டனர். அதனால்தான் அவர்களுடைய நடப்பு தனிப்பட்டதாயிருக்கிறது. ஒரு பைத்தியக்காரன் தனக்கேயுரிய தனியுலகில் வாழ்கிறான், சித்தசுவாதீனம் உள்ளவர் (sane) என்று உங்களால் கருதப்படுகிறவரோ பொதுவுலகில் வாழ்கிறார். பொதுவுலகம் மக்களைக் கொண்டது. தனிப்பட்ட உலகமோ உங்களுடைய எல்லைக்குட்பட்டது. ஆனால் உண்மையான உலகமோ பொதுவானதும் அல்ல, தனிப்பட்டதும் அல்ல. அது பிரபஞ்சம் சார்ந்தது. மற்ற இரண்டுக்கும் அப்பாற்பட்டது. ஒருவர் அவ்விரண்டையும் கடந்து செல்ல வேண்டியவராய் இருக்கிறார்.

'சாலையில் திரிபவன் (road hog) என்று பெயர்பெற்ற ஒருவன் ஒரு விபத்துக்குப் பிறகு மருத்துவமனையில் அவன் படுத்துக் கிடந்தான்.'

மருத்துவர் செவிலியிடம் கேட்டார், 'இன்னைக்குக் காலையில் அந்த ஆள் எப்படி இருக்கிறான்?'

அவள் சொன்னாள், 'ஓ, தன்னுடைய வலது கையை வெளியே நீட்டி வச்சிருக்கிறார்.'

'அப்படியா, 'கார்னர்'ல திரும்பிட்டிருக்கான்' என்றார் மருத்துவர்.

காரோட்டும் பழக்கத்துக்கு அடிமையான ஒருவன் தன்னுடைய தூக்கத்திலும் வேகமாய் ஓட்டியபடி இருப்பான். நீங்கள் கனவில் செய்கிற எதுவும் உங்களுடைய விருப்பத்தை, உங்களுடைய குறிக்கோள்களை, நீங்கள் பெற விரும்புகிறதைப் பிரதிபலிக்கும். பழங்கால சமூகத்தைச் சேர்ந்தவர்கள்.மனநிலைகள் சார்ந்த நேரத்தில் வாழ்கிறார்கள். கிழக்கு மனநிலைகள் சார்ந்த நேரத்தில் வாழ்கிறது. மேற்கு கால வரிசைப்படுத்தப்பட்ட நேரத்தில் வாழ்கிறது. நீங்கள் காடுகளிலும் மலைகளிலும் மறைந்து வாழ்கிற பழங்குடியினரிடையே சென்று பார்த்தால் அவர்கள் முற்றாக மனநிலைகள் சார்ந்த நேரத்தில் வாழ்வதைப் புரிந்து கொள்வீர்கள். நடப்புநிலையைவிட கனவுக்கு முக்கியத்துவம் கொடுக்கிற பழங்கால சமூகங்களில் சிலவற்றை நீங்கள் இன்னமும் காண முடியும். ஒரு குழந்தை தன்னுடைய காலைச் சிற்றுண்டிக்குமுன் செய்கிற முதல்காரியம் தனது கனவைப் பெரியவர்களிடம் விரித்துச் சொல்வதுதான். முதல்காரியம்

உளப்பகுப்பாய்வாக இருக்கிறது. காலை உணவிற்கு முன் பெரியவர்களிடம் கனவு விவரிக்கப்படுகிறது. அவர்கள் எல்லாரும் சேர்ந்து கனவைப் பகுப்பாய்வு செய்கிறார்கள். அதன்பிறகு குழந்தையிடம் ஏதோ ஒன்றைச் செய்யும்படி சொல்கிறார்கள். காரணம், கனவு பருப்பொருள் அல்லாததை பருப்பொருள் வகையில் கையாள்வதாய் (symbolic) இருக்கிறது. அது ஏதோ ஒன்றைச் செய்தாக வேண்டும் என்பதைக் காட்டுகிறது.

உதாரணமாக, ஒரு குழந்தை தனது நண்பனுடன் சண்டையிடு வதாகக் கனவு காண்கிறது. காலையில் வீட்டுப் பெரியவர்களிடம் தான் கண்ட கனவைப்பற்றி அவன் சொல்கிறான். அவர்கள் அதுபற்றி விளக்குவதோடு அவனிடம் இனிப்புகளும் விளையாட்டுக் கருவிகளும் தந்து அவனுடைய நண்பன் வீட்டுக்கு அனுப்புகிறார்கள். அவனுடைய நண்பனிடம் அந்தக் கனவைப் பற்றிச் சொல்லி, தான் கொண்டு செல்லும் பொருள்களை அவனுக்கு வெகுமதியாய் கொடுக்கும்படி தெரிவிக்கிறார்கள்.

மேற்கில் அதுபற்றி நீங்கள் எண்ணிப் பார்க்கவும் முடியாது. நீங்கள் எதையுமே செய்யவில்லை, சும்மா கனவுதான் கண்டிருப் பீர்கள். ஆனால் அந்தக் குறிப்பிட்ட பழைய சமூகமோ, நீங்கள் அந்தக் கனவுக்குக் காரணம் நீங்கள் அதேபோன்று ஏதோ ஒன்றைச் செய்ய விரும்பியிருந்தீர்கள் என்று கூறும். அது மறைத்துவைத்த, அடக்கி வைக்கப்பட் ஒரு விருப்பமாக இருக்கும். மனதைப் பொறுத்தவரை நீங்கள் அதைச் செய்திருக்கிறீர்கள். போ, அந்தப் பையனிடம் சொல்லு, உன்னைச் சுற்றி சிறிதளவும்கூட கோபம் இல்லை என்று. எல்லாவற்றையும் தெரிவித்து, அவனுடைய மன்னிப்பை வேண்டிப் பொறுப்பாய். அவனிடம் இந்த வெகுமதிகளைக் கொடுத்துவிடு.

கனவில் போட்ட சண்டைக்கு உண்மையில் பரிசுகள்... ஆனால், அந்தச் சமூகத்தில் ஓர் அற்புதம் நிகழ்ந்திருக்கிறது. காலப்போக்கில் அந்தப் பையன் வளர்ந்து, கனவு காண்பதை நிறுத்தி விடுகிறான். கனவுகள் மறைந்து விடுகின்றன. அந்தச் சமூகத்தைப் பொறுத்தவரை வளர்ந்தபின் ஒருவன் கனவு காண்பதில்லை. இது ரொம்ப அருமையாய் தெரிகிறது. தங்களுடைய தொழில் பாதிக்கப்பட்டுவிடும் என்பதால் உளப்பகுப்பாய்வாளர்கள் (psych anaslysts) அந்தச் சமூகத்தைப் பாராட்டமாட்டார்கள் என்பது உண்மை.

அந்த இளம் பெண் தன்னுடைய மனநல மருத்துவரைக் காணச் சென்றாள். முந்தைய இரவு அவள் என்ன கனவு கண்டாள் என்று அவளிடம் கேட்டார் அவர். அன்றிரவு எந்தக் கனவும் காணவில்லை என்று அவள் சொல்லவும் அவர் கோபமடைந்தார். 'இதோபார், நீ உன்னுடைய 'ஹோம்-ஒர்க்'கைச் செய்யவில்லை என்றால் நான் எப்படி உனக்கு உதவ முடியும்?' என்று கேட்டார்.

கனவு காண்பது 'ஹோம்-ஒர்க்'. உளப்பகுப்பாய்வாளர் உங்களுடைய கனவுகளை நுணுக்கமாக ஆராய்கிறார். ஆனால், இது கொஞ்சம் நகைக்கத்தக்கதுதான். உங்களுடைய கனவுகளை உங்களால் அலசி ஆராய முடியவில்லை, மற்றவர்களால் அதை எப்படிச் சொல்ல முடியும்? காரணம் மனநிலைச் சார்ந்த நேரம் தனிப்பட்டவருடையது. உங்களைப்பற்றி உங்களைவிட மற்றவர்களால் எப்படிப் புரிந்து கொள்ள முடியும். உங்கள் கனவுகளை உங்களையன்றி வேறுயார் புரிந்து கொள்வது. அவருடைய விளக்கம் ஏமாற்றுகளாகவே இருக்கும். அவருடைய விளக்கம் அவர் தருகிற (மாற்றி அமைத்து) விளக்கமாக உங்களுடைய கனவை ஒரு ஃப்ராய்டு ஆய்வு செய்கிற பொழுது அவர் கொடுக்கிற விளக்கம் வேறாகவே இருக்கும். அதே கனவை ஐங் (Jung) ஆய்வு செய்தால், அவர் கொடுக்கிற விளக்கம் அதில் இருந்து மாறுபட்டதாகவே இருக்கும். அதே கனவை ஆட்லர் ஆராய்ந்து விளக்கம் கொடுத்தால் அது அவ்விரண்டில் இருந்தும் இயல்பு மாறியதாய் இருக்கும். ஆக, அதைப்பற்றி என்ன நினைப்பது? நீங்கள் கண்ட கனவு ஒன்றுதான், அதற்கு மூன்று உளப்பகுப்பாய்வாளர்களின் விளக்கமோ மூன்று வெவ்வேறு வகைகளாய் இருந்தன.

ஃப்ராய்டு எல்லாவற்றையும் பால்சார்ந்த (sex) அளவிற்குக் குறைத்துக் கொண்டு விடுகிறார். அவர் ஒரு வழிமுறையைக் கண்டு, அதைப் பால்சார்ந்த அளவிற்குக் குறைத்துக் கொள்கிறார். அவர் பாலுணர்வில் மாற்ற வியலா எண்ணம் கொண்டிருப்பது போல் தெரியலாம். அவர் சிறந்த முன்னோடி, ஓர் உன்னதமான வாசலை அவர் திறந்து வைத்திருக்கிறார், ஆனாலும் அளவுக்கு மீறிய அச்சம் உடையவர், பாலுணர்விலும் வேறு பலவற்றிலும் பயம் உண்டு. ஒரு சாலையைக் குறுக்காய் கடக்கவும் பயப்படுபவர் அவர். அது அவருடைய மிகப்பெரிய பயங்களில் ஒன்று. சாலையின் குறுக்கே செல்ல புத்தர் அச்சப்படுவார் என்று நீங்கள் நினைத்துக்கூடப் பார்க்க

முடியாது. இந்த மனிதர் தம்மளவிலேயே நலக்குறைவானவர்தாம். அவருக்கு மக்களிடம் பேசவே பயம். அதனால்தான் உளப்பகுப் பாய்வை தோற்றுவித்தார். உளப்பகுப்பாய்வில் உளப்பகுப்பாய்வாளர் ஒரு திரைக்குப் பின்னால் அமர்ந்திருக்க, நோயாளி படுக்கையில் இருந்தபடி பேசிக்கொண்டே போவார், உளப்பகுப்பாய்வாளர் காது கொடுத்து கேட்பதோடு சரி - உரையாடல் இருக்காது. அவர் உரையாடுவதற்குப் பயந்தார். தனிப்பட்ட முறையில் நேருக்குநேர் எதிர்கொள்கிறபோது அவர் ரொம்பவும் இடர்ப்பாட்டுக்குள்ளாகி விடுவார். அவருடைய மனம் முழுக்க அவரது விளக்கத்திலேயே நுழைந்துவிட்டிருக்கும். அது இயல்பு, அப்படித்தான் இருக்க வேண்டியிருக்கும்.

ஐங், எல்லாவற்றையும் சமயத்துக்கு (religion) க் கொண்டுவந்தார். நீங்கள் கண்ட கனவு எதுவாயினும், அது ஒரு சமயஞ் சார்ந்த கனவு என்கிற முறையிலேயே அவருடைய விளக்கம் அமைந்திருக்கும். அதே கனவு ஃப்ராய்டிடம் பால்சார்ந்ததாகி (sexual) விடும். ஆட்லரிடம் அது அரசியலாகிவிடும். ஒவ்வொன்றும் பேராவலுக்குரியதாகி விடுகிறது. ஒவ்வொருவரும் ஒரு தாழ்வு மனப்பான்மையில் சிக்கி அவதிப்படுகிறார்கள், ஒவ்வொருவரும் கூடுதல் அதிகாரத்தைப் பெற முயல்கிறார்கள். தற்போது ஆயிரத்தியொரு உளப்பகுப்பாய்வாளர்கள் வெவ்வேறு பிரிவுகளில் இருக்கிறார்கள். கிறிஸ்தவ மதத்தில் இருப்பதுபோல் பல பிரிவுகள் உள்ளன. பல்வேறு சிந்தனா முறைகள், ஒவ்வொரு உளப்பகுப்பாய்வாளரும் தமக்கென்று ஒரு முறையை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். நோயாளியைப் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை.

உளப்பகுப்பாய்வாளர்களின் பிரச்சினைகள் அவர்களுடைய பகுப்பாய்விலும், விளக்கத்திலும் நுழைந்து விடுகின்றன. அது எவ்வகையிலும் உதவாது. மாறாக, விஷயங்களை மேலும் சிக்கலாக்கி விடும் என்பதே உண்மை. ஒரு சிறந்த சமூகம் உங்களுடைய கனவுகளை நீங்களே எப்படி பகுப்பாய்வு செய்வது என்பதைக் கற்றுக் கொடுக்கும். உங்களைவிட வேறுயாரும் உங்களுக்கு அதிக நெருக்கமாய் இருக்க முடியாது என்பதால் அந்த விஷயத்தில் அத்தனை உறுதியாய் மற்றவர்களின் செயல்பாடு அமையாது.

ஓர் அழகான இளம்பெண் மனநல மருத்துவரைக் காணச் சென்றாள். மருத்துவர் சில நொடிகளுக்கு அவளையே பார்த்துக்

கொண்டிருந்தார். 'தயவு செய்து இப்படி வாருங்கள்' என்றார். அவளை இரு கைகளாலும் தழுவி, முத்தமிட்டார். கடைசியில் அவளை விடுவித்துவிட்டு சொன்னார், 'என்னுடைய பிரச்சினை தீர்ந்தது. இப்போ உன்னுடைய பிரச்சினை என்ன?' என்று.

அவரவர் பிரச்சினை அவரவர்க்கு. அவர்கள் தங்களுக்கென்று மனங்களை, மன உறுத்தல்களைக் கொண்டிருக்கிறார்கள்.

கிழக்கில் உளப்பகுப்பாய்வாளர் போன்று யாரும் இருந்திருக்க வில்லை. மற்றெந்த சமூகமும் எப்போதும் அறிந்ததைவிட நாம் நிறையவே அறிந்திருக்கிறோம், ஆனாலும் நமக்கு உதவ முற்றிலும் வேறு வகையான நபரை உருவாக்கி வைத்திருக்கிறோம். நாம் அந்த மனிதரை குரு என்று அழைக்கிறோம். ஒரு குருவிற்கும் உளப்பகுப் பாய்வாளருக்கும் உள்ள வேறுபாடு என்ன? உளப்பகுவாய்வாளர் இன்னமும் தீர்க்கப்படாத தம்முடைய பிரச்சினைகளோடு இருக்கிறார், குருவிற்கு எந்தப் பிரச்சினையும் இல்லை என்பதுதான் வேறுபாடு. உங்களுக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை என்றால் உங்களுடைய பார்வை தெளிவாக இருக்கும். அப்போது மற்றவர்களுடைய செயல்நிலையில் உங்களை வைத்துப்பார்க்க உங்களால் முடியும். உங்களிடம் எந்தப் பிரச்சினையும், மன உறுத்தலும், சிக்கலும் இல்லையெனில் நீங்கள் முற்றிலும் தெளிவுடன் இருக்கிறீர்கள். மனம் மறைந்துவிடுகிறது, சொல்லப்போனால் மனமற்ற நிலையை நீங்கள் அடைகிறீர்கள். அந்நிலையில் உங்களால் புரிந்து கொள்ள முடிகிறது. அப்போது உங்களுடைய சொந்த முறையில் நீங்கள் விளக்க மளிக்கமாட்டீர்கள். உங்களுடைய விளக்கம் பொதுவானதாய் இருத்தலுக்குரியதாய் இருக்கும்.

உண்மையான நேரம் (இயல்பானது) நிலைபேறுடையது. அதை நான் உங்களுக்கு விளக்குகிறேன்.

காலவரிசைப்படுத்தப்பட்ட நேரம் நிச்சயமற்றது. மேற்கில் ஜீனோ (zeno) அதனை நீண்ட காலத்துக்கு முன்பே நிரூபித்து விட்டார். கிழக்கில் நாகார்ஜூனாவும் திறன்மிக்க விதத்தில நிரூபித்தார். அவர்கள் இருவருடைய தர்க்கத்தையும் தவறு என்று யாரும் நிரூபிக்க முடியாது. அவர்களுடைய வாதங்கள் அத்தனை ஆழமானதும், முழுமையானதும் ஆகும். ஜீனோவும் சரி, நாகார்ஜூனாவும் சரி காலத்தைப் பற்றிய ஒட்டுமொத்த கருத்துமே அறிவு ஏற்புடையதல்ல என்கிறார்கள். அவ்விருவரைப் பற்றியும், காலவரிசையிலான நேரம்

(chronological) தொடர்பாய் அவர்களுடைய பகுப்பாய்வு பற்றியும் சில விஷயங்களை நான் உங்களுக்குச் சொல்லி விடுகிறேன்.

நேரப்பகுப்பாய்வின் உச்ச முனையையே அவர்கள் முயன்று அடைந்திருக்கிறார்கள். அவர்களை எவராலும் விஞ்ச முடியவில்லை. அவர்கள் சொல்கிறார்கள், 'நேரம் என்பது என்ன' என்று. நீங்கள் சொல்கிறீர்கள், 'அது ஒரு செயல்முறை. ஒரு நொடியானது கடந்த காலத்தில் சென்று மறைகிறது. மற்றொரு நொடி வருங்காலத்தில் இருந்து நிகழ்காலத்தை வந்தடைகிறது. அது நுழைவாயிலில் நின்றுவிட்டு கடந்த காலத்திலுள் செல்கிறது, மறைகிறது. இதுவே நேரத்தின் செயல்முறை. ஒரு தடவையில் ஒரு நொடியைத்தான் நீங்கள் பெறுகிறீர்கள். இரண்டு நொடிகளை ஒரசேரப் பெறுவதில்லை. கடந்தகாலம், வருங்காலம் இரண்டுக்கும் இடையில் இருக்கிறது நிகழ்காலம்.

ஜீனோவும், நாகார்ஜுனாவும் கேட்கிறார்கள், இந்த நொடிப் பொழுது எங்கிருந்து வந்தது? வருங்காலம் முன்பே இருந்து கொண்டிருக்கிறதா? அது இல்லையெனில் அந்த நொடி இல்லாத ஒன்றில் இருந்து எப்படி வர முடியும்? தற்போது அவர்கள் இடர்ப்பாட்டை உண்டு பண்ணுகிறார்கள். அவர்கள் கேட்கிறார்கள், இந்த நொடியானது கடந்த காலத்தில் எங்கே சென்று சேர்கிறது? அது இன்னமும் கடந்த காலத்திலேயே தங்கி பிருக்கிறதா'. அது இன்னமும் கடந்த காலத்தில் இருக்கிறது என்று நீங்கள் சொன்னால், அந்நிலையில் இன்னமும் கடந்தகாலம் ஆகவிடவில்லைதானே. அது வருங் காலத்தில் இருந்தது என்றும் தற்போதுதான் அது எங்களுக்கு வெளிக்காட்டிக் கொண்டது என்றும் நீங்கள் சொல்வீர்களாயின் அது எப்போதைக்கும் வருங்காலத்திலேயே இருந்திருக்க வேண்டும். அது நிகழ்காலத்துக்கு வந்துவிட்டபின் எப்படி வருங்காலத்தைச் சேர்ந்த தாகும். வருங்காலம் என்பது இன்னும் வராததைக் குறிப்பதல்லவா. அது கடந்தகாலமா என்றால் கடந்தகாலமாகவும் இல்லை. ஏனெனில் கடந்த காலம் என்பது இருத்தலை விட்டுச் சென்றதாகும்.

ஆக நீங்கள் தேர்வு செய்கிற மாற்று எதுவாயினும்... வருங்காலம் என்பது இல்லை, இந்தக் கணம் திடீரென வந்தது என்று நீங்கள் சொன்னால் அவர்கள் சிரிப்பார்கள். 'நீங்கள் சொல்வது அர்த்தமற்றது. இல்லாத ஒன்றில் இருந்து இருத்தல் எப்படி வரமுடியும்? இருத்தல் எப்படி இல்லாத ஒன்றிற்குள் செல்ல முடியும்?' என்று அவர்கள்

கேட்பார்கள். இரண்டு பக்கங்களிலும் இருத்தலின்மை தான் உள்ளதென்கிறபோது நடுவே எப்படி இருத்தல் இடம் பெற முடியும்? நீங்கள் ஏமாற்றப்பட்டீர்கள் என்றும் அவர்கள் கூறுவார்கள்.

அடுத்து அவர்கள் கேட்பார்கள், 'நீங்கள் நேரத்தை ஒரு செயல் முறை என்று கருதுகிறீர்களா? ஒரு நொடியானது இன்னொன்றுடன் இணைந்திருக்கிறது என்பீர்களா? என்று நாகார்ஜுனாவும், ஜீனோவும் உங்களிடம், 'இரண்டு நொடிகள் இருக்கின்றன. அவை எப்படி தொடர்புடையதாயின? அவற்றுடன் மூன்றாவதாய் ஒரு நொடிக்கும் தொடர்புண்டா?' என்றும் கேட்பார்கள். அவர்கள் மறுபடியும் ஓர் இடர்ப்பாட்டை உண்டு பண்ணுவார்கள், காரணம், தொடர்பேற்படுத்த ஒரு கண்ணி இருக்கவேண்டுமே, இரண்டு விஷயங்களை தொடர்புப்படுத்த, கடந்த காலத்தை நிகழ்காலத்துடனும், நிகழ்காலத்தை வருங்காலத்துடனும் தொடர்புப்படுத்த கண்ணிகள் தேவை. அவ்வாறெனில் அந்தக் கண்ணிகள் எங்கே இருக்கின்றன. அந்தக் கண்ணிகள் யாவை? அவை காலப்பகுதிக்குரியதாகவே இருக்க முடியும். ஆக ஒரு நொடியை மற்றொன்றுடன் இணைக்க இன்னொரு நொடி தேவைப்படுகிறது. எனவே இரண்டுக்குப் பதிாக மூன்று. ஆனால் மறுபடியும் அவை இணைக்கப்பட வேண்டி யிருக்கும். பின்னோக்கிச் செல்லலுக்கு ஒரு முடிவே இருக்காது.

என்னுடைய இரண்டு விரல்களைக் கவனியுங்கள். அவை இணைக்கப்பட வேண்டியவை. அவை மூன்று விரல்களாகின்றன. தற்போது ஒன்றுக்குப் பதிலாக இரண்டு துளைகள், இரண்டு வெற்றிடங்கள். அவை இணைக்கப்படவேண்டும். அவை ஐந்தாகின்றன. தற்போது இணைக்கப்பட வேண்டிய இடைவெளிகள் இன்னும் இருக்கின்றன, இன்னும் அதிகமாய்.

காலவரிசைப்படுத்தப்பட்ட நேரம் பயனுடைமை சார்ந்தது (utilitarian) என்று நாகார்ஜுனாவும், ஜீனோவும் கூறுகின்றனர். அது உறுதியாகக் கட்டப்பட்டதல்ல. உண்மையான (இயல்பான) நேரம் ஒரு செயல்முறை அல்ல. அந்நிலையில் அதற்கு இன்னொரு நேரம் தேவைப்படுகிறது. உதாரணமாக, நீங்கள் நடக்கிறீர்கள். உங்களுக்கு நேரம் தேவைப்படும். நீங்கள் என்னிடம் வர, உங்கள் வீட்டில் இருந்து சவாங்சு ஆடிட்டோரியத்துக்கு வரவேண்டியிருக்கிறது. இங்கே வர உங்களுக்கு பதினைந்து நிமிடம் ஆகும். அதற்கான நேரம் இல்லையென்றால் நீங்கள் எப்படி வருவீர்கள்? காரணம், நடப்பதற்கு

நேரம் தேவை. நடப்பது ஒரு செயல்முறை. அதற்கான அவகாசம் உங்களுக்குத் தேவை. எல்லாச் செயல்முறைகளுக்கும் நேரம் தேவை. தற்போது நாகார்ஜுனா சொல்கிறார், 'நீங்கள் நேரத்தை ஒரு செயல்முறை என்று சொன்னால், அதற்கு இன்னொரு நேரம் தேவைப்படும். அதைவிட மேம்பட்ட நேரம். அதுவும் ஒரு செயல்முறையாகவே இருக்கும். அடுத்து மகாமேம்பட்ட நேரம்... மறுபடியும் முடிவற்ற பின்னோக்கிச் செல்லல். அந்நிலையில் உங்களால் அதற்குத் தீர்வு காண முடியாது.'

இல்லை, நேரம், உண்மையான (இயல்பான) நேரம் ஒரு செயல்முறை அல்ல. அது ஒரே சமயத்தில் நிகழும்தன்மை கொண்டது. வருங்காலம், கடந்த காலம், நிகழ்காலம் இவை மூன்றும் தனித் தனியானவை அல்ல. எனவே, அவற்றை இணைக்க வேண்டிய அவசியம் இல்லை. அது தற்போது நிலைபேறுடையதாய் இருக்கிறது. அது நேரம் உங்கள் பக்கமாய் சென்று கொண்டிருக்கிறது என்பதாகாது. அது எங்கே செல்லும்? அது கடந்து செல்ல இன்னொரு ஊடகம் தேவைப்படும். அது எங்கே செல்லும், அது எங்கே வந்தடையும். அது எங்கே இருக்கிறது அல்லது இங்கே இருக்கிறது. நேரம் என்பது இருக்கிறது. அது ஒருசெயல்முறை அல்ல.

காரணம், ஒட்டுமொத்த நேரத்தையும் நம்மால் பார்க்க முடியவில்லை - நம்முடைய கண்கள் ஒரு எல்லைக்குட்பட்டவை. நாம் சிறிய பிளவுகள் (திறப்புகள்) வழியே பார்க்கிறோம் - அதனால்தான் ஒரு சமயத்தில் ஒரு நொடியை மட்டுமே உங்களால் பார்க்க முடியும் என்பதுபோல் தெரிகிறது. அது காலத்தின் பிரிவு அல்ல, உங்கள் வரம்புக்குட்பட்டது. காரணம் ஒட்டு மொத்த நேரத்தையும் உங்களால் பார்க்க முடியாது - காரணம் நீங்கள் இன்னும் முழுமை அடைய வில்லை - அதனால்தான்.

தற்போது சூத்திரம்:

*'ஒரு கணப்பொழுதின் மீதும் அதன்*
*முன்னும் பின்னும் உள்ள காலத்தின் மீதும்*
*சம்யமம் செய்வதால் விவேகம் உண்டாகிறது'*

நீங்கள் காலத்தின் செயல்முறையை உங்கள் சமாதி உணர்வுக்குக் கொண்டு வருவீர்களாயின் - இந்தக் கணம் சென்ற கணம், இனி வருகிற கணம் - உங்களுடைய சமாதி நிலையைக் கொண்டு

வருவீர்களாயின், அந்நிலையில இருந்து கொண்டு வருங்காலம், கடந்த காலம் இவற்றிடையே உள்ள வேறுபாடு மறைகிறது. அவை கரைந்துவிடும்.- வேறுபாடு - தனித்தன்மை பொய்யானது. சற்றும் எதிர்பாராதவிதமாய் முதலும் முடிவுமற்ற காலத்தை (eternity) நீங்கள் உணர்கிறீர்கள். அந்நிலையில் காலம் ஏக காலத்தில் நிகழும் தன்மை கொண்டுவிடுகிறது. எதுவும் செல்வதில்லை. எதுவும் வருவதில்லை, எல்லாமும் அப்படியே இருக்கிறது.

இந்த இருத்தல் கடவுள். இந்த இருக்கும் தன்மை கடவுளின் திட்டம்.

'ஒரு கணப்பொழுதும் அதன்முன்னும் பின்னும் உள்ள காலத்தின் மீதும் சம்யமம் செய்வதால் முடிவான மெய்ம்மை பற்றிய விழிப்புணர்வு உண்டாகிறது.'

நீங்கள் *சடோரி கண் கொண்டு காலத்தைப் பார்க்கிறபோது காலம் மறைந்துவிடுகிறது.

ஆனால், இதுவே கடைசி அற்புதமாய் இருக்கும். அதன்பிறகு இருப்பது கைவல்யம் (விடுதலை) மட்டுமே. காலத்தைப் பற்றிய தவறான கருத்துதான் விருப்பம், பேராவல், செயலூக்கம் இவற்றுக்கு காரணமாய் இருக்கிறது, நேரம் மறைகிறபோது எல்லாமும் மறைந்து விடுகிறது. நேரம் என்பது தோற்றுவிக்கப்பட்டது. கடந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் இவை விருப்பத்தின் மூலம் தோற்றுவிக்கப் பட்டவை. இது கிழக்கத்திய ஞானிகளின் மனதால் அறியும் திறன் (insight) களில் ஒன்று. நேரம், செயல்முறை என்பதெல்லாம் விருப்பத் தின் திட்ட ஏற்பாடுதான். நீங்கள் ஒன்றை விரும்புகிற காரணத்தால் வருங்காலத்தை தோற்றுவிக்கிறீர்கள். நீங்கள் உறுதியாகப் பற்றிக் கொள்வதால் கடந்த காலத்தைத் தோற்றுவிக்கிறீர்கள். உங்கள் முன்பாக இல்லாது போகிற ஒன்றைவிட முடியாத காரணத்தால், நீங்கள் அதைப் பற்றிக் கொள்ள விரும்புகிறீர்கள். எனவே நினைவு என்பதைத் தோற்றுவிக்கிறீர்கள். இன்னும் வந்து சேராத ஒன்றை எதிர்பார்க்கிற காரணத்தால் நீங்கள் வருங்காலத்தைத் தோற்றுவித்துக் கொண்டீர்கள். வருங்காலம், நிகழ்காலம் என்பதையெல்லாம் மனதுக்குரிய நிலைகள், காலத்தின் பகுதியல்ல. காலம் நிலையாய் இருக்கிறது. அது பிரிக்கப்படவில்லை. அது ஒன்றாய், முழுமையாய் இருக்கிறது.

---

* *சடோரி (Satori) - திடீர் என ஏற்படுகிற ஞான உதயம்.*

'க்ஷண-தத்-க்ரமயோ சம்யமாத் விவேகஜம் ஞானம்'

இந்தக் கணத்தையும் நேரத்தையும் செயல்முறையையும் யார் அறிந்து கொண்டவரோ அவரே முடிவான குறிக்கோளாய் அமைந்ததை உணர்ந்து கொள்கிறார். எதனால்? அந்த முடிவான ஒன்று இயல்பான நேரமாய் இருப்பதே காரணம்.

நீங்கள் காலவரிசைப்படுத்தப்பட்டநேரத்தில் வாழ்கிறீர்கள். அந்நிலையில் நீங்கள் செய்தித்தாள் உலகில் வாழ்கிறீர்கள். அடுத்து அரசியல் வாதிகள், பைத்தியக்காரர்கள், பேராவல் கொண்டவர்களின் உலகில் வாழ்கிறீர்கள். அல்லது நீங்கள் மனநிலை சார்ந்த உலகில் வாழ்வீர்களாயின் ஒன்று பித்துப் பிடித்தவர்களின் உலகில் அல்லது கற்பனை, கனவு, கவிதைகள் கொண்ட உலகில் வாழ்கிறீர்கள்.

பைத்தியக்கார விடுதியைச் சுற்றி வந்து கொண்டிருந்தார் புதிதாய் வந்திருந்த மருத்துவர். அவர் அங்கேயே தங்கியிருக்கும் ஒருவரிடம் கேட்டார், 'தாங்கள் யார்?' என்று.

அந்த மனிதர் கம்பீரமாக நிமிர்ந்து நின்றபடி சொன்னார், 'நானா ஐயா. நான்தான் நெப்போலியன்' என்று.

மருத்துவர் கேட்டார், 'உண்மையாகவா, அப்படி உனக்குச் சொன்னது யார்?'

அந்த நோயாளி சொன்னார்,'கடவுள்தான், வேறுயார்?'

அந்த படுக்கையில் இருந்த கெச்சலான ஆள் சொன்னான், 'நான் சொல்லவில்லையே!' என்று.

பைத்தியக்கார விடுதிகளுக்குப் போய்ப் பாருங்கள். அவை பார்வையிடத் தகுதியானவைதாம். அவர்கள் கற்பனை உலகில் வாழ்கிறார்கள். கூட்டாக வாழும் உலகில் இருந்து அவர்கள் முற்றிலும் விலகிச் சென்றுவிட்டார்கள். அண்டங்கள் சார்ந்த உலகிலும் (universal world) அவர்கள் நுழையவில்லை. அவர்கள் இடைப்பட்ட பகுதியில் தொங்கிக் கொண்டிருக்கிறார்கள், மறதியில்.

குழப்பமுற்றவராய் தெரிகிற அந்த இளம்பெண் நோயாளியைத் தமது அலுவலகத்துக்கு வெளியில் பார்த்து, திகைத்துவிட்டார் அந்த மனநல மருத்துவர். அவரிடம் அவள் சிகிச்சைபெற்று அரைமணி நேரம்கூட ஆகியிருக்காது. அவர் கேட்டார், 'என்ன விஷயம்?' என்று.

'அன்பானவரே, நான் போய் கொண்டிருக்ககிறேனா, வந்து கொண்டிருக்கிறேனா என்றே தெரியவில்லை' என்றாள் அவள்.

மருத்துவர் சொன்னார், 'ரொம்ப சரி. அதனால்தான் நீ என்னைப் பார்க்க வந்திருக்கிறாய்' என்று.

'அப்படியானால் நீங்கள் யார்?' அவள் கேட்டாள்.

'நான்தான் உன்னோட வெறுக்கத்தக்க மனநல மருத்துவர்' என்றார் அவர்.

மறதியான ஓர் உலகம் தோன்றுகிறது. நீங்கள் காலவரிசைப் படியான உலகின் தொடர்பை இழந்து, அண்டங்கள் சார்ந்த பொதுவான உலகுடனும் (univer) தொடர்பற்றுப் போனால் நீங்கள் உள்ளே வந்து கொண்டிருக்கிறீர்களா அல்லது வெளியே போய்க் கொண்டிருக் கிறீர்களா என்பதே தெரியாமல் போய்விடும். ஒவ்வொன்றும் நிச்சயமற்றதாகிவிடும், சந்தேகத்துக்குரியதாகி விடும். உங்களையே நீங்கள் நம்பமாட்டீர்கள், உங்கள் கண்களையே உங்களால் நம்ப முடியாது. உங்களால் ஒருவரையும் நம்ப முடிவதில்லை. நீங்கள் குகைக்குள் அடைபட்டு விடுகிறீர்கள், உள்ளாக அடக்கப்பட்டு விடுகிறீர்கள். உங்கள் இருப்புணர்வு இருட்டில் கிடக்கும், நீங்கள் ஒருநிலைக் கோட்பாடுடையவராகி (monad) விடுகிறீர்கள். இதுதான் நரகம் என்பது. உங்களில் இருந்து உங்களால் நகர முடியாது. நீங்கள் முடக்கப்பட்டு விடுகிறீர்கள்.

தியானிக்கிற ஒருவர் பைத்தியக்காரரின் உலகில் தன்னுணர் வோடு செல்ல வேண்டியிருக்கிறது. காரணம், நீங்கள் கவனத்தோடு செல்லாவிட்டால், அதில் உணர்வற்று இரையாகிவிட அத்தனை சாத்தியங்களும் இருக்கின்றன. அதில் எச்சரிக்கையாகவும், உணர் வோடும் செல்வது நல்லது. அதனுள் வலுக்கட்டாயமாக தள்ளப்படுவதைவிட அது சிறந்ததாக இருக்கும். வாழ்க்கை உங்களை அதனுள் வலுக்கட்டாயமாகத் திணிக்குமெனில் உங்களால் அதில் இருந்து வெளியேவர முடியாது. அது ரொம்பக் கடினம்.

காலவரிசைப்படுத்தப்பட்ட உலகத்துக்குள் உங்களைத் திரும்பக் கொண்டுவர, உளப்பகுப்பாய்வாளரால் (psychoanalyst) மட்டுமே முடியும். அதுதான் ஒரு குருவிற்கும், உளப்பகுப்பாய்வாளருக்கும்

உள்ள வேறுபாடு. மனநிலை சார்ந்த உலகத்தில் தொலைந்து போன உங்களை உளப்பகுப்பாய்வாளர் - அதிர்ச்சி வைத்தியம் இன்சுலின் இவற்றின் மூலம் காலவரிசைப்படுத்தப்பட்ட உலகத்துக்குக் கொண்டு வருகிறார் - காரணம் நீங்கள் அதிக அளவில் அதிர்ச்சியுற்றால் உடனே உங்களுடைய கனவு தகர்ந்துவிடும். நீங்கள் ஓரளவு கவனமுடைய வராகி, காலவரிசைப்படுத்தப்பட்ட உலகிற்கு திரும்பி விடுவீர்கள்.

குருவானவர், நீங்கள் மனநிலை சார்ந்த உலகில் தொலைந்து போனால், உங்களை அண்டங்கள் சார்ந்த உலகிற்குக் கொண்டு செல்கிறார். அது உங்களை மேலும் பின்னாகக் கொண்டு செல்வதாகும். நீங்கள ஒருபோதும் காலவரிசைச் சார்ந்த உலகத்தின் பகுதியாவ தில்லை. ஆனால், பிரபஞ்ச நேரத்தின் (எல்லாவற்றுக்குமான) ஒரு பகுதியாகி விடுகிறீர்கள்.

'இனம், அடையாளம், இடம் இவற்றால் வேறுபடுத்தி அறிய முடியாதவற்றைக்கூட மேலே கூறிய சம்யமத்தால் பிறக்கின்ற வேகத்தைக் கொண்டு அறிய முடியும்'

. முடிவான குறிக்கோளாய் - இறுதியான (ultimate) ஒன்றை நீங்கள் அறிந்து கொண்டதும் முற்றிலும் வேறு வகைப்பட்ட ஓர் அறிதல் உங்களுக்குள் தோன்றுகிறது. தற்போது வெளிப்புறத்தில் இருந்தபடி தான் விஷயங்களை அறிந்து கொள்கிறீர்கள். யாரோ ஒருவர் வருகிறார், நீங்கள் உடைகளைக் கவனிக்கிறீர்கள், 'ஆமாம், இது ஒரு பெண்' அல்லது 'ஒரு ஆண்' என்று எண்ணிக் கொள்கிறீர்கள். ஒரு மரத்தைப் பார்க்கிறீர்கள், அதை இன்னதென்று - அது ஒரு 'பைன் மரம்' என்று அடையாளம் கண்டு கொள்கிறீர்கள். காரணம் அதுபற்றிய விவரணையை நீங்கள் அறிவீர்கள். ஒரு மனிதரைப் பார்க்கிறீர்கள். அவரிடமுள்ள 'ஸ்டெதெஸ்கோப்'பைக் கொண்டு அவர் ஒரு மருத்துவர் என்பதை அறிந்து கொள்கிறீர்கள். ஆனால் இவை புறத்திற்குரிய சுட்டுகைகள் (indicators) ஆகும். அவர் ஒரு மருத்துவராக இல்லாதிருக்கலாம். மருத்துவராக நடிக்கலாம். அவ்வாறே அந்த பைன் மரமும் பைன் மரமாக இல்லாதிருக்கலாம், அது பைன் மரத்தைபோன்று தோற்றமளிக்கலாம். அந்தப் பெண்ணும் பெண்ணாக இல்லாதிருக்கலாம். அவள் நடிக்கக் கூடும். அவள் ஓர் ஆணாக இருக்கலாம். அவள் ஓர் அவனாக இருக்கலாம். நீங்கள் அதை முற்றாக உறுதிப்படுத்திக் கொண்டுவிட முடியாது. காரணம் நீங்கள் புறத்தேயிருந்து மட்டுமே அறிகிறீர்கள்.

நேரம் மறைந்து முடிவற்ற காலம் (eternity) உங்களைச் சூழ்ந்து கொள்கிற பொழுது. நேரம் அதற்குமேலுமா ஒரு செயல்முறையாய் இல்லாமல், ஆற்றலின் தேக்கமாகி (pool) விடுகிறபொழுது, அந்நிலையில் நீங்கள், புறத்தேயிருந்து எந்தவொரு சொற்பொருள் விளக்கமும் இல்லாமல் விஷயங்களுக்குள் நுழைந்து பார்க்கும் திறமையைப் பெற்று விடுகிறீர்கள்.

அதுதான் குருவிற்கும் சீடனுக்கும் இடையே நிகழ்கிறது. உண்மையில் அவர் உங்களிடம் கேட்டறிய வேண்டியிருக்காது. உங்கள் இருப்புணர்வில் இருந்தே அவர் புரிந்து கொண்டுவிடுவார். அவர் உங்களுக்குள் நிற்கிறார் - உங்களுடைய காலணிகளில் மட்டுமல்லாது உங்கள் இருப்புணர்விலும் நிற்கிறார். உங்களின் உள்ளார்ந்த வெற்றிடத்தில் மிகச் சரியாகவே அவர் பொருந்திக் கொண்டு விடவும், அங்கிருந்து பார்க்கவும் அவரால் முடியும்.

**'இந்த விவேகம் ஒருவனை அறியாமையில்**
**இருந்து விடுவிக்கும். பொருள்கள் அனைத்தையும்**
**அவற்றின் வேறுபாடுகளையும் ஒரே காலத்தில்**
**ஏற்றுக் கொள்ளும் விவேக ஞானமே**
**கரையேற்றும் ஞானம்'**

... செயல்முறை உலகை அது கடக்கிறது. அத்தனை செயல்முறை கொண்ட உலகையும் அது கடந்து செல்கிறது.

***'தாரம் சர்வவிஷயம் சர்வதாவிஷயம்***
***அக்ரமம் சேதி விவேகஜம் ஞானம்'***

கண்களின் மூலம் நம்மால் மெய்ம்மையின் ஒரு பகுதியை மட்டுமே காணமுடியும். அந்தப் பங்கேற்றலின் காரணமாய் வாழ்க்கை ஒரு செயல்முறைபோல் தோன்றுகிறது. உதாரணமாக, ஒரு மரத்தடியில் நீங்கள் அமர்ந்திருக்கிறீர்கள், சாலை வெறிச்சோடி கிடக்கிறது. அப்போது திடீரென சாலையின் இடப்புறத்தில் இருந்து ஒரு மனிதன் தோன்றுகிறான். அவன் வலப்புறமாகவே நடக்கிறான், கொஞ்ச தூரம் நடந்ததும் அவன் மறுபடியும் மறைந்து போகிறான். மரத்தில் ஒருவர் உட்கார்ந்திருக்கிறார். அந்த மனிதன் உங்கள் பார்வையில் படுவதற்கு வெகுமுன்பாகவே, மரத்தில் இருக்கும் நபருக்குக் காட்சியளித்து விடுகிறான். அவன் உங்கள் பார்வையில் இருந்து மறைகிற பொழுது, மரத்தில் இருப்பவர் பார்வையில் இருந்து

மறைந்துவிடமாட்டான். ஆனால், சிறிது நேரத்துக்குப் பிறகு அவருடைய பார்வையில் இருந்தும் அவன் மறைந்து விடுகிறான். ஆனால், ஒரு ஹெலிகாப்டரில் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அவருடைய பார்வை வெகுதொலைவு செல்வதாயிருக்கும். அந்த மனிதன் தொடர்ந்து நடக்கிறான் - அவன் சாலையில் இருப்பதை நீங்கள் தெரிந்து கொள்வதற்கு முன்பாக இருந்தே, உங்கள் பார்வையில் இருந்து மறைந்த வெகுநேரத்திற்குப் பின்பும் அவன் நடக்கிறான்.

என்ன நிகழ்கிறது? நீங்கள் எந்த அளவு மேலெழுகிறீர்களோ அந்த அளவு சஹஸ்ரத்திற்குச் சமீபமாய் சென்றடைகிறீர்கள். உயிர் என்னும் மரத்தில் ஏறுகிறீர்கள். அங்கிருந்து சஹஸ்ர தளத்தின் உச்சி முனையைக் காண்கிறீர்கள். அதைவிட உயரமான இடம் வேறெதுவும் இல்லை. சஹஸ்ராரத்தில் இருந்து நிகழ்வுகளைப் பார்க்கிறீர்கள்; எல்லாமும் தொடர்கிறது. தொடர்ந்தபடி இருக்கிறது. எதுவும் நிற்கிறதில்லை, எதுவும் மறைகிறதில்லை.

அது ரொம்பவும் கடினமானது. ஒரு மருத்துவரின் *அல்ட்டிமேட் எலக்ட்ரான், **க்வாண்டா போன்ற விளக்கங்களைப் புரிந்துகொள்ளத் தேவைப்படும் அதே முயற்சி இதற்கும் தேவைப்படும். அதுவே ஓர் அலையும், சிறு பகுதி (particle) யும் ஆகும். அதுவே ஒரு புள்ளியும் ஒரு கோடும் ஆகும்.

நீங்கள், கங்கையாற்றின் மீதாய் ஒரு விமானத்தில் பறந்து கொண்டிருக்கிறீர்கள். கங்கை பாய்ந்தோடிக் கொண்டிருக்கிறது. நான் உங்களிடம் 'கங்கை என்பது ஒரு செயல் முறையா? கங்கை ஓடிக் கொண்டிருக்கிறதா, அல்லது, அது கங்கை இருக்கிறது என்பதா? என்று கேட்டால் நீங்கள் என்ன சொல்வீர்கள்? 'இரண்டுந்தான்' என்பீர்கள். காரணம், ஏக காலத்தில் அதன் இரண்டு எல்லைகளையும் நீங்கள் காண்கிறீர்கள். சமவெளியில் பாயும் கங்கையை உங்களால் காணமுடிகிறது. கடலில் பாயும் கங்கையையும் நீங்கள் காணக்கூடும். கடந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்பதெல்லாம் மறைந்துவிட, ஒரே நேரத்தில் காண்கிறீர்கள். ஒரு குறிப்பிட்ட உயரத்தில் (கடல் மட்டத்துக்கு மேற்பட்ட உயரம்) இருந்துகொண்டு பார்க்கிறபோது ஒட்டு மொத்த கங்கையும் உங்களுக்குக் கிடைக்கக் கூடியதாயிருக்கிறது.

---

* *அல்ட்டிமேட் எலக்ட்ரான் - மிக அதிக அளவில் நிலைப்படுத்தக்கூடிய மின்னியக்க அணுத்துகள்.*

** *க்வாண்டா - கதிரியக்கத்தில் ஆற்றல் அலைவீச்சு*

அதுவே இருப்பதாகவும், வந்து பொருந்துவதாகவும் இருக்கிறது. அதுவே அலைபாயும், சிறுபகுதியாயும் இருக்கிறது.

சூத்திரம் சொல்கிறது, 'இந்த விவேகம் ஒருவனை அறியாமை யில் இருந்து விடுவிக்கும். மெய்ம்மை பற்றிய விழிப்புணர்வில் தோன்றிய ஞானம்...' அது இரட்டைத் தன்மைகள் (dualities) அனைத்தையும் கடக்கிறது. இருத்தல் மற்றும் செயல்முறை என்கிற துருவ முனைப்புகளை (polarities) யும், நிலையானதையும் மற்றும் இயக்கத்தில் உள்ளதையும், அலையையும் அதன் பகுதியையும், கடந்த காலம் மற்று வருங்காலத்தையும் அது கடக்கிறது. எல்லா இரட்டைத் தன்மைகளையும் துருவ முனைப்புகளையும் கடக்கிறது. அது தலை சிறந்தது - எல்லை கடந்து செல்வதாயிருக்கிறது. 'தர்க்கம் சர்வ விஷயம்' - நீங்கள் அறிவால் மேற்கொள்ளும் அத்தனை இலக்குகளையும் அது கடக்கிறது.

'... ஏக காலத்தில் அத்தனை அறியும் ஆற்றல்களையும் உட்படுத்தியிருக்கிறது' இந்தத் தன்னுணர்வின் பொருட்டு, 'அனைத்து அறிவும் உடைதாயிருக்கிற' (omniscient) என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டிருக்கிறது. எல்லாமும் அதற்காக ஒரே நேரத்தில் இடம் பெறுகிறது. அதனைப் புரிந்து கொள்ள பெரும் முயற்சி தேவைப் படும். அறிந்து கொள்வது கிட்டத்தட்ட சாத்தியமில்லை என்றே சொல்லலாம். நிறைவான புரிதலுள்ள ஒருவர், உங்களை பார்த்ததுமே நீங்கள் கருவறையில் இருந்தது, பிறந்திருப்பது, வளர்ந்திருப்பது இவற்றை ஏக காலத்தில் கண்டு கொள்வார். நீங்கள் குழந்தை யாயிருந்தது? இளைஞனானது, ஒரு பெண்ணை மணந்து கொண்டது, காதல் வயப்பட்டது, உங்களுடைய குழந்தைகளின் பிறப்பு, நீங்கள் முதுமையடைந்தது, மரணமடைவது, சவ ஊர்வலத்தில் கலந்து கொள்கிறவர்கள் என்று சகலத்தையும் ஒரே நேரத்தில் அவர் பார்த்துவிடுகிறார். முழுவதும் ஒட்டுமொத்தமாய் காட்சியளிக்கிறது.

அறிந்து கொள்வது கடினந்தான், காரணம், அது எப்படி சாத்தியம்? ஒரு குழந்தை பிறந்திருக்கிறது, உடனடியாக இந்தக் கணத்திலேயே அது எப்படி இருக்க முடியும்? அவன் ஒரு குழந்தையாகவோ, இளைஞனாகவோ, அல்லது முதியவனாகவோ கருவறையிலோ அல்லது சவப்பெட்டியிலோ, தொட்டிலிலோ அல்லது கருவறையிலோ இருக்கலாம். நம்மால் முழுமையாகப் பார்க்க முடியாததால் நாம் பிரித்துப் பார்க்க முற்படுகிறோம்.

சோவியத் ரஷ்யாவைச் சேர்ந்த ஒரு விஞ்ஞானி நுண்ணிய புகைப்படக் கருவி மற்றும் படச் சுருளை வைத்துக் கொண்டு மொட்டுக்களைப் படம் பிடித்தார். அதற்கு முன் யாரும் அத்தகைய முயற்சியை மேற்கொண்டதில்லை. படத்தில் இருந்தது பூக்கள். மொட்டுதான் படம் எடுக்கப்பட்டது, ஆனால் படத்தில் விழுந்ததோ பூக்கள். இத்தனைக்கும் அவை இன்னமும் மொட்டுக்களாகவே இருந்தன. என்ன ஆயிற்று? காரணம் இதுதான், மொட்டே பூவாகவும் இருக்கிறது ஏக காலத்தில். உங்களால் அதைப் பார்க்க முடியாது, காரணம் நீங்கள் பகுதிகளாய்ப் பார்க்கிறீர்கள். உங்களால் பகுதிகளாக மட்டுமே பார்க்க முடிகிறது. அடுத்து சில இதழ்கள் விரிகின்றன, பிறகு மேலும் சில இதழ்கள் கூடுதலாய், பிற்பாடு பூ முழுமையாய் விரிந்து விடுகிறது. ஆனால், ஒரு நுட்பமான நிழற்படக் கருவியைக் கொண்டு, 'கிர்லியன் போட்டோகிராபி' அந்தக் காட்சியொன்றை நிஜமாக்கிவிடுகிறது. உங்களால் ஒரு மொட்டைப் படமெடுக்க முடியும், ஆனால் படத்திலோ பூ தெரிகிறது. காரணம், அந்த மொட்டைச் சுற்றி சக்திப் பூ முன்பே இதழ் விரித்திருந்தது. கண்ணுக்குத் தெரியக்கூடிய பூவிதழ்கள் பிற்பாடு வரும். ஆனால் சக்திக்களம் முன்பே மலர்ச்சி பெற்றிருக்கிறது. அதுமுன்பே அங்கிருக்கிறது. பிற்பாடு உண்மையான பூ மலர்ந்தபோது புகைப்படபூவுடன் அது மிகச்சரியாக ஒத்திருப் பதைக் கண்டு அவர்கள் வியப்பிலாழ்ந்தனர்.

என்றாவதொரு நாள் ஒரு விதையைப் படமெடுப்பது சாத்திய மாகும். அது ஒரு புகைப்படமாக இருக்காது. விதை, முளை, மொட்டு, மலர், மரம், மரத்தின் வீழ்ச்சி, மறைந்து போகிற மரம் என்று பலவற்றையும் கொண்டதாய் அது இருக்கும்.

'தர்க்கம்... சர்வதாவிஷயம் அக்ரமம்...' வழக்கமாக எல்லா வற்றையுமே படிப்படியான செயல்முறையில்தான் நாம் புரிந்து கொள்வது. கர்மாவின் படி ஒரு குழந்தை இளைஞனாகிறான், இளைஞன் முதியவனாகிறான், மெதுவாகத்தான். வெள்ளித்திரையில் காட்டப்படுகிற படத்தைப்போல் வெகு நிதானமாய். அப்படித்தான் நாம் அதைப்பார்க்கிறோம், புரிந்து கொள்கிறோம். ஆனால் நிறைவான எல்லாமும் வெளிப்பட்டு விடும்.

சாதாரணமாக ஒரு சிறிய மின்பொறி விளக்கைக் கையில் வைத்துக் கொண்டு, நாம் இருட்டில் செல்வோம். அந்த விளக்கு ஒரு

மரத்தை நமக்குக் காட்டும்பொழுது. மற்ற மரங்கள் இருட்டில் மறைந்திருக்கும். விளக்கு மற்ற மரங்களின் பக்கம் நகர்ந்ததும், முதல் மரம் இருட்டில் மறைந்துவிடும். பாதையில் ஒரு சிறுபகுதியைத்தான் உங்களால் பார்க்க முடியும். ஆனால் நிறைவான அறிவோ (ultimate knowledge) மின்னலைப் போன்றது. திடீரென்று மரங்களடர்ந்த அந்தப் பகுதி முழுவதையுமே ஒற்றைப் பார்வையில் நீங்கள் பார்க்கிறீர்கள்.

இவையெல்லாமே குறியீட்டுத்தன்மை கொண்டவை. அந்தக் குறியீடுகளை (symbols) நீங்கள் விரிவுப்படுத்தவோ, நீட்சியுறச் செய்யவோ முயலாதீர்கள்.

தற்போது காலவரிசைப்படுத்தப்பட்ட நேரம் அரசியலாகவும் வரலாறாகவும், பொருளாதாரமாகவும், பணமாகவும், அறிவாகவும், சந்தையாகவும், வால்ஸ்ட்ரீட்டாகவும் இருக்கிறது. மனநிலைகள் சார்ந்த நேரமோ கனவு, கட்டுக்கதை, கவிதை, காதல், கலை, உள்ளுணர்வு, ஓவியம், நாடகம் என்றாகிவிட்டிருக்கிறது. இயல்பான நேரம் பிரபஞ்ச இருப்பிலும், அறிவியலிலும் மதத்திலும் உள்ளது.

அறிவியல் தன்னுடைய புறப்பொருள் சார்ந்த அணுகுமுறை கொண்டு பிரபஞ்சத்தை ஊடுருவப் பார்க்கிறது. மதமோ தனது அக உணர்வுடன் கூடிய அணுகுமுறையால் அதே மெய்ம்மையை ஊடுருவ முயல்கிறது. யோகா இரண்டின் கூட்டிணைவாகவும் இருக்கிறது.

'அறிவியல்' என்ற வார்த்தை அழகானது. அதன்பொருள் 'காண் பதற்கான திறன்'. அது மிகச்சரியாக 'தர்ஷன்' என்கிற இந்தியச் சொல்லைக் குறித்துக் காட்டுவது. 'தர்ஷன்' என்ற வார்த்தையை 'தத்துவம்' என்று மொழிபெயர்த்துவிடக் கூடாது. அதை அறிவியல் என்று மிகத்துல்லியமாக மொழிபெயர்த்துவிட முடியும் - 'காண்பதற் கான திறன்'.

புறத்தேயிருந்து கொண்டு, புறத்தில் இருந்து மெய்ம்மையை அறிய முயல்கிறது அறிவியல். மதமோ தன்னுடைய அகவுணர்வு சார்ந்த அணுகுமுறையின் மூலம் அதே மெய்ம்மையை அறிய முயல்கிறது. யோகா மிக உயர்ந்த கூட்டிணைவு. யோகா இரண்டுமாக இருக்கிறது. அறிவியலும் மதமும் சேர்ந்ததாய்.

யோகா ஒரு மேம்பட்ட அறிவியலும், மேம்பட்ட மதமும் ஆகும். யோகா இந்துவோ, இஸ்லாமோ, கிறிஸ்தவமோ அல்ல - அது மேம்பட்ட நம்பிக்கை - அது மேம்பட்ட அறிவியல் என்பது உண்மை. காரணம் அது மனிதனைப் பற்றிய, விஞ்ஞானியைப் பற்றிய விஞ்ஞானம். அது முடிவான குறிக்கோளாய் அமைந்த ஒன்றை (ultimate)த் தொடுகிறது. அதனால்தான் நான் அதனை ஆல்ஃபா மற்றும் ஒமேகா என்று அழைக்கிறேன், இறுதியான கூட்டிணைவு.

*வாழ்க்கையின் முன்பாக உள்ள நாட்கள் அறியப்படாத தாகவும், கணிக்கவியலாததாகவும் இருக்கின்றன. இப்போதெல்லாம், வாழ்வில் எஞ்சியிருக்கும் நாட்களை இம்மி பிசகாமல் அப்படியே வாழ வேண்டும் என்கிற எண்ணம் என்னுள் ஆழமாய் தோன்றியிருக்கிறது. எப்படி? ஏன்? எதற்காக? - எதுவுமே தெளிவாயில்லை. ஆனால் இந்த எண்ணம் தீவிரமாகிக் கொண்டே போகிறது. இந்தக் காரணத்தால் நான் என்ன சாப்பிடுகிறேன், என்ன செய்கிறேன், சுற்றிலும் என்ன நடக்கிறது என்பது பற்றியெல்லாம் நான் கவலைப்படவில்லை என்றே தோன்றுகிறது.*

*என்னுடைய குழந்தைப் பருவத்தில், ஒரு செத்துப்போன உடலைப் பார்த்ததில் இருந்து, மரணம் வரும் என்கிறபோது, வாழ்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்ற எண்ணம் எப்போதும் என்னுள் பளிச்சிட்டுக் கொண்டேயிருக்கிறது.*

*குழந்தைப் பருவத்தின் அடிநாளில் இருந்தே ஒருவகை ஆர்வமின்மை என்னுடைய ஒட்டுமொத்த வாழ்க்கை அமைப்பையும் சுற்றி சூழ்ந்து கொண்டது. அநேகமாய் அதுவே நான் மதத்தில் ஆர்வம் காட்டுவதற்கும், தங்களை வந்தடையவும் காரணமாய் வந்திருக்கும்.*

*அந்த உணர்வுகள் எனக்குத் தீங்கு விளைவிக்குமா என்ன?*

உறுதியாக. அவை தீங்கு செய்கிறவைதாம். காரணம் மதம் பற்றிய முக்கியக் கருத்தை - கருத்து முழுவதையும் நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள்.

முதலாவது விஷயம்: வாழ்க்கை கணிக்கவியலாததாய் (unpredictable) இருக்கிறது. அதனால்தான் அது அழகாயிருக்கிறது. அது கணிப்பிற்குட்பட்டதாயிருந்தால் யாரேனும் அதை வாழ விரும்பி யிருப்பார்களா என்ன? எல்லாமும் முன்பே வரையப்பட்டிருக்கு

மெனின். நீங்கள் பிறந்த அன்றே உங்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கை பற்றிய விவரங்களும் உங்களிடம் வழங்கப்பட்டிருந்தால் - ஓர் இரயில்வே அட்டவணை மாதிரி, நீங்கள் என்ன நடக்கப் போகிறது, எப்போது எப்படி என்றெல்லாம் ஆலோசனை பண்ணுவீர்கள்? அத்தகைய வாழ்க்கையை யார் வாழ விரும்புவார்கள்? அதில் எந்தக் கவிதையும் இருக்காது. அதில் ஆபத்தானவை எதுவும் இருக்காது. அதில் வளர்ச்சிக்கான வாய்ப்பேதும் இருப்பதில்லை. அது முற்றிலும் பயனற்றதாக இருக்கும். அந்நிலையில் நீங்கள் ஒரு 'ரோபோ'வாக, எந்திரத்தனமாக ஒரு பொருளாக இருப்பீர்கள்.

ஓர் இயந்திரத்தின் வாழ்க்கையை வேண்டுமானால் கணிக்க முடியும், ஆனால், ஒரு மனிதனுடையதை அல்ல. காரணம் மனிதன் ஓர் எந்திரமல்ல. ஒரு மரத்தையோ பறவையையோ உங்கள் கணிப்பிற்குட்படுத்த முடியாது. நீங்கள் எந்த அளவு உயிரோட்டத்துடன் இருக்கிறீர்களோ அந்த அளவு நீங்கள் கணிக்கவியலாதவராகி விடுகிறீர்கள். ஒரு மரத்தின் வாழ்க்கை ஒரு பறவையின் வாழ்க்கையைவிட மிகுதியும் கணிக்கக்கூடியதாகவே இருக்கும். ஒரு பறவையின் வாழ்க்கை ஒரு மனிதனின் வாழ்க்கையைவிட மிகக்குறைவாகவே கணிக்கக்கூடியதாக இருக்கும். ஒரு புத்தரின் வாழ்க்கையோ உங்கள் வாழ்க்கையை விட மிகவும் கணிக்க முடியாததாகவே இருக்கும்.

கணித்தற்கியலாத தன்மை (unpredictability) தடையற்றிருப்பதை, தன்செயலைத் தானே முடிவு செய்யக்கூடிய சுதந்திரத்தைக் குறிக்கும். கணிப்புத்தன்மை என்பது வரையறுக்கக்கூடியம் கூறுகளைக் குறிக்கும். உங்களைப் பற்றி முன்பே வரையறுத்துக் கூறமுடியு மென்றால் அந்நிலையில் நீங்கள் உயிர்த்துடிப்புடையவராய் (soul) இருக்க மாட்டீர்கள். அந்நிலையில் நீங்களே இருக்க மாட்டீர்கள். கணிக்க முடிகிறபோது நீங்கள் உயிரியல் சார்ந்த ஓர் இயக்க நுட்பமாக இருப்பீர்கள், அவ்வளவுதான்.

ஆனால், கணிக்க முடியாத வாழ்க்கை வாழத்தகுதியற்றது என்று நினைப்பவர்களும் இருக்கிறார்கள். இவர்கள்தாம் சோதிடர்களை நாடிச் செல்பவர்கள். இவர்கள் தாம் குறி சொல்பவர்களைத் தேடி அலைபவர்கள். இவர்கள் முட்டாள்கள். சோதிடர்களும், குறி சொல்பவர்களும் இவர்களுடைய முட்டாள்தனத்தை வைத்துப் பிழைக்கிறவர்கள்.

முதலாவது, நாளை நிலையானது அதுபற்றி அறிந்து கொள்ள முடியும் என்கிற கருத்து அதன் மிகச்சரியான ஆர்வத்தை அழித்துப் போட்டு விடுகிறது. அந்நிலையில் ஒரு திரைப்படத்தை இரண்டாவது முறை பார்ப்பது போலத்தான் நீங்கள் இருப்பீர்கள். நீங்கள் எல்லாவற்றையும் அறிந்திருப்பீர்கள் - அடுத்தடுத்து என்னென்ன நடக்கப் போகிறது என்பதை. நீங்கள் எதற்காக ஒரு படத்தை இரண்டுமுறை, மூன்றுமுறை, நான்குமுறை பார்த்துச் சலிப்படைவது? பார்த்த படத்தையே வலுக்கட்டாயமாக பலமுறை பார்த்தால் உங்களுக்குப் பைத்தியம்தான் பிடிக்கும். முதல்முறை பார்க்கிறபோது புதிதாய் ஒன்றை அறிந்துகொள்கிற ஆர்வம் உடையவராயிருப்பீர்கள். என்ன நடக்கப்போகிறது என்பதை வியப்புடன் கவனிப்பீர்கள். காரணம், நடக்கப்போவது என்னவென்று உங்களுக்குத் தெரிந்திருக்காது. அதனால்தான் நீங்கள் ஆர்வமுற்றவராயிருப்பது. ஆர்வம் உங்களுக்குள் சவால் விட்டு எரியும்.

வாழ்க்கை ஒரு புதிர். அதுபற்றி முன்கூட்டியே எதுவும் சொல்ல முடியாது. ஆனால், கணிக்க முடிகிற வாழ்க்கையைப் பெற ரொம்பப்பேர் விரும்புகின்றனர். காரணம் அதில் அச்சம் இருக்காது. எல்லாமே உறுதியாகிவிட்டிருக்கும். எதைப்பற்றியும் ஐயப்பட வேண்டியிருக்காது.

ஆனால், அதில் வளர்ச்சிக்கான வாய்ப்பு ஏதும் இருக்குமா? அபாயநிலைகளைத் துணிந்து ஏற்காமல், இடர்ப்பாடுகளுக்குத் தன்னை உட்படுத்திக் கொள்ளாமல் எவரேனும் வளர்ச்சி கண்டிருக்கிறார்களா? ஆபத்தே இல்லாவிடில் ஒருவருடைய தன்னுணர்வு கூர்மையடையுமா? நேர்வழியினின்றும் விலகிப் போகிற சாத்தியமில்லாவிடில், நேர்வழியில் இருப்பதன் முக்கியக் கருத்து என்ன? சாத்தான் இவ்விரண்டில் ஒன்றாக இல்லாவிடில் கடவுளை முயன்று அடைகிற சாத்தியம் உண்டா என்ன?

இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் சாத்தியக்கூறு (alternative) அவசியப்படுகிறது. எதிரிடையான ஒன்று உங்களைக் கவர்ந்திழுக்கும், திசை திருப்பும். தேர்ந்தெடுக்கும் நிலை உண்டாகிறது.

நீங்கள் மிகுதியான நுட்ப உணர்வும், உயிரோட்டமும், தெரிநிலையும் உடையவராய் இருக்க வேண்டும். ஆனால், எல்லாமே முன்கூட்டியே அறியப்பட்டதாய், தீர்மானிக்கப்பட்டதாய் இருக்கும் பட்சத்தில், அந்நிலையில் உணர்வோடு இருப்பதில் என்ன

முக்கியக்கருத்து இருக்க முடியும்? நீங்கள் உணர்வோடு இருந்தாலும் இல்லாவிட்டாலும் எந்த வேறுபாடும் இல்லை.

ஒன்று சொல்கிறேன் உங்களுக்கு, நீங்கள் எந்த அளவு உணர்வோடு இருக்கிறீர்களோ அத்தனைக்குக் குறைவாகவே கணிக்க முடியும். காரணம், கணிக்க முடிகிற விஷயத்தில் இருந்து நீங்கள் மிகுந்த உயரத்துக்கு, வெகு தொலைவுக்குச் சென்று விடுகிறீர்கள். நீங்கள் தண்ணீரை ஒரு குறிப்பிட்ட வெப்பநிலைக்குச் சூடுபடுத்தினால் தண்ணீர் நீராவியாகி விடுகிறது. இது கணிக்க முடிவது. ஆனால் ஒரு மனிதனின் விஷயத்தில் அதேமாதிரி இருக்காது. எந்த அளவு இழிவுபடுத்தினால் ஒரு மனிதன் கோபம் அடைவான் என்பதை நீங்கள் நிர்ணயம் செய்ய முடியாது. நீங்கள் எந்த அளவு இழிவுப்படுத்தினாலும் ஒரு புத்தரால் கோபப்படமுடியாது.

இதனையும் நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள்: சில சமயம் சின்னத் தூண்டலிலேயே நீங்கள் கோபாவேசமாகி விடுவீர்கள். அல்லது தூண்டுதல் இல்லாமலே உங்கள் கோபம் ஆவிபறக்கத் தொடங்கிவிடும். சில நேரங்களில் பெரிய அளவு தூண்டினாலும் அமைதிக்குலைவுக்குள்ளாக மாட்டீர்கள். அந்தக் கணத்தில் நீங்கள் எவ்வளவு தகுதியாக உணர்கிறீர்கள், எத்தனை விழிப்போடு உணர்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது அது.

யாசிக்கிறவர்கள் காலையில்தான் வருவார்கள், மாலையில் அல்ல, காரணம் மக்கள் காலையில் பகிர்ந்து கொள்கிற உணர்வோடு இருப்பார்கள் - மிகுந்த உயிரோட்டத்துடன், கவனமாய், ஓய்வு நிலையில் இருப்பார்கள் என்கிற மனவியலின் எளிய உண்மையை அவர்கள் புரிந்து கொண்டிருக்கிறார்கள். மாலையில் அவர்கள் களைப் பாகவும், வளமை அனைத்தையும் பயன்படுத்தித் தீர்த்தவர்களாயும், தெவிட்டு நிலையில் இருப்பார்கள். அவர்களிடமிருந்து எதையாவது பெறலாம் என்று நம்புவது சாத்தியமில்லை. மக்கள் தங்களை விரும்பத் தக்க விதமாய் உணர்கிறபொழுது - அந்நிலையில் பகிர்ந்து கொள்வார்கள். அது அவர்களுடைய உள்ளார்ந்த உணர்வைப் பொறுத்தது.

நினைவிலிருக்கட்டும், வாழ்க்கை நேர்த்தியாக இருக்கிறது, காரணம், சுறுசுறுப்பை மிகுதியான அளவில் அதிகரித்துக் கொள்ளும் திறமை உங்களிடம் இருக்கிறது. நாளை பற்றிய கவலை வேண்டாம். இன்றில் வாழுங்கள் இன்றைய பொழுது நாளையால்

பாழ்பட்டுவிடக்கூடாது. நீங்கள் அதற்கு இடமளிக்கக்கூடாது. இன்று தங்கு தடையின்றிச் செல்லுங்கள், இன்னும் அதிக சுதந்திரத்தை நாளை கொண்டுவரும்.

வருவதை முன்கூட்டியே அறிந்து கொள்ள (கணிப்பு) முற்படாதீர்கள். வெளிப்படையாய், வருவதை ஏற்பவராய் இருங்கள். நடப்பது எதுவாயினும் நடக்கட்டும், அதன் வழியே முன்னோக்கிச் செல்லுங்கள். அது கடவுளின் நற்கொடை. அது ஆழ்ந்த முக்கியத் துவத்தைக் கொண்டிருக்கும்.

'வாழும் நாட்கள் முன்னே உள்ளன, அவை அறியப்படாததாய், கணிக்கவியலாததாய் இருக்கின்றன. எஞ்சியுள்ள வாழ்க்கையை அப்படியே வாழ்ந்துவிடலாம் என்றோர் எண்ணம் என்னுள் மேலெழுந்தபடியே இருக்கிறது'. 'அப்படியே வாழ்ந்து விடலாமா?' அப்போது உங்கள் வாழ்க்கை சலிப்புடையதாகிவிடுமே. இந்த வாழ்க்கை சமய நம்பிக்கைக் கொண்டது, இது அப்படியிருக்காது என்று நீங்கள் விளக்கலாம். பரமசுகத்தை அனுபவிக்கிறவனே சமயம் சார்ந்தவன்.

ஆனால் எனக்குத் தெரியும், சலிப்புற்ற பலரும் தங்களைச் சமயம் சார்ந்தவராய்க் காட்டிக் கொள்கிறார்கள் என்பது. வாழ்க்கையில் போதிய விளைவை உண்டுபண்ண முடியாத - ஆக்கத் திறனற்ற வர்களிடம் மகிழ்ச்சிக்கான திறமை இருந்ததில்லை. அவர்கள் வாழ்க்கைக்கு எதிராகத் திரும்பிவிட்டவர், வாழ்க்கையுடன் முரண்பட்டவர்கள். வாழ்க்கையை - 'இந்த வாழ்க்கை பயனற்றது, அதில் அர்த்தம் ஏதுமில்லை, அது ஒரு விபத்து, குழப்பநிலை' என்று நிந்திக்கிற ஒரு நீண்ட மரபை அவர்கள் உருவாக்கியிருக்கிறார்கள். இவர்களைத்தான் நீங்கள் 'மகாத்மாக்கள்' என்கிறீர்கள். இவர்களைத்தாம் மிகச்சிறந்த 'மகான்கள்' என்கிறீர்கள். அவர்கள் உணர்ச்சி மிகைப்பு (neurotic) உடையவர்கள். அவர்களுக்கு மருத்துவ கவனிப்பு தேவைப்படுகிறது. அவர்கள் மருத்துவமனையில் சேர்க்கப்பட வேண்டியவர்கள். நீங்கள் புனிதர்கள் என்று அழைப்பவர்களில் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் பேர் வழிதவறிப்போகும் வக்கிரசிந்தையுடையவர்கள்தாம். ஆனால், நீங்கள் காண முடியாத ஒரு முனையில் தங்கள் வக்கிரத்தை அவர்கள் மறைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஈசாப் நீதிக்கதைகளில் இருந்து ஒரு கதை:

திராட்சையை அடைவதற்காக ஒரு நரி தாவிக் குதித்து முயற்சி பண்ணிக் கொண்டிருந்தது. அவை பழுத்து கவர்ச்சியுடன் இருந்தது. அவற்றின் வாசனையில் அந்த நரி மிகுந்த ஆர்வம் கொண்டுவிட்டது. ஆனால், திராட்சைக் கொத்துகள் எட்டாத உயரத்தில் இருந்தன. நரி ரொம்பவே முயன்றும் அதை எட்டிப்பிடிக்க முடியவில்லை. தன்னுடைய முயற்சி தோற்றதை யாரேனும் பார்த்திருப்பார்களோ என்று அது சுற்று முற்றும் நோட்டம் விட்டது.

ஒரு புதருக்குக் கீழே ஒளிந்து கொண்டிருந்த சிறிய முயலொன்று 'அத்தே, என்ன ஆச்சு? உன்னால அதைத் தொட முடியலையா?' என்று கேட்டது.

நரி சொல்லிற்று, 'அதெல்லாம் இல்லை. அந்த திராட்சை இன்னும் பழுக்கலை. ஒரே புளிப்பு' என்று.

நீங்கள் இதுவரைக்கும் மதத்தைப்பற்றி அறிந்திருப்பதும் அப்படித்தான். 'திராட்சை ஒரே புளிப்பு' - காரணம் இவர்களால் அதைப்பெற முடியவில்லை, எட்டிப் பிடிக்க முடியவில்லை. இவர்கள் தோற்றுப் போனவர்கள்.

மதத்துக்குத் தோல்வியுடன் ஆக வேண்டியது எதுவும் இல்லை. அது ஒரு நிறைவேற்றுதல், விரும்பியதை அடைதல், ஒரு மலர்ச்சி, ஒரு முக்கியக் கட்டம், உச்சநிலை. ஆபிரகாம் மாஸ்லோ மிகச் சரியாகவே சொன்னார், 'சிகர அனுபவங்கள்' என்று.

ஆனால் உங்களுடைய தேவாலயங்களிலும், மாடங்களிலும் கோயில்களிலும் உள்ளவர்களைக் கவனியுங்கள். தெவிட்டு நிலையில், சலிப்புற்று, தொங்கிப் போன முகங்கள். மரணத்தின் வருகைக்காகவும், மரணத்திடம் தங்களை ஒப்படைத்துக் கொள்ளவும் காத்திருப்பவர்கள். வாழ்க்கையுடன் மாறுபடுபவர்கள், வாழ்க்கை எதிர்க்கும் வெறிபிடித்தவர்கள், எங்காவது வாழ்க்கையின் அறிகுறியைக் கண்டாலேபோதும், அதன்மீது தாவி அதைக்கொன்று அழித்து விடுவார்கள். தேவாலயத்தில் நீங்கள் சிரிப்பதற்கு அவர்கள் அனுமதிக்கமாட்டார்கள், தேவாலயத்தில் நீங்கள் ஆடுவதற்கும் அவர்கள் இடமளிப்பதில்லை, வாழ்க்கையின் எந்த ஓர் அறிகுறியைக் கண்டாலும் தாங்கள் அதைத் தவறவிட்டதை அடையமுடியாமல் போனதைப் பற்றிய கவலை வந்துவிடும் அவர்களுக்கு.

மதம் தோற்றவர்களுக்கானதல்ல. அது வாழ்க்கையின் அகல, ஆழ, உயரங்களைக் கண்டு வாழ்ந்து, எல்லாப் பரிமாணங்களையும் அடைந்து, அனுபவங்களின் மூலம் செழுமையுற்று வாழ்க்கையில் வெற்றி பெற்றவர்களுக்கானது. இவர்கள் வாழ்க்கைக்கு எதிரானவர்களல்லர், வாழ்க்கையில் உறுதிப்பாடுடையவர்கள். வாழ்க்கை கடவுட்தன்மை கொண்டது என்று அவர்கள் சொல்வார்கள். உண்மையில் அவர்கள் சொல்வது, 'கடவுளைப் பற்றிய சகலத்தையும் மறந்துவிடுங்கள், வாழ்க்கையே கடவுள்' என்பதைத்தான். அவர்கள் அன்புக்கு எதிரானவர்களல்லர், காரணம், அன்பே வாழ்க்கையின் அடிப்படைச் சாரமாயிருக்கிறது. 'கடவுளின் தெய்விகமான சரீரத்தில் ஓடுகின்ற இரத்தம் போன்றது அன்பு' என்கிறார்கள் அவர்கள். மிகச்சரியாகச் சொல்வதெனில் உடலுக்கு இரத்தம் போன்றது வாழ்க்கைக்கு அன்பு. அவர்கள் எப்படி அதற்கு எதிராக முடியும்?

நீங்கள் அன்புக்கு எதிரானவர் என்றால் அப்படியே சுருங்கிப் போய் விடுவீர்கள். உண்மையிலேயே சமய நம்பிக்கை கொண்ட ஒருவர் மேலும் விரிவடைந்தபடி இருப்பார். அது தன்னுணர்வின் விரிவாக்கம், சுருங்குதல் அல்ல.

இந்தியாவில் மெய்ப்பொருளை பிரமன் என்கிறோம். 'பிரமன்' என்றால், 'விரிவடைந்து கொண்டேயிருப்பவன்' என்று பொருள். மேலும், மேலும் முடிவேயில்லாமல். அந்த வார்த்தையே அழகானது, மிகப்பெரிய முக்கியத்துவம் உடையது. வாழ்க்கை, அன்பு, தன்னுணர்வு இவற்றின் தடையின்றித் தொடர்கிற முடிவற்ற விரிவாக்கமாகவே கடவுள் இருக்கிறார்.

விழிப்பாயிருங்கள், காரணம் வாழ்க்கையுடன் முரண்படுகிற மதம் மிகவும் மலிவானது. சலிப்புற்ற நிலையில் அதை நீங்கள் அடைவீர்கள். தோல்வியுற்ற நிலையில் அதை நீங்கள் அடைவீர்கள். ஆக்கத் திறனற்றவராக, சோம்பேறியாக, நம்பிக்கையற்ற நிலையில், துயரத்தில் அதை நீங்கள் அடையக்கூடும். அது உண்மையில் மலிவானது, கீழ்த்தரமானது. ஆனால் உண்மையான, நம்பத்தக்க மதமோ மிகப்பெரிய விலையைக் கொண்டிருக்கும். வாழ்க்கையில் உங்களை நீங்கள் இழக்க வேண்டியிருக்கும். அந்த விலையை நீங்கள் கொடுக்க வேண்டியிருக்கும். இடர்ப்பாடு நிறைந்த வழியில் அது ஈட்டப்படுகிறது. வாழ்க்கையினூடே சென்றுதான் அதன் வருத்தங்களையும், மகிழ்ச்சிகளையும் அதன் தோல்விகளையும், வெற்றிகளையும் நீங்கள்

அறிய வேண்டியிருக்கும். ஒளிமிக்க நாட்களை இருண்ட தினங்களை அறியவும், வறுமையை செழுமையை அறியவும், அன்பை அறியவும், வெறுப்பை அறிந்து கொள்ளவும், வாழ்க்கையின் அடியாழத்தைத் தொடவும், உயரப்பறந்து சிகரத்தை வானத்தைத் தொடவும் வாழ்க்கையினூடே நீங்கள் சென்றாக வேண்டும். எல்லாப் பக்கங்களிலும், எல்லாப் பரிமாணங்களிலும் செல்ல வேண்டியிருக்கும். எதுவும் விடப்பட்டதாய் இருக்கக்கூடாது. மதம் ஒரு கண்டுபிடித்தல், அது வாழ்க்கையை வெளிப்படுத்துகிறது.

உண்மையில வேதனை அதில் ஒரு பகுதியாயிருக்கிறது. மகிழ்ச்சியின் அடிப்படையிலேயே எதையும் சிந்திக்காதீர்கள். இல்லையேல் வாழ்க்கையில் இருந்து வெகு சீக்கிரமே நீங்கள் வெளியேற வேண்டியிருக்கும். அதன் தொடர்பை விட்டுவிட நேரும். வருத்தமும் மகிழ்ச்சியும் சேர்ந்தது வாழ்க்கை. 'வருத்தம் மற்றும் மகிழ்ச்சி' என்பதைவிட, 'வருத்தம்கலந்த மகிழ்ச்சி' என்று சொல்வது சிறப்பு. காரணம் 'மற்றும்' என்பது பிரிக்கிறது. வருத்தம் - மகிழ்ச்சி, நரகம் - சொர்க்கம், இரவு - பகல், கோடை - குளிர், கடவுள் - சாத்தான் என்று எதிரெதிர் கொள்கை நிலைகளைக் கொண்ட வாழ்க்கை ஒரு மிகப்பெரிய வாய்ப்பு. அதை வாழ்ந்து பாருங்கள், துணிவோடு இருங்கள், இடர்ப்பாடுகளை ஏற்பவராய், அபாய நிலைகளைக் கடப்பவராய் இருங்கள். அந்நிலையில் முற்றிலும் மாறுபட்ட மதம் சார்ந்த புரிதலை அடைவீர்கள். அது கசப்பானதும் இனிப்பானதும் அனுபவங்களில் இருந்து அடையப்படுகிறது.

யார் இனிப்பான அனுபவங்களை மட்டுமே அறிந்து கசப்பான அனுபவங்களை அறியாதிருக்கிறாரோ அவர் முழுமையான மனிதராயிருக்கமாட்டார். அவர் எதுவும் இல்லாத ஏழையேயன்றி எல்லாம் படைத்த செல்வராக மாட்டார். அன்பை, அதன் அழகை, அதில் உள்ள அச்சத்தை அறிந்திராதவரும், காதலை அது ஏற்படுத்தும் பரவசத்தை, அதன் வேதனையை அறிந்திராதவரும், இணைதலைப் போலவே பிரிதலை அறிந்திராதவரும், வருகையைப் போலவே புறப்பாட்டை அறிந்திராதவரும் மிகுதியான அளவில் அறிந்திராத வர்தாம். இனிப்புப் பண்டங்களையே உண்டு வாழ்பவர் சற்று முன்பாகவேனும் நலக்குறைவுள்ளாவார் அல்லது தெவிட்டு நிலையில் சலிப்படைவார்.

வாழ்க்கை மிகப்பெரிய சவால். 'அதை இருக்கிறபடிக்கே வாழ்ந்து கழிப்போம்' என்று நீங்கள் சொல்வீர்களாயின் எஞ்சியிருக்கும் நாட்கள் வாழ்வதாய் இருக்காது. நீங்கள் சாவு வருவதற்கு முன்பே செத்துப்போய் விடுவீர்கள்.

நான் கேட்டறிந்தது:

ஓர் அழகான பெண் 'பேர்லிகேட்ஸ்' எனப்படும் விண்ணகத்தின் வாயிலை அடைந்தாள். புனிதர் பீட்டருங்கூட சிலிர்ப்புக்குள்ளானார். அந்தப் பெண் உண்மையிலே அத்தனை அழகாயிருந்தாள். புனித பீட்டரால் நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை. அவர், தம்முடைய கோப்புகளைப் புரட்டியபடி சொன்னார், 'எங்கிருந்து வருகிறாய்? என்ன செய்து கொண்டிருந்தாய், மண்ணுலகில் ஏதேனும் பாவங்களைச் செய்தாயா?' என்று.

அந்தப் பெண் சொன்னாள், 'இல்லை, ஒருபோதும் இல்லை'

பீட்டரால் நம்ப முடியவில்லை. 'உனக்கு மணமாகிவிட்டிருந்ததா?'

அவள் சொன்னாள், 'இல்லை, எனக்கு எப்போதுமே பாலுறவில் ஆர்வம் கிடையாது.'

'எந்த ஒரு ஆணுடனாவது சேர்ந்திருக்கிறாயா?'

அவள் சொன்னாள், 'இல்லை, நான் ஒரு கன்னிப்பெண்'

புனிதபீட்டர் அவளுடைய பதிவேட்டைப் பார்த்தார், எல்லாப் பக்கங்களுமே வெறுமையாய் இருந்தன. அவள் எந்தவொரு பாவத்தையும் செய்திருக்கவில்லை. ஆனால் எந்தப் பாவத்தையுமே செய்யாவிடில் எப்படி மாசற்ற ஒன்றை செய்திருக்க முடியும்? அவர் கவலைக்குள்ளானார்.

அந்தப் பெண் கேட்டாள், 'என்ன விஷயம்? நான் ஒழுக்கமான பெண்' என்று.

புனித பீட்டர் சொன்னார், 'நீ ஒரு தவறான கருத்துடனேயே வாழ்ந்திருக்கிறாய். ஒருவர் புண்ணியவானாக வேண்டுமென்றால் பாவியாக இருந்திருக்க வேண்டும். பதிவேடு வெற்றாக உள்ளது. நான் இப்போது ஒரேயொரு கேள்விதான் கேட்க வேண்டியிருக்கிறது. இந்த முப்பது ஆண்டுகளாய் நீ எங்கே இருந்தாய்?'

அவள் கேட்டாள், 'நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?' என்று.

பீட்டர் சொன்னார், 'நீ முப்பது ஆண்டுகளாகவே உயிரற்றவளாகத்தான் இருந்திருக்கிறாய் – நீ முன்பே அறிக்கை செய்து (report) கொண்டிருக்கவேண்டும். நீ வாழவேயில்லை' என்று.

உங்களால் புனிதமானவர் என்று அறியப்பட்டவர்களும் அதே நிலையை எதிர்கொண்டுதான் ஆகவேண்டும். அவர்கள் வாழ்ந்திருக்கவில்லை. நான் அதனை சமயத்திற்கு எதிரானது (irreligious) என்பேன். அது ஒரு மனவியல் சார்ந்த பிரச்சினை. கடவுள் உங்களுக்கு வழங்கிய வாய்ப்பை மறுப்பதும் மதத்துக்கு எதிரானதுதானே. அதை முழுமையாக வாழவில்லையெனில், அது மதத்துக்கு எதிரானதாகிவிடும். உங்களுக்குள் இறையாணையை மீறுகிற எண்ணம் எழுந்தால் கடவள் உங்களை அவ்விதமாய் படைத்திருப்பார். ரொம்பவும் கவலைப்படவேண்டியதில்லை. அதில் ஒரு முக்கியத்துவம் இருக்க வேண்டும். உங்கள் வளர்ச்சியில் அதுவும் ஒரு பகுதியாய் இருக்கும்.

பைபிள் கதை அருமையானது. கடவுள் ஆதாமிடம் சொல்கிறார், 'நீ விவேகம் என்கிற மரத்தின் கனியைத் தின்னக்கூடாது' என்று. அவர் ஆதாமின்பேரில் சூழ்ச்சியான ஆட்டத்தைத் தொடங்கினார். அது அவனுடைய ஆர்வத்தைத் தூண்டுவதாகவே இருந்தது. அதைவிட நீங்கள் தூண்டுவதற்கு ஒரு சிறந்த வழியைக் கண்டுபிடிக்க முடியாது. கடவுளின் தோட்டம் மிகப் பெரியதாயிருந்தது. தனியனாய் விடப்பட்டிருந்த ஆதாம், இன்னமும் அந்த மரத்தைக் கண்டு பிடிக்கவில்லை. எண்ணிப் பாருங்கள், தன்னுடைய சொந்த புத்தி சாதுர்யத்தைப் பயன்படுத்தவேண்டிய நிலையில் இருந்தான் ஆதாம், அந்த மரத்தை அவன் கண்டுபிடித்த பாடில்லை. கடவுளின் தோட்டம் அந்த அளவிற்கு எல்லையற்றதாயிருந்தது. கடவுளுக்கும் அது தெரியாமலில்லை. அவர் ஆதாமை முட்டாளாக்கினார். 'ஞாபகம் இருக்கட்டும், அந்த மரத்தின் கனியைப் புசித்துவிடாதே' என்று சொன்னார், அந்த மரம் மாறாத கருத்தாவேசமாகிவிட்டது. தற்போது ஆதாமுக்கு நல்லுறக்கம் இல்லை. இரவில் அந்த மரத்தைப் பற்றியே கனவு வந்தது. கடவுள் அப்படிச் சொன்னபோது அதில் ஏதோ இருக்கவேண்டும். கடவுளும் அந்த மரத்தில் இருந்துதானே புசிக்கிறார். இது சாத்தியமற்றதாய் தெரிகிறது. புகைபிடிக்கும் பழக்கமுள்ள தந்தை

மகனிடம், 'ஒருபோதும் நீ புகைக்காதே. அது ரொம்பக் கெட்டது. அதனால் நீ துன்பப்படுவாய்' என்று சொல்வதுபோலத்தான் இதுவும்.

உண்மையில் ஆதாம் அதைப்புசிக்க வேண்டும். கடவுள்தான் குற்றம் பண்ணினார். அவர் அப்படித்தான் இருக்கவேண்டியிருக்கும். காரணம், அவரே எல்லாவற்றுக்கும் அடித்தளமிடுகிறவர். ஆக, பாவச் செயல் நிகழ்ந்தால் அவரே குற்றவாளியாகிறார். புண்ணிய காரியம் நடந்தால் அதற்கும் அவரே காரணமாவார். எல்லாம் அவருடையது தான். நீங்கள் அவரை அடியாழத்தில் எப்போதும் காண முடியும். அன்றில் இருந்து இன்றுவரை அவர் சிரித்துக்கொண்டுதான் இருக்கவேண்டும்.

ஆதாம் புரிந்து கொள்ளவில்லை, கொஞ்சம் மனநிலைகளை ஆராயும் அறிவியல் தேவைப்பட்டது. அது மதம் சார்ந்த பிரச்சினையல்ல, மனநிலை சார்ந்த பிரச்சினை. அதன்பிறகும் கூட கடவுள், எதிர்பார்த்துக் கொண்டு அமைதியாய் அமர்ந்திருக்கவில்லை, காரணம் ஆதாம் கீழ்ப்படிகிறவனாய் இருக்கக்கூடும், அதைப் புசிக்காமல் இருந்துவிடலாம் எனவே, அவர் வேறு ஏற்பாடுகளையும் செய்ய வேண்டியிருந்தது, பாம்பு உட்பட. ஆதாம் ரொம்பவும் அமைதியான, கீழ்ப்படிதலுள்ள ஒரு நல்ல பையனாய் கடவுளுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அதனால்தான் பாம்போடு ஒரு பெண்ணையும் அவர் உள்ளே கொண்டு வந்திருக்கவேண்டும். பாம்பு ஏவாளைத் தூண்டியது, ஏவாள் ஆதாமைத் தூண்டினாள். தற்போது செயல் ரொம்பவும் எளிதாகிவிட்டது. ஆதாம் பழியை ஏவாளின்மீது போட முடியும், ஏவாள் பாம்பின்மீது போட முடியும். உண்மையில் பாம்புகள் பேசுவதில்லை - அவற்றால் பொறுப்பைத் தூக்கி கடவுள் தலையில் போட முடியாது. ஆனால் அவர்தான் பொறுப்பாளி.

சமயத்திற்கெதிரானதாய் ஒரேயொரு விஷயம் உண்டு. அது வாழ்க்கையை மறுப்பது, காதலை மறுப்பது. ஒரேயொரு மதந்தான் உண்டு. அது வாழ்க்கையை அதன் முழுமையில் ஏற்பது, அதனுள் அச்சமின்றி நுழைவது.

ஆக இந்த மனோபாவம் தீங்கு செய்யக்கூடியதுதான்.

எப்படி, ஏன், எதற்காக எதுவும் தெளிவாக இருக்கவில்லை. ஆனால், அது ஏன் தெளிவாக இருக்க வேண்டும் என்று

விரும்புகிறீர்கள்? அது முற்றிலும் தெளிவாக இருந்துவிட்டால் அதன் மொத்தக் கருத்தும் இழக்கப்பட்டு விடும். ஆட்டத்தை இழக்க வேண்டியதுதான். எல்லாமும் தெளிவாக இருந்துவிட்டால், எதைத் தேர்ந்தெடுப்பது என்று தெரியாமல் போய்விடும். தேர்ந்தெடுப்பதற்கான சாத்தியக்கூறே இருக்காது. அப்போது நீங்கள் வழிதவறிச் செல்ல முடியாது. அந்நிலையில் நீங்கள் நியாயமானதை மட்டுமே செய்வீர்கள். அப்புறம் நீங்கள் தடுமாற மாட்டீர்கள், அறியாமையில் சிக்க மாட்டீர்கள், கடவுளிடம் இருந்து வெகு தொலைவுக்கு விலகிச் செல்வது என்பதும் இல்லை. ஆனால், நீங்கள் தொலைதூரத்துக்குச் செல்ல வேண்டும் என்பது கடவுளின் விருப்பம். வெகுதொலைவு சென்றால்தான் வீடு திரும்ப வேண்டும் என்கிற பெருவிருப்பம் உங்களுக்கு ஏற்படும்.

உண்மையில் தற்போதுள்ள நவீன உளவியல் இதைத்தான் மிகச்சரியாகச் சொல்கிறது. 'ஒவ்வொரு குழந்தையும் தனது தாயிடம் இருந்து தொலைவில் இருக்க வேண்டும். முதலில் கருப்பையில் இருக்கிற குழந்தை, ஒருநாள் கருப்பையை விடு வெளியே வருகிறது. அதுதான் தாயிடம் இருந்து குழந்தை தூரம் செல்வதன் துவக்கம். தற்போது அவன் இதற்குமேலும் தாயின் ஓர் அங்கமாய் இருப்பதில்லை. அந்நிலையில் இணைப்புக்கயிறு துண்டிக்கப்படுகிறது, அவன் சுயேச்சையாய் செயல்படத் தொடங்குகிறான். ஆனால், இன்னமும் அவன் தாயைப்பற்றிக் கொண்டிருக்கிறான் தனது நெஞ்சோடு. காரணம், அவளே அவனுடைய ஜீவனாயிருப்பது, தெய்வமாயிருப்பது. கருவறையைவிட்டு வெளிவந்தபிறகும் தொடர்ந்து தனது தாயை அவன் பற்றிக் கொண்டிருக்கிறான். தாயை மையமாய்க் கொண்ட சூழலிலேயே அவன் தங்கிவிடுகிறான். ஆனால், அதன்பிறகு அதுவும்கூட போய்விட வேண்டியதுதான். குழந்தை வளர்கிறது. ஒருநாள் தாய்ப்பால் நிறுத்தப்படுகிறது. மார்பகத்தில் இருந்து குழந்தை விலக்கப்படுகிறது. தன் குழந்தையை சுயேச்சையாய் செயல்படும்படி தாய் கட்டாயப்படுத்துகிறாள். தற்போது தன்னுடைய உணவை அவனே தேர்ந்தெடுத்து, தானே உண்கிறான். பிறகு - அவன் பள்ளிக்கூடத்துக்குப் போகிறான், விடுதியில் தங்கிப் படிக்கும்படியும் இருக்கும். அப்போது முதல் அவன் தூரத்துக்கு, வெகுதூரத்துக்குச் சென்று விடுகிறான். அடுத்து, ஒரு பெண்ணிடம் அவன் காதல்வயப்படுகிறான். அதுதான் கடைசி அடியாய் எடுத்து வைக்கப்படுகிறது.

தாய்மார்கள் தங்கள் மருமகனை ஒருபோதும் மன்னிப்பதில்லை என்பதற்கு அதுதான் காரணம். காரணம் அந்த மருமகள் அவர்களுடைய பையனை முழுமையாய் அபகரித்துக் கொண்டு விடுகிறாளே. தற்போது. அந்த மகனுக்குத் தனக்கென்று ஒரு குடும்பம் இருக்கிறது. அதற்கு மேலும் அவன் தாயுடன் பிணைக்கப் பட்டிருப்பதில்லை. உணர்விலும் மிகச்சரியாக இதுவேதான் நடக்கிறது. மனிதன் தாயிடம் இருந்துபோய்விடுகிறான். நினைவில் வையுங்கள், கடவுள் தந்தையைக் காட்டிலும் அதிகம் தாயாகவே இருக்கிறார் என்பதை. கடவுளின் கருவறையில் இருந்து மனிதன் வந்தான், அந்நிலையில் அவர் அக்கறை காட்டினார்.

கவனியுங்கள், அவர் மரங்களிடமும், விலங்குகளிடமும் பறவைகளிடமும் அதிக அக்கறை எடுத்துக் கொள்கிறார். மனிதனிடம் அத்தனை அக்கறை இல்லை அவருக்கு. மனிதன் சுயமாய் செயல்பட வேண்டியிருக்கிறது. உலகிலேயே ரொம்பவும் வகையற்றுப்போன மிருகம் மனிதன் என்பதை நீங்கள் கருத்தூன்றிக் கவனிக்க வில்லையா? காரணம், கடவுள் தம்முடைய உதவிக்கரத்தைப் பின்னுக்கிழுத்துக் கொண்டதோடு, தாமும் பின்னடைந்துவிட்டார். மரங்கள் அவருடைய கருவறையில் இருக்கின்றன, பறவைகள் அவருடைய கருவறையில் இருக்கின்றன, மிருகங்கள் அவருடைய கருவறையில் இருக்கின்றன. அவையெல்லாம் மனிதனுக்கு முற்பட்டவை.

மறுபிறப்பு, பரிணாமம் குறித்த முழுமையான கொள்கை அது. கிழக்கில், ஒவ்வொரு மனிதனும் இந்தக் கட்டங்களைக் கடந்தே வந்ததாக நாம் சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஒரு காலத்தில் நீங்கள் சிங்கமாக இருந்தீர்கள், ஒரு காலத்தில் நாயாக இருந்தீர்கள், ஒரு காலத்தில் மரமாக இருந்தீர்கள். முன்னொரு காலத்தில் ஒரு பாறையாகவும் இருந்திருக்கிறீர்கள். பிறகு நீங்கள் மனிதனாகி விட்டிருக்கிறீர்கள். மனிதன் என்றால் கருவறையில் இருந்து நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்று பொருள். ஏடன் தோட்டம் கடவுளின் கருவறை ஆகும்.

ஆதாம் வலிந்து புறந்தள்ளப்பட்டான் ம்ம்...? வெளித்தள்ளுதல் (expulsion) என்ற சொல் சரியானதல்ல. பைபிள் கதையை கிழக்கிந்தியர்களாகிய நாம் எழுதியிருந்தால் 'கடவுள் தம்மிடமிருந்து தொலைதூரத்துக்கு அனுப்பிவிட்டார், அவனுடைய வளர்ச்சிக்காக'

என்று நாம் கூறியிருப்போம். காரணம், எப்போதும் உங்களுடைய தாயையே நீங்கள் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தால் அது வளர்ச்சிக்கு இடர்ப்பாடாயிருக்கும். நீங்கள் தாய்ப்பாலையே குடித்துக் கொண்டு இருந்திருந்தால் வளர்ச்சி சாத்தியப்பட்டிருக்காது. நீங்கள் குழந்தைத்தனமாகவே இருந்திருப்பீர்கள்.

மேலும் யாரோ ஒரு பெண்ணிடம் காதல் வயப்பட்டு விடுகிறீர்கள். அவள் 'உன்னுடைய தாயைக் கொன்றுவிடு' என்று சொன்னால், நீங்கள் உங்களுடைய தாயைக் கொல்வதுபற்றி சிந்திக்கத் தொடங்கிவிடுவீர்கள். அப்படித்தான் ஏவாளும் 'இந்தப் பழத்தைச் சாப்பிடு' என்று ஆதாமிடம் பேசி அவனை இணங்கவைத்தாள். இந்தக் கதையின் முக்கியத்துவம் என்ன? ஆதாம் கடவுளின் கட்டளைக்கு மாறாக, ஏவாளின் அறிவுரையைத் தேர்ந்து கொண்டதுதான் இதன் முக்கியத்துவம். அவன் சொன்னான், 'சரி, அந்தக் கிழவனை விட்டுத் தள்ளு. கவலைப்படவேண்டாம்' என்று. அந்த முட்டாள் பெண் ஏவாளின் அறிவுரையை அவன் தேர்ந்து கொண்டான்.

பெண்கள் மிகவும் அறிவுக்கு ஏற்புடையவர்களாக இருக்க வில்லை, அவர்கள் உள்ளுணர்வை நடக்கப்போவதை முன் உணர்ந்து வாழ்கிறவர்கள் என்பதே உண்மை. அவள் ஒரு பாம்பிடம் அறிவுரை பெற்றாள். ம்... அறிவுக்குப் பொருந்தா அந்தச் செயலைக் கூர்ந்து கவனியுங்கள் - உள்ளுணர்வுதான். ஆனால் ஒரு மனைவி அறிவுறுத்து கிறபோது கணவன் அப்படியே பின்பற்றவேண்டியிருக்கிறது.

ஆதாம் இந்த உலகுக்கு அனுப்பி வைக்கப்பட்டவன், புறந்தள்ளப் பட்டவன் அல்லன். கடவுள் எவரையேனும் வெளியேற்றுவாரா? அது சாத்தியமற்றது. அவருடைய இரக்கம் அதற்கு இடம் கொடுக்காது. நீங்கள் விலகிச் செல்ல வேண்டும், தவறுகள் செய்ய வேண்டும் என்பது உங்கள் வளர்ச்சியின் ஒரு பகுதியேயாகும், காரணம், அப்போதுதான் நீங்கள் தெரிநிலையோடும், எச்சரிக்கையோடும் இருப்பீர்கள். நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும் பட்சத்தில் தவறுகள் விட்டகலத் தொடங்கும். உங்கள் புகலிடத்துக்கு நீங்கள் திரும்புவீர்கள். கடவுள் உங்களை வரவேற்கத் தயாராயிருப்பதை கண்டு கொள்வீர்கள்.

கடவுள் உங்களுடைய மூலாதாரம் (source), உங்களுக்கு நேரிடுகிற அனைத்துக்கும் அவரே மூலமாய் இருக்கிறார்.

'எப்படி? ஏன்? எதற்காக? - எதுவுமே தெளிவாய் தெரிவதில்லை' என்று கேட்காதீர்கள். ஆம், அப்படித்தான் அது இருக்க

வேண்டியிருக்கும். எல்லாமே தெளிவாக இருந்துவிட்டால், ஏன் வளர்ச்சி தேவைப்படப் போகிறது? எதுவும் தெளிவாக இல்லாத காரணத்தால்தான் நீங்கள் விழிப்புணர்வுடன் வளர வேண்டி யிருக்கிறது. அவ்வாறாக செயல்கள் தெளிவாகின்றன.

முல்லா நஸ்ருத்தீன் மருத்துவமனையில் இருந்தார். அவருக்குக் கண்ணில் ஏதோ தொல்லை. ஒரு வாரத்திற்கு பிறகு மருத்துவர் கேட்டார், 'என்ன நஸ்ருத்தீன், மருந்துகள் உங்களுக்கு உதவுகிறதா?' என்று.

அவர் சொன்னார், 'நிச்சயமா. நான் தெளிவா, ரொம்பத் தெளிவா பார்க்க முடியுது. உதாரணமாக நர்ஸ் ஒவ்வொரு நாளும் பகட்டில்லாதவளாகிட்டிருக்கிறா' என்று. உங்களால் தெளிவாகப் பார்க்க முடிகிறபோது அந்த செவிலி பகட்டில்லாதவளாய் தெரிவாள். உங்களால் தெளிவாகப் பார்க்க முடியாதபோது ஒவ்வொரு பெண்ணும் அழகானவளாயிருப்பாள்.

எல்லாமே தெளிவாக இருந்து விட்டால் அப்போது உங்கள் கண்களை ஒளிமிக்கதாக்கிக் கொள்கிற அவசியம் இல்லை. மொத்த விஷயமும் இதுதான், மொத்த ஆட்டமும் இதுதான். செயல்நிலைகள் தெளிவாயில்லை. எனவே உங்கள் பாதையை நீங்கள் தேர்ந்து கொள்ள, உங்கள் மனதில் மேலும் தெளிவைக் கொண்டுவர வேண்டியிருக்கும். உங்களுக்குள் விழிப்புணர்வை நீங்கள் கொண்டுவர வேண்டும். அவ்வாறாக, பெருங்குழப்பத்தினுள் நீங்கள் மிகச்சரியாகச் சென்றுவர, பாதையைத் தேர்ந்து கொள்ள முடியும். குழப்பம் பெரிய அளவில் இருக்கிறது. அங்கே குழப்பத்துக்கான காரணம் சாத்தான் அல்ல, கடவுள்தான்.

அது ஒரு கோணல்மாணலான புதிர் ஹ்ம்ம்?... எல்லாமே தெளிவாக இருந்துவிட்டால் புதிரின் முக்கியக் கருத்து என்ன? ஒரு ஜிக்ஸா (jigsaw) புதிரை சின்னப்பையனிடம் கொடுக்கிறீர்கள், எல்லா பாகங்களையும் கலந்து வைத்து விடுகிறீர்கள். குழந்தைக்குக் குழப்பத்தை ஏற்படுத்திவிட்டுச் சொல்கிறீர்கள், 'இப்போ நீ செய்து பார்' என்று. அதைச் சரிசெய்வதன் மூலம் உண்மையிலேயே அவன் அதிகக் கவனமும், ஆழ்ந்த சிந்தனையும் கொண்டவனாகி விடுகிறான். ஒரு சிக்கலில்லாத புதிரை அவனிடம் கொடுப்பதில் அர்த்தமே யில்லை.

உலகம் ஒரு 'ஜிக்ஸா' புதிர். கடவுள் அதை ஒன்றாகக் கலந்து போட்டு, குழப்பத்தை உண்டு பண்ணுகிறார். இங்கே நானும் உங்களிடம் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன். நீங்கள் எப்படியோ முயன்று, உங்களுடைய ஜிக்ஸா புதிரைப் பொருத்த முயல்கிறீர்கள், நான் மறுபடியும் எதையோ செய்து உங்களைக் கலக்கி, குழம்ப வைத்துவிடுகிறேன். காரணம், அந்தப் புதிரில் நீங்கள் எந்த அளவுக்கு ஈடுபடுகிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் தெரிநிலை (aware) உடையவராகிவிடுகிறீர்கள். கிறிஸ்தவர்கள் தங்களைப் பின்பற்றுகிறவர்களுக்குக் கொடுக்கிற மாதிரி ஒரு வினா விடைப்பாடத்தை நான் உங்களுக்குத் தரவேண்டும் என்று நீங்கள் விரும்புவீர்கள். என்னிடம் வருகிற சிலர் அறிவற்றவர்களாய் இருக்கிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள் 'பகவானே, உங்களுடைய நூல்களிலிருந்து நீங்கள் என்ன விரும்புகிறீர்கள் என்று கண்டுபிடிப்பதே கடினம்.' மாசேதுங்கின் 'ரெட் புக்' மாதிரி கைக்கு அடக்கமாய், சட்டைப்பையில் வைத்துக் கொள்கிற மாதிரி சின்ன சைஸில் போட்டுக் கொடுக்கலாமே. அது மிகச்சரியாக, சுருக்கமாக நீங்கள் விரும்புவதைச் சொல்லிவிடும் அல்லவா' என்று.

நான் உங்களுக்கு 'ரெட் புக்'கைக் கொடுக்கப் போவதில்லை. நீங்கள் அதை விரும்புவீர்கள், அத்தோடு தீர்ந்தது. எந்த விழிப்புணர்வும் தேவைப்படாது. நீங்கள் 'ரெட் புக்'கை ஆய்ந்து பார்த்தீர்களானால் எல்லாமே தெளிவாக இருக்கும். எல்லா ரெட் புக்குகளும் எரித்துப் போடத்தான் லாயக்கு. உங்கள் வாழ்வின் புதிரை அவிழ்க்க உதவுகிற எதுவுமே உங்களுக்கு விரோதிதான். காரணம் புதிர் அவிழ்க்கப்பட்டு விடுகிறது, நீங்கள் தன்னுணர்வற்ற நிலைக்குள் 'தொப்'பென்று விழுந்து வைப்பீர்கள். அதனால்தான் லாவோட்சுவிடம் போதிய திறன் இல்லாத நிலையில் நான் பதஞ்சலியைக் கொண்டு வருகிறேன். பதஞ்சலி போதியதாய் இருக்காது என்றால் நான் புத்தரைக் கொண்டு வருகிறேன். அவரும் பயன்படவில்லையெனில் இயேசு, மகாவீரர் உண்டு. திலோபா, நரோபா என்று நான் கண்டு பிடிப்பேன் - அவர்களைப் பற்றி யாரும் தொல்லைப்படுவதில்லை. நான் உங்களைக் குழப்பிக் கொண்டேயிருப்பேன்.

இந்தக் குழப்பத்துக்கு நடுவில் நீங்கள் தெளிவாகிறீர்கள். உங்களைச் சுற்றியுள்ளவை அல்ல... தெளிவு என்பது உள்ளே இருக்கவேண்டும். தெளிவுகள் இரண்டு வகை. ஒன்று - உங்களைச் சுற்றியிருப்பவைகள் ஒழுங்கு செய்வதில் உள்ளது. உட்புற அலங்காரம்

செய்பவர் மேசை நாற்காலி போன்றவற்றை ஒழுங்குபடுத்துகிறார் - ஒவ்வொன்றும் உரிய இடத்தில் வைக்கப்படுகிறது - ஆனால் அந்நிலையிலும் நீங்கள் தெளிவடைவதில்லை. மற்றொரு தெளிவு இருக்கிறது - பொருள்களும் செயல்நிலைகளும் இருக்கிறபடி இருக்கின்றன. ஆனால், நீங்கள் தீவிர விழிப்புணர்வை முயன்று அடைகிறீர்கள். அதிக அளவில் எச்சரிக்கை உடையவராகிறீர்கள். நீங்கள் பொருள்களை மிக உள்ளார்ந்த விதத்தில் கூர்ந்து கவனிக்கிறீர்கள், இன்னும் அதிகத் தெளிவுடன் பார்க்கத் தொடங்குகிறீர்கள். பொருள்கள் அப்படியேதான் இருக்கின்றன, நீங்கள் தான் இயல்பு மாறிய வராகிறீர்கள். மாற்றம் நிகழ்ந்தது உங்களிடம், உலகத்தில் அல்ல.

அதுதான் பொதுவுடைமைவாதிக்கும், சமதர்மவாதிக்கும், அரசியல்வாதிக்கும், மதவாதிக்கும் உள்ள வேறுபாடு. அவர்கள் மார்க்ஸ், மாவோ, ஸ்டாலின் என்று உலகில் வகையினப் படுத்தப்படுகிறார்கள். அவர்கள் உங்களுக்காக உலகை நிலைப்படுத்த முயல்கிறார்கள். அவர்கள் உங்களுக்காக உணவைத் தங்களது பற்களால் அரைக்கிறார்கள், உங்களை குழந்தைகளாக்க முயன்று கொண்டிருக்கிறார்கள். நீங்கள் அரசின் மார்பில் பாலருந்தி வாழ முடியும். அரசு எல்லாவற்றையும் தெளிவாக்கி வைத்திருக்கிறது. எல்லாமே தேசிய மயமாக்கப்பட்டு, ஒவ்வொன்றும் உரிய இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. ஆக, நீங்கள் எந்தக் கவலையும் இல்லாமல் போய்க் கொண்டிருக்கலாம்.

புறவுலகில் அத்தகைய ஒழுங்கு முறைகளுக்கு நான் சாதக மானவன் அல்லன். உலகம் அழகான குழப்பத்தில் இருந்தால்தான் உங்களுடைய அகவிழிப்புணர்வுக்கு நீங்கள் போராடுவீர்கள். உங்களால் முக்கியக் கருத்தைப் புரிந்து கொள்ள முடியும் என்று நான் நம்புகிறேன். இருண்ட இரவில் செல்வதாயின் நீங்கள் அதிகக் கவனத்துடனும், எச்சரிக்கையுடனும் செல்வீர்கள்தானே. பட்டப்பகலில் அருமையான நெடுஞ்சாலையில் செல்கிறபோது கவனமும் விழிப்புணர்வும் தேவைப்படுவதில்லை.

பேய் வாசம் பண்ணுகிற வீட்டில் நீங்கள் எப்போதாவது ஓர் இரவு முழுக்கத் தனியே இருந்ததுண்டா? உங்களால் தூங்க முடியாது. வீட்டு முற்றத்தில் ஓர் இலைச்சருகு விழுந்தாலும் - சிறிய ஓசை கேட்டாலும் அப்படியே தாவிக் குதிப்பீர்கள். ஒரு பூனை எலிமீது பாய்ந்தாலும் நீங்கள் துள்ளிக் குதிப்பீர்கள். மென்காற்று அசைந்தாலும் மின்பொறி விளக்கைக் கையில் எடுத்துக் கொண்டு நிற்பீர்கள்.

பேய்வீட்டில் தங்குவதற்கு, சவாலை ஏற்றுக் கொண்ட ஒருவனைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவன் படுக்கையில் ஓய்வு கொள்ளப்போகும் நேரத்தில், அந்த விடுதிப் பணியாளை அழைத்து, 'எனக்கொரு விஷயம் தெரியவேண்டும். கடந்த சில வருடங்களில் இங்கு அசாதரணமாக ஏதேனும் நடந்திருக்கிறதா?' என்று கேட்டான்.

அந்த ஆள் சொன்னான், 'இருபது வருடங்களாக எதுவும் இல்லை' என்று.

அப்பாடா இருபது வருடங்களாக எதுவும் இல்லை என்று நிம்மதியடைந்தான் அறையில் தங்கியவன். பணியாள் அங்கிருந்து நகர முற்பட்டதும், 'பொறு. இருபது வருடங்களுக்கு முன்னால் என்ன நடந்தது என்று சொல்' என்றான்.

பணியாள் சொன்னான், 'இருபது வருடங்களுக்கு முன் அசாதாரணமான ஒன்று நடந்தது. நீங்கள் படுத்திருக்கிற இதே அறையில் இதே படுக்கையில் ஒருவன் தங்கியிருந்தான் - மறுநாள் காலையில் சிற்றுண்டிக்காகக் கீழே இறங்கி வந்தான். அதற்கு முன்போ, பின்போ அப்படி நடந்ததில்லை, அவன் படிக்கட்டுக்களில் இறங்கி வந்தான்' என்று.

தற்போது அங்கே தங்கியிருப்பவன் எச்சரிக்கையற்று இருப்பான் என்றா எண்ணுகிறீர்கள்? இந்த மனிதன் அயர்ந்து உறங்குவான் என்றா நினைக்கிறீர்கள்? உள அமைதியூக்கிகளும் (tranquilizers) உதவாதே. அவனுக்கு நீங்கள் *மார்பியா கொடுத்தாலும் வேலை செய்யாது. அவனுடைய விழிப்புணர்வு பளிங்கு போலாகி விட்டிருக்கும்.

புத்தர் தம்முடைய சீடர்களை ஒரு கல்லறையில் இரவு முழுக்கத் தங்கும்படி அனுப்பி வைத்தார். அவர்களை விழிப்புணர்வு உடைய வர்களாக்குகிற வழி. நீங்கள் கல்லறையில் தனித்திருக்கிறபொழுது உங்களால் உறங்க முடியாது. உண்மையில் தெரிநிலையோடு இருப்பதற்காக எந்த முயற்சியும் தேவைப்படாது. விழிப்புணர்வு எளிதாய் வந்து விடும். அது உண்மையிலேயே நேர்த்தியானது. நீங்கள் எப்போதாவது அதைச் சோதித்துப் பார்க்க வேண்டும்.

---

* *மார்பியா (morphia) - வலிகுறைக்கப் பயன்படுத்தப்படும் அபினிச் சத்து*

உங்களுடைய உள்ளார்ந்த விழிப்புணர்வின் தன்மைக்கேற்ப தெளிவு கிடைக்கும். 'எப்படி? ஏன்? எதற்காக?' - எதுவும் தெளிவாக இல்லை. முற்றிலும் நேர்த்தியானது. எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருக்கிறது.

இன்னொன்றையும் உங்களுக்குச் சொல்லிவிடுகிறேன். வாழ்க்கை தன்பொருட்டே இடம் பெறுகிறது. தனக்கு உரியதல்லாத தகுதியை அது கொண்டிருக்கவில்லை. அது இயற்கையாய் உள்ளது. வாழ்க்கையின் நோக்கம் பற்றிக் கேட்காதீர்கள். காரணம் நீங்கள் ஒரு தவறான கேள்வியைக் கேட்கிறீர்கள், பொருத்தமற்ற ஒரு கேள்வியைக் கேட்கிறீர்கள். வாழ்க்கை இறுதியானது. அதற்கப்பால் எதுவும் இல்லை. வாழ்க்கை தனக்காக வாழ்கிறது. ரோஜா எப்போதுமே ரோஜாதான் (நீங்கள் எந்தப் பெயரிட்டு அழைத்தாலும்). வாழ்க்கை இன்னும் அதிக வாழ்க்கையைப் பெற வாழ்கிறது. ஆனால் தனக்கு உரியதல்லாத தகுதியை அது கொண்டிருக்கவில்லை. ஏன் அப்படி என்று உங்களால் விடை கூறமுடியாது.

அதன் முக்கியக் கருத்தை நீங்கள் புரிந்து கொள்ளவும் 'ஏன்' என்பதற்கு உங்களால் விடையளிக்க முடியுமெனில், அந்நிலையில் மறுபடியும் அந்தக் கேள்வி எழும். 'வாழ்க்கை கடவுளுக்காக இருக்கிறது' என்று நீங்கள் சொன்னால் - அப்போது கடவுள் எதற்காக இருக்கிறார் என்ற கேள்வி எழும். அவர் இருப்பதன் நோக்கம் என்ன? அந்த விசாரணை ஏதாவவோர் இடத்தில் நிறுத்தப்பட வேண்டும். 'கடவுள் வாழ்க்கையைப் படைத்தாரா? கடவுளைப் படைத்தது யார்?' நீங்கள் கேட்கிறீர்கள். இல்லை. நான் அப்படிச் சொல்லவில்லை. நான் சொல்வது 'கடவுளே வாழ்க்கை' என்றுதான். அவர் வாழ்க்கையைப் படைக்கவில்லை. அவரே வாழ்க்கையாய் இருக்கிறார்.

ஆக நீங்கள் கடவுள் நம்பிக்கை இல்லாதவரென்றால் எனக்குப் பிரச்சினை இல்லை. ம்ம்... நீங்கள் கடவுள் என்கிற வார்த்தையை விட்டுவிடக் கூடும். அது ஒரு மொழி ஆராய்ச்சி பற்றிய கேள்வி மட்டுமே. 'கடவுள்' என்கிற வார்த்தையை நீங்கள் விரும்பினால் அது நல்லது. நீங்கள் விரும்பவில்லையா, அதுவும் நல்லதுதான். 'வாழ்க்கை போதியதாய் இருக்கிறது. காரணம், நான் சொற்களைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. நான் சொற்களைப் பற்றி வாதம் பண்ணுவதில்லை. முடிவான குறிக்கோளை - மெய்ம்மையைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள். வாழ்க்கை, கடவுள், அல்லா, ராம்,

கிருஷ்ணா அல்லது உங்கள் கற்பனைக்குப் பிடிபடுகிற எதுவாயினும் - ஜெஹோவா தாவோ: இவை எல்லாமே சொற்கள்தாம். வெளிப்படுத்தவியலாத, நுட்பமான ஏதோ ஒன்றை அவை சுட்டிக் காட்டுகின்றன.'

ஆனால், என்னிடம் நீங்கள் கேட்டால் வாழ்க்கை ரொம்பவும் அழகானது. கடவுள் என்கிறபோது நீங்கள் எப்படியோ தேவாலயத்தை மோப்பம் பிடித்து விடுகிறீர்கள். அது ஒரு மோசமான நறுமணம். அது விரும்பத்தக்கதாயில்லை. 'வாழ்க்கை' என்றதுமே 'சட்'டென்று பூக்கள், மரங்கள், பறவைகள்.. உங்கள் மனதின் எதிர்வினையை (reaction) ஏற்புத்தன்மையை (response) நீங்கள் எப்போதாவது கவனித்திருக்கிறீர்களா? நான் சொல்கிறேன், 'கடவுள்' என்றதும் - தலைமை கிறிஸ்தவக் கோயில்கள் தோன்றுகின்றன. பாதிரியார்கள் 'போப்'புகள், நீண்ட அங்கி, மகுடம் இப்படி. நான் 'வாழ்க்கை என்று சொல்கிறபோது - உங்களுடைய உணர்வு நிலையில் எந்தவொரு தேவாலயமும், கோயிலும் தோன்றாது. ஆறுகள் பாய்ந்தோடும், பூக்கள் மலரும், பறவைகள் பாடும், சூரியன் ஒளிவிடும், குழந்தைகள் சிரித்தபடி ஓடிக் கொண்டிருப்பார்கள், மக்கள் நேசம் புரிவார்கள், வானம், பூமி இவைதாம் கண்ணுக்குத் தெரியும். வாழ்க்கை உண்மையிலேயே அழகானது. அது தூய்மையற்றதோ, நேர்மையற்றதோ அல்ல. அது குருமார்களின் கையில் விழுந்துகிடக்கவில்லை. அதைக் களங்கப்படுத்தவோ, அதன் அழகைச் சிதைக்கவோ அவர்களால் முடியாது. அதை வடிவமைக்க முடியாதவர்கள் அவர்கள். வாழ்க்கை இயற்கையாக வாழ்கிறதாயிருக்கிறது.

ஆனால் நான் சொல்கிறேன் அது கடவுளாயிருக்கிறது என்று. முற்றிலும் இயற்கையாய்.

வாழ்க்கை எதற்காக இருக்கிறது என்று ஒருபோதும் கேள்வியெழுப்பாதீர்கள். யார் விடை சொல்லப் போகிறார்கள்? வாழ்க்கையன்றி வேறு யாரும் இல்லை.

ஒரு நோக்கம் இருந்தால்தான் வாழ முடியும் இல்லையேல் எப்படி வாழ்வது என்று எண்ணிவிடாதீர்கள். நான் அந்த நோக்கில் பார்க்கவில்லை. பூக்கள் மலர்கின்றன. 'ஏன்' என்பதெல்லாம் அவற்றுக்குத் தெரியாது. அவை அழகாகவே மலர்கின்றன. அவற்றிடம், 'உங்கள் மலர்ச்சியில் நோக்கம் இருக்கிறது' என்று கற்பித்தால், அவை இன்னும் சிறப்பாக மலரும் என்று நான்

கருதுவதற்கில்லை. அவை அப்படியே எப்போதும் போலத்தான் மலரும். தங்களிடம் உள்ளதை அதிகபட்சம் அவை செயல்படுத்தி விடுகின்றன. பாடுவதன் நோக்கத்தைச் சொல்வதால் குக்கூ பறவைகள் இன்னும் சிறப்பாகப் பாடுமென்றா நினைக்கிறீர்கள்?

மனிதனைக் கண்டு விலங்குகள் சிரிக்கும் என்று நான் எப்போதுமே எண்ணிக் கொள்கிறேன். மனிதனைப் பற்றி விலங்குகளிடையே பரவலாக பல 'ஜோக்குகள்' கட்டாயம் இருக்கும். உலகிலேயே மனிதன்தான் ரொம்பவும் விசித்திரமான, நகைக்கத்தக்க தோற்றநிலையைக் கொண்டிருக்க வேண்டும்.

ஒரு பூ மலர்ந்தபடி இருக்கிறது - மலர்வதற்கு எந்த நோக்கமும் தேவைப்படுவதில்லை. நீங்கள் ஒருவரை நேசிக்கக் கூடும், ஆனால், நோக்கம் என்ன? காதலுக்கு நோக்கம் எதுவும் தேவைப்படுமா? அந்நிலையில் விவகாரம் முழுவதையுமே நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். நோக்கத்துடன் காதலிக்கிறவர்களும் இருக்கிறார்கள்.

வாழ்க்கை ஒன்றும் பொருளாதாரம் (economics) சார்ந்தது அல்ல. அது தன்னளவில் இயல்பாகவே மதிப்புடையது. நீங்கள் அதைப் புரிந்து கொண்டதுமே ஒரு சிறந்த மிகப்பெரிய மாற்றம் உங்களிடம் நிகழும். பிறகு, நீங்கள் விடுகிற மூச்சும் நேர்த்தியானதாகிவிடும். மூச்சுவிடுவதும் ஓர் அமைதி நிரம்பிய, அழகான செயலாக இருக்கும். அது மட்டுமா, ஒவ்வொரு கணமும் தனக்கே உரிய பொருளைக் கொண்டிருக்கும். அந்தப் பொருள் (meaning) வெளிச் செல்வதாய் இருக்காது. அந்நிலையில் அந்தக் கணத்தை அதற்காகவே நீங்கள் வாழ்வீர்கள். நீங்கள் பாடுவதை விரும்புவதால் பாடுகிறீர்கள். ஆடுவதில் ஓர் அழகு இருப்பதால், நீங்கள் ஆடுகிறீர்கள். காதலைப் போல் வேறொன்றில்லை என்பதால் நீங்கள் காதலிக்க விரும்புகிறீர்கள். நீங்கள் நோக்கம் பற்றிக் கேட்பீர்களாயின் ஒரு விலைமாதின் மனமே உங்களிடம் இருக்கும். விலைமாது நேசிப்பாள், ஆனால் அதில் ஒரு நோக்கம் இருக்கும்.

'வாழ்க்கையின் நோக்கம் என்ன?' என்று கேட்டுக் கொண்டிருப்பவர்கள் விலைமாதின் மனதைக் கொண்டவர்கள். அவர்கள் வாழ்க்கையை இருக்கிறபடிக்கு ஏற்றுக் கொள்வதில்லை. அதைப் பொருளுடையதாக்க (meaning) அவர்களுக்கு வேறு எதுவோ தேவைப்படுகிறது.

இதனைப் புரிந்து கொள்ள முயலுங்கள். ஒவ்வொரு கணமும் தன்னளவில் போதுமானதாகவே இருக்கிறது. ஒவ்வொரு செயலும் தன்னளவில் முழுமையாகவே இருக்கிறது. நீங்கள் எதைச் செய்தாலும், அந்தச் செய்கை தன்னளவில் ஒரு சிறப்பைக் கொண்டிருக்கும். வேறென்ன தேவைப்படப் போகிறது.

அந்நிலையில் நீங்கள் உடனே தடையற்றவராகிவிடுகிறீர்கள். காரணம், தன்னுடைய நோக்கத்தைச் செயல்படுத்த வேண்டிய நிலையில் உள்ள ஒருவன், தடையற்றவனாயிருப்பதற்கில்லை. நோக்கம் என்பது எப்போதுமே வருங்காலத்தில் உள்ளது. நாளை நடக்கவிருக்கிற ஏதோஒன்றுக்காக இன்று நீங்கள் வாழ்கிறீர்கள், யார் கண்டது, நீங்கள் இறந்து போகலாம். அப்போது ஒரு முழுமையற்ற வாழ்க்கையையே நீங்கள் வாழ்ந்திருப்பீர்கள், நாளை மறுபடியும் வரப்போகிற இன்னொரு நாளைக்காக நீங்கள் வாழ்வீர்கள். காரணம் ஒவ்வொரு நாளையும் ஓர் இன்றுபோலவே வருகிறது. நீங்கள் நாளைய பொழுதுக்காக இன்றைய பொழுதை விட்டுக் கொடுக்கிற ஒரு தவறான செயல் முறையைக் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள்.

நீங்கள் நோக்கப் பிரச்சினைக்கு அடிமைப்பட்டவராயின் தொடர்ந்து கேட்டுக் கொண்டேயிருப்பீர்கள் – எது நடந்தாலும் நீங்கள் கேட்டபடி இருப்பீர்கள். 'அதன் நோக்கம் என்ன?' என்று. மக்கள் என்னிடம் வந்து, 'நாங்கள் தியானம் செய்யும்படி எங்களிடம் சொல்கிறீர்கள், ஆனால் அதில் என்ன நோக்கம் இருக்கிறது?' என்று. தியானம் செய்வதற்கு நோக்கம் என்ன வேண்டிக் கிடக்கிறது? தியானம் மிகவும் அமைதியானது, பேரின்பம் நிரம்பித்ததும்புவது. வேறெந்த நோக்கமும் அதற்குத் தேவையில்லை. அது ஏதோ ஒன்றுக்கான சாதனம் அல்ல. அது தன்னளவில் விளைவு கொண்டதாய் – கடைசி எல்லையாய் இருக்கிறது.

"இப்போது இருந்து நான் என்ன சாப்பிடுகிறேன், நான் என்ன செய்கிறேன், சுற்றிலும் என்ன நடக்கிறது – எதுவுமே என்னைத் தொல்லைப்படுத்துவதாய் தெரியவில்லை" நீங்கள் தொட்டறியும் உணர்வரற்றவராகவும், புரிந்து கொள்வதில் மந்தமானவராகவும் ஆகிவிடுகிறீர்கள். இதனை மதம் என்று எண்ணி விடாதீர்கள். இது மெள்ளச் செய்து கொள்ளும் தற்கொலை. உங்கள் இருப்புணர்வில் நீங்கள் நஞ்சூட்டுகிறீர்கள். அதிக எச்சரிக்கை, அதிக தெரிநிலை, அதிக நுண்ணறிவு கொண்டவராகி விடுங்கள்.

நீங்கள் நுட்ப உணர்வுடன் இல்லாவிட்டால், வாழ்க்கை உங்களுக்குப் பக்கமாய் கடந்து சென்றுவிடும். நீங்கள் அதை வாழ முடியாதவராகி விடுவீர்கள். நீங்கள் வாழ்வுடன் தொடர்பற்றவராய் இருப்பீர்கள். வாழ்க்கை உங்கள் மீது வர்ஷித்துக் கொண்டே இருந்தாலும், நீங்கள் விளைவுகளுக்கு மனதை ஆட்படுத்தாதவராய் இருக்கிறீர்கள், நீங்கள் அவற்றை ஏற்றுக் கொள்ள இசைவானவராக இல்லை. கடவுள் உங்களுக்கு வழங்கிக் கொண்டே இருப்பார், ஆனால் நீங்களோ ஏற்பதில்லை. அதிநுட்ப உணர்வோடு இருங்கள், ஏற்புத்தன்மை உடையவராயிருங்கள். ஒரு வீணையின் நரம்புபோல் இருங்கள், ம்ம்..? யாரோ அதைத் தொடுகிறார்கள், அதற்கு என்ன எதிர்ச்செயல். நரம்பு தொய்வுற்றால் நாதம் இருக்காது. நரம்பு இறுகினால் அறுந்து போய்விடும்.

இதுதான் மதம் இரகசியமாக வைத்திருக்கும் அறிவு. எப்படிச் சமநிலையில் வைத்திருப்பது, எப்படிச் சமநிலையற்று வளர்ந்திருப்பது என்பதாகும். வீணையின் நரம்புகள் முழுமையான அமைதி நிலை (சமநிலை)யில் இருக்க வேண்டும். அப்படியும் இல்லாமல், இப்படியும் இல்லாமல் நடுவாக இருக்கவேண்டும். மிகச்சரியாக நடுப்பகுதியில் இருக்கவேண்டும். நீங்கள் அதைத் தொடுகிறீர்கள், ஏன், தொடுவதற்கு மன்பே அது எதிர்ச்செயல் புரிகிறது.

ஒரு வீணை ஒரு குருவின் மூலம் சரியாகப் பொருத்தப்பட்டிருக்கிறது. அந்த வீணையை அறையின் மூலையில் வைத்துவிட்டு, மற்றொரு வீணையை எடுத்து வாசிக்கிறீர்கள். மூலையில் வைத்த வீணை, மற்றொரு வீணையின் இசைக்கு எதிர்ச்செயல் (respond) புரியும். அது எதிர்ச்செயல் புரிவதற்குக் காரணம், அந்த அதிர்வும், துடிப்பும் மற்றொரு வீணையில் இருந்து அதையும் சென்றடைவதுதான். ஒரு வீணை மிகப்பெரிய அளவில் அழகான அதிர்வை ஏற்படுத்தத் தொடங்குகிறது. அது ஒட்டுமொத்த அறையிலும் பரவி, அறையை நிரப்புகிறது. காத்திருக்கும் (மூலையில்) இன்னொரு வீணை நிறை உண்டாக்குகிறவிதத்தில் - தொய்வில்லாமல் இறுக்கமில்லாமல் அப்படியே நடுவாக இருக்கிறது. - உடனே அந்த நுட்பமான அதிர்வுகள் அதில் வந்து மோதுகின்றன. ஒரு மனிதக் கரம் படாமலே அது எதிர்ச்செயல் புரியத் தொடங்குகிறது. அது உயிரோட்டமுடையதாகிறது. அதுவே வாழ்வதற்கான வழி.

தியானம் உங்களைச் சமநிலையில், நடுவில் வைக்கிறது. அமைதி, அடக்கம், மகிழ்ச்சி உடையவராக்குகிறது. ஆக, வாழ்க்கை உங்களை வந்தடையும்பொழுது... அது ஒவ்வொரு கணத்திலும் வந்து கொண்டிருக்கிறது. அதன் வெகுமதிகள் இலட்சக்கணக்கில், நீங்கள் ஏற்பதற்குத் தயாராகவில்லை என்பதில் அவற்றைத் தவறவிட்டுக் கொண்டேயிருக்கிறீர்கள். ஒருவர் வீணை வாசித்துக் கொண்டிருக்க, கேட்கும் திறனற்ற ஒருவர் எதிரே அமர்ந்திருப்பதுபோலத்தான் நீங்கள். அதை நீங்கள் தவறவிட்டுக் கொண்டே இருக்கிறீர்கள்.

தான்சேன் என்கிற இசைக்கலைஞரைப் பற்றி, நான் வேறொரு இசைக்கலைஞர் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன். தான்சேன் வீணை இசைக்கும்போது விலங்குகள் கூடிவந்து நின்று அவருடைய இசையைக் கேட்டு நிற்கும். ஒரு சமயம் காட்டில், யானை, வரிக்குதிரை, புலி, சிறுத்தை, நரிகள், ஓநாய்கள் என்று சிறியதும் பெரியதுமாய் ஒரு கூட்டமே அவருடைய வீணை இசையில் மயங்கி நின்றன. அப்போது திடீரென்று ஒரு முதலை அந்த இசைக்கலைஞர் மீது பாய்ந்தது, அவரை விழுங்கிவிட்டது. எல்லா விலங்குகளும் கோபமாகிவிட்டன. 'இது என்ன முட்டாள்தனமான காரியம்?' என்றன. முதலை தன்னு டைய காதைக் குவித்துக் கொண்டு கேட்டது, 'என்ன, என்ன சொல்றீங்க?' என்று.

அந்த முதலைக்குக் காது செவிடு. காது கேளாதவராகவோ, கண் பாராதவராகவோ இருந்து விடாதீர்கள். உயிரோட்டத்துடனும் ஏற்புத் தன்மையுடனும் இருங்கள்.

கடவுள் வந்து எந்த நேரத்திலும் உங்களுடைய கதவைத் தட்டுவார். நீங்கள் நுட்ப உணர்வற்றவராயிருந்தால் அந்தத் தட்டும் ஒலியைக் கேட்கமாட்டீர்கள். இயேசு கூறுகிறார், 'தட்டுங்கள், அந்தக் கதவு உங்களுக்குத் திறந்து கொள்ளும்' என்று. நான் சொல்கிறேன், 'நீங்கள் கதவைத்தட்ட அவசியம் இல்லை – கடவுள் தட்டிக் கொண்டிருக்கிறார்' கவனியுங்கள். எல்லாப் பக்கங்களிலும் இருந்து கடவுள் உங்களை நாடி வருகிறார், தேடல் ஒருதலைப்பட்டதல்ல, நீங்கள் மட்டும் தேடுவதற்கு, அவரும் உங்களைக் காண விழைகிறார். ஆனால், நீங்கள் கிடைக்கக்கூடியவராய் இருக்க வேண்டும்.

கிடைக்கக்கூடியவராய் இருப்பதற்கு இது வழியல்ல.

'என்னுடைய சிறுவயதில் இருந்தே, ஒரு செத்துப்போன உடலைப் பார்க்கிற போதெல்லாம், சாவு வரும் என்கிற போது வாழ்வில் என்ன பொருளிருக்கிறது என்ற எண்ணம் என்னுள் மின்னலாய் பளிச்சிடும்.' அதனால்தான் வாழ்க்கையில் பொருளிருக்கிறது: மரணம் இல்லை என்கிற பட்சத்தில் நீங்கள் இங்கேயே இருந்து கொண்டிருப்பீர்கள் எப்போதும், எப்போதும் எப்போதைக்குமாய். செத்தால் போதும் என்கிற அளவுக்கு சலிப்படைவீர்கள். சாவுக்காகப் பிரார்த்திக்கத் தொடங்குவீர்கள்.

மகா அலக்சாண்டர் பற்றி ஓர் அருமையான கதை: அவர் இந்தியாவுக்கு வந்தபோது - இந்தியாவை வெல்ல வேண்டும், இந்தியாவில் இருந்த அறிவாளிகளைச் சந்திக்க வேண்டும். இறவாத்தன்மை அளிக்கும் கிணற்றில் நீர் பருக வேண்டும் என்று பல காரணங்கள் இருந்தன. அந்தக் கதை எந்த அளவு உண்மை என்று எனக்குத் தெரியாது. நான் அதற்கு உறுதிச்சான்று அளிக்க முடியாது, ஆனால் அது அழகானது. கதை உண்மைத் தன்மை பெற வேண்டும் என்றால் அது அழகானதாக இருக்க வேண்டும். அழகைத் தவிர வேறெதுவும் அத்தனை உண்மையாய் இருப்பதற்கில்லை. அவன் பயணம் செய்து, அறிவாளிகளை அழைத்துப் பேசி, எப்படியோ ஒரு வழியாய் கிணற்றைக் கண்டுபிடித்தான். ஆனால், அவனுக்கு வழிகாட்ட வந்தவர்களுக்கு அதில் ஆர்வம் இல்லை என்பதைக் கண்டதும் அவன் திகைத்துப் போனான். அவனை கிணற்றருகே அழைத்துச் சென்ற மனிதன்கூட அங்கே காத்திருப்பதில் விருப்பமற்றவனாய் தெரிந்தான்.

அலெக்சாண்டர் கேட்டான், 'மரணமற்ற வாழ்க்கையில் உனக்கு அக்கறை இல்லையா? நீ இறவாதிருக்க விரும்பவில்லையா?' என்று.

அந்த மனிதன் சிரித்தான். 'நான் வாழ்க்கையைப் பற்றி நிறையத் தெரிந்து கொண்டாயிற்று. குழந்தைத்தனமான அறிவுடையவர்களுக்குத்தான் அதில் விருப்பம் உண்டாகும்' என்றான் அவன்.

கிணற்றுக்குள் போக ஒரு படிக்கட்டு இருக்கிறது. அவன் உள்ளே சென்றான். அந்த நீரைப் பருகுவதற்காக அவன் குனிந்தபோது, அங்கே இருந்த ஒரு காக்கை சொன்னது, 'பொறு ஒரு நிமிடம் காது கொடுத்து கேள். அந்த முட்டாள்தனத்தைச் செய்யாதே. நான் அதைச் செய்திருக்கிறேன். நான் சாகமுடியாத காரணத்தால் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நான் ஆயிரமாயிரம் காரணத்தால் வாழ்ந்து

கொண்டிருக்கிறேன். தற்போது என்னுடைய ஒரே பிரார்த்தனை இதுதான்: 'கடவுளே, எனக்கு சாவைக்கொடு.' நானும் அறிவாளிகளை நாடிச் சென்று கேட்டிருக்கிறேன் (இந்த முட்டாள் தனத்துக்கு நச்சு முறிவு உண்டா? என்று. நான் ஒரு முட்டாள் காகம். அதனால் இந்த காரியத்தைச் செய்து விட்டேன். தயவு செய்து மறுபடியும் சிந்தித்துப்பார். பிறகு ஒருபோதும் உன்னால் சாகமுடியாது.'

அலெக்சாண்டர் அதன்பேரில் சிந்தித்து, அந்தக் கிணற்றைவிட்டு உடனே விலகிவந்துவிட்டான், காரணம் அவன் தவறு செய்ய அத்தனை சாத்தியங்களும் இருந்தன. அவன் அந்த நீரைப் பருகவில்லை என்று சொல்லப்படுகிறது.

மரணமே இல்லையென்றால் எப்படி இருக்கும் என்று எண்ணிப்பாருங்கள். வாழ்க்கை நிறையவே இழந்துவிடும். எதிரெதிர்க் கொள்கை நிலை இல்லையென்றால் எல்லாமே மந்தமாகி, நம்பிக்கையற்றுப் போக நேரிடும். இரவே இல்லாமல் பகல் மட்டுமே இருந்தால் எப்படி இருக்குமோ அப்படித்தான் அதுவும். பகல்... பகல்.. பகலெல்லாம் மிகுந்த வெப்பத்தின் கொடுமை, ஒளிவதற்கு இடமில்லை, இருளுக்குள் மறைவதில்லை. மறதியில் மூழ்கி எங்கேயும் மறப்பதற்கில்லை. அது ரொம்ப இடர்ப்பாடாகவும், கடினமாகவும், பொருளற்றதாகவும் இருக்கும். ஓய்வு தேவை. மரணமே ஓய்வு.

எனவே, கல்லறைக்கோ, சுடுகாட்டுக்கோ எடுத்துச் செல்லப்படும் சடலத்தைக் கண்டால் வாழ்க்கை பொருளற்றது என்று எண்ணமிடாதீர்கள். அப்படி எண்ணுவீர்களாயின் முக்கியக்கருத்தை நீங்கள் தவறவிட்டவராவீர்கள். ஒரு செத்துப்போன உடலைக் கண்டதும் சாவு வந்து கொண்டிருக்கிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். முடிந்த அளவு உயிர்த்துடிப்போடு செயல்பட இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். பின்பு இருக்கிறது அமைதி. அமைதியை உழைத்துப் பெறுங்கள்.

நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறவற்றுள் இதுவும் ஒன்று. நீங்கள் நன்றாக வாழவில்லையெனில், உங்கள் மரணமும் நல்லபடியாக அமையாது. உங்கள் மரணம் தெளிவற்றதாகிவிடும். அது மனக்கிளர்ச்சியை உண்டு பண்ணாது, அது நேர்த்தியற்றதாய் இருக்கும். நீங்கள் தீவிரமாக வாழ்ந்திருந்தால், உங்கள் மரணமும் தீவிரத்தன்மை கொண்டதாயிருக்கும். நீங்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்தால், மரணத்திலும் மகிழ்ச்சி இருக்கும். மரணம் உங்கள் வாழ்க்கையின் சுவையை அதன்

உச்சநிலைக்கு எடுத்துச் செல்லும். மரணம் ஏற்றத்தைக் கொடுக்கிறது. வளர்ச்சியின் உச்சத்தை அடையச் செய்கிறது. நீங்கள் ஓர் அழகான கீதத்தை இசைத்துக் கொண்டிருந்தால் மரணம் அதன் படிப்படியான ஒலி ஏற்றமாகவும் (crescendo) சிகரமாகவும் அமையும்.

மரணம் வாழ்க்கைக்கு மாறானது அல்ல.. மரணம் ஒரு பின்புலக்காட்சி. அது வாழ்க்கையை வளமடையதாக்குகிறது. வாழ்க்கையை மேலும் உயிரோட்டத்துடன் வைத்திருக்கிறது. அது ஒப்பீட்டு அடிப்படையில் வேறுபாடு கொண்டது.

'என்னுடைய குழந்தைப் பருவத்தின் தொடக்கத்தில் இருந்தே ஒருவகை ஆர்வமின்மை என்னுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையின் வடிவமைப்பிலும் சுற்றிச் சூழ்ந்திருக்கிறது. அநேகமாய் நான் மதத்தில் ஆர்வம் காட்டவும், உங்களை வந்தடையவும் அதுவே காரணமாய் இருந்திருக்கும்.' இருந்திருக்கலாம். என்னை நீங்கள் வந்தடைய அதுவே காரணமாய் இருக்கக்கூடும். ஆனால், தற்போது என்னை நீங்கள் புரிந்து கொள்ளவில்லை என்பதற்கும் அதுவே காரண மாகலாம். அது உங்களை என்னுடைய வாசலுக்குக் கொண்டு வந்தது. ஆனால், அது என்னுடைய இதயத்துக்குக் கொண்டு வராது.

தற்போது அதை தயவுசெய்து விட்டுவிடுங்கள். காரணம் நான் இங்கு வாழ்க்கையை கற்பிக்கிறேன். உண்மையில் நான் மரணத்தையும் கற்பிக்கிறேன். ஆனால், மரணம் ஓர் அழகான உண்மை, உங்கள் வாழ்க்கையோ ஓர் அருவருப்பான உண்மை. நான் ஓர் இரசவாத வித்தையை உங்களுக்கு கற்பிக்கிறேன்.

மரணத்தைக்கூட ஓர் அழகான அனுபவமாக மாற்றுவது எப்படி என்பதைக் கற்பிக்கிறேன். மரணமும் அழகானதாக மாறும் என்கிறபோது இந்த வாழ்க்கையும் அழகானதாகிவிடும் என்பதே உண்மை. இழிந்த உலோகங்களின் தரத்தை உயர்ந்த உலோகங்களின் தரத்துக்கு மாற்றுவது எப்படி என்பதையே இங்குநான் கற்பிக்கிறேன்.

நீங்கள் இதுபோன்ற எண்ணங்களுடன் இங்கே வந்திருக்கலாம். ஆனால் தற்போது அவற்றை விட்டுவிடுங்கள். இல்லையேல் உங்களுக்கும் எனக்கும் இடையே அது ஒரு தடையாகிவிடக்கூடும்.

***பகவானே, நீங்கள் ஒரு ஞானம் பெற்ற மனிதர் என்பது உண்மையா?***

அது தலையைச் சுற்றி மூக்கைத் தொடுகிற மாதிரி இருக்கிறது. இப்படிச் சொல்லலாம், தன்னைத் தொலைத்த கடவுள் மறுபடியும் தன்னைக் கண்டுபிடித்துக் கொண்டார் என்று. அயர்ந்து உறங்கிய கடவுள் தான் ஒரு மனிதனாகி விடுவதாய் கனவு கண்டு, தற்போது விழித்துக் கொண்டார். உங்கள் விஷயத்திலும் அதுதான் உண்மை. நீங்கள் வெறும் மனிதர்களல்லர். நீங்கள் தேவர்கள் - தங்களை மனிதர்களாய் கனவு கண்டு கொண்டிருக்கிற தேவர்கள். அதனால் மனிதர்கள் கடவுளாக முடியாது என்பதல்ல. அது தேவர்கள் விழிப்படைய வேண்டும். அந்நிலையில் மனிதன் பற்றிய கனவு மறைந்துவிடும் என்பதேயாகும்.

கிழக்கத்திய மனோபாவத்துக்கும் மேற்கத்திய மனோபாவத்துக்கும் உள்ள வேறுபாடு இதுதான். மேற்கு தாழ்வானதைக் கொண்டு உயர்வானதை விளக்க முற்படுகிறது. நீங்கள் முயன்று அடைகிற சமாதி நிலை - உதாரணமாக இராமகிருஷ்ணர் சமாதிநிலை அடைந்தவர் - அளவிற்குட்படாத உயர்ந்த ஒன்றில் (infinite) இழக்கப்பட்டுவிடுகிறது. ஃப்ராய்டைக் கேளுங்கள், அவர் சொல்வார் இது ஒரு வகையில் அடக்கிவைக்கப்பட்ட பாலுணர்வு என்று. பாலுணர்வைக் கொண்டு சமாதியை விளக்க வேண்டியிருக்கிறது. பாலுணர்வு பற்றி என்னிடம் கேட்டால், நான் சொல்வேன் அது சமாதிபற்றிய முதல் கண்ணோட்டம் என்று.

உயர்ந்த ஒன்றை எழுச்சி குறைந்த ஒன்றாக தாழ்த்திவிடக் கூடாது. இழிவான ஒன்றைத்தான் மேலான ஒன்றாக உயர்த்த வேண்டும். நீங்கள் மார்க்ஸிடம் கேட்டால், அவர் சொல்வார், உணர்வுநிலை என்பது பருப்பொருளின் (matter) இடைவிளைவுப் பொருள் (by-product) என்று. என்னைக் கேட்டால் நான் சொல்வேன் உணர்வு நிலையின் மாயையே பருப்பொருள் என்று.

கிழக்கிந்தியர்களாகிய நாம் சேற்றை - மாசுள்ள சேற்றை தாமரையைக் கொண்டு விளக்க முயல்கிறோம். மேற்கில் உள்ளவர்கள், அழுக்கான சேற்றைக் கொண்டு தாமரையை விளக்க முயல்கிறார்கள். அது மிகப்பெரிய வேறுபாட்டை உண்டு பண்ணுகிறது. சேற்றைக் கொண்டு, சேற்றில் இருந்து தோன்றிய தாமரையை விளக்க முற்படுகிறபோது, தாமரை மறைந்து சேறு மட்டுமே உங்கள் கையில் எஞ்சுகிறது. எல்லா அழகும், எல்லாச் சிறப்பும், எல்லா உண்மையும் மறைந்து விடுகின்றன. அழுக்கு மட்டுமே உங்கள் கையில் இருக்கிறது.

உயர்ந்ததும், தாழ்ந்ததும் சேர்ந்தே இருப்பதால் எல்லாவற்றையும் தாழ்நிலைக்கும் குறைத்துவிட முடிகிறது. ஏணியின் கடைசிப்படி ஏணியின் முதல்படியுடன் இணைந்திருப்பதால், அதில் தவறேதும் இருப்பதாய் தெரியவில்லை. ஆனால், அறிந்து கொள்ள வேண்டிய முக்கியத்துவம் உடையவை அநேகம்.

நீங்கள் தாமரையைக் கொண்டு சேற்றை விளக்குகிற போது, 'தாமரை சேற்றில் முளைத்தது என்கிற நிலையில், சேறு ஒன்றும் மாசுடையதாகாது' என்று சொல்வீர்கள். சேற்றில் மறைந்திருந்து அல்லவா தாமரை வெளிப்பட்டது, சேறு மாசுடையதாயின் (தூய) தாமரை அதிலெப்படித் தோன்றியிருக்க முடியும் என்பீர்கள். நீங்கள் சேற்றைக் கொண்டு தாமரையை விளக்குவீர்களாயின், அழுக்கான சேறு மறைந்து உங்கள் கைமுழுக்க தாமரைகளாயிருக்கும்.

தற்போது நீங்கள் தாம் தேர்வு செய்ய வேண்டும். கிழக்கு உங்களைத் திடீரென்று செழுமையும், சிறப்பும் கடவுட் தன்மையும் உடையவராக்குகிறது. மேற்கு உங்களை சாதாரணமான, உடல்சார்ந்த (material), வெறும் பொருளாகக் குறைத்து விடுகிறது. மனிதர்களிடமுள்ள மகத்தானவைகளெல்லாம் சந்தேகத்துக் குரியதாக்கப்பட்டு விடுகிறது.

நினைவிருக்கட்டும், கடவுள் நிலையில் இருந்து கடவுளாகிற *பரிணாமத்தை (evolution) நீங்கள் கொண்டிருக்கிறீர்கள்.

இரண்டுக்கும் இடையில் இருக்கிறது உலகம். அதனால்தான் நாம் ஒரு கனவு என்று அதைச் சொல்கிறோம். மாயா – ஒருகனவு. தாம் தொலைந்து போனதாக ஒரு தேவர் கனவு காண்கிறார். அதை அனுபவித்து மகிழுங்கள். அதில் தவறேதும் இல்லை. சற்று முன்பாகவோ அல்லது பின்பாகவோ நீங்கள் விழித்தெழுகிறீர்கள். சிரிக்கிறீர்கள். அது ஒரு கனவு.

கடவுளைப் பற்றி உளப்பகுப்பாய்வாளர்களிடம் நீங்கள் கேட்டால் அவர்கள் சொல்வார்கள், அது உங்கள் கற்பனையில் உண்டானது என்று. சங்கரரிடமோ, கிழக்கத்திய மகான்களிடமோ கேட்டால், நீங்கள் கடவுளின் கற்பனையில் உண்டான பொருள் என்றுதான் சொல்வார்கள். கடவுள் உங்களைப் பற்றி கனவு காண்கிறார், கற்பனை செய்கிறார்... ஃப்ராய்டிடம் கேளுங்கள், அவர் சொல்வார், 'கடவுளா? என்ன கனவு

---

* *பரிணாமம் - படிப்படியான வளர்ச்சி*

காண்கிறீர்களா? நீங்கள் ஏதோ கற்பனை செய்து கொண்டிருக்கிறீர்கள்' என்று.

இரண்டுமே உண்மைதான். நீங்கள்தான் தெரிவு செய்து கொள்ள வேண்டும். நீங்கள் காலத்துக்கும் நம்பிக்கை இழந்தவராய் வேதனையில் கிடக்க விரும்பினால் மேற்கத்திய மனோபாத்தைத் தெரிவு செய்து கொள்ளலாம். நீங்கள் மலர்ச்சியும், மகிழ்ச்சியும் கொண்டவராய்த் திகழ விரும்பினால் கிழக்கத்திய மனோபாவத்தைத் தேர்ந்து கொள்ளுங்கள்.

*பகவானே, தாங்கள் வலிமை மிக்க கொலைகாரர். உங்களுடன் இருந்த ஒருவருட காலத்தில், உங்களுடைய நஞ்சு மெதுவாக என்னுடைய மனதுக்குள் வேலை செய்யத் தொடங்கி விட்டது. நான் மேற்கொள்ளும் நடிப்பு மாசுடைய தாகவும், அருவருக்கத்தாயும் இருக்கிறது. எல்லாமே குழப்பமுற்று காணப்படுகிறது. ஆனால், தற்போது இத்தகைய குழப்பத்தில் கடவுள் பிரவேசிப்பதற்கான ஒரு சிறிய வாயிலை எப்படிக் கண்டுபிடிப்பது?*

விடுங்கள், அது கடவுளின் கவலை. நீங்கள் எதற்காகக் கவலைப்பட வேண்டும்? நீங்கள் நீங்களாக இருங்கள். வழியை அவர் கண்டுபிடித்துக் கொள்வார்.

நீங்கள் சொல்வது சரிதான் - நான் தீர்த்துக்கட்டுகிற ஆள்தான் - கிட்டத்தட்ட ஒரு கொலைகாரன்.

மருத்துவமனையில் ஒருவன் செத்துக் கொண்டிருந்தான், அவன் மருத்துவரிடம், 'டாக்டர், நான் ரொம்பவும் கவலைக்குள்ளாகி இருக்கிறேன். நான் செத்துக் கொண்டிருப்பதாய் தெரிகிறது.'

மருத்துவர் சொன்னார், 'கவலைப்படாதே. அதை என்னிடம் விட்டுவிடு' என்று.

'நானும் அதைத்தான் உங்களுக்குச் சொல்கிறேன், என்னிடம் விடுங்கள். நான் உங்களைக் கொன்று விடுவேன். காரணம், அதுதான் உங்கள் வலி, துன்பம் இவற்றில் இருந்து விடுவிக்கிற ஒரே வழி. நான் கொடுக்கிற எதிர்ப்பின் மூலம் நீங்கள் மறுபிறவியையெடுப்பீர்கள்.'

*நீங்கள் பாலுணர்வு பற்றி நிறையவே சொல்லியிருக் கிறீர்கள். அது விரும்பத்தக்கதே, காரணம் வெகு நீண்ட காலமாகவே அது இருட்டடிப்புக்குள்ளாயிருந்தது. ஆயினும்,*

*நீங்கள் ஓரினச் சேர்க்கை பற்றிப் பேசியதாய் நான் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. அப்படியே சொல்லி யிருந்தாலும் ரொம்பச் சுருக்கமாகவும், உண்மையாகவுந் தான் அது இருந்திருக்கும். நீங்கள் குறிப்பிட்டது போல், 'இந்த வக்கிரச் செயலுக்கு' எது காரணம் என்பது முக்கியமல்ல. தயவு செய்து அதைப்பற்றி பேசுங்கள். ஓரினச் சேர்க்கை இந்த உலகத்தில் இருந்தது, இருக்கிறது, எந்தவொரு உடம்பிலும் ஆண்தன்மையும் பெண்தன்மை யும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டிருக்கிறது தானே. தந்திரா மாற்றினக் கவர்ச்சி (இயற்கைப் பாலுணர்வு) கொண்டவர்களுக்கு மட்டுந்தானா? மக்கள் தங்களுடைய ஓரினச் சேர்க்கைக்கான போக்குகளை அடக்கி வைத்துக் கொள்ள வேண்டுமா?*

முதற்கண், இந்தக் கேள்வி கேட்டவர் தம்முடைய கையொப் பத்தை அதில் இடவில்லை. அவர் அதுபற்றிய குற்ற உணர்வு கொண்டிருக்கிறார் என்பதையே அது காட்டுகிறது. தம்முடைய பெயரை வெளிப்படுத்த அவர் விரும்பவிலை. கேள்வியில் தெரிவிப்புக்குறி இல்லை என்பதால், அவர் ஓரினச் சேர்க்கை குறித்து முன்பே வெறுப்பு கொண்டவராக இருக்கவேண்டும்.

நான் எந்த ஒன்றுக்கும் எதிரானவன் அல்லன், பலவற்றுக்கும் சாதகமாகவே இருக்கிறேன். நான் சேற்றுக்கு எதிரானவன் அல்ல, ஆனால் தாமரைக்குச் சாதகமானவன். பாலுணர்வு நிலைமாற்றம் அடையப்பட வேண்டியது. அது நிலைமாற்றம் அடையவில்லை என்றால், உங்கள் இருப்புணர்வின் கீழ்ப்படியிலேயே நீங்கள் இருந்து கொண்டிருக்க வேண்டியதுதான். நீங்கள் முதற்கண் புரிந்து கொள்ள வேண்டியது - நான் பாலுணர்வு பற்றிப் பேசுவது நீங்கள் அதைப்புரிந்து கொண்டு, கடந்து செல்லவேண்டும் என்பதற்காகத்தான்.

மாற்றினக் கவர்ச்சியைவிட ஓரினக் கவர்ச்சி தாழ்வானதே. அதில் தவறேதும் இல்லை - கீழ்ப்படி (கடைசிப்படி) இன்னமும் உங்கள் ஏணியில் இருக்கத்தானே செய்கிறது. அது கடந்து செல்லப்பட வேண்டியது. இரண்டாவதாய், நீங்கள் நினைவில் வைக்கவேண்டியது ஓரினச் சேர்க்கை கீழானபடி என்பதைத்தான்.

ஒவ்வொரு குழந்தையும் தனக்குத்தானே இன்பம் காணுகிறது. எல்லாக் குழந்தைகளுமே கரப்பழக்கத்தின் மூலம் செயற்கை சிற்றின்பம் காணும். அது ஓர் நிலை. குழந்தை அதற்குமப்பால் செல்ல

வேண்டியது. ஒவ்வொரு குழந்தையும் தனது பிறப்புறுப்பைத் தொட்டுவிளையா விரும்பும். அது மகிழ்ச்சியளிப்பது. அதில் தவறேதும் இல்லை ஆனால் அது குழந்தைத்தனமானதே. அது பாலுறவுப் பற்றிய முதல்பாடம் - ஒரு ஒத்திகை. முன்னேற்பாடு எனலாம். ஆனால் முப்பத்து ஐந்து. நாற்பது. அறுபதில் இருந்து கொண்டு சுயஇன்பம் காண்கிறீர்கள் என்றால் ஏதோ கோளாறு இருக்கிறது.

ஏதோ கோளாறு என்று நான் சொல்கிறபோது, நீங்கள் வளர்ச்சியுற வில்லை. உங்களுடைய புத்தி சார்ந்த வயது தடைப்பட்டிருக்கிறது என்பதையே நான் கருத்தில் கொள்கிறேன்.

தனக்குத்தானே இன்பம் காணும் கரப்பழக்கத்திற்கு பிறகு குழந்தை ஓரினச் சேர்க்கையில் நாட்டமுடையதாகிறது. பத்து வயதை நெருங்கும்போது அது ஓரினச் சேர்க்கையில் நாட்டம் கொள்ளும். தன்னுடைய உடம்பைப் போன்ற மற்றோர் உடம்பின் மீது ஆர்வம் காட்டும். இதுவே இயல்பான வளர்ச்சி. முதலில் தன்னுடைய உடம்பில் அவனுக்கு ஆர்வம் உண்டாகிறது. பிறகு தன்னுடைய உடம்பைப் போன்ற மற்றொரு உடம்பில் ஆர்வப்படுகிறான். ஒரு பையன் மற்ற பையன்களிடமும், ஒரு பெண் மற்ற பெண்களிடமும் ஆர்வம் காட்டுகிறார்கள். அது இயல்பான நிலை. ஆனால் அந்தப் பையன் தன்னிடமிருந்து விலகி, தன்னுடைய பால்சார்ந்த சக்தியை - பாலுணர்வின் உந்துதலை (bibido) மற்ற பையன்களிடம் கொண்டு செல்கிறான். இது இயல்பாகவ படுகிறது, காரணம் மற்ற பெண்களைவிட மற்ற பையன்கள் அவனைப் போலவே இருப்பதுதான். நல்லது, அதிலேதும் தவறில்லை. ஆனால் அறுபது வயதிலும் நீங்கள் ஓரினச் சேர்க்கையாளராய் இருந்தால் உங்கள் மனவளர்ச்சி தடைப் பட்டிருப்பதாகத்தான் அர்த்தம். நீங்கள் சிறுபிள்ளைத் தனமானவர் என்றே சொல்லவேண்டும். அதனால்தான் ஓரினச் சேர்க்கையாளர்கள் சிறுபிள்ளை மனோபாவத்தைத் தக்கவைத்துக் கொண்டிருப்பதுடன், அவர்கள் கவலையற்றவர்களாய் காட்சியளிக்கிறார்கள். பாலுணர்வு செல்லக்கூடிய அதிகபட்ச நிலை அதுதான். ஆனால் அதுவும்கூட ஓர் அளவிற்குட்பட்டதே. அவர்கள் மாற்றினக் கவர்ச்சி உடையவர் களைவிட மகிழ்ச்சியாகத் தோற்றமளிப்பது உண்மையே. அவர்களுடைய சிறுபிள்ளைத்தனம் முகத்திலேயே தெரியும். ஓரினச் சேர்க்கையில் உங்களுக்கிருக்கும் நாட்டத்தை மறைப்பது கடினம். உங்கள் முகம், உங்களுடைய கண்கள் எல்லாமும் காட்டிக்

கொடுத்துவிடும். நீங்கள் சிறுபிள்ளைத் தனத்தோடு இருந்து விடுவீர்கள். அது கடக்கப்பட வேண்டியது, கடந்து செல்வதே விரும்பத் தக்கது. ஆனால் அதைப்பற்றிக் கொள்வது நல்லதல்ல.

அடுத்துவருவது மாற்றினக் கவர்ச்சி (heterosexual) என்கிற மூன்றாவது நிலை. ஒரு பையனுக்குப் பெண்ணிடம் ஆர்வம் வருகிறது. பெண்ணுக்குப் பையனிடம் ஆர்வம் வருகிறது. அதுதான் பாலுணர்வு சென்றடையக்கூடிய உயர்ந்த நிலை. ஆனால் அதுவும் ஓர் அளவு வரைக்குந்தான். நீங்கள் நாற்பத்து இரண்டு வயதுக்குப் பிறகும் ஏதோவொன்று தவறவிடப்பட்டிருக்கும். பதினான்கு வயதில் நீங்கள் உண்மையிலேயே பாலுறவு நாட்டம் கொண்டு விடுகிறீர்கள். ஒரு குழந்தையைப் பிறப்பிக்கும் தகுதி வந்துவிடுகிறது. ஒரு குழந்தைக்குத் தாய் அல்லது தந்தையாகி விடுகிறீர்கள். நீங்கள் ஆயத்த நிலை அடைய பதினான்கு ஆண்டுகள் தேவைப்பட்டிருக்கிறது. அடுத்த பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, இருபத்து எட்டு வயதில் உங்கள் பாலுணர்வுத்திறன் உச்சநிலையை அடைந்து விட்டிருக்கும். அதற்கடுத்து இன்னொரு பதினான்கு ஆண்டுகள் சென்ற நிலையில், நாற்பத்து இரண்டு வயதில் நீங்கள் பின்னோக்கிச் செல்கிறீர்கள். வட்டம் முழுமைபெற்று விடுகிறது. ஜங் (Jung) என்கிற பாலியல் மேதை கூறுவார், 'நாற்பது வயதுக்குப் பிறகு என்னிடம் வருகிறவர்கள் மதம் சார்ந்த பிரச்சினையுடையவர்களாகவே இருப்பார்கள். நாற்பத்து இரண்டு வயதுக்குப் பிறகும் நீங்கள் பால்சார்ந்த குழப்பத்தில் இருந்தால், பிரச்சினையில் இருந்தால் உங்கள் வாழ்க்கையில் ஏதோவொன்று தவறவிடப்பட்டிருக்கும்.'

மற்றொரு பதினான்கு வருடங்களுக்குப் பிறகு ஐம்பத்து ஆறு வயதில் - ஒருவர் பாலுறவில் இருந்து விடுபட்டவராகவே இருப்பார். அடுத்த பதினான்கு வருடங்களில் ஐம்பத்து ஆறில் இருந்து எழுபதுக்குள் இன்னொரு குழந்தைப்பருவம் வந்து விடுகிறது. மரணத்திற்கு முன்பாய், பிறந்திருந்த அடுத்த நிலையை நீங்கள் அடைந்துவிடுகிறீர்கள். வட்டம் முழுமையடைகிறது. ஒரு குழந்தை இயேசுவானர், 'நீங்கள் குழந்தைகளைப் போல் ஆகாதவரை, என்னுடைய தேவனின் இராஜ்யத்தில் நீங்கள் பிரவேசிப்பதற்கில்லை' என்று சொல்கிறபோது அதையே கருத்தில் கொள்கிறார்.

கிட்டத்தட்ட இது எழுபது வருட சுழற்சி. நீங்கள் எண்து அல்லது நூறு வருடங்கள் வாழ்வீர்களாயின்அது கொஞ்சம் மாறுபடும். அந்நிலையில் நீங்கள் அதைப் பிரித்துக் கொள்ள முடியும்.

நான் எதற்கும் எதிரிடையானவன் அல்லன். ஆனால் நீங்கள் ஏதேனும் ஒன்றைப் பற்றிக் கொண்டிருக்க நான் உதவமாட்டேன். போங்கள், தொடர்ந்து போய்க் கொண்டேயிருங்கள். நான் எதையும் பயனற்றது என்று கூறமாட்டேன். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள், ஆனால் தொடர்ந்து செல்லுங்கள்.

சின்னதாய் சில கதைகள்:

மனச்சோர்வுக்குள்ளான ஒருவன் மனநல மருத்துவரின் அலுவலகத்துக்கு, தள்ளாடியபடி சென்றான். 'டாக்டர், நீங்கள் எனக்கு உதவ வேண்டும். ஒவ்வொரு நாளிரவிலும் நான் தண்டிக்கப்பட்டு பாலைவனத்தில் தனியனாய் விடப்படுகிறேன். என்னோடு பொன்னிறமான தலைமுடியை உடைய பன்னிரண்டு பெண்களும், மாநிறமுடைய பன்னிரண்டு பெண்களும், பன்னிரண்டு சிவப்பு நிற பெண்களும் இருந்தனர். ஒவ்வொருவரும் மற்றவர்களைவிட அழகாகவே தெரிந்தனர்' என்றான் அவன்.

'நீ அதிர்ஷ்டக்கார ஆளப்பா, என்னுடைய உதவி எதற்காகத் தேவைப்படுகிறது?' மருத்துவர் கேட்டார்.

நோயாளி சொன்னான், 'அந்தக் கனவுகளில் நான் ஆணாக இருந்ததுதான் என்னுடைய பிரச்சினை' என்று.

புரிகிறதுதானே. இல்லையேல் இன்னொரு 'ஜோக்'கைச் சொல்கிறேன்.

பதவி ஒய்வுபெற் இரண்டு படைத்தளபதிகள் தங்களுடைய 'க்ளப்' (club) பில் பேசிக் கொண்டிருந்தனர்.

'கிழவர் கார்ஸ்டேர்ஸ் பற்றி நீங்கள் கேள்விப்பட்டீர்களா?'

'இல்லை, அவரைப்பற்றி என்ன விஷயம்?'

'அவர் இந்தியாவுக்கு இராணுவ ஆலோசகராய் சென்று ஒரு மகராஜாவிடம் வேலைபார்த்தார். ஒருநாள் அவர் தன்னுடைய துணையை விட்டுவிலகி, காட்டுக்குச் சென்றார். காட்டுவாசியானவர், தற்போது ஒரு குரங்குடன் மரத்தில் வசிக்கிறார்.'

'அடக்கடவுளே!' வியப்புற்ற இரண்டாவது தளபதி, 'அது ஆண்குரங்கா அல்லது பெண் குரங்கா?' என்று கேட்டார்.

'ஓ. பெண்குரங்குதான்' எதுவும் கார்ஸ்டேர்ஸின் விருப்பமல்ல. இயற்கையின் விருப்பம்.

ஓரினச் சேர்க்கை என்பது வளர்ச்சியில் தாமதமான நிலை. ஆனால் மேற்கில் அது பரவலாகக் காணப்படுகிறது. அதற்குக் காரணங்கள் உண்டு. சிலவற்றை உங்களுக்குச் சொல்கிறேன்.

கட்டுக்கடங்காத நிலையில் வாழும் விலங்குகள் ஓரினச் சேர்க்கையில் நாட்டம் கொள்வதில்லை. ஆனால் விலங்குக் காட்சிச்சாலையில் அவற்றின் நிலையில் மாற்றம் உண்டாகும். அவை காடுகளில் இருந்தபோது ஓரினச் சேர்க்கை புரிந்ததில்லை. ஆனால், விலங்குக் காட்சி சாலையில் அவை விருப்பம் போல் செய்வதற் கில்லை. இடநெரிசல் வேறு ஓரினச் சேர்க்கையில் ஈடுபடக் கேட்பானேன். உலகம் நெரிசல் மிக்கதாகிவிட்டது. அது ஒரு விலங்குக் காட்சிசாலை போன்றே காட்சியளிக்கிறது. இயற்கை சார்ந்த வளர்ச்சி கள் மறைந்து. மக்கள் ரொம்பவே மனஇறுக்கமுடையவர்களாகி விட்டனர். ஓரினச் சேர்க்கை பெருக இதுவும் ஒரு காரணம்.

இரண்டாவது. மேற்கில் பாலுறவு ஏற்கப்பட்ட ஒரு பொறுப்பு என்பதைவிட, வேடிக்கையாகவே கருதப்படுகிறது. எவ்விதத் திட்டமிடலும் இல்லாமல் தற்செயலாகபோல் சட்டத்துக்குப் புறம்பான வகையில உறவு கொள்கிறார்கள். ஒரு பெண்ணுடன் தொடர்பு வைத்துக்கொள்வது தன்னைத்தானே இன்னலில் ஈடுபடுத்திக் கொள்கிற காரியமாகும். ஒரு பெண்ணுடன் தன்னை உட்படுத்திக் கொள்வதென்பது பெரிய அளவு தொல்லையில் சிக்கவைத்துக் கொள்வதாகும் – குழந்தைகள், குடும்பம், வேலை, வீடு, கார் என்று ஆயிரத்தியோரு சமாசாரங்கள். ஒரு பெண் உள்ளே நுழைந்து விட்டால் உலகமே உள்நுழைந்து விடுகிறது. மேற்கத்திய அறிவு தன்னை உட்படுத்திக் கொள்வதற்கு அஞ்சும். மக்கள் எதிலும் சிக்கிக் கொள்ளாமல் இருப்பதையே விரும்புவார்கள். ஓரினச் சேர்க்கையில் எவ்விதத் தொல்லையும் இல்லை. மாற்றின உறவைப் போல் ஓரினச் சேர்க்கையில் சிக்கல் கிடையாது. குழந்தைகள் இல்லை, ஏற்கும் படியாய் பொறுப்புகளும் இல்லை.

மூன்றாவது காரணம், பெண்விடுதலை இயக்கம் காரணமாக மேற்கத்தியப் பெண்கள் *'லெஸ்பியன்'களாகின்றனர். ஆண்கள்

* *லெஸ்பியன் (Lesbian) – ஒரு பால் புணர்ச்சியில் ஈடுபடுகிறவர். பெண்களிடையே யான உறவு.*

பெண்களை அடக்கி ஒடுக்கிக் கொண்டிருந்ததன் விளைவு இது. அது மிகப்பெரிய அடிமைத்தனமாயிருந்தது. பெண்களைப் போல் வேறு எந்த இனமும் அத்தனை கொடுமைப்படுத்தப்பட்டதில்லை. தற்போது எதிர்வினை ஆண்களுக்கெதிரான கலகமாய் வெடித்திருக்கிறது. மேற்கத்திய பெண்களுக்கான அமைப்புகள் பெண்கள் ஒரு பால்புணர்ச்சியில் ஈடுபடுவதை ஊக்குவிக்கின்றன. அது ஆண்களுடனான அத்தனை தொடர்புகளையும் பெண்கள் விடச் சொல்கிறது. பகைவனை நேசி என்பதை மறந்துவிடுங்கள். ஆண் பகைவன். ஆண்களுடனான தொடர்புகளில் இருந்து விடுபட்டு விடுங்கள். ஒரு பெண்ணை நேசிப்பது சிறப்பு. ஒரு பெண் நேசிக்கிறாள் இன்னொரு பெண்ணை.

பெண்கள் வலுச்சண்டைக்காரர்களாகிக் கொண்டிருக்கிறார்கள். ஆண் தொடர்புகளில் சிக்கிக் கொள்ள மிகவும் அஞ்சுகிறான்.

இத்தகைய சூழ்நிலைகள் ஓரினச் சேர்க்கையை உருவாக்கி விடுகின்றன. ஆனால் அது ஒரு தவறான போக்கு. நீங்கள் அதில் இருந்தால் நான் உங்களைக் கண்டனம் செய்ய மாட்டேன். உங்கள் உணர்வுகளின் அடியாழத்துக்குச் செல்லுங்கள், அதிக அளவில் தியானம் செய்யுங்கள். மெள்ள மெள்ள ஓரினப் புணர்ச்சி நாட்டம் மாற்றினக் கவர்ச்சியாக மாறிக்கொண்டிருப்பதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் சுய இன்பம் காண்பவராயிருந்தால் ஓரினச் சேர்க்கைக்கு மாறிவிடுங்கள் என்பேன். நீங்கள் ஓரினச் சேர்க்கை யாளராக நீங்கள் மாற்றினக் கவர்ச்சி கொள்வதையே நான் விரும்பு வேன். அதுவே சிறந்தது. நீங்கள் முன்பே மாற்றினப் புணர்ச்சியில் ஈடுபட்டிருந்தால், பிரும்மச்சர்யத்தை (சமய காரணங்களுக்காக) மேற்கொள்ளுங்கள்.

நான் எது குறித்தும் வெறுப்பு தெரிவிக்கமாட்டேன்.

கேள்வி கேட்டவர் சொல்கிறார்... இவ்வுலகில் ஓரினச் சேர்க்கை இருந்தது. இருந்து கொண்டிருக்கிறது என்று. ரொம்ப சரி. எலும்புருக்கி நோயுந்தான் இருந்தது. இருந்து கொண்டிருக்கிறது. புற்று நோயுந்தான். உண்மையிலேயே சிறந்த உலகம் என்பது இயல்பான பாலுறவை - மாற்றினப் புணர்ச்சி (heterosexuality) யை அதிகரித்துக் கொண்ட தாகவே இருக்கும். ஏன்? காரணம் ஆணும் பெண்ணும் சந்திக்கிற பொழுது வட்டம் பூர்த்தியடைகிறது. நேர்மின் சக்தியும், எதிர்மின் சக்தியும் ஒன்றையொன்று எதிர்கொள்வது போலத்தான் அதுவும். ஓர்

ஆணும் இன்னோர் ஆணும் எதிர்கொள்கிற தொடர்பு இரண்டு எதிர்மின் சக்திகள் ஒன்றையொன்று சந்தித்துக் கொள்வதாகவே இருக்கும். அது உள்ளார்ந்த சக்தி வட்டத்தை உருவாக்குவதில்லை. அது உங்களை அரைகுறையாகவே விட்டுவிடும். அது ஒருபோதும் நிறைவு செய்வதாகாது. கவனியுங்கள், அது வசதியாகத் தெரியக்கூடும். அது வசதியாக இருந்தாலும் நிறைவளிக்காது. நிறைவுறுவது குறிக்கோளேயன்றி வசதி அல்ல.

ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் ஒருநாள் பால்வேறுபாடற்றவராகிவிட்டால் (asexual), பிரம்மச்சரியம் தோன்றும், உண்டாகும். அந்நிலையில் இயற்கை சார்ந்த முறையில் செயல்படுவதே சிறப்பு. ஓரினச் சேர்க்கையில் நாட்டம் உடையவரைவிட, மாற்றினப் புணர்ச்சியில் ஈடுபடுகிறவர் வெகுஎளிதாக பாலுறவைக் கடந்து விடுவார் என்பதே என்னுடைய பார்வை. காரணம், ஒருபடி தவறவிடப்படுவதால், ஓரினச் சேர்க்கையாளர் அதிகம் சிரமப்பட வேண்டியிருக்கும். அது தேவையில்லாத சிரமம்.

ஆனால் இன்னமும் நான் எந்த ஒன்றுக்கும் எதிரானவன் அல்லன். நீங்கள் தகுதியாக உணர்ந்தால் நீங்கள் தாம் அதைத் தீர்மானிக்க வேண்டும். நான் அதை ஒரு பாவகாரியமாக எண்ண மாட்டேன்; நீங்கள் ஓரினச் சேர்க்கையாளராக இருந்தால் நரகத்தில் வீசியெறியப்படுவீர்கள் என்றும் சொல்லமாட்டேன். நீங்கள் ஓரினப் புணர்ச்சியாளராக இருந்தால் ஏதோ ஒன்றை - ஆணும் பெண்ணும் தொடர்பு கொள்கிறபோது உண்டாகிற உணர்வை, நேர்மின் சக்தியும் எதிர்மின் சக்தியும் இணைவதால் உண்டாகும் உணர்வை, இரவும் பகலும் சந்தித்துக் கொள்கிறபோது அடையும் உணர்வைத் தவறவிட்டு விடுவீர்கள். அது நரகத்தில் நீங்கள் வீசியெறியப் படுவீர்கள் என்பதாகாது, ஆனால், உங்கள் வாழ்க்கையில் சொர்க்கத்துக்குரிய ஒன்றை, நீங்கள் தவற விடுவீர்கள்.

ஆனால் இன்னமும் நீங்கள்தாம் தீர்மானிக்கும்படி இருக்கும். நான் உங்களுக்குக் கட்டளையிடமாட்டேன். உண்மையில், முதல் முதலாய் ஓரினச் சேர்க்கை தோன்றுவதற்கான, சூழ்நிலையைத் தோற்றுவித்ததே சமயம் சார்ந்த கட்டளைகள் தாம். உலகில் ஓரினச் சேர்க்கைக்கு மதங்கள் காரணம் என்றால் உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கும். காரணம் ஆண்துறவிகள் ஒரு மடத்திலும் பெண் துறவிகள் (Nuns) இன்னொரு மடத்திலும் வசிக்கவேண்டும் என்று

அவர்கள் அழுத்தமாய் கூறியிருக்கின்றனர். ஆண் துறவிகளும் பெண்துறவிகளும் ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்ள முடியாத நிலை இருந்தது. புத்த மதத்திலும், ஜைன மதத்திலும், கிறிஸ்தவ மதத்திலும் ஆயிரக்கணக்கான ஆண்கள் ஒரு கூட்டமாகவும், ஆயிரக்கணக்கான பெண்கள் மற்றொரு கூட்டமாகவும் பிரிந்து கிடந்தனர். அவர்களை இணைக்கக்கூடிய பாலங்கள் தகர்க்கப்பட்டன. ஓரினச் சேர்க்கை பெருகுவதற்கு அவைகளே காரணமாயிருந்தன. அதற்கான சூழ்நிலையை அவை உருவாக்கின, காரணம் உடலுறவு அத்தகையதொரு வேட்கை. நீங்கள் இயற்கையான வடிகாலை அமைத்துக் கொடுக்காவிடில் அது தவறான போக்கை மேற்கொண்டு விடுகிறது.

இராணுவத்தில், அவர்கள் எளிதில் அப்படியாகிவிடுகின்றனர். பையன்கள் தங்கும் விடுதிகளிலும், பெண்கள் தங்கும் விடுதிகளிலும் உள்ளவர்கள் எளிதில் ஓரினச் சேர்க்கையை மேற்கொண்டு விடுகிறார்கள். ஓரினக் கலவி நாட்டம் உலகில் இருந்து மறைய வேண்டுமெனில் ஆண்களையும், பெண்களையும் தனிப்படுத்துவது மறைந்தாக வேண்டும். தங்கும் விடுதிகள் இருபாலினத்தவருக்கும் ஒன்றாகவே அமைய வேண்டும். இராணுவத்தில் ஆண்கள் மட்டும்இருந்தால் போதாது, பெண்களுக்கும் இடமளிக்க வேண்டும். 'க்ளப்' (club) கள் பையன்களை மட்டும் கொண்டதாய் இருக்கக்கூடாது. அது ரொம்ப ஆபத்தானது. மடாலயங்கள் இருபாலரையும் கொண்ட தாய் இருக்கவேண்டும். இல்லையேல் ஓரினப் புணர்ச்சி இயல்பான தாகிவிடும்.

ஆனால் அது ஒரு தவறான போக்கு ஒரு பிணி. நான், 'பிணி' என்று சொல்கிறபோது வெறுப்பு தெரிவிக்கவில்லை. இரக்க உணர்வோடுதான் பிணி என்றேன். எலும்புருக்கி நோயால் துன்புறுகிறவரிடம் நாம் வெறுப்பு காட்டுவதில்லை. அவர் அதில் இருந்து விடுபட நாம் உதவுகிறோம். ஆக மக்கள் என்னிடம் வந்து தங்களுடைய ஓரினக் கலவி நாட்டத்தை ஒப்புக் கொள்கிற பொழுது, நான் கவலைப்படவேண்டாம் என்று கூறுவேன். இங்கு நான் இருக்கிறேன், உங்களை அதில் இருந்து வெளியே கொண்டு வருவேன்.

நீங்கள் விழிப்போடு இல்லாவிட்டாலும், அதை மாற்றாவிட்டாலும் பாலுறவு உங்கள் வாழ்க்கை நெடுகிலும் முக்கியத்துவம்

உடையதாகவே இருக்கும். பாலுறவு வேட்கையுடன் இறப்பது அருவருக்கத்தக்க ஓர் இறப்புதான். பாலுறவை தொலைதூரத்துக்கு பின்னால் விட்டுவிடுகிற நிலைக்கு ஒருவர் வரவேண்டும்.

'நேவிக்ளப்'பில் கூடியிருந்த மூன்று வயதான உறுப்பினர்கள் மதுவருந்தி, புகைத்தபடி உரையாடிக் கொண்டிருந்தனர்.

முதல் இரண்டு பேர் தங்கள் வாழ்வில் நடந்த, எண்ணிப் பார்க்கவே வெட்கத்தை உண்டு பண்ணும் நிகழ்வுகள்பற்றி விரிவாகச் சொல்லிக் கொண்டிருந்தனர். மூன்றாவதாய் காட்கரின் முறை வந்ததும், தாம் சாவித்துவாரத்தின் வழியே ஓர் இளம்பெண்ணின் அறையைப் பார்த்துக் கொண்டிருந்தபோது எப்படிப் பிடிபட்டார் என்பதைச் சொன்னார்.

'ஆம், சரிதான்' மற்றவர்களில் ஒருவர் அன்பாகத் தட்டிக் கொடுத்தபடி சொன்னார், 'நம்முடைய இளமைக்காலத்தில் நாம் இந்த மாதிரி குறும்புகளை நிச்சயம் செய்திருப்போம்' என்று.

'இளமைக் காலத்திலா, அதெல்லாம் இல்லை. இது நேற்று ராத்திரி நடந்தது' என்றார் மூன்றாமவர்.

ஆனால், இது ரொம்ப அருவருப்பான காரியம். முதுமை அடைந்த ஒருவர் மறுபடியும் குழந்தைபோல் ஆகிவிட வேண்டும். காரணம், பாலுணர்வு மறைகிறபோது எல்லா விருப்பங்களும் மறைந்துவிடும். பாலுணர்வு மறையும்போது மற்றதில் இருந்த ஆர்வமும் மறைந்துவிடும். பாலுணர்வு சமூகத்துடனும், உலகத்துடனும் பொருள்களுடனும் இணைக்கிற கண்ணி, பாலுணர்வு மறைந்தால் நீங்கள் சற்றும் எதிர்பாராதவிதமாய் ஒரு வெண்ணிற மேகம் போல் மிதக்கத் தொடங்கி விடுவீர்கள். அதற்குப் பிறகும் உங்களுடைய வேர்கள் இந்த உலகில் ஊன்றியிருக்காது. நீங்கள் வேரோடு கெல்லி எறியப்படுவீர்கள்.

உங்கள் சகதி தாழ்வாக, கீழ்நோக்கிச் செல்லாவிடில் அந்நிலையில் அதுமேல்நோக்கிச் செல்லத் தொடங்கும், சகஸ்ராரத்தைச் சென்றடையும். அங்கே சக்தி வந்து சேரவும், மலர்ச்சிக்கு உதவவும் ஆயிரம் இதழ்த்தாமரை காத்திருக்கும்.

*சூத்திரம் - 56 ஸத்வபுருஷயோ: சுத்தி ஸாம்யே கைவல்யமிதி*

புருடனுக்கும் சத்துவத்துக்கும் இடையே புனிதத் தன்மை சமநிலையில் இருக்கும் பொழுது ஆன்ம விடுதலை அடையப் படுகிறது.

**சா**ந்தோக்ய உபநிடதம் ஓர் அழகான கதையை வைத்திருக்கிறது. நாம் அதில் இருந்து தொடங்குவோம்.

சத்யகாமன் தன்னுடைய தாய் ஜபலாவிடம் வேண்டினான். 'தாயே, ஞானம் பெறுவதற்காக நான் குருகுல வாசம் செய்ய விரும்புகிறேன். என்னுடைய குடும்பப்பெயர் என்ன? என்னுடைய தந்தை யார்?' என்று.

'குழந்தாய், எனக்குத் தெரியாது. என்னுடைய இளம் வயதில் நான் பல வீடுகளில் வேலைக்காரியாய் இருந்தபோது உன்னை கருத் தரித்தேன். உன்னுடைய தந்தை யார் என்று எனக்குத் தெரியாது. நான் ஜபலா. நீ சத்யகாமன். எனவே உன்னை சத்யகாம ஜாபாலன் என்று சொல்லிக் கொள்' என்றாள் தாய்.

அதன்பேரில் அந்தச் சிறுவன் கவுதமரிடம் சென்றான். அந்தக் காலத்தில் பெரிய முனிவராக இருந்த அவரிடம் தன்னை ஒரு சீடனாக ஏற்றுக் கொள்ளும்படி அவன் வேண்டினான்.

'குழந்தாய், நீ எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவன்?'

சத்யகாமன் பதிலளித்தான், 'என்னுடைய குடும்பபெயர் என்னவென்று என் தாயிடம் நான் கேட்டேன். அவள் சொன்னாள், 'எனக்குத் தெரியாது. என்னுடைய இளமைக்காலத்தில் நான் பல வீடுகளில் வேலைக்காரியாக இருந்தபோது உன்னை நான் கருத்தரித்தேன். உன் தந்தையின் பெயர் எனக்குத் தெரியாது. நான் ஜபலா, நீ சத்யகாமன், எனவே உன்னை சத்யகாம ஜாபாலன் என்று சொல்லிக் கொள்'என்றாள். ஐயா, நான் அதனால் சத்யகாம ஜாபாலன்' என்று.

அந்த முனிவர் சொன்னார், 'மெய்ப்பொருளை நாடும் ஓர் உண்மையான பிராமணனென்று வேறுயார் இப்படிக் கூற இயலும்? குழந்தை நீ சத்தியத்தில் இருந்து திசைமாறவில்லை. அந்த மெய்ஞ்ஞானத்தை நான் உனக்குக் கற்பிக்கிறேன்' என்று.

ஆன்ம சாதகனின் முதல் தகுதி நம்பத்தக்கவனாயிருப்பதுதான். அவன் உண்மையில் இருந்து விலகிச் செல்லாதவனாகவும், எவ்வகையிலும் வஞ்சனை செய்யாதவனாகவும் இருக்கவேண்டும். காரணம், நீங்கள் மற்றவர்களை வஞ்சித்தால், உங்கள் வஞ்சனை உங்களையே வஞ்சித்துவிடும். நீங்கள் பலமுறை சொல்கிற ஒரு பொய் உண்மையைப் போல் தோன்றலாம். உங்கள் பொய்களை மற்றவர்கள் நம்பத் தொடங்குகிறபொழுது, நீங்களும் அவற்றை நம்புகிறவராகி விடுவீர்கள். நம்புதல் ஒரு தொற்றுநோய் மாதிரி.

நமக்குள் இருக்கும் குழப்பத்தை நாம் அடையப் பெற்றது இப்படித்தான்.

'நான் சரீரமாயிருக்கிறேன்' இதுதான் நாம் ஏற்றுக் கொண்ட முதல்பொய். எல்லாரும் அதில் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். நாம் சரீரமாயிருக்கிறோம் என்று நம்புகிற சமூகத்தில்தான் நீங்கள் தோன்றியிருக்கிறீர்கள். எல்லாருமே சரீரமாகவே தம்மைக் கருதிக் கொண்டு எதிர்வினை புரிகிறார்கள். யாரும் ஓர் ஆன்மாவாக எதிர்ச்செயல் புரியவில்லை.

எதிர்வினைக்கும், எதிர்ச்செயலுக்கும் உள்ள வேறுபாட்டை நினைவில் கொள்ளுங்கள். எதிர்செயல் (response) என்பது எச்சரிக்கையோடும், கவனத்தோடும், உணர்வோடும் இருப்பத. நீங்கள் ஒரு விசையை அழுத்தியதும் மின்விசிறி சுழலத் தொடங்குகிறது. அது எதிர்வினை (reaction). நீங்கள் விசையை அமுக்கியதும், 'நான் சுற்றுவதா, வேண்டாமா?' என்று மின்விசிறி சிந்திப்பதில்லை. நீங்கள் மின்விளக்கைப் பொருத்துகிறபொழுது மின்சாரம் எதிர்ச் செயல் புரிவதில்லை. அது உடனே எதிர்வினை புரிகிறது. அது எந்திரத்தன மானது. நீங்கள் மின்விசையை அமுத்துவதற்கும், மின்சக்தி இயங்குவதற்கும் இடைவெளியே இருக்காது. சிந்திப்பது, கவனிப்பது, உணர்வது என்று ஒரு சின்ன இடைவெளியும் இருப்பதில்லை.

உங்களை ஒருவர் இழிவுபடுத்துகிறார், நீங்கள் கோபாவேசத் துக்குள்ளாகிறீர்கள், யாரோ ஒருவர் சொல்கிற எதோவொன்று உங்களை வருத்தத்துக்குள்ளாக்குகிறது. யாரோ ஒருவர் சொல்கிற ஏதோவொன்று உங்களை மகிழ்ச்சியடையச் செய்கிறது. இப்படி உங்கள் வாழ்க்கையில் நீங்கள் தொடர்ந்து எதிர்வினையை மேற் கொள்கிறீர்கள். அது எதிர்வினை என்கிற பொழுது, ஓர் அமுத்துவிசை

எதிர்வினை என்கிற பொழுது, நீங்கள் மெள்ள மெள்ள உங்களை ஒரு சரீரமாகவே நம்பத் தொடங்குகிறீர்கள்.

சரீரம் ஓர் எந்திரம், நுட்பங்களோடு கூடிய எந்திரம். அது நீங்களல்ல. நீங்கள் அதனை உறைவிடமாகக்கொண்டு அதில் வசிக்கிறீர்கள். ஆனால், அது நீங்களல்ல, நீங்கள் முற்றிலும் வேறானவர்.

வாழ்க்கையை முடக்கிப் போடுகிற முதல் பொய் இதுதான். அடுத்து, இன்னொரு பொய்யும் உண்டு. 'நான் மனமாக இருக்கிறேன்' என்பதுதான் அது. இது முந்தையதைக் காட்டிலும் ஆழமானது. காரணம் உடம்பைவிட மனம் உங்களுக்கு வெகு சமீபமாய் இருக்கிறது. நீங்கள் எண்ணங்களை எண்ணியபடியும் கனவுகளைக் கண்டபடியும் இருக்கிறீர்கள். அவை உங்கள் இருப்புணர்வைத் தீண்டுமளவு, உங்களுக்குச் சமீபமாய் வருகின்றன. உங்களைச் சுற்றிச் சூழ்ந்து கொள்கின்றன. நீங்கள் அவற்றிலும் நம்பிக்கை வைக்கிறீர்கள், மனமாகவே ஆகிவிடுகிறீர்கள். மனமும் எதிர்வினை புரிகிறது.

நீங்கள் எதிர்ச்செயல் செய்யத் தொடங்கியதுமே நீங்கள் ஓர் ஆன்மாவாகி விடுகிறீர்கள். எதிர்ச்செயல் (response) என்பது நீங்கள் எந்திரத்தனமாக எதிர்வினை புரியவில்லை என்பதைக் குறிக்கிறது. நீங்கள் ஆழ்ந்து சிந்திக்கிறீர்கள், உங்கள் உணர்வுநிலை தீர்மானிப்பதற்கு ஓர் இடைவெளி கொடுக்கிறீர்கள். நீங்கள் தீர்மானிக்கிற காரணியாக இருக்கிறீர்கள். ஒருவர் உங்களை இழிவுபடுத்துகிறார். எதிர்வினையில் அவர் தீர்மானிக்கிற காரணியாக இருக்கிறார். நீங்கள் எதிர்வினையாற்றுவதோடு சரி. அவர்தான் உங்களைக் கையாள்கிறார். எதிர்ச் செயலில் என்றால் நீங்கள்தான் தீர்மானிக்கும் காரணியாக இருப்பது; உங்களை ஒருவர் இழிவு செய்கிறார் - அது முதன்மையானதல்ல, அது அத்தனை முக்கியத்துவம் உடையதாகாது. நீங்கள் அதைப்பற்றி சிந்திக்கிறீர்கள், இதைச் செய்வதா அல்லது அதைச் செய்வதா என்பதைத் தீர்மானிக்கிறார்கள். அது உங்களை மூழ்கடிப்பது என்பதில்லை. நீங்கள் தீண்டப் படாதவராக இருக்கிறீர்கள், தொலைவில் இருக்கிறீர்கள், கண்காணிப் பவராக இருக்கிறீர்கள்.

இவ்விரண்டு பொய்களும் தகர்த்தெறியப்பட வேண்டியவை. இவை அடிப்படையான பொய்கள். அடிப்படையற்ற இலட்சோபலட்சம் பொய்களை நான் கணக்கில் கொள்ளவில்லை. நீங்கள் ஒரு பெயருடன் உங்களை அடையாளப்படுத்திக் கொண்டே இருக்கிறீர்கள். பெயர்

என்பது ஒரு முத்திரை, பயனுடைமை சார்ந்தது (Utilitarian) ஒரு பெயருடன் நீங்கள் வரவில்லை, ஒரு பெயருடன் நீங்கள் போவது மில்லை. பெயர் என்பது சமுதாயத்தால் பயன்படுத்தப்படுவது அவ்வளவே, ஒரு பெயர் இல்லாமல் நீங்கள் சமுதாயத்தில் இருப்பது கடினம். பெயரில்லாத நிலையில் ஒரு குறிப்பிட்ட மதத்துக்கோ, குறிப்பிட்ட இனத்துக்கோ உரியவராகத்தான் உங்களைக் கருதிக் கொள்வீர்கள். உங்கள் தந்தையாகிய ஒரு குறிப்பிட்ட ஆணுக்கும், தாயாகிய ஒரு குறிப்பிட்ட பெண்ணுக்கும் உரியவராக உங்களைக் கருதிக் கொள்வீர்கள். ரொம்பசரி, அவர்கள் மூலம்தான் நீங்கள் வந்தீர்கள். ஆனால், அவர்களுக்கே உரியவராக இருப்பதில்லை. அவர்கள் வழியாக இருந்தார்கள், அந்த வழியில் நீங்கள் பயணித்தீர்கள், ஆனால் நீங்கள் வேறானவர்.

கலீல் ஜிப்ரானின் 'தீர்க்கதரிசி' (Prophet) என்கிற படைப்பில், ஒரு பெண்மணி தீர்க்கதரிசியான அல்முஸ்தஃபாவிடம் கேட்கிறாள், 'குழந்தைகளைப் பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள்' என்று. அல்முஸ்தஃபா கூறுகிறார், 'அவர்கள் உங்கள் வழியே வருகிறார்கள், ஆனால் உங்களுக்கு உரியவராய் இருப்பதில்லை. அவர்களை நேசியுங்கள், ஆனால், உங்களுடைய சிந்தனைகளை அவர்களுக்கு வழங்க வேண்டாம். அவர்களை நேசியுங்கள், காரணம் அன்பு சுதந்திரத்தைக் கொடுக்கிறது ஆனால் அவர்களை உங்கள் பிடியில் வைத்துக் கொள்ள முயலாதீர்கள்'

உங்களுடைய உள்ளார்ந்தமையம் யாருக்கும் உரிமையாவ தில்லை. அது யாருடைய ஆளுகைக்கும் உட்பட்டதல்ல. அது ஓர் உடைமை அல்ல, ஒருவர் சுவாதீனப்படுத்திக் கொள்வதற்கு. உங்கள் உடம்பை வைத்திருக்க முடியும், உங்கள் மனதையும் வைத்துக் கொள்ள முடியும்.

நீங்கள் ஒரு முகமதியராகி விடுகிறபோது, தங்களை முகமதியர்கள் என்று அழைத்துக் கொள்பவர்களால் உங்கள் மனம் ஆளுகைக்குட்படுத்தப்படுகிறது. நீங்கள் இந்துவாகிறபோது உங்கள் மனம், தாங்கள் இந்துக்கள் என்று சொல்லிக் கொள்பவர்களின் ஆளுகைக்குட்படுத்தப்படுகிறது. நீங்கள் கம்யூனிஸ்டாகிறபோது 'தாஸ் காபிட்டலின்' (Das Kapital) ஆளுகைக்குட்படுத்தப் படுகிறீர்கள். நீங்கள் கிறிஸ்துவராயிருந்தால் பைபிளின் ஆளுகைக்குட்படுத்தப்

படுகிறீர்கள். உங்களை இந்த உடம்பென்று நீங்கள் கருதிக் கொண்டால் வெள்ளை, கறுப்பு அடிப்படையில் சிந்திக்கிறீர்கள்.

உங்களுடைய உள்ளார்ந்த மையம் கிறிஸ்தவனாகவோ, இந்துவாகவோ இருக்கவில்லை. உங்கள் உள்ளார்ந்த மையம் வெள்ளையாகவுமில்லை, கறுப்பாகவுமில்லை. உங்கள் உள்ளார்ந்த மையம் கம்யூனிஸ்டாகவோ, கம்யூனிஸ்ட் எதிர்ப்பாகவோ இருக்கவில்லை. உங்கள் உள்ளார்ந்த மையம் உங்களுடைய உடம்பு மனம் இவற்றில் இருந்து தொலைவில இருக்கிறது. அது உடம்பைவிட உயர்ந்ததாகவும், மனதைவிட உயர்ந்த நிலையிலும் இருக்கிறது. மனதால் அதைத் தொட முடியாது. உடம்பால் அதை அடைய முடியாது.

சத்யகாமஜாபாலனை, முனிவர்களில் சிறந்த கவுதமர் எதற்காக ஏற்றுக் கொண்டார்? அவனிடம் உண்மையிருந்தது. அவன் ஏமாற்றியிருக்க முடியும, தவறான ஒன்றால் ஈர்க்கப்படுவது எளிது. இந்த உலகில், 'என் தந்தை யார் என்று எனக்குத் தெரியாது' என்பதை மக்கள் இழிவுக்குரியதாகவே கருதுவார்கள். அவனுடைய தாயும் உண்மையானவளாயிருந்தாள். நீங்கள் ஏமாற்றுகிறீர்களா இல்லையா என்பதைக் கண்டறிய குழந்தைகளிடம் எந்தவோர் உபாயமும் கிடையாது. குழந்தையை ஏமாற்றுவது எளிது. 'இந்த உலகைப்படைத்தது யார்?' என்று தாயிடம் குழந்தை கேட்பதாக வைத்துக் கொள்வோம். தான் இன்னது சொல்கிறோம் என்பதை அறியாமலே, 'கடவுள் உலகைப் படைத்தார்' என்று சொல்ல, தாய் ஈர்க்கப்படுவாள்.

குழந்தைகள் வளரும்போது தங்கள் பெற்றோர்களிடம் எதிர்ப்புகாட்ட இதுதான் அடிப்படைக்காரணம். நிறைய பொய் சொன்னவர்களை (பெற்றோர்கள்) அவர்களால் மன்னிக்க முடிவதில்லை. பெற்றோர்கள் மீது தங்களுக்கிருந்த மரியாதையை அவர்கள் இழந்துவிடுகிறார்கள். 'ஏன்? நாங்கள் உங்களை நேசிக்கவில்லையா? உங்களை வளர்த்து ஆளாக்கவில்லையா? எங்களால் முடிந்த அளவு நாங்கள் செய்திருக்கிறோம். குழந்தைகள் எங்களை மதிக்காமல் இருப்பது ஏன்?'. உங்கள் பொய்களின் காரணமாக உங்களுடைய வாய்ப்பை நீங்கள் இழந்து விட்டீர்கள். தந்தையும் தாயும் பொய் சொல்கிறார்கள் என்பதைக் கண்டு பிடித்ததுமே, குழந்தைக்குப் பெற்றோர்கள் மீது இருந்த மதிப்பு போய்விடுகிறது. ஒரு சின்னக் குழந்தையை ஏமாற்றலாமா?

அவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்கிற நினைப்பிலா எதையாவது சொல்லிவைப்பது?

அந்த ஜபலா ஓர் அருமையான தாய். 'உன் தந்தை யாரென எனக்குத் தெரியாது' என்று அவள் சொன்னாள். தன்னுடைய இளமைக் காலத்தில் தான் பலருடன் பழக நேர்ந்ததை அவள் சொன்னாள். அவளுக்குப் பல ஆண்களிடம் நேசம் இருந்தது. அதனால் தந்தை யார் என்று அவளுக்குத் தெரிந்திருக்கவில்லை. ஓர் உண்மையான தாய். அந்தக் குழந்தையு துணிவுமிக்கது. அவன் குருவிடம் அதைச் சொன்னான். தாய் தன்னிடம் சொன்ன அதே வார்த்தைகளை அவன் திரும்பச் சொன்னான்.

இந்த உண்மை கவுதமரை ஈர்த்தது. அவர் சொன்னார், 'நீதான் உண்மையான பிராமணன்' என்று. ஒரு பிராமணன் பற்றிய விளக்கம் இது. உண்மையாக இருப்பவனே பிராமணன். ஒரு பிராமணனுக்கு சாதி தொடர்பானதாகாது. அந்தச் சொல் 'பிரமன்'என்பதில் இருந்து வந்தது. அது கடவுளை அடைய முயல்கிறவனைக் குறிப்பது.

ஞாபகமிருக்கட்டும், நீங்கள் எந்த அளவு பொய்களில் உங்களை உட்படுத்திக் கொண்டிருக்கிறீர்களோ, தொடக்கத்தில் அது பலனளிப்பதுபோல் தோன்றினாலும், முடிவில் அந்த அளவு உங்களுடைய முழு இருப்புணர்விலும் அது நஞ்சேற்றிவிடும்.

நம்பத்தக்கவராயிருங்கள். நீங்கள் நம்பத்தக்கவரயிருந்தால் சற்று முன்பாக அல்லது பின்பாகவேனும் இந்த உடம்பல்ல நீங்கள் என்பதைக் கண்டு கொள்வீர்கள். ஒரு பொய்யைத் தொடர்ந்து நம்புவதாலேயே அது அதிகாரப் பூர்வமானதாகிவிடாது. தெளிவு பிறக்கிறது. கண்களின் கண்டுணரும் திறன் அதிகரிக்கிறது, நீங்கள் இந்த உடம்பில கண்களின் கண்டுணரும் திறன் அதிகரிக்கிறது, நீங்கள் இந்த உடம்பில் இருக்கிறீர்கள். ஆனால் உடம்பல்ல நீங்கள் என்பதை நிச்சயம் உங்களால் புரிந்து கொள்ள முடியும். ஒரு கை உடைந்து போனால் நீங்கள் உடைந்து போய்விட மாட்டீர்கள். ஒரு கால் முறிந்து போனால் நீங்களே முறிந்து விட்டதாகிவிடாது. தலைவலிக்கிற பொழுது தலைவலியை நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். நீங்கள் தலைவலியாகவே ஆகிவிடுவதில்லை. நீங்கள் பசியை உணர்கிறபோது, பசிப்பதை அறிந்து கொள்கிறீர்கள் ஆனால், அந்தப் பசியல்ல நீங்கள். அடிப்படையான பொய் மெள்ள மெள்ள தாக்கியழிக்கப்படுகிறது. அதன்பிறகு நீங்கள் அடியாழத்துக்குச்

சென்று, உங்களுடைய எண்ணங்களைப் புரிந்து கொள்ளத் தொடங்குகிறீர்கள், உணர்வு நிலையில் மிதக்கும் கனவுகளைப் புரிந்து கொள்ளத் தொடங்குகிறீர்கள். அதன்பிறகு, பதஞ்சலியால் விவேகம் என்று சொல்லப்படுவதை நீங்கள் வேறுபடுத்திக் கண்டறியவும், பிரித்தறியவும் செய்கிறீர்கள்- அப்போது எதுமேகம், எது வானம் என்பதை உங்களால் பிரித்தறிய முடிகிறது.

எண்ணங்கள் வெற்றிடத்தில் அலையும் மேகங்கள் போன்றவை. அந்த வெற்றிடமே உண்மையான ஆகாயம், மேகங்களல்ல, அவை வந்து போகிறவை. எண்ணங்களல்ல, ஆனால் அந்த எண்ணங்கள் தோன்றி மறைகிற வெற்றிடம்.

உங்கள் இருப்புணர்வின் மிகச் சரியான அடிப்படை யோகக் கட்டமைப்பை நான் உங்களுக்குச் சொல்கிறேன்.

முழுமையான பொருள் என்பது மின்னணுக்களையும், மின் சக்தியையும் உள்ளடக்கியது என்று இயற்பியல் துறை வல்லுநர்கள் கருதுவது போன்று, முழுமையான பொருள் ஒலி மின்னணுக்களை உள்ளடக்கியது என யோகா கருதுகிறது. யோகாவைப் பொறுத்தவரை ஒலிதான் இருத்தலுக்கான அடிப்படைப் பகுதி, காரணம் உயிர் என்பது நிசப்தத்தின் வெளிப்பாடன்றி வேறில்லை. அமைதியில் இருந்தே நாம் வந்தோம், அமைதியில் மீண்டும் மறைந்து விடுகிறோம். அமைதி, இடம், இன்மை, இருத்தலின்மை, உங்களுடைய உள்ளார்ந்த மையமாக, சக்கரத்தின் குடமாக (அச்சைப் பொருத்தும் இடம்) இருக்கிறது. நீங்கள் அமைதியை, உங்கள் இருப்புணர்வு அன்றி வேறெதுவும் இல்லாத அந்த இடத்தை வந்தடையாதவரை ஆன்ம விடுதலை அடையப் படுவதில்லை. இதுவே யோகாவின் வடிவமைப்பு (framework) ஆகும்.

அவர்கள் உங்களுடைய இருப்புணர்வை நான்கு அடுக்கு களாகப் பிரிக்கிறார்கள். நான் கடைசி அடுக்கைப் பற்றி உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். யோகா அதனை 'வைகரி' என்று அழைக்கிறது. அந்தச் சொல்லின் பொருள் விரும்பியதை அடைதல், மலர்ச்சியுறுதல் ஆகும். நான் உங்களிடம் பேசுவதற்கு முன் அது ஓர் உணர்வாக, ஓர் அனுபவமாக என்னில் வெளிப்படுத்திக் கொள்கிறது. இது மூன்றாவது நிலை, யோகா இதனை 'மத்தியமை' என்கிறது. நடுவில் இருப்பது என்று பொருள். ஆனால், உள்ளாக ஒரு அனுபவம் ஏற்படுவதற்குகு முன் அது ஒரு விதையின் வடிவில் இருக்கும். நீங்கள் ஆழ்ந்த சிந்தனை உடையவராக இல்லாவிடில் சாதாரணமாக அந்த

அனுபவத்தை அடைய முடியாது. இன்னும் முளைவிடாத அந்த விதையின் நுட்பமான உயிர்த்துடிப்பையும் கண்டுணருமளவு நீங்கள் முற்றான அமைதியில் இருக்க வேண்டும். யோகா அதனை 'பைசந்தி' என்கிறது. பைசந்தி என்ற சொல்லுக்கு 'பின்னோக்கி பார்ப்பது' என்று பொருள். மூலாதாரத்தை நோக்குவதாகும். அதற்குமப்பால் இருக்கிறது உங்கள் அடிப்படையான இருப்புணர்வு. அதில் இருந்தே அனைத்தும் தோன்றுகின்றன. அது 'பரை' என்றழைக்கப்படுவது. 'பரை' என்றால் அறிவுக்கு அப்பாற்பட்டது. உள்ளுணர்வால் அறியப்படுவது என்று பொருள்.

தற்போது இந்த நான்கு அடுக்குகளையும் புரிந்து கொள்ள முயலுங்கள். 'பரை' அத்தனை விளங்கங்களுக்கும் அப்பாற்பட்டது. 'பைசந்தி' ஒரு விதையாகிறது. மத்தியமை ஒரு மரம் போன்றது. 'வைகரி' விரும்பியதை அடைதல், மலர்ச்சியுறுதல்.

சாண்டேக்ய உபநிடத்தில் இருந்து ஒரு கதையை நான் உங்களுக்குச் சொல்கிறேன்.

'அங்குள்ள ஆலமரத்தில் இருந்து ஒரு பழத்தை எனக்குக் கொண்டுவா', மிகச்சிறந்த முனிவரான உத்தாலகர் தமது குமாரனிடம் கேட்டார்.

'இதோ கொண்டு வந்துவிட்டேன், ஐயனே' என்றான் சுவேதகேது.

'அதை உடைத்துவிடு'

'உடைத்துவிட்டேன், ஐயனே'

'அதில் நீ காண்பது என்ன?'

'மிகச்சிறிய விதைகள் உள்ளன.'

'அவற்றுள் ஒன்றை உடைத்துப்பார்.'

'உடைத்துவிட்டேன், ஐயனே'

'நீ என்ன காண்கிறாய்'

'எதுவும் இல்லை, ஐயனே. நிச்சயமாய் எதுவும் இல்லை'

தந்தை சொன்னார், 'குழந்தாய். நீ பார்த்திராத நுண்ணிய சாரம் அதில் இருக்கிறது. அந்த நுண்ணிய சாரத்தில் இருந்தே இந்த பெரிய

ஆலமரம் உண்டாயிற்று. என் பிரியத்துக்குரியவனே. அதை நம்பு. வாழ்கிற எல்லாவற்றிலும் அது இருக்கிறது. அதுவே சத்தியம் (மெய்ப்பொருள்). அதுவே சுயம் (ஆன்மா). அதுதான், 'தத்வமஸி', நீயே அதுவாக இருக்கிறாய் என்று பொருள்.'

ஆலமரம் ஒரு பெரிய மரம். தந்தையானவர் ஒரு பழம் வேண்டும் என்கிறார். சுவேதகேது அதைக் கொண்டு வருகிறான். பழம்தான் வைகரி - அந்தப் பொருள் மலர்ந்து பின் பழநிலையை அடைந்தது. பழம் புறவட்டத்சைச் சேர்ந்தது. முற்றிலும் தெளிவாகக் காணப்படுவது. தந்தை சொல்கிறார், 'அதை உடைப்பாய்' என்று. சுவேதகேது அதை உடைக்கிறான். இலட்ச விதைகள். தந்தை சொல்கிறார். 'அந்தச் சிறிய விதைகளில் ஒன்றை உடைத்துப்பார்' என்று. அவன் அந்த விதையையும் உடைக்கிறான். தற்போது கையில் எதுவும் இல்லை. அந்த விதையினுள்ளும் ஒன்றும் இல்லை.

உத்தாலகர் கூறுவார். 'இந்த இன்மையில், ஏதுமற்றதில் (nothigness) இருந்தே விதை வந்தது. விதையில் இருந்து மரம் வந்தது. மரத்தில் இருந்து பழம் வந்தது. ஆனால் அடிப்படை 'ஏதும் இல்லா நிலை'யே ஆகும். அமைதி. இடம். உருவற்றிருத்தல். தோன்றா திருத்தல், அப்பாற்பட்டதாயிருத்தல் இவை அடிப்படை'

'வைகரி' நிலையில் நீங்கள் வெகுவாய் குழப்பமுற்று விடுகிறீர்கள். காரணம், உங்கள் இருப்புணர்வில் (being) இருந்து வெகுதொலைவில் நீங்கள் இருப்பதுதான். உங்கள் இருப்புணர்வின் அடியாழத்துக்குச் சென்றால், 'மத்தியமை'க்குச் சமீபமாய் சென்றடைந் தால் உங்கள் இருப்புணர்வுக்கு ஓரளவு நெருக்கமாகிவிடுவீர்கள் நீங்கள். அதனால்தான் அது நடுப்பகுதியாய், ஆதாரமாய் கருதப்படு கிறது. அவ்விதமாகவே தியானிக்கிற ஒருவர் தம்முடைய இருப்புணர்விர் பிரவேசிக்கிறார். அப்படித்தான் ஒரு மந்திரமும் பயன்படுத்தப்படுகிறது.

ஒரு மந்திரத்தை நீங்கள் பயன்படுததும்போது, ஓம், ஓம், ஓம் என்று சீர்த்தன்மையுடன் உச்சரியுங்கள். முதலில் அது உரக்கச் சொல்லப்பட வேண்டும் - வைகரி. பிறகு உங்கள் உதடுகளை மூடிக் கொண்டு உள்ளுக்குள்ளாகவே - ஓம், ஓம், ஓம் என்று மத்தியமையில் மீண்டும் சொல்லப்பட வேண்டும். அதன்பிறகு உள்ளுக்குள்ளாகச் சொல்வதையும் நிறுத்திவிட வேண்டும், அது தானாகவே ஜபமாகும். ஓம், ஓம், ஓம் என்று தானாகவே ஒலிக்குமளவிற்கு நீங்கள் அதனுடன்

ஒத்திசைவு (tune) கொண்டுவிட வேண்டும். தற்போது நீங்கள் அதைச் சொல்வதைவிட கேட்பவராகவே மாறி விடுகிறீர்கள். உங்களால் கேட்கவும், கவனிக்கவும், புரிந்து கொள்ளவும் முடிகிறது. அது பைசந்தியாக மாறிவிடுகிறது. பைசந்தி என்றால் பார்வையை மூலத்துக்குத் திருப்புவது. தற்போது உங்களுடைய பார்வை மூலாதாரத்தை (source) நோக்கித் திரும்பியிருக்கிறது. அந்நிலையில் மெள்ள மெள்ள அந்த ஓம் என்பதும் உருவற்ற ஒன்றினுள் மறைந்துவிடுகிறது. உடனே அங்கு வெறுமையே பரவிநிற்கிறது. வேறெதுவும் இல்லை. ஓம், ஓம், ஓம்... ஒலியை நீங்கள் கேட்பதில்லை. நீங்கள் எதையும் கேட்பதற்கில்லை. கேட்கப்படுவதாய் எதுவும் இல்லை.,கேட்பவரும் இல்லை. எல்லாமும் மறைந்துவிட்டது.

'தத்வமஸி' 'சுவேதகேது' – உத்தாலகர் தம்முடைய மகனிடம் சொன்னார், 'நீ அதுவாக ஆகிறாய்' என்று. ஜபிப்பவர் மறைகிற பொழுது ஜபமும் மறைகிறது.

தற்போது நீங்கள் பொருள்களின் மீது பற்றுவைத்தால் நீங்கள் வைகரி என்ற முனையிலேயே தங்கிவிடுவீர்கள். உங்கள் உடம்புடன் நீங்கள் ரொம்பவே பிணைப்புற்றிருந்தால் பைசந்தி முனையிலேயே தங்கி விடுவீர்கள். நீங்கள் எவ்வகையிலும் பிணைப்பில்லாமல் இருந்தால் உடனே பரையில் – அப்பாற்பட்டதில் மறைந்து விடுவீர்கள். அதுவே ஆன்ம விடுதலை.

விடுதலையுற்றவராய் இருப்பதென்பது பூர்வ இடத்துக்குத் திரும்புவதாகும். நாம் வெகுதொலைவு சென்று விட்டிருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். ஏதுமற்ற ஒன்றில் (nothing) இருந்து விதை வருகிறது. அடுத்து விதையில் இருந்து முளை, பிறகு ஒரு பெரிய மரம், அதன்பிறகு பூக்களும், கனிகளும். செயல்கள் எவ்வளவு தூரம் போய்விட்டன. ஆனால், பழம் திரும்பவும் மண்ணுக்கே வந்து சேருகிறது, வட்டம் பூர்த்தியடைகிறது. அமைதி தொடக்கமாயிருக் கிறது. அமைதியே முடிவெல்லையாகிறது. தூய்மையான வெற்றிடத்தில் இருந்து நாம் வருகிறோம், தூய வெற்றிடத்துக்கே நாம் செல்கிறோம். வட்டம் பூர்த்தியடையவில்லை என்றால், அந்நிலையில் ஏதோ ஒருமுனையில் நீங்கள் ஒட்டிக் கொண்டு விடுகிறீர்கள். உங்களால் நகர முடியாமல் போகிறது. உங்களுடைய செயல் வேகத்தை நீங்கள் இழந்து விடுகிறீர்கள். ஆற்றலையும், ஆர்வத் தையுந்தான.

முழுவட்டத்தையும் நீங்கள் பூர்த்தி செய்கிற அளவு யோகா உங்களை உயிரோட்டத்துடன் வைத்திருக்கும், நீங்கள் மிகச்சரியாக தொடங்கிய இடத்துக்கே வந்துசேர முடியும். முடிவெல்லை (end) என்பது தொடக்கமாயிருக்கிறது. அது தொடக்கமன்றி வேறில்லை. குறிக்கோள் என்பது மூலாதாரம் (source) தான், வேறில்லை. நாம் கடவுளை முதல் முறையாய் அடையப் போகிறோம் என்பதாகாது. நாம் முதலிடத்திலேயே அவரை அடையப் பெற்றிருந்தோம். நாம் அவரை இழந்துவிட்டோம். நாம் இழந்ததைத்தான் மறுபடியும் பெறப் போகிறோம், திரும்பவும் அடைய முயல்கிறோம். அது எப்போதுமே மீண்டும் கண்டுபிடித்தல் கொள்வதாயிருக்கிறது. நாம் அவருக்குள் இருந்தோம். அமைதியும், நிம்மதியும், பேரின்பமும் கொண்ட அந்தக் கருவறையில் இருந்தோம், ஆனால் அதைவிட்டு வெகுதொலைவு சென்றுவிட்டோம்.

தொலைதூரம் செல்வது வளர்ச்சியின் ஒரு பகுதியே ஆகும். காரணம், உங்கள் வீட்டில் வெளியே செல்லாவிடில் வீடு எத்தகையது என்பதை ஒருபோதும் நீங்கள் அறிவதற்கில்லை. நீங்கள் வீட்டில் இருந்து வெகுதொலைவு செல்லாவிடில் வீட்டின் அழகை, அமைதியை, வசதியை, ஓய்வை. அறிய மாட்டீர்கள். தம்முடைய சொந்த வீட்டுக்கு வருவதற்கு பல கதவுகளைத் தட்ட வேண்டியிருக் கும். ஒருவர் தம்முடைய சுயத்துக்குத் திரும்புவதற்குமுன் பலவற்றிலும் தடுக்கிவிழும்படி இருக்கும். நீங்கள் வழிதவறிச் சென்றபின்பே சரியான பாதைக்கு வந்து சேருவீர்கள்.

இது வளர்ச்சிக்குத் தேவை, ரொம்பவும் தேவை, ஆனால் எங்கோவொரு இடத்தில் ஒட்டிக் கொண்டுவிடாதீர்கள். மக்கள் ஒட்டிக்கொண்டு - ஒரே நிலையில் இருந்து விடுகிறார்கள். சிலர் தங்களுடைய உடம்புடன் - உடல்சார்ந்த பழக்கங்களுடன் ஒட்டிக் கொண்டு விடுகிறார்கள். சிலர் தங்களுடைய மனதுடனும், கருத்தியல் களுடனும், எண்ணங்களுடனும், கனவுகளின் அமைப்பிலும் ஒட்டுதலாய் இருந்து விடுகிறார்கள்.

கத உபநிடதம் சொல்கிறது, 'பொருள்களுக்கு அப்பால் புலன்கள் இருக்கின்றன. புலன்களுக்கப்பால் மனம் இருக்கிறது. மனதுக்கப்பால் அறிவு நுட்பம் இருக்கிறது. அறிவு நுட்பத்துக்கப்பால் ஆன்மா இருக்கிறது. ஆன்மாவுக்கு அப்பால் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாத ஒன்று இருக்கிறது. அந்த வெளிப்படுத்திக் கொள்ளாத

ஒன்றுக்கு அப்பால் பிரமன் இருக்கிறது. பிரமனுக்கப்பால் எதுவும் இல்லை' என்று. இது தூயஉணர்வுநிலை, இதுவே முடிவெல்லை.

இந்தத் தூய உணர்வுநிலையைப் பல வழிகளிலும் நீங்கள் அடைய முடியும். மெய்ப்பொருள் வழியாகாது. மெய்ப்பொருள் தேடுகிற வனுக்கு நம்பத்தக்கதாய் இருப்பது. நான் அதற்கு முக்கியத்துவம் கொடுத்து விளக்குகிறேன்.

நீங்கள் எந்தவொரு பாதையிலும் பயணிக்க முடியும். நீங்கள் மனமார்ந்தவராயும், நம்பத்தக்கவராயிருந்தால், குறிக்கோளைச் சென்றடைவீர்கள். சில பாதைகள், கடினமாயும் சிலதுகள் எளிதாயும் இருக்கும். சிலவற்றின் பக்கவாட்டில் பசுமை இருக்கும். சில பாதைகள் பாலைவனத்தினூடே செல்லும், சிலவற்றில் அழகான இயற்கைக் காட்சிகள் இடம் பெற்றிருக்கும. சிலவற்றைச் சுற்றி இயற்கைக் காட்சிகள் இருக்காது. அதுவேறு விஷயம். ஆனால் நீங்கள் எவ்வித பாசாங்குமற்றவராய், உண்மையும் நேர்மையும், நம்பகத்தன்மையும் கொண்டிருந்தால் அப்போது எல்லாப்பாதையும் உங்களைக் குறிக்கோளை நோக்கி இட்டுச் செல்வதாயிருக்கும். கிருஷ்ண பகவான் பகவத்கீதையில் சொல்கிறார், 'மனிதன் பயணிக்கிறபாதை எதுவாயினும் அது என்னுடையதுதான். அவர்கள் எங்கே நடந்தாலும், அது என்னிடமே கொண்டு சேர்க்கும்' என்று.

ஆக, இதனை ஒரு பொருளாகக் குறைத்து விடலாம். 'அந்த நம்பத்தக்கதே பாதையாயிருக்கிறது' என்று. நீங்கள் எந்தப் பாதையில் செல்கிறீர்கள் என்பது முக்கியமில்லை, நீங்கள் நம்பத்தக்க வராயிருந்தால் எல்லாப்பாதையும் உங்களை இறைவனிடம் இட்டுச் செல்லும். அதற்கு எதிரிடையானதிலும் உண்மை இருக்கிறது. நீங்கள் எந்தப் பாதையில் சென்றாலும் பரவாயில்லை, நீங்கள் நம்பத்தக்க வராயில்லை எனில், நீங்கள் எங்கே சென்றடைய முடியாது. எல்லாப்பாதையும் இரண்டாம் பட்சமானதுதான். அடிப்படைக் காரணி நம்பத்தக்கவராயும், உண்மையாயும் இருப்பதுதான்.

ஒரு சூஃபி கதை:

பொழுது விடிகிற நேரத்தில், பாலைவனத்தில் ஒரு குறிபிட்ட இடத்தில் சென்றால், அங்கிருந்து தொலைதூரத்தில் உள்ள ஒரு மலையை நோக்கி நின்றால், அவனுடைய நிழல் ஒரு பெரிய புதையலைச் சுட்டிக்காட்டும் என்று ஒருவன் கேட்டறிந்தான். அவன்

பொழுது விடிவதற்கு முன்பாகவே தன்னுடைய அறையில் இருந்து புறப்பட்டான். பொழுது விடிகிறபோது அந்தக் குறிப்பிட்ட இடத்துக்குப் போய் நின்றான். அவனுடைய நிழல் நீண்டு, மெலிதாய் அந்த நிழற்பரப்பில் விழுந்தது. 'எத்தனை பெரிய அதிர்ஷ்டம்' என்று எண்ணிக்கொண்டு, தான் அடையவிருக்கும் செல்வத்தைத் தன் மனக்கண்ணில் பார்த்தான். அவன் புதையலைத் தோண்டியெடுக்க ஆரம்பித்தான். தன்னுடைய வேலையில் பெரு விருப்புடன் ஈடுபட்டிருந்தபடியால், வானத்தில் சூரியன் மேலெழுவதையோ, தனது நிழல் குறுகிவிட்டதையோ அவன் கவனிக்கவில்லை, பிறகுதான் அதைக் கவனித்தான். அவனுடைய நிழல் பாதியாய் குறுகி விட்டிருந்தது. அவன் கவலையுடன் புதிய இடத்தில் தோண்ட ஆரும்பித்தான்.

சிலமணிநேரம் சென்று நண்பகலான போது, அவன் மறுபடியும் அந்தக் குறிப்பிட்ட இடத்தில் நின்றான். அப்போது அவனுடைய நிழல் எந்தப்பக்கமும் படியவில்லை. அவன் மிகுந்த கவலைக்குள்ளானான். தன்னுடைய அத்தனை முயற்சிகளும் வீணாகிவிட்டதே என்று அவன் அழுது புலம்பினான். தற்போது அந்த இடம் எங்கே உள்ளது?

அவ்வழியே சென்ற ஒரு சூஃபி குரு அவனைக் கண்டு சிரித்தார், 'தற்போது அந்த நிழல் மிகச்சரியாக புதையல் இருக்குமிடத்தையே காட்டிக் கொண்டிருக்கிறது. அது உனக்குள் இருக்கிறது' என்றார்.

எல்லாப் பாதைகளும் அதைநோக்கியே செல்லக்கூடும், காரணம் ஒரு வகையில் அது முன்பே அடையப்பட்டதாயிருக்கிறது. நீங்கள் புதிதாய் எதையும் தேடிக் கொண்டிருக்கவில்லை. நீங்கள் மறந்துவிட்டிருந்த ஒன்றையே தேடிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால், உண்மையில் அதை எப்படி நீங்கள் மறக்க முடியும்? அதனால்தான் நாம் பேரின்ப நிலையைத் தேடியபடி இருக்கிறோம், காரணம் நம்மால் அதை மறக்க முடியவில்லை. பரமசுகத்துக்கான தேடல், பெரு மகிழ்ச்சிக்கான தேடல் என்பதெல்லாம் அந்தக் கடவுளைத் தேடியடைய முயல்வதுதான். 'கடவுள் என்ற சொல்லை நீங்கள் பயன்படுத்தாமல் இருக்கலாம், அதைப்பற்றிக் கவலையில்லை, ஆனால், பேரின்பத்திற்கான அத்தனை தேடலும் கடவுளைத் தேடுவதாகவே இருக்கும். ஒருநாள் உங்களிடம் இருந்ததை, இழந்ததை, நீங்கள் அறிந்திருந்த ஒன்றைத் தேடுவதாகவே அது இருக்கும்.

அதனால்தான் புனிதர்கள் சொல்கிறார்கள்: 'நினைவில் கொள்ளுங்கள்' என்று. புத்தர் அதனை சம்யக் ஸ்மிருதி (சரியான நினைவு கூர்தல்) என்கிறார். நானக் அதனை 'நாம ஸ்மரணை' (பெயரை நினைவு கொள்ளல்) என்கிறார். அவ்வாறு பலமுறை நேரிட்டிருப்பதை நீங்கள் கருத்தூன்றிக் கவனித்ததில்லையா? உங்களுக்கு ஒன்று தெரிந்திருக்கிறது. நீங்கள் சொல்கிறீர்கள், 'என்னுடைய நாக்கு நுனியில் இருக்கு' என்று. அதனால் இன்னமம் அது வெளிப்பட வில்லை. கடவுள் உங்கள் நாக்கின் நுனியில் இருக்கிறார்.

அது ஒரு சிறிய பள்ளிக்கூடம். வேதியியல் ஆசிரியர் சூத்திரம் ஒன்றை கரும்பலகையில் எழுதி வைத்தார். அந்தச் சூத்திரம் எதனை உருப்படுத்துவது (represent) என்று ஒரு பையனிடம் கேட்டார். அந்தப் பையன் யோசித்துவிட்டுச் சொன்னான், 'சார், அது அப்படியே என் நாக்கு நுனியில் இருக்கு. ஆனால், எனக்கு நினைவுபடுத்திக்க முடியலை' என்று.

ஆசிரியர் சொன்னார், 'அதைத் துப்பு, வெளியே துப்பிவிடு. அது பொட்டாஸியம் சயனைடு' என்று.

கடவுளும் நாக்குநுனியில் இருக்கிறார், நான் உங்களுக்குச் சொல்கிறேன், 'அதை விழுங்குங்கள், அப்படியே விழுங்கிவிடுங்கள். அதை வெளியே துப்பிவிடாதீர்கள், அது கடவுள்' என்று. உங்களு டைய உள்ளார்ந்த அதிர்வுகளின் பகுதியாய் அவர் இருக்கட்டும். உங்கள் இரத்தத்தில் அவர் சுற்றிப் பரவட்டும். உங்கள் இருப்புணர் வினுள் ஒரு கீதமாய், நடனமாய் அவர் ஆகிவிடட்டும்.

உடம்புடன் அடையாளப்படுத்திக்கொள்வது ஒரு பழக்கமேயன்றி வேறில்லை. பிறந்த குழந்தைக்குத் தெரியாது தான் யார் என்று. பெற் றோர்கள் ஓர் அடையாளத்தை உண்டு பண்ண வேண்டியிருக்கும், இல்லையேல் இந்த உலகில அவன் தொலைந்து போய்விடுவான். அவன் யார் என்று அவர்கள் அவனிடம் சொல்லியாக வேண்டும். அவர்களுக்கும் அது தெரியாது. அவர்கள் ஒரு பொய்யான முத்திரையைத் தயார்ப்பண்ண வேண்டியிருக்கிறது. அவர்கள் ஒரு பெயரை அவனுக்குக் கொடுக்கிறார்கள். ஒரு முகம்பார்க்கும் கண்ணாடியை அவனிடம் கொடுக்கிறார்கள், 'இதோபார், இதுதான் உன்னுடைய முகம். பார்த்துக் கொள். இது உன்னுயை பெயர், கவனித்துக்கொள். இது உன்னுடைய வீடு, கவனமாயிரு. இது உன்னுடைய சாதி, மதம், நாடு' என்று சொல்லாமல் சொல்கிறார்கள்.

தான் யார் என்பதை அறியாமல் இருந்தவன், தன்னைக் கண்டுகொள்ள அந்த அடையாளங்கள் உதவுகின்றன. இவை பழக்கங்களாகின்றன.

பிறகு, அவனுடைய மனம் மெள்ளமெள்ள வளர்ச்சி காணத் தொடங்குகிறது. அவன் ஓர் இந்துவின் வீட்டில் பிறந்தால் கீதையைப் படிக்கிறான், கீதையைக் கேட்கிறான். ஒரு கிறிஸ்தவரின் வீட்டில் என்றால் அவன் தேவாலயத்துக்குக் கொண்டு செல்லப்படுகிறான். ஒரு புதிய அடையாளம் - உள்ளார்ந்த அடையாளம் தொடங்குகிறது - அவன் கிறிஸ்தவனாகிறான், இந்துவாகிறான், முகம்மதியனாகிறான். இந்தியாவில் பிறந்ததால் இந்தியன். சீனாவில் பிறந்தால் அவன் சீனனாகி விடுகிறான். அந்த நாட்டின் மரபுடன் தன்னை அவன் தொடர்புபடுத்திக் கொள்ளத் தொடங்குகிறான். சீனன் சீன தேசத்து மரபுடன், வரலாற்றுடனம் தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறான். அந்நிலையில் அவன் தன்னுடைய வீட்டில் இருப்பதாய், தான் மரபென்னும் வேர்களை முழுமையாகக் கொண்டிருப்பதாய் உணர்கிறான். ஒருவன் இந்தியனாயிருந்தால் அவனுக்கென்று மரபு வேர்கள் உண்டு. அவன் நாடோடியாயிருக்கமாட்டான். ஒருவர் தனக்கென்று வசிப்பிடத்தை, மரபை, நாட்டை, வரலாற்றைக் கொண்டிருக்கிறான். இராமர், கிருஷ்ணர் என்று வீரப்பண்புடைய நாயகர்களைக் கொண்டிருக்கின் - அந்நிலையில் தான் இருக்க வேண்டிய இடத்தில் இருப்பதாக உணர்கிறான். இந்த நுட்பமான ஒத்திசைவு (identity) பயனுடைமை சார்ந்தது.

அடுத்து இந்தப் பழக்கம் திண்மை உடையதாகிறது. உங்களை இந்தியன், இந்து, முகமதியன், கிறிஸ்தவன், சீனன் என்று எண்ணிக் கொள்வது எத்தனை அறிவீனம் என்று ஒருநாள் தெரிந்து கொள்வீர்கள். ஆனால் அப்போதும் அந்தப் பழைய பழக்கமே தொடர்ந்திருக்கும்.

பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் (தத்துவமேதை) எழுதுகிறார் தான் இனியும் ஒரு கிறிஸ்தவரல்லர் என்று அவர் அறிந்திருப்பதாக, எப்படியோ அதை மறுபடியும் மறுபடியும் அவர் மறந்துவிடுகிறார். அதுதான் முழுமையான நிலைமை... நீங்கள் மரபுக்கெதிராய் போவீர்கள். ஆனால் இன்னமும் அதைப்பற்றிக் கொண்டுதான் இருப்பீர்கள். புரட்சிக்காரர்களாகி விட்டபின்னரும் தங்கள் மரபைப் பின்பற்றிக் கொண்டிருப்பவர்கள் இருக்கிறார்கள். ஓர் இந்துவானவர் இந்துமதத்திற்கு எதிராய் போய்க் கொண்டிருந்தாலும் கிருஷ்ணரைப்

பற்றியும், இராமரைப் பற்றியும் பேசிக் கொண்டிருப்பார். எதிராக வேனும். தம்முடைய மரபுக் கெதிராய் போய்க் கொண்டிருந்தாலும் ஒரு முகமதியர் குர்ஆனைப் பற்றி பேசாதிருக்கமாட்டார். குறைகாண முற்பட்டாலும் தம்முடைய மரபையே அவர் சார்ந்திருப்பார்.

ஓர் உண்மையான கலகக்கான் தன்னுடைய மரப்புக்கெதிராக மாறாவிட்டாலும், அதை (மரபு) முழுமையாய்க் கைவிட்டுவிடுவான். அவன் அதற்கு ஆதரவாகவும் இருக்கமாட்டான், மாறாகவும் இருக்க மாட்டான். அப்போது அவன் தடையற்றவனாகிவிட்டிருப்பான். நீங்கள் எதிரானவர் என்றால் அப்போதும் நீங்கள் தடையற்றவராயிருக்க மாட்டீர்கள். நீங்கள் ஒன்றிற்கு எதிராக இருந்தால், அதனுடன் நீங்கள் சேர்த்துக் கட்டப்பட்டிருப்பதாய் உணர்வீர்கள். ஒரு கட்டு (tie) இருக்கும்.

பழக்கங்கள் தன்னுணர்வற்றையாகிவிடும். ஒரு கற்றுணர்ந்த மனிதலை, புகழ்பெற்ற அறிஞரை நான் அறிவேன். அவர் ஜே.கே என்றழைக்கப்படும் ஜே.கிருஷ்ணமூர்த்தி (தத்துவமேதை)யைப் பின்பற்றுகிறவர், வெகுநீண்ட காலமாய் கிட்டத்தட்ட நாற்பது ஆண்டுகளாய் பின்பற்றி வருபவர். அவர் என்னைக்காண வருகிறபோதெல்லாம், திரும்பத் திரும்பச் சொல்வார், 'தியானம் என்று எதுவும் இல்லை. நீங்கள் மக்களுக்கு எதைத்தான் கற்றுக் கொடுக் கிறீர்கள்? தியானமே இல்லை' என்று ஜே.கே சொல்கிறார். எல்லா மந்திரங்களும் கூறியவற்றையே மீண்டும் கூறிக் கொண்டிருப்பதுதான். அத்தனை தியானங்களும், செய்முறைகளும் மனதைக் கட்டுப் படுத்துவதோடு சரி. நான் தியானம் செய்வதில்லை' என்று.

நான் உண்மையை அழுத்திக் கூறும் சரியான தருணத்திற்காகக் காத்திருக்கிறேன். அந்த மனிதர் இருதயநோய்த் தாக்குதலுக்குள் ளாகியிருந்தார், நான் அவரைப் பார்ப்பதற்காக விரைந்து சென்றேன், அவர், 'ராம், ராம், ராம்...' என்று ஜபித்துக் கொண்டிருந்தார். என்னால் அதை நம்பவே முடியவில்லை. நான் அவருடைய தலையை உலுக்கிக் கேட்டேன், 'நீங்கள் என்ன பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்? ராம், ராம், ராம்... நீங்கள் கிருஷ்ணமூர்த்தியைப் பின்பற்றுகிறவர் என்பதை மறந்துவிட்டீர்களா?' என்று.

அவர் சொன்னார், 'அதையெல்லாம் மறந்திருங்க. நான் செத்திட்டிருக்கேன். யாருக்குத் தெரியும்? கிருஷ்ணமூர்த்தியின் கருத்து தவறாக இருக்கலாம். ராம், ராம், ராம் என்று சொன்னதையே

திரும்பச் சொல்வதால் ஒன்றும் இழப்பில்லை, அது மனசுக்கு ஆறுதலா இருக்கு' என்று.

இந்த மனிதருக்கு என்ன ஆயிற்று? நாற்பது வருடகாலம் கிருஷ்ணமூர்த்தியை செவிமடுத்திருந்தாலும் அவருக்குள் அந்த இந்துவானவன் இருக்கவே செய்கிறான். கடைசி நிமிடத்தில் மனம் எதிர்வினை புரியத் தொடங்குகிறது. அவர் ஒன்றும் கலகக்காரரல்ல. தம்மை ஒரு கலகக்காரராய் அவர் எண்ணிக் கொண்டிருந்திருக்கிறார். இந்துக்கள் எதைச் சொன்னாலும் அதற்கு மாறாக இருந்தவர் அவர். கடைசிக் கணத்தில் ஒரு கம்பீரமான கட்டிடம் தரைமட்டமாயிற்று.

வாழ்க்கை ஒரு பழக்கமேயன்றி வேறில்லை, எந்திரத்தனமான பழக்கம். நீங்கள் உணராவிடில், உண்மையிலேயே உணர்ந்து கொள்ளாவிடில் அதில் இருந்து வெளியே வருவது கடினம்.

ஒரு சூதாடியைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன்:

அவன் ஒரு தீவிர சூதாடி. அவனுடைய ஆன்மா ஆறுதலின்றி வாரக்கணக்கில் அலைந்து கொண்டிருந்தது. அவன் சொர்க்கத்தில் நுழையத் தகுதி பெற்றிருந்தும், அந்த இடம் அவனுக்குச் சலிப்பூட்டுவதாய் இருந்திருக்க வேண்டும். சூதாட்டம் இல்லை, சூதாடிகள் இல்லை - சொர்க்கம் அல்லது விண்ணுலகிற்குச் செல்வதால் என்ன பயன்? முடிவாக, புனிதபீட்டரிடம் சென்று, தான் வேறு இடத்தைப் பார்த்துவர முடியுமா என்று கேட்டான்.

புனித பீட்டர் சொன்னார், 'அது நடவாத காரியம்னதான் படுது. நீ கீழிறங்கிச் சென்றால் மீண்டும் இங்கே வர முடியாது' என்று.

'நான் சும்மா சுத்திப்பார்த்திட்டு தானே வரப்போறேன்' என்றது சூதாடியின் ஆவி.

எனவே, அவனுக்குக் கடவுச் சீட்டு வழங்க புனிதபீட்டர் ஒப்புக்கொண்டு, அவன் இருபத்திநாலு மணிநேரம் மட்டும் தங்கி இருந்துவர அனுமதித்தார்.

அந்தச் சூதாடி நரகத்தைச் சுற்றிப் பார்த்து வருவதற்காகச் சென்றான். அவன் முதலில் பார்த்தது அங்கே சூதாடிக் கொண்டிருந்த தன்னுடைய பழைய கூட்டாளிகளைத்தான். ஆயினும், அவனிடம் பணம் இல்லாது போனதால், அவர்கள் அவனை ஆட்டத்துக்குச் சேர்த்துக்கொள்ள மறுத்துவிட்டனர்.

'நான் சீக்கிரமே பணத்தைத் தயார் பண்ணிக் கொண்டு வருவேன்' என்றவன். அங்கிருந்து கீழே உள்ள நடைபாதைக்குச் சென்றான். பத்து நிமிடங்கள் கழித்து திரும்பிவந்தபோது அவன் கையில் ஒரு பெரிய சுருளாப் பத்து பவுண்ட் நோட்டுகள் இருந்தன.

அவர்களுள் ஒருவன் கேட்டான். 'இவ்வளவு பணம் உனக்கு எங்கேயிருந்து கிடைச்சுது?' என்று.

'என்னுடைய கடவுச் சீட்டை நான் விற்று விட்டேன்' என்றான் அந்தச் சூதாடி.

பழக்கங்கள் ரொம்பவே மட்டு மீறியவை; சொர்க்கத்தையும் நீங்கள் மறுத்துவிடக்கூடும். ஒரு பழக்கம் உங்களைச் சரியாகப் பிடித்துக் கொண்டுவிட்டால் நீங்கள் உணர்வற்றவராய், உதவாக் கரையாய் மாறிவிடுவீர்கள். அதனால்தான் உங்கள் தொடர்புகளில் விழிப்போடு இருங்கள் என்று யோகா வலியுறுத்துகிறது. நீங்கள் ஒருபோதும் உடம்பல்ல என்பதை உங்களால் முடிந்த அளவு நினைவில் வையுங்கள்.

இன்னொன்றையும் நினைவில் கொள்ளுங்கள், ஒரு பழக்கத்தை உடைத்தெறிவது அத்தனை எளிதல்ல என்பதை. ஆனால் அதற்கு மாற்றான ஒன்றை நீங்கள் தோற்றுவித்துக் கொண்டால் அது கடினமாயிருக்காது. மேலும், அப்படித்தான் அது நடக்கிறது. மக்கள் தங்களுடைய பழக்கங்களுக்க மாற்றீடு (substitute) வைத்துக் கொண்டிருக்கிறார்கள். 'உடம்பல்ல நீங்கள்' என்று அவர்களிடம் நீங்கள் சொன்னால், தங்களை மனமாக எண்ணமிட்டுக் கொள்ளத் தொடங்கிவிடுவார்கள். அந்நிலையில் எதுவும் மாறுவதில்லை. பழக்கத்தின் பெயர்தான் மாறுகிறது.

நான் பார்க்கிறதுதான், 'புகைப்பதை நிறுத்திவிடுங்கள்' என்று நான் யாரிடமாவது சொன்னால், அவர் வெற்றிலை போட ஆரம்பித்து விடுவார். 'வெற்றிலையை நிறுத்துங்கள்' என்று நான் சொன்னால், 'சூயிங்கம்' போடத் தொடங்கிவிடுகிற். அல்லது. அதில் இருந்தும் நீங்கள் அவரைத் தடுத்துவிட்டால் அவர் சளசளவென்று பேசத் தொடங்கிவிடுகிறார். அதுவும் அதேமாதிரிதான். தொடக்கத்தில் அவர் புகைத்துக் கொண்டிருந்தார். அவரளவில் மட்டுமே தீங்கு செய்கிற காரியம் அது. வேறு யாருக்கும் அது கெடுதலாயிருக்கவில்லை. தற்போது அவர் புகைக்கமுடியவில்லை என்பதால் அதிகம் பேசிக்

கொண்டிருக்கிறார், தற்போது அவர் அடுத்தவருடைய அமைதியையும், நிம்மதியையும் கெடுத்துக் கொண்டிருக்கிறார். ஒருவகையில் புகைப்பவர் தேவலாம். அவர் தம்மளவில், தம்மை ஓர் எல்லைக்குட்படுத்திக் கொண்டு இருந்துவிடுகிறார்.

உண்மையில், ஒன்றை நீங்கள் கவனிக்கவேண்டும். நீங்கள் நரம்பு சார்ந்த விதத்தில் உளக்கிளர்ச்சி அடைகிற (nervous) போதெல்லாம நீங்கள் புகைக்கத் தொடங்குகிறீர்கள். அது உளக்கிளர்ச்சி அடைவதில் இருந்து தப்பித்துக்கொள்கிற முயற்சியாகவே இருக்கும். நீங்கள் பேசத் தொடங்குகிற போதம் அதுதான் நடக்கிறது. நீங்கள் கலவரப்பட்டு விடுகிறீர்கள். ஏதோவொன்றில் உங்கள் கவனத்தைத் திருப்ப விரும்புகிறீர்கள்.

ஓர் அருமையான கதையை நான் கேட்டிருக்கிறேன்:

பதினெட்டே வயதான நோயாளி அவன். அவன் தன்னுடைய நேர்த்தியான உடைகளை அணிவதற்காக, மணிக்கணக்கில் நேரத்தைச் செலவிடுவது, அவனுடைய பெற்றோர்களுக்கு பெருத்த கவலையளிப்பதாயிருந்தது. தன்னுடைய தலைமுடியை, காலணிகளுக்கு 'பாலீஷ்' போடுவதற்கே ஒரு யுகம் ஆகிவிடும். அதன்பிறகு சமையலறைக்குச் சென்று, ஒரு காரட்டை எடுத்து இடது காதில் செருகிக்கொண்டு டிஸ்கோ ஆடத் தொடங்கிவிடுவான். இதெல்லாம் பெரிய தலைவலி அவனுடைய பெற்றோர்களுக்கு. எப்படியோ அவனிடம் நயந்துபேசி ஒரு மனநல மருத்துவரிடம் அவனைக் கூட்டி வந்துவிட்டார்கள். அவன் மனநல மருத்துவரின் அலுவலகத்துக்கு வந்து சேர்ந்தான். நன்றாகத் தலையைவாரிக் கொண்டு, காதில் ஒரு ஸெலரி (celery) குச்சியை செருகியிருந்தான். மருத்துவர் அவனுடைய பெற்றோர்கள் அவனைப்பற்றிக் கவலைப்படுவதை மென்மையாகச் சொல்லிவிட்டு, 'நீ ஸெலரி குச்சியை காதில் செருகிக்கொண்டிருக்கிறாயே, அதற்கு ஏதாவது காரணம் உண்டா?' என்று கேட்டார்.

பையன் சொன்னான், 'இருக்கு, மம்மிகிட்ட காரட் இல்லை' என்று.

ஆக, ஒரு காரட்டை விட்டால் அப்புறம் ஸெலரி... மக்கள் தங்களுடைய பழக்கங்களை மாற்றிக் கொண்டே இருக்கிறார்கள்.

சில நேரங்களில் அது ஒரு கெட்ட பழக்கத்தைவிட்டு நல்ல பழக்கத்துக்கு மாறுவதாயிருக்கும். எல்லாருக்கும் அது மகிழ்ச்சியளிப்பதாயும், திருப்தியளிப்பதாயும் இருக்கும். ஆனால்,யோகா

அப்படி திருப்தியடையாது. உங்களால் புகைப்பதைவிட்டு அந்த மந்திரத்தை ஜபிக்க முடிகிறது. தற்போது ஒருநாள் அந்த மந்திரத்தைத் திரும்பச் சொல்லாவிட்டால் நீங்கள் அசவுகரிய உணர்வு கொண்டு விடுகிறீர்கள். அதுபோலத்தான் புகைப்பதிம். ஒருநாள் புகைக்க வில்லையென்றால் அசவுகரியமாக உணர்வீர்கள். அந்த நடைமுறை ஒழுங்கைத் தொடரவே விரும்புவிர்கள். உங்களால் ஒரு கெட்ட பழக்கத்தை நல்ல பழக்கமாக மாற்றிக் கொள்ள முடியும், ஆனால் பழக்கம் என்னவோ பழக்கமாகத்தான் இருந்துவிடுகிறது. சமூகத்தின் பார்வைக்கு வேண்டுமானால் அது விரும்பத்தக்கதாய் இருக்கலாம். ஆனால் உங்களுடைய அக வளர்ச்சிக்குப் பயன்படுமா என்று பார்த்தால் அது பொருளற்றதுதான்.

எல்லாப் பழக்கங்களும் விடப்பட்ட வேண்டியதே. குழப்ப நிலைக்குள்ளாக வேண்டும் என்று நான் கூறவில்லை. ஒரு தீவிரமான சரியாகத் திட்டமிடப்படாத, தாறுமாறான வாழ்க்கையை வாழும்படி நான் கூறவில்லை. ஆனால், உங்கள் வாழ்க்கையை உங்களுடைய விழிப்புணர்வு தீர்மானிக்க விடுங்கள் என்கிறேன்.

அதிகாலையில் எழுவதை ஒரு பழக்கமாய்க் கொண்டு ஐந்துமணிக்க எழுந்து கொள்ள உங்களால் முடியும். அதை ஒரு பழக்கமாய் கொள்ளாமல், ஒரு விழிப்புணர்வாய்க் கொண்டு ஐந்துமணிக்கு எழுவதும் சாத்தியந்தான். அவையிரண்டு வேறானவை, தங்களுடைய தன்மையில் முற்றிலும் மாறுபட்டவை. ஐந்துமணிக்கு எழுவதை ஒருவர் பழக்கமாய் வைத்துக் கொண்டால், அது மற்றொருவர் ஒன்பது மணிக்க எழுவதைப் பழக்கமாய் கொண்டிருப்பது போன்று எந்திரத்தனமானதுதான். இருவரும் ஒரே செயல்பாட்டைக் கொண்டவர்கள்தாம். ஐந்து மணிக்கு எழுகிறவரும் ஒன்பது மணிக்கு எழுகிறவரைப் போன்று மந்தமாகவே இருப்பார், காரணம், மந்தத்தன்மை நீங்கள் எப்போது எழுகிறீர்கள் என்பது பற்றியதல்ல. நீங்கள் பழக்கத்தைக் கொண்டு எழுகிறீர்களா, விழிப்புணர்வைக் கொண்டு எழுகிறீர்களா என்பதுதான் கேள்வி.

நீங்கள் விழிப்புணர்வைக் கொண்டு எழுவதாயின் நீங்கள் கவனமாயிருப்பவர். அது காலை ஒன்பது மணிக்கு என்றாலும், நீங்கள் விழிப்புணர்வோடு எழுந்தால் நுட்பஉணர்வு உடையவர்தான்: நீங்கள் எல்லாவற்றையும் ஒரு தெளிவோடு காண்பீர்கள். எல்லாமே உங்களுக்கு அழகாய் தெரியும். ஒரு நீண்ட ஓய்வுக்குப் பிறகு

உங்களுடைய புலன்கள் சுறுசுறுப்பாகி விடும். அதிக சுறுசுறுப்பாகி விடும். புழுதியும் தூசியும் மறைந்து எல்லாமே அதிக்த் தெளிவாய் இருக்கின்றன. ஓய்வெடுத்ததும் ஆழ்நத உறக்கத்துக்குப்பின் - அத்தனை எண்ணங்களும் வெகுதொலைவுக்கப்பால் விடப்படு கின்றன. உடம்பு மறக்கப்படுகிறது - உங்களுடைய பூர்வத்தை நோக்கி நீங்கள் செல்கிறீர்கள். நீங்கள் மீண்டும் இளமையும். வனப்பும் பெற்றவராய் புத்துணர்வோடு திரும்பி வருகிறீர்கள். ஆனால் அது வெறும் பழக்கமாயிருப்பின் மற்றெந்த பழக்கத்தையும் போலவே அதுவும் பயனற்றதுதான்.

மதம் பழக்கம் பற்றிய ஒரு பிரச்சினை அல்ல. நீங்கள் தேவாலயத் துக்கோ அல்லது கோயிலுக்கோ செல்வதை ஒரு பழக்கமாய் கொண்டிருந்தால், ஒரு சம்பிரதாயம் அல்லது நடைமுறை ஒழுங்காகக் கொண்டிருந்தால் அது பயனற்றது. நீங்கள் விழிப்போடு கோவிலுக்குச் சென்றால் அப்போது கோயில் மணியோசை ஒரு புதிய அர்த்தத்தை உங்களுக்குக் கொடுக்கும். அந்தக் கோயில் மணிகள் உங்கள் இதயத்தில் ஏதோவொன்றை எதிரொலிக்கும். தேவாலய அமைதி முற்றிலும் புதிய முறையில் உங்களைச் சுற்றிச் சூழ்ந்து கொள்ளும்.

ஆக, இது பழக்கம் பற்றிய பிரச்சினையல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். மதம் செயல்முறைபற்றிய ஒரு பிரச்சினை அல்ல. நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். இப்படித்தான் பதஞ்சலி உங்களை இணக்கமுடையவராக்கி, மெள்ளமெள்ள புரிதலை உங்களுக்குக் கொடுத்துக் கொண்டிருக்கிறார். அந்தப் பாதை பற்றி மிகுதியான அளவில் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

நீங்கள் எத்தனைக்குத் தெளிவாக இருக்கிறீர்களோ, அத்தனைக்கு ஒவ்வொரு இடத்திலும், ஒவ்வொரு இலையின் மீதும், ஒவ்வொரு பூவின் மீதும் எழுதப்பட்டிருக்கும் செய்தியை உங்களால் பார்க்க முடியும். இது கடவுளின் செய்தி. ஒவ்வொன்றிலும் அவருடைய கையொப்பம் இருக்கிறது. நீங்கள் பகவத்கீதைக்குள் போக வேண்டியதில்லை. குர்-ஆனுக்குள்ளும், பைபிளுக்குள்ளும் போகவேண்டும் என்பதில்லை. குர்ஆனும், கீதையும், பைபிளும் இந்தப் பிரபஞ்சம் முழுக்க எழுதப்பட்டிருக்கிறது. உங்களுடைய கண்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடியதாய் இருக்க வேண்டும்.

நான் கேட்டறிந்தது:

இலண்டனில் மணமான ஓர் இளம்பெண் தான் கருவுற்றிருப்பதாக நம்பினாள். அதை உண்மையா என்று உறுதிப்படுத்திக் கொள்ள ஒரு மருத்துவரை அணுகினாள். அந்த மருத்துவர் உரிய பரிசோதனைகளைச் செய்து, அவளுடைய ஐயங்கள் சரியானவை என்று உறுதிப்படுத்தினார். பிறகு, அவள் வியப்பிற்குள்ளாகிற விதமாய், ஒரு ரப்பர் ஸ்டாம்ப் எடுத்து அவளுடைய வயிற்றின்மீது எதையோ பொறித்தார். 'அவ்வளவுதான்' என்றார்.

அந்த மனைவி தனது கணவனிடம் அந்த வினோதச் செயலை விவரித்தாள். அவன் கேட்டான், 'அது எதைத் தெரிவிக்கிறது' என்று.

'நல்லது, படித்துப் பாருங்கள்' என்றாள் அவள்.

அது மிகச்சிறிய அச்சில் இருந்ததால் அவனால் படிக்க முடியவில்லை. பூதக்கண்ணாடி மூலம் படிக்கத் தெளிவாய் இருந்தது.

அது, 'ஒரு பூதக்கண்ணாடி இல்லாமல் உங்களால் இதைப்படிக்க முடிகிறபொழுது, உங்கள் மனைவியை வேகமாய் மருத்துவ மனைக்குக் கொண்டு வரவும்' என்றிருந்தது.

தற்போது உங்களுக்கு பூதக்கண்ணாடி தேவைப்படுகிறது - ஒரு புத்தர், ஒரு இயேசு, ஒரு கிருஷ்ணர், ஒரு பதஞ்சலி இவர்களுடைய கண்ணாடி. அதற்குப் பிறகும் உங்களால் படிக்க முடியவில்லை என்றால் நீங்கள் கிட்டத்தட்ட குருடுதான். உங்களுடைய கண்கள் தெளிவாக இருக்குமெனில் ஒவ்வொரு இடத்திலும் அவருடைய செய்தி இருப்பதைக் காண்பீர்கள். இத்தனை நாளாய் இதனை எப்படித் தவறவிட்டோம், இதனை எப்படிப் பார்க்க முடியாமல் போயிற்று என்று நீங்கள் எண்ணி வியக்குமளவிற்கு அந்தச் செய்தி மிகத்தெளிவாக இருக்கிறது. அது எங்கும் இருக்கிறது, எல்லா இடங்களிலும் இருக்கிறது. எல்லாத் திக்கில் இருந்தும், எல்லாப் பரிமாணங்களிலும் அவர் உங்கள் கதவைத் தட்டிக் கொண்டிருக்கிறார்.

ஆனால், நீங்கள் சரீரத்தில் வாழ்கிறவராயின், அதை உங்களால் கேட்க முடியாது. நீங்கள் மனதில் வாழ்கிறவராயின் ஓரளவு கேட்பீர்கள், ஆனால் அதுபற்றிய கோட்பாட்டை உண்டாக்கி, தவறவிடுவீர்கள். நீங்கள் மனதைவிட்டு, பைசந்திக்குள் - தியானங்கள் உங்களை இட்டுச் செல்கிற இடத்துக்குள் நுழைந்தால் அந்தச் செய்தியை உங்களால் படிக்க முடியும். அத்துடன் நீங்கள் தத்துவம்பேசவோ, தத்துவக் கோட்பாடுகளில் ஏமாறவோ மாட்டீர்கள். நீங்கள் அதைத் தத்துவமாக்காவிடில், கடவுளைப் பற்றி எண்ணாமல் அவரைக் காண முடியுமெனில் நீங்கள் எங்கெங்கோ சுற்றிக்

கொண்டிருக்காமல், பைசந்தியில் இருந்து மறைவீர்கள், நேரடியாய் ஊடுருவிச் செல்வீர்கள். விதை உடைபடும். நீங்கள் 'பரை'யின் எல்லையற்ற ஆழத்துக்குள் விழுவீர்கள்.

அந்த வட்டம் பூர்த்தியடைகிறது. அமைதியில் இருந்து அமைதிக்கு, வெற்றிடத்தில் இருந்து வெற்றிடத்துக்கு, கடவுளிடம் இருந்து கடவுளுக்கு. கடவுளே தொடக்கமாகவும், முடிவெல்லை யாகவும் இருக்கிறார். ஆல்ஃபாவாகவும், ஒமேகாவாகவும் இருப்பதுவரை (முதலுமாய், முடிவுமாய்).

தற்போது சூத்திரம்:

*'ஸத்வ புருஷயோ: சுத்தி ஸாம்யே கைவல்யம்'*

புருடனுக்கும் சத்துவத்திற்கும் இடையே தூய்மை சமநிலையில இருக்கும்போது ஆன்ம விடுதலை அடையப்படுகிறது.

யோகா பிரபஞ்ச இருப்பை இரண்டாகப் பிரிக்கிறது. ஒன்று வெளிப்படாதது (அறிகுறி ஏதுமற்றது), மற்றொன்று வெளிப்படுவது. காரணம் வெளிப்படுத்தும் (manifestation) செயல்முறையில் பொருள்கள் இரண்டாகின்றன. உதாரணமாக, ஒரு ரோஜாப்புதரை அழகிய பூக்களை நீங்கள் பார்க்கிறீர்கள். சும்மா பார்க்கிறீர்கள், ஒரு வார்த்தையும் பேசாமல், நீங்கள் அப்படியே ரோஜாவைப் பார்க் கிறீர்கள். உள்ளுக்குள் எந்தச் சொல்லாடலும் இல்லாமல். அனுபவம் ஒன்றுதான். தற்போது யாரிடமாவது, 'அந்தப் பூக்கள் அழகானவை' என்று நீங்கள் சொல்ல விரும்பினால், 'அந்தப் பூக்கள் அழகானவை' என்று நீங்கள் சொல்கிற கணத்திலேயே அருவருப்பு பற்றியும் ஒன்றைச் சொல்லிவிடுகிறீர்கள். பூக்கள் அருவருப்பானவை அல்ல. எனினும் அழகுடன் அருவருப்பும் உள்ளே நுழைந்துவிடுகிறது. 'கொஞ்சம் அழகைப் பற்றிச் சொல்லுங்கள்' என்று யாராவது கேட்டால், அதை விளக்குவதற்கு அருவருப்பை நீங்கள் பயன்படுத்துவீர்கள்.

நீங்கள் ஒரு பெண்ணைப் பார்க்கையில், உங்களுக்குள் எந்த வார்த்தையும் தோன்றவில்லை என்றால் அப்போது அனுபவம் தனிப்பட்ட ஒன்றாய், இரட்டைத் தன்மையற்றதாய் இருக்கும். 'நான் உன்னை விரும்புகிறேன்' என்கிற கணத்திலேயே வெறுப்பையும் உள்ளே கொண்டு வந்து விடுகிறீர்கள். காரணம் வெறுப்பு இல்லாமல் அன்பை விளக்க முடியாது. இரவு இல்லாமல் பகலை விளக்க முடியாது. மரணம் இல்லாமல் வாழ்க்கையை விளக்க முடியாது. எதிரிடையானதை (opposite) உள்ளே கொண்டுவர வேண்டியிருக்கும்.

'வைகரி' என்கிற பகுதியில் எல்லாமே கச்சிதமாய், இரட்டைத் தன்மையுடன் இருக்கிறது. இரவு பகலில் இருந்து பிரிக்கப்பட்டதாய், பிறப்பு மரணத்தில் இருந்து பிரிக்கப்பட்டதாய், அழகு அருவருப்பில் இருந்து பிரிக்கப்பட்டதாய், ஒளி இருளில் இருந்து பிரித்து வேறாக்கப் பட்டதாய் - ஒவ்வொன்றும் அரிஸ்டாட்டில் முறையில் பிரிக்கப்பட் டிருக்கிறது. இன்னும் கொஞ்சம் ஆழத்துக்குச் செல்லுங்கள். 'மத்தியமை' பகுதியில் பிரிப்பு தொடங்குகிறது. ஆனால் அத்தனை தெளிவாய் இருப்பதில்லை. இரவும் பகலும் சந்திக்கின்றன. இன்னும் ஆழத்துக்குச் செல்லுங்கள். பைசந்தி பகுதியில்அவை விதைக்குள் இருக்கும்.

இரட்டைத்தன்மை இன்னும் மேலெழுந்திராது. எது எப்படி என்று உங்களால் சொல்ல முடியாது. எல்லாமும் வகைப்படுத்தப்படாததாய் இருக்கிறது. இன்னும் ஆழத்துக்குச் செல்லுங்கள். 'பரை' பகுதியில் பிரிப்பு என்பதில்லை - பார்க்கவும் முடிவது, பார்க்கவும் முடியாதது என்ற பிரிப்பு.

யோகா மெய்ம்மையை இரண்டாகப் பிரிக்கிறது. புருடன் மற்றும் பிரகிருதி என்று. பிரகிருதி பொருள், புருடன் உணர்வுநிலை. நீங்கள் பிரகிருதியுடன், உங்கள் உடம்புடன், இயற்கையுடன், பொருளுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொண்டால் இரண்டுமே மாசடைகிறது. மாசு இரட்டிப்பாகிறது.

உதாரணமாக பாலையும் தண்ணீரையும் கலந்துவிட்டால் நீங்கள் சொல்வீர்கள், 'இனியும் அந்தப்பால் தூய்மையானதல்ல' என்று. ஆனால் நீங்கள் எதையும் கருத்தூன்றிக் கவனித்திருக்க மாட்டீர்கள், தண்ணீரும் தூய்மையுடனிருக்காது. நீங்கள் தண்ணீரைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால் தண்ணீரையும் பாலையும் ஒன்றாய் கலக்கிறபொழுது இரண்டுமே அசுத்தமாகி விடுகின்றன. தண்ணீர் தண்ணீராகவும், பால் பாலாகவும் இருந்தபோது இரண்டுமே தூய்மையாக இருந்தன. இரண்டு தூய்மைகள் ஒன்றையொன்று எதிர்கொள்கிற போது இரண்டுமே அசுத்தமாகிவிடுகின்றன. இது ஒரு அதிசயந்தான்.

அசுத்தம் கண்டனத்துக்குரிய எதையும் தனக்குள் கொண்டிருக்க வில்லை. வேறு பொருளொன்று இடம்பெற்றுவிட்டதாக அது செல்கிறது. தன்னுடைய உள்ளார்ந்த இயல்புக்கு மாறான ஒன்று தனக்குள் நுழைந்துவிட்டதாக அது சொல்கிறது. அவ்வளவுதான்.

இந்தச் சூத்திரம் ரொம்ப அழகானது. விபூதிபாதம் இந்தச் சூத்திரத் துடன் முடிகிறது. அது ஒரு வளர்ச்சியின் உச்சநிலை. நீங்கள் உடம்பு டன்அடையாளப்படுத்திக் கொண்டபோது அசுத்தமாய் இருந்ததாக இந்தச் சூத்திரம் சொல்கிறது. நீங்கள் அசுத்தமாய் இருக்கிறீர்கள். உடம்பு அசுத்தமாகிவிட்டிருக்கிறது. மனதுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்கிறபொழுது நீங்கள் அசுத்தமாய் இருக்கிறீர்கள், மனம் அசுத்தமாயிருக்கிறது. நீங்கள் அவற்றுடன் அடையாளப் படுத்திக் கொள்ளாதபொழுது இரண்டுமே சுத்தமாயிருக்கின்றன.

தற்போது இது உங்களுக்கு முரண்பாடு போலத் தோன்றினாலும் மெய்யுரைதான்.

ஒரு புத்தராயினும், சித்தராயினும் முயன்று அடைகிற ஒருவரின் மனம், தூய்மையில் செயல்படும். அவருடைய நுண்ணறிவு தூய்மையில் செயல்படும். அவரது எல்லாச் செயல்களும் தூய்மை அடைந்துவிடுகின்றன. அவருடைய தன்னுணர்வும் தூய்மையில் செயல்படும். இரண்டும தனித்தனியானவைதாம் - பால்பாலாகவும், தண்ணீர் தண்ணீராகவும் இருக்கும்.

சூத்திரம் சொல்கிறது, 'புருடனுக்கும் சத்துவத்துக்கும் இடையே தூய்மை சமநிலையில் இருக்கும் பொழுது ஆன்ம விடுதலை அடையப்பெறும்' என்று. சத்துவம் என்பது பிரகிருதியின் உச்சமுனை. இயற்கையின், பொருளின் மேம்பட்டநிலை. சத்துவம் அறிவுத்திறன், புருடன் விழிப்புணர்வு. அது உங்களுக்குள் மிக நுண்ணிய இணைப்பாக இருக்கிறது. காரணம் அவை ஒன்றுபோல் இருப்பவை. அறிவும், விழிப்புணர்வும் ஒரே மாதிரியானவை. பலசமயங்களில அறிவுடையவர் விழிப்புணர்வும் உடையவராக இருப்பார் என்று நீங்கள் எண்ணத் தொடங்குவீர்கள்தானே. அது அப்படி இல்லை.

ஐன்ஸ்டீன் அறிவுடையவர், மிகப் பெரிய அளவில் அறிவு நுட்பம் உடையவர். ஆனால் அவர் ஒரு புத்தரல்லர். புத்தரைப் போல் அவர் விழிப்புணர்வு கொண்டிருக்கவில்லை. சொல்லப்போனால் அவர் சாதாரணமானவர்களைவிட விழிப்புணர்வற்றவராகவே இருந் தார். காரணம் தமது அறிவுக்குள் அவர் ரொம்பவே மூழ்கிப் போயிருந்தார்.

ஐன்ஸ்டீன் ஒரு சமயம் ஏதோ ஓரிடத்திற்குப் பேருந்தில் சென்று கொண்டிருந்தபோது இது நடந்தது. நடத்துநர் அவரிடம் வந்து பயணக் கட்டணத்தைக் கேட்டார். அவரும் அந்தத் தொகையைக் கொடுத்தார். நடத்துநர் மீதி சில்லறையை அவரிடம் கொடுத்தார். ஐன்ஸ்டீன் அந்தச்

சில்லறையைக் கணக்கிட்டார். ஆனால் தவறாகக் கணக்கிட்டுவிட்டார். உலகின் மிகச்சிறந்த கணித மேதையான அவர் சொன்னார், 'நீர் எனக்குச் சரியான சில்லறையைக் கொடுக்கவில்லை. இன்னும் சில நாணயங்களைத் தரவேண்டியிருக்கும்' என்று.

நடத்துநர் மறுபடியும் எண்ணிப் பார்த்துவிட்டுச் சொன்னார். 'உங்களுக்கு எண்கள் தெரியாதா?' என்று.

இந்த மனிதரைவிட வேறு யாருக்கும் எண்களைப் பற்றி அதிகம் தெரிந்திருக்காது. ஆனால் என்ன நடந்தது?

மிகுதியான அறிவுடையவர்கள் எப்போதுமே மிகுந்த ஞாபக மறதி உடையவர்களாக இருக்கின்றனர்.தங்கள் அறிவைக் கொண்டு இயங்குகிற அவர்கள், அந்த அறிவோடு பிணைக்கப்பட்டவர் களாகவே இருப்பார்கள். வெளியுலகில் உள்ள பல விஷயங்களை அவர்கள் மறந்து விட்டிருப்பார்கள்.

சிறந்த உளப்பகுப்பாய்வாளர் ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். மிகபெரிய அறிவாளி அவர். தொடர்ந்து இரண்டு மூன்று நாட்களுக்குக்கூட வீடு திரும்பாமல் தொடர்ந்து பரிசோதனைகளில் கருத்தூன்றியவராய் இருந்து விடுவதுண்டு. மனைவி ரொம்பவே கவலைப்பட்டாள். ஒருமுறை இப்படித்தான் ஆகிவிட்டது. மூன்றாவது நாள், பொறுக்க முடியாமல், அவள் தொலை பேசியில் அவரை அழைத்து, 'நீங்க என்னதான் செஞ்சிட்டிருக்கீங்க? திரும்பி வாங்க. நான் உங்களுக்காகக் காத்திட்டிருக்கேன். ராத்திரி சாப்பாடு தயாரா இருக்கு' என்றாள்.

அவர் சொன்னார், 'ரொம்பசரி, வந்திடறேன். ஆமா அட்ரஸைச் சொல்லு' என்று.

தம்முடைய வீடு, மனைவி, முகவரி என்று எல்லாவற்றையும் அவர் முற்றாக மறந்து விட்டிருக்கிறார்.

அறிவு நுட்பம் விழிப்புணர்வோடு இருக்கும் என்பதில்லை. விழிப்புணர்வு கட்டாயம் அறிவு நுட்பத்தோடு இருக்கும். தெரிநிலை (aware) உள்ள ஒருவன் அறிவுடையவனாயிருப்பான். அறிவுள்ள ஒருவன் தெரிநிலையோடு இருப்பான் என்பதற்கில்லை. ஆனால், இரண்டுமே நெருக்கமானவைதாம். உடல் சார்ந்த மனத்தின் ஒரு பகுதியே அறிவு, விழிப்புணர்வு புருடனின் ஒரு பகுதி. அது இறுதியானது. அப்பாற்பட்டது.

வானம் பூமியைச் சந்திக்கிறது. இரண்டும் ஒன்றையொன்று எதிர்கொள்ளும் பகுதி, விண்ணும் மண்ணும் சந்திக்கிற அந்தத் தொடுவானம் அடையாளம் காணப்படாததாயிருக்கிறது. அவ்வாறே அறிவும் விழிப்புணர்வும் சந்திக்கின்றன. இரண்டும் ஒன்றுபோலத்தான். அறிவுத்திறன் தூய்மை செய்யப்பட்ட ஒரு பொருள, ஒருவர் அதனுள் நுழைந்து, 'நான் தெரிநிலையோடு இருக்கிறேன்' என்று எண்ணிக் கொள்ளுமளவுக்கு தூய்மையானது. அப்படித்தான் பல தத்துவ மேதைகள், தங்கள் வாழ்க்கையை வீணடித்துக் கொள்கிறார்கள். தங்களுடைய அறிவுத்திறனே விழிப்புணர்வு என்று அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். விழிப்புணர்வைத் தேடுவது மதம், அறிவுத்திறனின் தேடல் தத்துவம்.

'புருடனுக்கும் சமத்துவத்துக்கும் இடையே தூய்மை சமநிலையில் இருந்தால் ஆன்ம விடுதலை அடையப்பெறும்.' ஆனால் அந்த விடுதலையை எப்படி அடைவது? முதலில் சத்துவத்தின் தூய்மையை நீங்கள் முயன்று அடைய வேண்டும். (சத்துவம் - அறிவு). எனவே, ஆழத்துக்குச் செல்லுங்கள். வைகரியில் அறிவு வெளிப்பாடாகும். மத்தியமையில் வெளிப்படும் அறிவு உங்களுக்கானதேயன்றி, உலகுக்கானது அல்ல. பைசந்தி விதை வடிவில் உள்ள அறிவு. 'பரை' விழிப்புணர்வு மெள்ள மெள்ள் உங்களை விடுவித்துக் கொண்டு, வேறுபடுத்தி அறிந்து (discrminate) உடம்பை ஒரு கருவியாய், ஊடகமாய், உறைவிடமாய் காணத் தொடங்குங்கள். அதனை உங்களால் முடிந்த அளவு நினைவில் கொள்ளுங்கள். மெள்ள் மெள்ள அந்த நினைவு நிலைபெற்றுவிடும். பிறகு மனதின் பேரில் செயல்படத் தொடங்குங்கள். மனமல்ல நீங்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். இந்த நினைவூட்டல் நீங்கள் விலகி வேறாகிவிட உதவும்.

நீங்கள் உடல்சார்ந்த அறிவில் இருந்து வேறானதும் உங்கள் அறிவு தூய்மையாகிவிடும். உங்கள் புருடன் எப்போதுமே தூய்மையாகத்தான் இருக்கிறது. எதிரெதிராய் இருக்கும் இரண்டு நிலைகள் எதையும் பிரதிபலிப்பதில்லை, அவை வெறுமையாகவே இருக்கும். ஆன்மா தன்னை பருப்பொருளோடு அடையாளப்படுத்திக் கொள்கிறபோதுதான் அசுத்தப்படுகிறது.

முற்றான வெறுமை பற்றிய இந்தக் கருத்தே ஆன்ம விடுதலை யாகும். விடுதலை என்றால் உலகில் இருந்து விடுபடுவதல்ல. அடையாளப்படுத்திக் கொள்வதில் இருந்து விடுபடுதல் ஆகும்.

அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள். எதனுடனும் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள். நீங்கள் சாட்சியாயிருப்பவர் என்பதை எப்போதும் நினைவில் வையுங்கள். சாட்சிபாவத்தில் இருத்தல் என்கிற முக்கியக்கருத்தை ஒருபோதும் விட்டுவிடாதீர்கள். ஆயிரமாயிரம் சூரியன்கள் ஒன்றாக மேலெழுவது போன்று ஒருநாள் உங்களுக்குள் விழிப்புணர்வு மேலெழும்.

பதஞ்சலி இதைத்தான் கைவல்யம் (விடுதலை) என்கிறார். கைவல்யம் என்கிற வார்த்தை புரிந்து கொள்ளப்பட வேண்டியது.

இந்தியாவில் பல்வேறு தீர்க்கதரிசிகளும் அந்த நிறைவான பொருளினை விளக்கப் பல்வேறு சொற்களைப் பயன்படுத்தியிருக் கிறார்கள். மகாவீரர் அதனை மோட்சம் என்கிறார். மோட்சம் என்பதற்கு முற்றான விடுதலை என்று விளக்கம் கொடுக்கலாம். எவ்விதத் தடையும் இல்லை, சிறையில் இட்டுத் தண்டிக்கிற நிலையும் இல்லை. புத்தர் 'நிர்வாணா' என்ற சொல்லைப் பயன்படுத்தினார். நிர்வாணம் என்பதற்கு 'அகந்தையின் ஒழிவு' என்று பொருள். ஒரு விளக்கை நீங்கள் அணைத்ததும் அதன் ஒளி மறைந்துவிடுகிறது. அதே போன்று அகந்தை மறைந்ததும், நீங்கள் அதற்குமேலும் ஒரு தனிநபராய் இருப்பதில்லை. துளியானது கடலில் மறைந்துவிடுகிறது. அதுவே ஒன்றை முடிவுக்குக் கொண்டு வருதல், இல்லாமல் செய்தல் ஆகும்.

பதஞ்சலி 'கைவல்யம்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். அந்தச் சொல்லின் பொருளே முற்றான தனிமை (பிறவற்றை ஒதுக்கியிருத்தல்) ஆகும். அது மோட்சமும் அல்ல, நிர்வாணமும் இல்லை என்கிற நிலைக்கு வருகிறீர்கள். நீங்கள் மட்டுமே, நீங்கள் மட்டுமே இருக்கிறீர்கள். உங்களை 'நான்' என்று அழைத்துக் கொள்வதும் சாத்தியப்படாது. காரணம் 'நான்' என்பது 'நீ' என்கிற ஒன்றுடன் குறிப்புரை (reference) கொண்டது. அந்த 'நீ'யோ மறைந்துவிட்டிருக்கிறது. நீங்கள் அதற்குமேலும் மோட்சம் – விடுதலை பெற்றிருப்பதால் சொல்வதிற்கில்லை. காரணம், விடுதலைக்கு என்ன பொருள் (meaning) இருக்க முடியும்? சிறைப்படுத்துதல் சாத்தியமாகிறபோது விடுபடுதல் என்பது சாத்தியமாகும். மற்றவர்கள் சிறைக்கு உள்ளே இருக்கிறார்கள், நீங்கள் சிறைக்கு வெளியே இருக்கிறீர்கள். ஆனால், என்றாவதொருநாள் நீங்கள் உள்ளே வைக்கப்படுகிற சாத்தியம் இருக்கிறது. ஆனால், சிறையே இல்லை என்கிறபோது விடுதலை பெற்றவர் என்று ஒருவர் சொல்லிக் கொள்வதில் என்ன பொருள் இருக்கிறது?

கைவல்யம் என்பது தனித்திருத்தல். ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். இது உங்கள் தனித்துவிடப்படுதலுடன் (loneliness) தொடர்புடையதல்ல. தனிமையில், மற்றது (other) ம் இடம் பெறுகிறது. மற்றொன்றின் இன்மை (absence) உணரப்படுகிறது. அதனால்தான் தனித்துவிடப்படும் நிலை துன்பம் மிக்கதாய் இருக்கிறது. நீங்கள் துணையற்று (lonely) இருக்கிறீர்கள். இன்னொருவரின் தேவையை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள் என்று பொருள். பிறவற்றை ஒதுக்கி யிருக்கிறீர்கள் (alone) என்கிறபோது, அடுத்தவர் தேவைப்படும் நிலை மறைந்து விடுகிறது. உங்களுக்கு நீங்களே போதுமானதாகி விடுகிறீர்கள். தேவை இருக்காது, விருப்பம் இருக்காது, எங்கேயும் போவதற்கில்லை. இதைத்தான் பதஞ்சலி, 'நீங்கள் பூர்வத்துக்குத் திரும்புகிறீர்கள்' என்பார். அவருடைய விவரணையில் இதுவே 'ஆன்மவிடுதலை' எனப்படுகிறது. இதுவே அவருடைய நிர்வாணம் அல்லது மோட்சமும் ஆகும்.

கணநேரக் கண்ணோட்டம் என்பது உங்களுக்கும் வாய்க்கும். நீங்கள் அமைதியாக உட்கார்ந்து, உங்களை விடுவித்துக் கொண்டீர்களாயின்... முதலில் புறப்பொருள்களில் இருந்து உங்களை விடுவித்துக் கொள்ளுங்கள். உங்கள் கண்களை மூடி உலகை மறந்து, அப்படியே இருந்தாலும் அதை கனவாய்க் கொண்டு விடுங்கள். பிறகு எண்ணங்களைக் கவனியுங்கள், அவையல்ல நீங்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள், அவை மிதக்கின்ற மேகங்கள். அவற்றில் இருந்து உங்களை விடுவித்துக் கொள்ளுங்கள், அவை மறைந்து விடும். பிறகு ஒரு எண்ணம் மேலெழும் அது நீங்கள் விடுபட்டிருக் கிறீர்கள் என்பது. அதுவே பைசந்தி. தற்போது அதையும் விடுங்கள். இந்த எண்ணத்திலும் ஒரு சாட்சியாக இருந்து விடுங்கள். சற்றும் எதிர்பாராத விதமாய் வெறுமை (nothingness)யில் நீங்கள் மறைந்துவிடுவீர்கள். அது ஒற்றைக் கணத்தின் சிறுபகுதியே என்றாலும் அந்தக் குறுகிய அவகாசத்தில் நீங்கள் தாவோ (tao) வின் ருசியை, யோகா மற்று தந்திராவின் ருசியைப் பெறுவீர்கள். மெய்ம்மையை ருசிப்பீர்கள். ஒருமுறை நீங்கள் அதைப்பெற்று விட்டால் அதை நெருங்குவது எளிதாகும். அதற்கு இடமளியுங்கள், அதற்குக் கிடைக்கக்கூடியவராயிருங்கள். அது ஒவ்வொரு நாளும் எளிதாகிக் கொண்டேயிருக்கும். அந்தப் பாதையில் நீங்கள் எந்த அளவு பயணிக்கிறீர்களோ அந்த அளவு பாதை தெளிவாகிறது. ஒருநாள் நீங்கள் உள்ளே செல்வீர்கள், அதன் பிறகு வெளியே

வருவதில்லை.. கைவல்யம். இதைத்தான் பதஞ்சலி முற்றான விடுதலை என்கிறார். கிழக்கில் இதுவே குறிக்கோளாய் இருக்கிறது.

மேற்கத்திய குறிக்கோள்களைவிட கிழக்கத்திய குறிக்கோள்கள் அதிக சிறப்புடையவை. மேற்கில் விண்ணகமே முடிவானதாய் இருக்கும், கிழக்கில் அப்படியல்ல. கிறிஸ்தவர்களும், முகமதியர் களும், யூதர்களும் சொர்க்கத்துக்குமப்பால் ஏதும் இல்லை என்று கருதுகின்றனர். ஆனால், கிழக்கத்தியர்களாகிய நாம் நாம் மேலும் செயல்படுகிறோம். மெய்ம்மையின் அடியாழம்வரை துளைத்துக் கொண்டு போகிறோம். அதன் முடிவெல்லை வரை துளைக்கிறோம். சட்டென்று ஒரு வெறுமை தட்டுப்படுகிறது, அதற்குமேல் துளைப் பதில்லை.

சொர்க்கம் ஒரு வேட்கையாய் இருக்கிறது, மகிழ்ச்சி பற்றிய வேட்கை. நரகம் ஓர் அச்சம், மகிழ்ச்சியற்ற நிலை குறித்த அச்சம். நரகம் வேதனையைக் குவிக்கிறது. சொர்க்கம் மகிழ்ச்சியைக் குறிக்கிறது. குவிக்கப்பட்ட வேதனை நகரம், குவிக்கப்பட்ட மகிழ்ச்சி சொர்க்கம். ஆனால் அவை சுதந்திரமகாது. சுதந்திரம் என்பது வேதனையில் இருப்பதுமல்ல, மகிழ்ச்சியில் இருப்பதுமல்ல. இரட்டைத்தன்மை (duality) கைவிடப்பட்டிருப்பதே சுதந்திரம். சுதந்திரம் என்பது சொர்க்கமோ நரகமோ இல்லாதிருப்பது; கைவல்யம். அந்நிலையில ஒருவர் அதிக அளவில் தூய்மை பெறுகிறார்.

இதுவே கிழக்கின் குறிக்கோள், இதுவே மனித குலத்தின் குறிக் கோளாகவும் இருக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன்.

*நான் வேறோர் ஆசானின் வழிகாட்டுதலில் சாதனை பண்ணிக் கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் எனக்கு பால்சார்ந்த பிரச்சினை இருந்ததில்லை. ஆனால் மனசுக்குள் இறுக்கங்கள் இருந்தன. தங்கள் புகலிடத்துக்கு வந்தபிறகு அந்த இறுக்கங்கள் மறைந்துவிட்டன. ஆனால், பால்சார்ந்த ஒரு புதிய பிரச்சினை தோன்றியுள்ளது. பாலுணர்வு காரணமாய் ஒரு புதிய இறுக்கம் உண்டாகி யிருக்கிறது. இந்த நிலையில் என்ன செய்ய வேண்டும்? அருள்கூர்ந்து வழிகாட்டுங்கள்.*

நீங்கள் ஏதேனும் ஒன்றை பிரச்சினையாகக் கருதினால் அதைத் தீர்ப்பது முடியாத காரியம். அவ்வாறு எந்தப் பிரச்சினையையும் தீர்க்க முடியாது. ஒரு பிரச்சினையை அடியாழத்துக்குச் சென்று ஆராய்ந் தாலும் - அதைப்பிரச்சினையாக ஏற்காவிடில் - தீர்வு மேலோட்ட மாகவே அமைந்து விடும். இவை பிரச்சினைகளாய் இருக்குமோ என்ற பழைய பார்வையை முதலில் விட்டுவிடுங்கள். அவற்றைப் பிரச்சினைகளாகவே ஆக்கிக் கொள்ளுங்கள்.

பாலுறவை எடுத்துக் கொள்வோம். அது எவ்வகையிலும் பிரச்சினையே அல்ல. அது ஒரு பிரச்சினை என்றால் அந்நிலையில் நீங்கள் எதையுமே பிரச்சினையாக்கிவிட முடியும். உங்களால் சுவாசித்தலை ஒரு பிரச்சினையாக்க முடியும். நீங்கள் மூச்சுவிடுவதில் பிரச்சினை என்றால், அதில் இருந்து எப்படி விடுபடுவது என்று கேட்கத் தொடங்கி விடுவீர்கள். மூச்சுவிடுவதே உங்களுக்கு அச்சமூட்டுவதாய் இருக்கும். பாலுறவு பிரச்சினையல்ல. அது ஒரு தூய்மையான சக்தி. ஆனால் ஓர் ஆசானுடன் நீங்கள் வாழ்கிறபோது நீங்கள் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தப்படுவீர்கள். தொண்ணூற்று ஒன்பது சதவிகித ஆசான்களும் பாலுணர்வை ஒரு பிரச்சினை யாகவே கருதுகிறார்கள். உண்மையில் அவர்கள் ஆசான்களேயல்லர். தங்களுடைய சொந்த வாழ்க்யில் எந்தவொரு தீர்வையும் கண்டதில்லை. அவர்களும் உங்களைப்போல் இடர்ப்பாட்டில்

இருப்பவர்கள்தாம். உங்களைப் போலவே அவர்களும் உணர்ச்சி மிகைப்புக்கு (neurosis) உள்ளானவர்கள்தாம்.

மனதால் அறியும் திறன் (insight) கொண்டவர்களுக்கு பிரச்சினை இல்லை. இவர்கள் பிரச்சினை உடையவர்களுக்கு உதவுவது கிடையாது.

ஒரு பிரச்சினையை உருவாக்குகிற நுட்பம் உங்களிடம் இருக்குமாயின், உங்களுடைய பிரச்சினையை என்னால் தீர்க்க முடியாது. ஆனால் என்னுடைய மனதால் அறியும் திறனை உங்களுக்குக் கொடுத்து, கூடுதல் தெளிவுடன் கண்டுணரும் திறனுடன் நீங்களே அதைப் பார்க்கும்படிச் செய்ய முடியும்.

ஆக, முதற்கண் அக்கறையுடன் கவனிக்கப்படவேண்டியது: நீங்கள் பாலுறவை ஏன் ஒரு பிரச்சினையாக எண்ணுகிறீர்கள் என்பது. அதில் பிரச்சினையாகக் கருதும்படி என்ன இருக்கிறது? பாலுறவு பிரச்சினையென்றால் உணர்வும் ஒரு பிரச்சினைதானே? பாலுறவு பிரச்சினையாகுமெனில் சுவாசித்தலும் ஏன் ஒரு பிரச்சினையாக இருக்காது? பாலுறவு பிரச்சினை என்றால் பிறகு ஏன் எல்லாவற்றையும் பிரச்சினையாக மாற்ற முடியாது. நீங்கள் அந்த முறையிலேயே ஆராய்ந்து நோக்கினால் எதையும் பிரச்சினையாக மாற்ற முடியும்.

வெவ்வேறு நாகரிகங்களில், வெவ்வேறு சமுதாயங்களில் பல்வேறு செயல்கள் பிரச்சினைக்குரியதாகின்றன. நீங்கள் ஃப்ராய்டின் (Freud) பாதிப்பில் வளர்ந்தவராயின் அப்போது பாலுறவு எவ்வகையிலும் ஒரு பிரச்சினையாக இருக்காது. அந்நிலையில் பால்சார்ந்தவராக (sexual) இல்லாமலிருப்பதுதான் பிரச்சினை. மேற்கத்தியவர்களில் பலருக்கும் அது ஒரு பிரச்சினையாகி விட்டிருக்கிறது.

அறுபத்தியைந்து வயது மதிக்கத்தக்க பெண்மணி என்னிடம் வந்து, 'பகவானே, என்னுடைய பாலுறவு நாட்டம் மறைந்து கொண்டிருக்கிறது. எனக்கு உதவுங்கள்' என்றாள். காரணம், நீங்கள் பெருமளவு ஃப்ராய்டின் பாதிப்புக்குள்ளாகியிருந்தால் அப்போது பாலுறவு வாழ்க்கையுடன் சம மதிப்பு கொண்டதாகவே இருக்கும். பால் சார்ந்த நாட்டம் மறைகிற பொழுது நீங்கள் செத்துக் கொண்டிருப்பீர்கள், சாவு உங்களுக்கு வெகு நெருக்கமாய் வந்து விட்டிருக்கும். ஆக, முடிவெல்லை வரைக்கும், மரணப் படுக்கையிலும் நீங்கள் பால்சார்ந்த ஜீவன்களாகவே இருப்பீர்கள், வலுக்கட்டாயமாகவேனும் நீங்கள் அதைப் பெற்றிருப்பீர்கள்.

குறிப்பாக, இந்தியர்களுக்கு - இதனை ஒரு பிரச்சினையாகவே கருத முடியாத அவர்களுக்கு இது முழுவதுமே ஒரு புதிய பிரச்சினைதான். அவர்களுக்கு அது நேரிட்டால் அவர்கள் கோயிலுக்குச் சென்று, கடவுளுக்கு நன்றி செலுத்துவார்கள். அவர்கள் இளைஞர்களாய் இருந்தபோதும், அந்தப் பாலுறவு நாட்டம் மறையுமெனில், அவர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவார்கள். மிகப் பெரிய அளவில் மகிழ்ச்சி அடைவார்கள். கடவுள் வெகுவாய் உதவிய தில் பிரச்சினை தீர்ந்தது. ஆனால், பிரச்சினை தீர்க்கப்பட்டிருக்காது. அது செயல் இழந்து விட்டிருக்கும். அவ்வளவுதான்.

ஒரு குறிப்பிட்ட மனநிலைப்பாங்கின் காரணமாகவே பிரச்சினை தோன்றுகிறது. பிரச்சினை என்பது தன்னளவில்லை பிரச்சினையா யிருக்காது. அது உங்களுடைய மனநிலைப் பாங்கை (outlook) ப் பொறுத்தது. நீங்கள் ஒரு மேற்கத்தியராக இருந்தால் மது பானங்களை அருந்துவது ஒரு பிரச்சினையே அல்ல. அது ஃபேண்டா அல்லது கோகோ கோலா பானத்தைப்போல் சாதாரணமாய் இருக்கும். நீங்கள் ஒரு ஜெர்மானியராக இருந்தால் பீர் குடிக்கிற தண்ணீர் மாதிரி. அதில் பிரச்சினை இல்லை. நீங்கள் ஓர் இந்தியர் என்றால் அந்நிலையில் இடர்ப்பாடு தோன்றும். கோகோ-கோலாகூட பிரச்சினைதான். காந்தி உங்களை கோகோ-கோலா குடிக்கவிடமாட்டார். அவருடைய ஆசிரமத்தில் தேநீருக்கே தடை இருந்தது. அது ஜப்பான், சீனாவில் கிட்டத்தட்ட சடங்கு மாதிரி.

ஒரு புத்தத்துறவி தேநீருடன்தான் தன்னுடைய நடைமுறை வாழ்க்கையைத் தொடங்குகிறார். அதிகாலையில் தியானம் செய்யத் தொடங்குவதற்குமுன் அவர் தேநீர் பருகுகிறார். தியானத்துக்குப் பிறகும் அவர் தேநீர் பருகுகிறார். அதனை ஒரு மதம் சார்ந்த செயல் முறையாகவே அவர் மேற்கொள்கிறார். அப்படியொரு நேர்த்தியும், மதிப்பும் அந்தச் செயலில் இருக்கும். அது ஒரு போதும் பிரச்சினை யாய் கருதப்பட்டதில்லை. உண்மையில் புத்தபிக்குகள்தாம் அதைக் கண்டுபிடித்தது. புராணக் கதைப்படிப் பார்த்தால் போதிதர்மருக்கு அதில் தொடர்பிருக்கிறது.

தேநீரைக் கண்டுபிடித்தது போதிதர்மர் என்றே கருதப்படுகிறது. அவர் ஒரு மலைப்பக்கம் வசித்துக் கொண்டிருந்தார். அந்தக் குன்றின் பெயர் தா (Ta), தேயிலை அங்கே கண்டுபிடிக்கப்பட்டதால் அது தா, டீ, சா, சாய் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது. அவை தா (ta)

என்பதன் வழுவல்கள் (deviation). போதிதர்மர் அதைக் கண்டுபிடித்தது ஏன்? எப்படிக் கண்டுபிடித்தார்?

முழுமையான விழிப்புணர்வை அவர் அடைய முயன்று கொண்டிருந்தார். அது இடர்ப்பாடானதுதான். நீங்கள் நாட்கணக்கில் உணவில்லாமல் வாழ்ந்துவிட முடியும், ஆனால், உறங்காமல் வாழ முடியாது - அவரோ உறக்கத்தை உதறிவிட முயன்றார். ஏழு எட்டு நாட்கள் சென்றதும் அவரை அறியாமலே உறக்கத்தின் பிடியில் அவர் சிக்கிவிட்டிருப்பார். தூக்கத்தை விரட்டியடிக்க தம்முடைய கண்ணிமைகளை அவர் பிடுங்கியெறிந்தார். அதற்குப் பிறகு அந்தப் பிரச்சினை அல்லவா. மண்ணில் விழுந்த அவருடைய கண்ணிமைகள் தேயிலையாய் முளைத்தது. விழிப்புணர்வு பெறுவதில் தேநீர் உதவுவது அதனால்தானோ என்னவோ. நீங்கள் இரவில் மிகுதியாய் தேநீர் பருகினால் உங்களால் தூங்க முடியாது. உறக்கம் குறுக்கிடாத ஒரு நிலையில் புத்த அறிவு முயன்று அடையப்படுகிறது. நீங்கள் முற்றிலும் தெரிநிலையோடு இருக்க உதவும் தேநீர் புனிதமானவற்றுள் மிகப்புனிதமான பொருளாகிவிட்டது.

ஜப்பானில் உள்ள மடாலயங்களில் தேநீர் பருகுவதற்கு சிற்றில்கள் தனியே கட்டப்பட்டிருக்கின்றன. டீ- ஹவுஸிற்குள் ஒருவர் நுழைவது ஏதோ ஒரு தேவாலயம் அல்லது கோயிலுக்குள் நுழைகிற மாதிரி இருக்கும். அவர்கள் குளிப்பார்கள், புத்தாடை அணிவார்கள். தங்களுடைய காலணிக்ளை வெளியே கழற்றி வைத்து விடுவார்கள். அமைதியாக நகர்ந்து சென்று அவர்கள் அமர்வதே தனியழகு... அது ஒரு நீண்ட சடங்காக நடைபெறும். நீங்களானால் ஒரு கோப்பை தேநீரை எடுத்து, குடித்துவிட்டுப் போய்க் கொண்டேயிருப்பார்கள். அதைப்போன்ற அவசரம் அங்கே இல்லை. தேவர்கள் நல்லமுறையில் தகுதியாய் நடத்தப்படவேண்டும்! அவர்களைப் பொறுத்தவரை தேநீர் ஒரு கடவுள், விழிப்புணர்வுக் கடவுள். எனவே, அவர்கள் அமைதியாக அமர்வார்கள், கெட்டில் (kettle) கொதிப்பதே சங்கீதமாயிருக்கும். தற்போது அவர்கள் ஆயத்த நிலையில் இருப் பார்கள். இசைபாடும் கெட்டிலின் பேரில் அவர்கள் தியானிப்பார்கள்.

பிறகு, கோப்பைகளும் கோப்பை வைக்கும் சிறு தட்டுகளும் அவர்களுக்கு வழங்கப்படும். அவர்கள் கோப்பைகளை தட்டுகளைத் தொட்டபடி அவற்றின் கலையழகை உற்று நோக்கியபடி இருப்பார்கள்.

அங்காடிகளில் விற்கப்படும் கோப்பைகளை தட்டுகளை அவர்கள் வாங்கிப் பயன்படுத்துவதில்லை. ஒவ்வொரு மடாலயமும்

தாங்களே அவற்றைத் தயாரித்துக் கொள்ளும். செல்வந்தர்களும் அப்படித்தான் செய்வார்கள். ஏழைகள், சொந்தமாக செய்து கொள்ள முடியாமல் அங்காடிகளில் இருந்து வாங்கி, அவற்றை உடைத்து மறுபடியும் பசையால் ஒட்டி வைத்துக் கொள்வார்கள்.

பிறகு தேநீர் ஊற்றப்படும். ஒவ்வொருவரும் ஏற்புத் தன்மையுடன், தியானத்துக்குரிய மனப்பாங்கில், ஆழ்ந்து நிதானமாய் சுவாசித்தபடி இருப்பார்கள். அதன்பிறகு தேநீர் பருகப்படும், தெய்வத்தன்மையுள்ள ஏதோ ஒன்று உங்களுக்குள் மெள்ள உங்களுக்குள் இறங்குகிற மாதிரி இருக்கும்.

தற்போது மகாத்மா காந்தி இதுபற்றி எண்ணியிருக்க மாட்டார். அவருடைய ஆசிரமத்தில் தேநீர் அனுமதிக்கப்படவில்லை. தேநீர் அங்கே கறுப்புப்பட்டியலில் இடம் பெற்றிருந்தது.

நான் உங்களுக்குச் சொல்ல விரும்புவது இதுதான், நீங்கள் எத்தனை பிரச்சினைகளை உருவாக்குகிறீர்கள் என்பது உங்களுடைய அதிகபட்ச விருப்பத்தைப் பொறுத்தது. முடிந்த அளவு விடப் பாருங்கள். பிரச்சினைகளின் எண்ணிக்கை குறைவாய் இருப்பது நல்லது, காரணம் பிற்பாடு அவற்றை உங்களால் விடமுடியாவிட்டால், அவை உங்கள் மனநிலைப்படியல்லாது வாழ்க்கையில் இயற்கையாகவே அமைந்ததாயின் அவற்றுக்குத் தீர்வு கண்டுவிட முடியும்.

மனநல மருத்துவரிடம் சென்ற ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

பரிதாபத்துக்குரிய அந்த மனிதன் பார்ப்பதற்கு சோர்வாகத் தெரிந்தான், அவனுடைய கண்களுக்குக் கீழே பெரிய பைகளைப் போல் உப்பியிருந்தன. 'டாக்டர், நான் ஒவ்வோர் இரவும் கனவு காண்கிறேன்' என்று மருத்துவரிடம் சொன்னான்.

'நேற்றிரவு ஒரே திகிலாயிருச்சி. நான் ஒரு பெரிய விமானத்தில் இருந்தேன், என்னிடம் பாரசூட் இருந்தது. நாற்பதாயிரம் அடி உயரத்தில் இருந்து குதித்து ஒரு புதிய சாதனையை நிகழ்த்த வேண்டும் என்பதற்காகவே நாங்கள் உயரப் பறந்து கொண்டிருந்தோம். நாங்கள் நாற்பதாயிரம் அடி உயரத்தை அடைந்ததும், நான் கதவைத் திறந்தேன் - ஒரு தப்படி முன்னோக்கி வைத்தேன் - பாரசூட்டை விரிய வைக்கும் கயிற்றை (ripcord) இழுத்தேன். என்ன நடந்திருக்கும்னு நினைக்கிறீங்க?'

மருத்துவர் சொன்னார், 'எனக்குத் தோணல'

அந்த ஆள் சொன்னான், 'என்னோட பைஜாமா கீழே விழுந்திருச்சு' என்று.

தற்போது இதுவா பிரச்சினை? நீங்கள் தரைக்குமேல் நாற்பதாயிரம் அடி உயரத்தில் இருக்கும்போது இதுவா பிரச்சினை? ஒட்டுமொத்த வாழ்க்கையும் ஆபத்துக்குள்ளாகி இருக்கும் நிலையில்... அதுவும் ஒரு கனவில்!

பூங்காவில் உள்ள ஒரு 'பெஞ்ச்'சில் இரண்டு பிச்சைக்காரர்கள் பேசிக் கொண்டிருந்ததை நான் கேட்டேன். நான் அந்த வழியாய் கடந்து போய்க் கொண்டிருந்தேன்.

ஒரு பிச்சைக்காரன் சொன்னான், 'எனக்கு ஒரு நல்ல வேலை கிடைச்சாப்ல கனவு கண்டேன்' என்று.

மற்றொருவன் சொன்னான், 'ஆமா, உன்னைப்பாத்தா ரொம்பக் களைச்சுப் போனாப்ல தெரியுது' என்று.

பொருளற்ற சொற்களை -முட்டாள்தனமாக நடந்து கொள்வதை விடுங்கள். பாலுறவு ஒரு பிரச்சினை ஆகாது. அது உங்களுடைய உயிர்ச்சக்தி. அதை ஏற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் அதை ஏற்றுக் கொண்டால் அது மாற்றக்கூடியதாயிருக்கும். நீங்கள் அதைப் புறக்கணித்தால் எல்லாமே குளறுபடியாகிவிடும். நீங்கள் அதை எதிர்த்து நிற்பதாயின் யாருடன் சண்டை போடுகிறீர்கள். கொஞ்சம எண்ணிப் பாருங்கள்: உங்களுடன் - பாதி பாதியாய் பிரிந்து உங்களு டன் நீங்களே சண்டையிடுகிறீர்கள். உண்மையில் நீங்கள் மேலும் மேலும் செயலற்றவராகி விடுவீர்கள். உங்களுடன் ஒருபோதும் சண்டையிடாதீர்கள்.

சாதனை (பயிற்சி) என்பது மோதல் அல்ல, போராட்டமும் அல்ல. அது ஓர் ஆழ்ந்த புரிதல், நிலைமாற்றம், அது ஒரு விழிப்புணர்வு, அதில் இருந்தே நீங்கள் நேசிக்கத் தொடங்குகிறீர்கள். உங்களை ஏற்றுக் கொள்கிறீர்கள், புரிதலின் மூலம் மிகவும் உயர்ந்த நிலையை அடைகிறீர்கள். உங்களுடைய இருப்புணர்வில் இருந்து விலக்கும் படியாய் எதுவும் இல்லை. எல்லாமும் இருக்க வேண்டியபடிதான் இருக்கிறது. ஒரு மேம்பட்ட ஒத்திசைவுக்கு (harmony) அது பயன்படுத்தப்பட வேண்டியது, அவ்வளவுதான். வீணை தூக்கியெறியப்படவேண்டியதல்ல. உங்களால் அதை வாசிக்க முடியாவிட்டால், வாசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். வீணையில் எந்தத் தவறும் இல்லை. நீங்கள் வீணை வாசிக்கத் தெரியாமல் அதை வாசிக்க

முயன்றால் அது பைத்தியக்காரன் போடுகிற கூச்சலாகவே இருக்கும். அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் காவல் நிலையத்துக்குச் சென்று உங்கள் மீது புகார் கொடுப்பார்கள். உங்கள் மனைவி உடனே உங்களை விவாகரத்து செய்வாள். உங்களுடைய குழந்தைகள் கலவரத்துக்குள்ளாகி விடுவார்கள். நீங்களும் குழப்பமடைவீர்கள். காரணம் உங்களுக்கு வீணை வாசிக்கத் தெரியாதென்றால் ஓர் இசைக்கருவியை எப்படி வாசிப்பீர்கள்? ம்ம்... உங்களிடமே உங்களுக்கு பிணக்கு ஏற்பட்டுவிடும்.

ஆனால், வீணையிடம் தவறாக எதுவும் இல்லை. உங்களுக்குத் தான் அதை எப்படி வாசிப்பது என்று தெரியவில்லை.

பாலுறவு சக்தி ஒரு மிகப்பெரிய சக்தி. அதை எப்படிச் செயல்படுத்துவது என்று உங்களுக்குத் தெரியவில்லை. அதற்கு எதிராக இருக்கும்படிதான் நீங்கள் பல நூற்றாண்டுகளாய் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். உங்களுடைய மதவாதிகள் இந்த உலகத்துக்கு என்ன செய்தார்கள் என்று எண்ணிப்பாருங்கள். அவர்கள் பாலுறவுக்கு எதிராக போதித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய போதனைகளால் பாலுறவு மேலும் மேலும் பால்சார்ந்த விதத்தில் உணர்ச்சி மிகைப்பு (sexually neurotic) கொண்டதாயிற்று. ஒருசிலர் வாழ்க்கையில் வேறெதுவுமே இல்லை என்கிற மாதிரி பாலுறவில் மனம் போனவாறு ஈடுபடுகிறார்கள், ஒரு சிலர் அதில் இருந்து நழுவியோடுகிறார்கள்; ஒரு சிலர் போராடி வெல்லப் பார்க்கிறார்கள். இருவருமே தங்கள் வாழ்க்கையை வீணடிக்கிறவர்கள் தாம்.

இது மிகப்பெரிய சக்தி, கடவுள் வழங்கிய நற்கொடை. அதனுள் அநேக பொக்கிசங்கள் மறைந்து கிடக்கின்றன, அது கற்றுணரப்பட வேண்டியது. அந்தப் புத்தகம் திறந்திருக்கிறது, ஒருவர் அதனுள் நுழைய வேண்டும், அது ஆழ்ந்து ஆய்வு செய்யப்படவும், ஆழமாய் புரிந்து கொள்ளப்படவும் வேண்டியது. முடிவற்ற வாழ்வின் திறவுகோல் அங்கிருக்கிறது.

தற்போது என்னிடம் நீங்கள் வந்திருப்பதால், நான் புரிந்து கொள்ளும் திறனை வலியுறுத்துகிறேன். ஒரு குறிப்பிட்ட அறிவுசார்ந்த புரிதல் தோன்றுகிறது. ஆனால் பழைய கட்டுப்படுத்தும் நிலைகள் தொடரவே செய்கின்றன. இந்தப் பிறவியில்தான் நீங்கள் கட்டுப் படுத்தப்படுகிறீர்கள் என்பதாகாது. நூற்றாண்டுக் கணக்கில் பல

பிறவிகளில் நீங்கள் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள். பாலுறவு (sex) என்கிற அந்தத் துல்லியமான வார்த்தை உங்களுக்குள் அமைதியற்ற நிலையை அடைந்துவிட்டது. அந்த வார்த்தை உங்களுக்குள் ஓர் எதிர்வினையை உண்டாக்கிவிட்டது. எவ்வித உணர்ச்சியும் இல்லாமல் அதைப்பற்றிப் பேசுவது கடினம். அது குறித்து புறநோக்குடன் பேசுவது கடினம். அதைப்பற்றி அறிவியல் பூர்வமாய் பேசுவதும் கடினந்தான். ஏதோ ஒரு வழியில் நீங்கள் அதனுடன் தொடர்புடையவராகி விட்டீர்கள்.

எல்லாக் கருத்துகளையும், தவறான ஊகங்களையும் விட்டு விடுங்கள். அதில் உள்ள உண்மைத் தன்மையை ஊன்றிக் கவனியுங்கள். பாலுறவு சக்தியுடன் பிறந்தவர் நீங்கள். நீங்கள் தோன்றியபோது உங்கள் தந்தையும் தாயும் பிரார்த்தனை பண்ணிக் கொண்டிருக்கவில்லை. அவர்கள் கலவியில் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் தேவாலயத்திலோ, கோயிலிலோ இருந்திருக்கவில்லை. நீங்கள் அதைப்பற்றி நினைக்கிறதில்லை. மக்கள் அத்தகைய விசயங்களைத் தவிர்த்து விடுகிறார்கள். உங்கள் தந்தையும், தாயும் கலவியில் ஈடுபட்டிருந்தார்கள் இதை நம்புவது உங்களுக்கு கடினமாயிருக்கும். சாத்தியமில்லை. மற்றவர்கள் – மாசுள்ள மனிதர்கள் அந்தச் செயலில் ஈடுபடக்கூடும். உங்கள் தந்தையும் தாயும்? ஒருபோதும் இல்லை.

அதனால்தான் எண்ணி முடியாத கதைகள் பலவும் இந்த உலகெங்கும் பரவியிருக்கிறது. ஒரு குழந்தை பிறக்கிறது, மற்ற குழந்தைகள் கேட்கின்றன, ‘எங்கிருந்து?’ என்று. நீங்கள் பல பொய்யான பதில்களை அவர்களுக்குத் தர வேண்டியிருக்கும். பறவை கொண்டு வந்து போட்டது, புதரில் கிடைத்தது, சமையற்கட்டு புகைபோக்கி வழியாகக் கடவுள் கொடுத்தார் இப்படியான பதில்கள்.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன், தாய்க்காரி மறுபடியும் கருவுற்றிருந்தாள். பாட்டி வீட்டில் இருந்த சின்னப் பையனைப் பற்றிய கவலையில் இருந்தாள். காரணம், சற்று முன்பாகவேனும் அவன் கேட்டு வைப்பான். எனவே, அவனை அவள் தயார்ப்படுத்த விரும்பினாள். அவனைப் பக்கமாய் அழைத்துச் சென்று, ‘உனக்குத் தெரியுமா. உன் அம்மாவுக்கு கடவுளிடம் இருந்து மறுபடியும் ஒரு அருமையான வெகுமதி கிடைக்கப் போகிறது. அது ஒரு பொட்டலத்தில் வரும். எல்லாரும் தூங்கறச்சே ராத்திரியில் புகைபோக்கி வழியா போடப்படும்’ என்று.

பையன் சொன்னான், 'ரொம்பசரி, ஆனா, நான் ஒரு விசயம் சொல்றேன். கடவுள் அந்தப் பொட்டலத்தை தொப்புனு பலமா போடாதிருக்கட்டும். ஏன்னா என்னோட அம்மா பிள்ளையாண்டிருக்கா. அதுவும் ராத்திரிலன்னா அவளுக்கு ரொம்பத் தொந்தரவா இருக்கும். முடிஞ்சவரை சத்தம் இல்லாம போடட்டும்' என்று.

பாலுறவைத் தவிர்ப்பதற்காக புதிது புதிதாய் கதைகள் கட்டிவிடப்பட்டன. ஒரு குழந்தை எப்படிப் பிறந்தது என்பதைப் பற்றி குழந்தைகளிடம் பேசுவது கடினம். இதுவே பொய்ம்மையின் தொடக்கமாயிற்று. பாசங்குகளுக்கும் இதுதான் தொடக்கம். சற்று முன்பின்னாகவேனும் ஒரு குழந்தை அதைக் கண்டுபிடித்துவிடும். அத்துடன் தந்தையும் தாயும் பொய்களைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள் என்பதையும் அது கண்டுபிடித்துவிடும். எதற்காக? ஒரு முக்கியமான உண்மையை அவர்கள் ஏன் மறைத்து வைத்திருந்தார்கள்? அத்தகைய உண்மையில் அவர்கள் உண்மையற்றவர்களாய் நடந்து கொண்டார்கள் என்றால் மற்ற விஷயங்களில் எப்படி இருக்கும்? ஒரு சின்னக் குழந்தையின் மனதில் தான் ஏமாற்றப்பட்டு விட்டோம் என்கிற சந்தேகம் வந்துவிட்டால் நம்பிக்கை கொள்ளும் திறனை அவன் இழந்து விடுவான்.

அதன்பிறகு நம் எல்லோரையும் படைத்த தந்தையை, விண்ணுலகில் உறையும் கடவுளை நம்பும்படி, அவனிடம் நீங்கள் சொல்லிக் கொண்டேயிருப்பீர்கள் - வீட்டில் இருக்கும் உண்மையான தந்தையை அவனால் நம்ப முடிவதில்லை. மோசக்காரனாயிற்றே அவர். அப்படியிருக்க அவன் கடவுள் என்கிற தந்தையை எப்படி நம்புவான்? சாத்தியமில்லை.

இல்லை. வாழ்க்கையை நீங்கள் அது இருக்கிறபடிக்கே புரிந்து கொள்ள, நான் சொல்வதைக் கேளுங்கள். யூகவணிகத்தில் (speculative) நான் விருப்பம் கொண்டிருக்கவில்லை. நான் உண்மைகளையே உங்களுக்கு வழங்குகிறேன். அவை எளிமையானவை, ஏனெனில் உங்களால் அவற்றைக் கவனித்துக் கேட்க முடியும்.

நீங்கள் வாழ்க்கையில் எதைச் செய்திருந்தாலும்... நீங்கள் ஒரு பெரிய கவிஞர் என்றால், உங்களுடைய பால்சார்ந்த சக்தியே கவிதையாக்கப்படுகிறது. வேறெதுவும் இல்லை, காரணம் உங்களுக்குக் கிடைக்கும்படியாய் இருப்பது அந்த ஒரு சக்தி மட்டுமே. நீங்கள் ஒரு சிறந்த ஓவியராயின் பால்சார்ந்த சக்திதான் பலவண்ணம் பெறுவது.

சீலையில் சித்திரமாவது. நீங்கள் புகழ்பெற்ற சிற்பி என்றால் அந்நிலையில் பளிங்கில் இருந்தும் பாறைக்கல்லில் இருந்தும் அழகான சிலைகளை உருவாக்குவது உங்களுடைய பால்சார்ந்த சக்திதான். நீங்கள் ஓர் இசைக்கலைஞர் என்றால் அதுவே இசையாய் வடிவெடுக்கிறது. நடனக்கலைஞரிடம் அந்தச் சக்தியே நடன மாடுகிறது. நீங்கள் யாராக இருந்தாலும் பால்சார்ந்த சக்தி ஏதாவதொரு வழியில் பிறிதொன்றாக நிலை மாறுகிறது, உருமாறுகிறது – உங்கள் பிரார்த்தனைகளும், தியானமும் கூட.

பாலுறவே தொடக்கம், சமாதி முடிவெல்லை. ஆனால் சக்தி அதேதான். சமாதி என்பது உடலுறவின் உச்சநிலை. உடலுறவு என்பது சமாதியின் நீச்சநிலை. நீங்கள் அதனைப் புரிந்து கொண்டுவிட்டால், படிப்படியாக மேம்படுவது எப்படி என்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.

எதுவும் புறக்கணிக்கப்பட வேண்டியதில்லை. எல்லாமும் பயன்படுத்தும்படியாகவே இருக்கின்றன. ஓர் ஏணியின் ஒவ்வொரு படியும், அதன் கீழ்ப்படியும், பயன்படுவதாயிருக்கிறது. காரணம் அது இல்லாமல் ஏணி இல்லை. முழு ஏணியும் அதைக் கொண்டு அமைந்ததுதான். உங்கள் வாழ்க்கையில் இருந்து நீங்கள் எதை வெட்டிவிட்டாலும் நீங்கள் முழுமையாயிருப்பதற்கில்லை. மறுக்கப்பட்ட பகுதி மறுபடியும் ஏற்றுக் கொள்ளத்தக்கதாய் அங்கேயே இருந்து கொண்டிருக்கும், அந்தப்பகுதி உங்களுக்கெதிராய் கலகம் செய்தபடி இருக்கும். உங்களுக்கெதிராய் போரிடும்.

நான் கேட்டறிந்தது:

இங்கிலாந்து தொழில் நகரம் ஒன்றிற்கு சென்றிருந்த ரஷ்ய வர்த்தகக் குழுவில் தோழர் கோகன் ஓர் உறுப்பினர். ஒருநாள் மாலை உள்ளூர் தொழிலாளர்களின் 'க்ளப்' (club) பிற்கு அவர்கள் விருந்தினர்களாய் சென்றிருந்தனர். அந்தச் சுங்க உறுப்பினர்களில் ஒருவனான ஜோசப் ஓர் ஊக்கமுள்ள இளம் சோஷலிஸ்டு, அவன் தோழர் கோகனை திட்டமிட்ட ஒரு மூலையில் அமரச் செய்தான்.

'தோழர் கோகன். நீங்கள் ஒரு தகுதியான யூதர் என்பதை நான் அறிவேன். நீங்கள் ஒரு நேர்மையான மனிதர் என்பதும் எனக்குத் தெரியும். உங்களிடம் உள்ள கனிசமான அரசியல் அறிவு பற்றியும் நான் அறிந்திருக்கிறேன். இத்தனை அருமையான பண்புகளை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள் என்பதால், அராப்–இஸ்ரேல் மோதலில சோவியத் எத்தகைய மனோபாவத்தைக் கொண்டிருக்கிறது என்பது பற்றிய

உங்கள் கருத்தை அறிய விரும்புகிறேன்.அத்துடன் மக்களாட்சியில் நம்பிக்கை உள்ள இஸ்ரேலியர்களுக்கு எதிராக எகிப்திய பொதுஉடைமை எதிர்ப்பாளர்களை (Fascipts) ரஷ்யர்கள் ஏன் ஆதரிக்கிறார்கள்-என்பதையும் அறிய விரும்புகிறேன்' என்றான் இளைஞன் ஜோசப்.

தோழர் கோகன் எதுவும் பேசாமல் தோளைக் குலுக்கினான்.

'ஆனால், சொல்லுங்கள் தோழர் கோகன். நீங்கள் ஒரு யூதர். உங்கள் நாட்டின், உங்களுடைய கட்சியின் அதிகாரபூர்வ மனப்பாங்கு எப்படி இருந்தாலும், எது நியாயம் என்பது பற்றி உங்களுக்கென்று ஒரு பார்வை இருக்கவேண்டுமே' என்று அந்த இளைஞன் தொடர்ந்து முயன்றான்.

ஆனால், தோழர் கோகன் வாயைத் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை.

ஜோசப் நெருக்கமாய் சாய்ந்து கொண்டு, கிட்டத்தட்ட மன்றாடுகிற குரலில் கேட்டான், 'ஆனால் தோழர் கோகன், நிச்சயம் உங்களுக்கென்று ஒரு கருத்து இருக்கும்' என்று.

தோழர் கோகன் தன்னுடைய இருக்கையில் நிலைகொள்ளாது, அந்த இளைஞனை உறுதியாகப் பார்த்தான். நிசப்தத்தைக் கலைத்துக் கொண்டு பேசினான், 'தோழர் சப். எனக்கென்று ஒரு கருத்து உண்டு' அவன் தயக்கத்தோடு, 'ஆனால் எனக்கு அதில் உடன்பாடு கிடையாது' என்றான்.

பெரும்பாலனவர்களின் நிலை இப்படித்தான் இருக்கிறது. உங்களுக்கு உண்மை தெரியும். ஆனால், அதை ஒத்துக் கொள்வ தில்லை. காரணம் அதை ஒப்புக் கொள்ளக்கூடாது என்ற முன்னடை வுடன் நீங்கள் இருக்கிறீர்கள். உங்களுக்கு உண்மை தெரியும். ஆனால் அதுபற்றித் தப்பெண்ணம் கொள்ளும்படி நீங்கள் நிர்ப்பந்திக்கப் பட்டிருக்கிறீர்கள்.

எல்லா தப்பெண்ணங்களை (prejudices) யும் ஒதுக்கி வையுங்கள். வாழ்க்கையை கவனித்துப் பாருங்கள். நீங்கள் ஏதோ வேற்றுக் கிரகத்தில் இருந்து வந்த ஆசாமிபோல், ஒருபோதும் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் உட்படாதவரைப் போல் இருந்துகொண்டு வாழ்க்கை உங்களிடம் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள அனுமதி யுங்கள். அதற்குப் பின்னால் - இந்து, கிறிஸ்தவன், முகம்மதியன் என்கிற கருத்தியல் எதுவும்இன்றி கண்காணித்திருங்கள். கடந்த காலத்

தொடர்பின்றி, நிகழ்காலத்தைக் கூர்ந்து கவனியுங்கள். கடந்த காலம் நிகழ்காலத்தில் குறுக்கிட இடமளிக்காதீர்கள். அது இருக்கிறபடிக்கு தன்னை வெளிப்படுத்திக் கொள்ள இசைவாயிருங்கள்.

அந்நிலையில் பிரச்சினை எங்கே இருக்கிறது? பாலுறவு ஏன் ஒரு பிரச்சினையாகிறது? அதைவிட இனியது வேறெதுவும் இல்லை. நீங்கள் பூக்களைப் புகழ்கிறீர்கள். ஆனால், அவை மரத்தின் பால் சார்ந்த முயற்சிகள் என்பதை நீங்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. அவை பால்சார்ந்த அணுக்களையே கொண்டிருக்கின்றன. அது வண்ணத்துப் பூச்சிகளையும், தேனீக்களையும் கொண்டு இனப்பெருக்கத்துக்குரிய அணுக்களை (sperms) பெண்தாவரத்துக்குக் கொண்டு செல்ல மரம் செய்கிற தந்திரம். நீங்கள் பால்சார்ந்த சக்தியைப் புகழ்கிறீர்கள் என்பது தெரியாமலே அவற்றைப் புகழ்கிறீர்கள். எல்லாப் பூக்களும் அழகுமிக்கவை, ஆனால் அவை எல்லாமே பால்சார்ந்த சக்திதான். நீங்கள் பறவைகளின் கீதத்தைப் புகழ்கிறீர்கள், ஆனால் உங்களுக்குத் தெரியுமா? அவை மோகத்தைத் தூண்டுகிறவை என்பது. ஆண்பறவை தொடர்ந்து பெண்பறவைக்கு அழைப்பு விடுத்தபடி இருக்கும். ஓசையின் மூலமாகவும், பாடுவதன் மூலமாகவும் அவளை (பெண் பறவையை)க் கவர்ந்திழுக்க முயல்கிறது. மயில் ஆடுவதைக் கண்டிப்பாய் நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதைப்போல எதுவும் இருக்காது - ஆனால் அது மாற்றினத்தை ஈர்க்கிற தந்திரம் ஆகும். உங்களைச் சுற்றிவரப் பாருங்கள், அதிர்ந்து போவீர்கள் அழகாயிருக்கிற எல்லாமே பால்சார்ந்ததாய் (sexual) இருக்கும்.

உங்களுடைய புனிதர்கள் பூக்களைப் புகழ்ந்தபடி இருக் கிறார்கள். ஆனால், மனிதனிடம் மலரும் பாலுணர்வுக்கு மட்டும் எதிராயிருங்கள். தாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பதை அவர்கள் கருத்தூன்றிக் கவனியாதிருக்கலாம். நீங்கள் பூக்களுடன் கோயிலுக்குச் செல்கிறீர்கள், அந்தப் பூக்கள கடவுளின் திருவடியில் சமர்ப்பிக்கிறீர்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பதை அறிந்திருக்க மாட்டீர்கள். அது பாலுணர்வுடன் கூடிய ஒரு வெகுமதி.

அழகாயிருக்கிற - பூக்கள், பாடல், ஆடல் எல்லாமும் பால் சார்ந்தவையே. நீங்கள் அழகான அனுபவத்தை எங்கிருந்து பெற்றாலும் அது பால் சார்ந்ததாகவே இருக்கும். எல்லா அழகும் பால் சார்ந்ததுதான். அது அப்படித்தான் இருக்க வேண்டியிருக்கிறது.

ஆனால் மனிதர்களில் இரு பகுதிகளாய் பிரித்தல் (dichotomy) உருவாக்கப்பட்டிருக்கிறது.அந்தப் பிரித்தலை வேறுபடுத்தலை

விடுங்கள். உங்களுடைய பிரச்சினைகளை நான் தீர்த்துவைக்கப் போவதில்லை. உங்கள் பிரச்சினை முட்டாள்தனமானது. அறிவீன மானது என்பதையே நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். ஒரு மிகப்பெரிய ஆன்மா சார்ந்த பிரச்சினையை என்னிடம் கொண்டு வந்திருப்பதாய் நீங்கள் எண்ணிக் கொள்ள வேண்டாம். நீங்கள் கொண்டு வந்திருப்பது ஆன்மநிலை சார்ந்ததல்ல, முட்டாள்தனமானது. அதை விட்டுவிடுங்கள்.

உங்கள் பாலுறவோடு திருப்தியுற்றவராய் இருந்து விடுங்கள் என்று நான் கூறவில்லை. அதை ஏற்றுக் கொள்ளுங்கள் என்றுதான் சொல்கிறேன். மிகப்பெரிய சாத்தியங்கள் அதில் மறைந்துள்ளன. ஆனால், உங்களுடைய ஏற்புத்தன்மையில்தான் முதற்கதவே திறக்கிறது. பிறகு, அடுத்த கதவு அனுகூலமாய் அமைகிறது. பாலுறவு சக்தியே, ஆற்றலின் மற்ற சக்கரங்களுக்கும் செல்கிறது. அது மேலும் மேலும் உயர்நிலை அடைகிறது.

நீங்கள் வேறு எங்காவது ஒட்டிக் கொண்டிருந்தால் பாலுணர்வு ஒரு பிரச்சினையாகிவிடக்கூடும். அது முற்றிலும் வேறான விசயம். ஆக, எங்காவது ஓரிடத்தில் ஒட்டிக் கொண்டு விடாதீர்கள், முடங்கிப்போய் விடாதீர்கள், தடையின்றிச் செல்பவராயிருங்கள்.

அறிவு சார்ந்த விதத்தில் நீங்கள் இதனைப் புரிந்து கொள்கிறீர்கள். ஆனால், உங்களுடைய கடந்த காலம் குறுக்கிடுகிறது. தற்போது ஒரு சிறந்ததேர்வை, சிறந்த முடிவை நீங்கள் செய்ய வேண்டியிருக்கும். ஒன்று, கடந்த காலத்துக்குக் காது கொடுக்க வேண்டும் அல்லது நிகழ்காலத்துக்குச் செவிமடுக்க வேண்டும். உங்களுடைய புரிதல் புதிதாய் இருக்க வேண்டும். நீங்கள் எதனுடன் இணைந்திருக்கப் போகிறீர்கள்? கடந்த காலமோவெனில் மந்தமாகவும், செயலற்றதாயும் இருக்கிறது? அல்லது புதிய புரிதலுடன் இருக்கப் போகிறீர்களா?

முன்னொரு காலத்தில் இரண்டு நண்பர்கள் இருந்தனர். அவர்களுள் ஒருவனுக்கு மற்றவனை சீண்டிக் கேலி பண்ணுவது பிடித்தமான காரியம். ஒருநாள் அந்தத் தமாஷ் பேர்வழி இடுகாட்டில் கல்லறை ஒன்றின் பின்னே ஒளிந்து கொண்டான். அந்தக் கல்லறைத் தோட்டத்தின் வழியாக, குறுக்கு வழியாக தன்னுடைய நண்பன் வருவான் என்பது அவனுக்குத் தெரியும். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவனுடைய நண்பன் நெருங்கிவரும் ஓசை கேட்டது. அவன் அருகில் வந்ததும், அந்தப் பரிகாசக்காரன் இரத்தத்தை உறைய

வைக்கிற மாதிரி ‘கிறீச்’ என்று அலறினான். முதலாமவன் அச்சத்தில் உறைந்து போனான்.

‘ஜான், நீதானா அது?’ என்று அவன் கேட்டான். பதில் இல்லை. ‘ஜான் அது நீதான்னு எனக்குத் தெரியும்’ என்றான் அவன். ‘எனக்குத் தெரியும் ஜான், ஆனா எதுவாருந்தாலும் நான் ஓடிட்டேருக்கேன்.’

உங்களுக்கு தெரியும் என்றால் நீங்கள் எதற்காக ஓட வேண்டும். புதிய புரிதலுடன் நீடித்திருங்கள். இந்தக் கணத்தில் வாழ்க்கையை அனுபவியுங்கள். உங்கள் தன்னுணர்வின் எல்லையில் நீங்கள் வளர்ச்சியடைவீர்கள். நீங்கள் தொடர்ந்து பழைமையிலேயே இருந்து கொண்டிருந்தால் அழிந்து போவீர்கள், ஒரு போதும் நீங்கள் வளர்ச்சியடைய மாட்டீர்கள்.

வளர்ச்சி நிகழில் (present) இருக்கிறது. வளர்ச்சி, புதியது, இளமையானது, மகிழ்ச்சியும் உற்சாகமும் அளிப்பது. எனவே, உங்கள் நிலைக்கண்ணாடியில் படிகிற தூசியை நாளும் துடைத்தெறியுங்கள். உங்களுடைய நிலைக்கண்ணாடியைத் தூய்மையாய் வைத்திருங்கள். அப்போதுதான் உங்கள் முன்பாக வரும் எதையும் அது மிகச்சரியாகப் பிரதிபலிக்கும். அந்தப் பிரதிபலித்ததில் இருந்து வாழுங்கள். அந்தப் பிரதிபலிப்பில் நீடித்து வாழுங்கள்.

‘நான் மற்றொரு ஆசானின் வழிகாட்டுதலில் சாதனை (பயிற்சி) செய்கிறேன். அந்தச் சமயத்தில் எனக்குப் பால்சார்ந்த பிரச்சினை இருந்ததில்லை.’ அதை எப்படி அடக்கி வைப்பது என்று உங்களுக்குக் கற்பிக்கப்பட்டிருந்தால், அது உங்களுக்குப் பிரச்சினையாய் இருந்திருக்காது. அது அங்கே இல்லை என்று நீங்கள் எண்ணுமளவிற்கு அதனை வெகு ஆழத்தில் அடக்கிவைத்துவிட முடியும்.

‘ஆனால், என்னுடைய மனதில் இறுக்கங்கள் உள்ளன.’ இறுக்கங்களும் வளரும், காரணம், இறுக்கங்கள் இல்லாமல் அடக்கி வைத்தல் இல்லை. உண்மையில் மனதில் இறுக்கநிலை என்பது நுட்பமான அடக்கி வைத்தல்களின் (suppression) பிரதிபலிப்பே ஆகும். எவ்வித அடக்கிவைத்தலும் இல்லாதபோதுதான் நீங்கள் இறுக்கம் தளர்ந்து - தணிவு நிலையில் இருக்க முடியும். எதையும் வெளியிடாமல் மறைத்து வைத்திருப்பவனால் தணிவாக இருக்க முடியாது. காரணம் தணிவுநிலை என்பது அடக்கி வைத்தல்களுக்கு எதிரானது. இந்த இயக்க நுட்பத்தைப் புரிந்து கொள்ள முயலுங்கள்.

ஒன்றை நீங்கள் அடக்கி வைக்கிறபொழுது, நீங்கள் நிலையான விழிப்புணர்வுடன், அதைத் தொடர்ந்து அடக்கிவைத்தபடி இருக்க வேண்டும். அடக்கி வைத்தல் என்பது ஒரே மூச்சில் செய்து முடிக்கிற காரியம் அல்ல. உங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் அதைச் செய்ய வேண்டியிருக்கும். நீங்கள் அதைச் செய்யவில்லை யெனில் உள்ளாக அடக்கி வைத்தவையெல்லாம் மேற்பரப்புக்கு வந்துவிடும். அவற்றின் நெஞ்சுக்கூட்டின்மீது நீங்கள்ஏறி உட்கார்ந்தபடி, அவற்றைத் தொடர்ந்து கட்டுப்படுத்தியாக வேண்டும். நீங்கள் ஒரு நிமிடம் அவற்றைவிட்டு வைத்தாலும் பகைவன் மேலே வந்துவிடுவான், மறுபடியும் அதே போராட்டம், அதே சண்டைதான்.

அதனால்தான் உங்களுடைய புனிதர்கள் விடுமுறை எடுத்துக் கொள்வதேயில்லை. அது நடவாத காரியம். நீங்கள் எப்படி விடுமுறை யை அனுபவிக்க முடியும்? காரணம் விடுமுறை எல்லாவற்றிலும் உள்ள அமைதியைக் குலைத்துவிடாதா? உங்களுடைய புனிதர் இடைவிடாமல் தற்காத்துக் கொள்ள வேண்டியிருக்கும். அதுதான் இறுக்கம். இடைவிடாமல் விழிப்புடன் இருப்பது.

ஒரு பெண் வந்து கொண்டிருக்கிறாள்: உங்களுடைய ஆற்றலை நீங்கள் உள்ளுக்கிழுத்துக் கொள்கிறீர்கள், அவள் கடந்து செல்லும் வரையில் அதைக் கட்டுக்குள் வைக்கிறீர்கள். ஆனால் அவை தொடர்ந்து சென்றபடி இருக்கின்றன. அவை தொடர்ந்து செல்லாவிடில் ஒட்டுமொத்த வாழ்க்கையும் பால் சார்ந்ததாகி (sexual) விடும்.

நீங்கள் எப்படியோ பெண்களைத் தவிர்த்து, இமாலயப் பிரதேசத்துக்குத் தப்பிச் சென்று விடுகிறீர்கள். அங்கே பறவைகள் கொஞ்சிக் குலவிக் கொண்டிருக்கின்றன. நீங்கள் என்ன செய்வீர்கள்? மிருகங்கள் வந்து உங்கள் அமைதியைக் குலைக்கும். வாழ்க்கை முழுவதுமே பால் சார்ந்ததாயிருக்கிறது. நீங்கள் எங்கேயும் நழுவிச் செல்வதற்கில்லை. ஒட்டுமொத்த கடலும் பால்சார்ந்த சக்தியைக் கொண்டிருக்கிறது

அதில் தவறேதும் இல்லை. அது மிகவும் அழகானது. கடவுள் இந்த உலகில் தன்னைப் பால்சார்ந்த விதத்தில் வெளிப்படுத்திக் கொள்கிறார். நீங்கள் பழம்பெரும் புனித நூல்களை ஆராய்ந்தால் - குறிப்பாக இந்து மறைநூல்களில் அதைக் கண்டு கொள்வீர்கள். கடவுள் இந்த உலகத்தை எதற்காகத் தோற்றுவித்தார்? இந்துக்களின் மறைநூல்கள் தெரிவிக்கின்றன: 'அவருக்குள் ஆசை தோன்றியது - பாலுறவிற்கான வேட்கை மேலெழுந்தது - அவர் உலகத்தைத் தோற்று

வித்தார்' என்று. எல்லாப்படைப்பும் பால்சார்ந்த சக்தியில் இருந்து வெளிப்பட்டவைதாம் – அது இச்சை – காமம். ஆனால், இந்துக்கள் ஒரு வகையில் ரொம்பவும் துணிச்சலானவர்கள்தாம். அவர்கள் கூறுகிறார்கள், இவ்வுலகத்தைக் கடவுள் படைத்தார் பிறகு மிருகங் களையும், மரங்களையும் படைக்கத் தொடங்கினார். எண்ணற்ற மரங்களை அவர் எப்படி உண்டாக்கினார், எண்ணற்ற மிருகங்களை அவர் எப்படி உண்டாக்கியது, அவருடைய திட்டந்தான் என்ன? இத்தகைய சிக்கலான உலகில் அவர் எப்படி செயல்படத் தொடங்கினார்? இந்துக்கள் அதனை ரொம்ப எளிதான காரியம் என்கிறார்கள். அவர் முதலில் ஒரு பசுவைப் படைத்தார். இந்துக்கள் பசுவை விரும்புகிறவர்கள். அதனால்தான் கடவுள் பசுவை முதலில் படைத்திருக்கவேண்டும். பசு அழகாகவும் பார்ப்பதற்கு அமைதி யாகவும், தெய்வத்தன்மையோடும் இருக்கிறது. அவர் பசுவைப் படைத்தார் அதன்பிறகு பசுவிடம் காதல் கொண்டுவிட்டார். தந்தைக்கு மகளிடம் காதல். பசு அவருடைய மகள். அவர்தான் அதைப் படைத்தது. அவருக்குக் காதல் வந்துவிட்டது. தற்போது என்ன செய்வது? அவர் குழப்பத்துக்குள்ளானார். ஒரு பசுவைக் காதலிக்க ஒரே வழி அவர் காளையாக்கிவிடுவது. அதைத்தான் செய்தார் அவர். இல்லையேல் வேறு எப்படி காதல் பண்ண முடியும்? அதில் இருந்து தப்புவதற்கு – பெண்கள் எப்போதும் தப்பியோடுகிற மாதிரி.

பெண்சக்தி தப்பியோடுகிறது. அது ஒரு விளையாட்டு. அது உண்மையிலேயே அவள் தப்பியோட விரும்புகிறாள் என்றாகாது. அவள் தப்பியோடும் ஆட்டத்தை ஆடுகிறாள். ம்ம்...? ஒரு ஆண் பெண்ணை நெருங்குகிறபோது அவள் உடனே அவனுடன் படுக்கத் தயாராகிவிட்டால், அவனுக்கு ஓரளவு கவலை ஏற்படவே செய்யும். இவளிடம் எது தவறாகிப் போனது? காரணம் அந்த விளையாட்டை அவள் நடத்தவில்லையே. உடலுறவின் ஒட்டுமொத்த அழகும் உறவுக்கு முந்தைய சரசத்தில் (foreplay) இருப்பதுபோல் உறவில் இருப்பதில்லை. நீங்கள் பல்வேறு முயற்சிகளைச் செய்கிறீர்கள் – காதலாடுதல். ஒரு பெண்ணின் பிரியத்தை எப்படியாவது பெற்றேயாக வேண்டியிருக்கிறது. ஆனால், அவள பின் வாங்கினால்தானே அந்தக் காதலாடல் (courtship) சாத்தியம். கொஞ்சம் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் ஒரு பெண்ணிடம் பேசுகிறபோதெல்லாம்,அவளிடம் உங்களுக்கு ஆர்வம் இருக்குமாயின், அவள் பின்னுக்கு நகர்ந்து கொண்டேயிருப்பாள். நீங்கள் முன்னோக்கி நகர்ந்தபடி இருப்பீர்கள்.

ஆனால் எப்படியும் ஒரு சுவர் இருக்கும். அவள் சுவரை எதிர்த்துப் போகவும், அகப்பட்டுக் கொண்டு விடுவாள். அவள் எப்போதுமே சுவரை நோக்கி நகர்கிறாள், அது உள்நோக்கத்துடன் செய்யப்படுவது! அது எல்லாமே நோக்கமுடையவை. அது முழுமையான விளையாட்டு, அழகானதும்கூட.

ஆக, அந்தப்பசு காளையிடம் இருந்து தப்பியோடத் தொடங்கிவிட்டது. ஒரு சக்தி ஓடுகிறது. இன்னொரு சக்தி அதைத் துரத்திச் செல்கிறது. கண்ணாமூச்சி ஆட்டந்தான் - பெண் ஒளிகிறாள், ஒளிகிறாள், தன்னை ஒளித்து வைத்துக் கொள்கிறாள். கடவுளோ அவளை மறுபடியும் மறுபடியும் கண்டுபிடிக்கிறார். அவள் ஒளிந்து கொள்கிறார் - அவர் மறுபடியும் கண்டுபிடிக்கிறார். புதுப்புது வடிவங்களில், புதிய மலர்களில், புதிய பறவைகளில், புதிய விலங்குகளில் அவள் கண்டடையப்படுகிறாள். அந்த விளையாட்டு தொடர்கிறது. முடிவற்றது லீலை. இந்துக்கள் சொல்கிறார்கள் கடவுளின் லீலைக்கு முடிவேயில்லை என்று.

ஆனால் எல்லா ஆட்டமும் பால்சார்ந்ததாகவே இருக்கிறது, காரணம் அது ஓர் வேலை அல்ல. நீங்கள் ஆடுவது ஆட்டத்தின் பொருட்டுத்தான். கடவுளைப் பற்றிய இந்துக்களின் கருத்தாக்கம் அதனால்தான் மற்ற மதங்களுடையதைவிட மேம்பட்டிருக்கிறது. யூதக் கடவுள் உழைப்பாளியைப் போல், ஊழியர் வகுப்பைச் சேர்ந்த ஒருவரைப்போல் காட்சியளிக்கிறார். இந்துக் கடவுள் உழைப்புபற்றிக் கவலைப்படுவதில்லை. அவர் எந்தத் தொழிலாளர் சங்கத்தையும் சேர்ந்தவரல்லர். அவர் நாடகக் காரர், நடிகர். இந்த உலகமே அவரது நாடகம். அவர் பெருமகிழ்ச்சி கொள்கிறார். அந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அது தன்னளவில் முடிவெல்லை கொண்டது. அது ஒரு விளைவுண்டாக்கும் வழியாகாது.

வேலைக்கும், நாடகத்துக்கும் உள்ள வேறுபாடு அதுதான். வேலை எப்போதும் ஒரு முடிவைக் கொண்டதாயிருக்கும். தன்னளவில் அது பயனற்றதாய் இருக்கும். அதைச் செய்வதில் உங்களுக்கு விருப்பம் இருக்காது. நீங்கள் அலுவலகத்துக்குச் செல்கிறீர்கள். தொழிற்சாலைக்கு, கடைக்குச் செல்கிறீர்கள். அங்கே நாள் முழுக்க வேலை பார்க்கிறீர்கள், காரணம், பணம் இருந்தால்தான் நீங்கள் விரும்புகிற கார், ஒரு நல்ல வீடு, ஓர் அழகான பெண் உங்களுக்குக் கிடைக்க முடியும். நீங்கள் வேலையை விரும்புகிற காரணத்தால் தொழிற்சாலையில் வேலை பார்த்துக் கொண்டிருக்க

வில்லை. நீங்கள் வேறுசில பொருள்களை விரும்புகிறீர்கள். ஆனால் உழைக்காமல் அவை உங்களுக்குக் கிடைக்காது. எனவேதான் நீங்கள் உழைப்பது. குறிக்கோள் வேறு எதுவாகவோ இருக்கிறது.

நாடகம் முற்றிலும் மாறுபட்டது. நீங்கள் நடிக்கிறீர்கள். அதில் எந்தக் குறிக்கோளும் இல்லை. நடிப்பது உங்களுக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

நான் கேட்டறிந்தது:

பிரபுக்களான கார்ன் ஃபோர்த், யூலே, டானிங்டன் ஆகியோர் ஒரு ஞாயிற்றுக்கிழமை பிற்பகலில், புல்வெளியில் அமர்ந்து தேநீர் பருகிக் கொண்டிருந்தனர். பேச்சு உடலுறவு பற்றித் திரும்பியது. அதில் பத்துசதவிகித வேலை, தொண்ணூறு சதவிகித மகிழ்ச்சி என்று கார்ன் ஃபோர்த் பிரபு சொன்னார்.

யூலே பிரபு சொன்னார், அது ஐம்பது சதவிகித வேலை, ஐம்பது சதவிகித மகிழ்ச்சி என்று. டானிங்டன் பிரபு, மூவருள் வயதில் மூத்தவர். அவர் சொன்னார், தொண்ணூறு சதவிகித உழைப்பு பத்து சதவிகித மகிழ்ச்சி என்று.

இந்த விவாதத்தை முடிவுக்குக் கொண்டுவர விரும்பி அவர்கள் தோட்டத்துச் செடிகளைப் பராமரிக்கும் தோட்டக்கார கிழவனை அழைத்தன. அவனிடம் அவர்கள் கேட்டபோது 'ஏன் அது நூறு சதவிகித மகிழ்ச்சியாக இருக்கக்கூடாது. எங்களை மாதிரி வேலைக்காரர்களை உங்கள் சார்பாக வைக்கலாம்ல' என்றான்.

நாடகமாகட்டும், ஆட்டமாகட்டும் நூறுசதவிகித மகிழ்ச்சி கொண்டது. இந்துக்களைப் பொறுத்தவரை கடவுள் படைப்பு என்கிற நாடகத்தின் சூத்ரதாரி. அந்த நாடகத்தில் பாலுறவு சக்தி உட்பட்டிருந்தது.

அங்கேயே ஒரு நிலையில் நின்றுவிடாதீர்கள். காரணம் இன்னும் சிறந்த விளையாட்டுக்கள், நுட்பமான ஆட்டங்கள் இருக்கின்றன. முதலில் வெளியேயுள்ள பெண்ணுடன் நீங்கள் விளையாடுகிறீர்கள். அது தாழ்நிலையில் உள்ள சாத்தியம். பிறகு உள்ளே இருக்கும் பெண்ணுடன் ஆடத் தொடங்குங்கள். யோகா அதைத்தான் சூரிய சந்திரச் சேர்க்கை என்கிறது. இடகலை, பிங்கலையின் இணைப்பு. நீங்கள் ஓர் ஆணாக இருந்தால் உள்ளே இருக்கும் பெண்ணுடன், ஒரு பெண்ணாக இருந்தால் உள்ளே இருக்கும் ஆணுடன் நீங்கள் ஆடத் தொடங்குகிறீர்கள்.

இரண்டும் உங்களுக்குள் இருக்கிறது. ஓர் ஆண்அப்படியே ஓர் ஆணாக இருந்துவிடவில்லை. அவனுக்குள் ஒரு பெண் இருக்கிறாள். எந்தப் பெண்ணும் அப்படியே ஒரு பெண்ணாக இருந்துவிடவில்லை. அவளுக்குள் ஓர் ஆண் இருக்கிறான். அப்படித்தான் இருந்தாக வேண்டும். காரணம், இருவருடைய சந்திப்பின் விளைவாக அல்லவா நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் தந்தையிடம் இருந்து ஒன்றையும், உங்கள் தாயிடம் இருந்து ஒன்றையும் நீங்கள் அடையப் பெற்றிருக்கிறீர்கள். நீங்கள் ஆணா பெண்ணா என்பது எந்த வேறுபாட்டையும் உண்டு பண்ணாது. ஆண், பெண் என்கிற இரண்டு சக்திகளின் நிறைவாகவே நீங்கள். இருவரும் உங்களுக்கு தலா ஐம்பது சதவிகித பங்களிப்பை வழங்கியிருக்கிறார்கள்.

ஆக, ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே என்ன வேறுபாடு இருக்கிறது? வேறுபடுவது இப்படித்தான். இரண்டு நாணயங்கள் மிகச்சரியாக ஒரே மாதிரி இருப்பவை. ஒன்றில் தலை மேலாக இருக்கிறது, மற்றொன்றில் பூ மேலாக இருக்கிறது. இரண்டும் ஒன்று போலத்தான். வேறுபாடு தரம் பற்றியதல்ல, வேறுபாடு சக்தி பற்றியதுமல்ல. வேறுபாடு முக்கியத்துவத்தில் மட்டுமே உள்ளது. ஓர் ஆண் உணர்வு சார்ந்த வகையில் ஆணாகவும், உணர்வற்ற பெண்ணாகவும் இருக்கிறான். ஒரு பெண் உணர்வு சார்ந்த வகையில் பெண்ணாகவும், உணர்வற்ற வகையில் ஆணாகவும் இருக்கிறாள்.

புறத்தேயுள்ள பெண்ணுடன் எப்படி ஆட்டத்தை ஆடுவது என்று நீங்கள் தெரிந்து கொண்டுவிட்டால் - அதையேதான் நானும் வலியுறுத்துகிறேன் முதலில் வெளியே விளையாடக் கற்றுக் கொள்ளுங்கள் என்று - பிறகு, உள்ளிருக்கும் நுட்பமான பெண்ணுடன் ஆணுடன் ஆட முடியும். முதலில் வெளியேயுள்ள பெண்ணையும், ஆணையும் கவர்ந்திழுத்துக் கொண்டுவிடுங்கள். அங்கே ஆடுங்கள். அது அத்தனை நேர்த்தியற்றது என்றாலும் எளிதில் கற்றுக் கொண்டுவிட முடியும். மிகச் சிறந்த ஓர் ஆட்டத்துக்கு அது முன்னேற்பாடு எனலாம். அதன்பிறகு நீங்கள் உள்ளே செல்கிறீர்கள். அடுத்து, உங்கள் இருப்புணர்விறகுள் ஒளிந்து கொண்டிருக்கும் மற்றொருவரைக் கண்டு பிடிக்கத் தொடங்குகிறீர்கள். அதைக் கண்டடைவீர்கள், ஓர் உச்சக்கட்டப் பரவசம் (orgasm) உங்களுக்குள் நிகழ்கிறது.

அந்தப் பரவசம் மேலும் மேலும் அதிகரிக்கிறது, பெரிதாகிறது. நிறைவான பரவசம் சஹஸ்ராரத்தில் நிகழ்கிறது, உங்களுடைய சிரசுப்

பகுதியில், இருப்புணர்வின் கடைசி மையத்தில் அது நிகழ்கிறது. முடிவான குறிக்கோளாய் அமைந்த கடவுளும், நிறைவான இயற்கையும் சந்திக்கின்றன. இரண்டு நிறைவானவை ஒன்றையொன்ற சந்தித்து, கலந்து ஒன்றோடொன்று ஐக்கியமாகி விடுகின்றன. பொருளானது உணர்வைச் சந்திக்கிறது. புருடனும் பிரகிருதியும் சந்தித்துக் கொள்கின்றன. கண்ணுக்குப் புலப்படுகிற ஒன்று கண்ணுக்கு புலப்படாத ஒன்றைச் சந்திக்கிறது. நிறைவான பரவசம் நிகழ்கிறது.

இது ஓர் ஆட்டம். உங்களால் முடிந்த மட்டும் நேர்த்தியாக அதை ஆடிக் கொண்டேயிருங்கள். அந்த வித்தையை நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும்.

ஆக, நீங்கள்அடக்கிவைப்பது என்றால் தொடர்ந்து அடக்கி வைக்கும்படி இருக்கும். நீங்கள் அடக்கி வைப்பதாயின் தொடர்ந்து காவல் செய்ய வேண்டும், நீங்கள் ஓய்வாக இருக்க முடியாது. உங்களுக்குள் எந்தவொரு பகைவனும் இல்லாதிருந்தால்தான் நீங்கள் ஓய்வாக இருக்க முடியும். ஓய்வு என்பது ஒரு மனநிலை, அதற்கு அடக்கி வைத்தலோ (repressin) அதன் அடையாளமோகூட இருக்கக்கூடாது.

ஒரு குழந்தை தளர்வு நிலையில் இருக்கிறது. உங்களுக்கு வயதேறிய்பின் அது கடினமாகிவிடும். சின்னக் குழந்தை எப்படி ஆழ்ந்து ஓய்வை அனுபவிக்கிறது என்பதைக் கவனியுங்கள். சின்னப் பையன் சாப்பாட்டு மேசையில் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது தூங்கிவிடுகிறான். தன்னுடைய விளையாட்டுக் கருவிகளை வைத்து விளையாடிக் கொண்டிருக்கும்போதே அவனுக்குத் தூக்கம் வந்துவிடலாம். அவன் எங்கு வேண்டுமானாலும், அப்படியே தூங்கி விடுவான். வளர்ந்து பெரியவர்களாகி விட்டால் உறங்குவதும் ஓய்வு கொள்வதும், கலவி புரிவதும், இரண்டறக்கலப்பதும் கடினமாகிவிடும். ஆக எத்தனை அடக்கி வைத்தல்கள்! நீங்கள் எல்லாருமே சுமையைச் சுமக்கிறீர்கள், உங்கள் சுமைகூடிக்கொண்டே போகிறது.

இந்தச்சுமை ரொம்ப சிக்கலானதும்கூட. அது எளிமையானது அல்ல. நீங்கள் பாலுணர்வை அடக்கி வைத்தால் - அத்துடன் பக்கம் பக்கமாய் வேறு பலவற்றையும் அடக்கி வைக்கவேண்டியிருக்கும். காரணம், எல்லாமும் ஒன்றோடொன்று தொடர்புடையதாயிருக்கிறது. உள்ளே, பெரிய சிக்கல்தான். நீங்கள் பாலுணர்வை அடக்கி வைத்தால் உங்களுடைய சுவாசத்தையும் அடக்கி வைக்க வேண்டியிருக்கும்.

உங்களால் நன்றாகச் சுவாசிக்க முடியாது காரணம், ஆழ்ந்த சுவாசம் உங்கள் பாலுணர்வு மையத்துக்குத் தொடர்ந்து செல்வதுடன், அந்த மையத்தை பிடித்து விடவும் (massage) செய்கிறது. நீங்கள் உண்மையிலேயே நன்றாகச் சுவாசித்தால் பாலுணர்வு சார்ந்த விதத்திலும் நன்றாக இருக்கிறீர்கள் என்று பொருள். நீங்கள் பாலுணர்வை அடக்கி வைத்தால், உணவிலும் பலவற்றைக் கட்டுப்படுத்த வேண்டியிருக்கும், காரணம் ஒரு சில உணவு வகைகள் உங்களுக்கு அதிக அளவில் பால்சார்ந்த சக்தியைக் கொடுக்கும். அந்நிலையில் உங்கள் உணவுகளை நீங்கள் மாற்ற வேண்டியிருக்கும். நீங்கள் பாலுணர்வைக் கட்டுப்படுத்தினால் உங்களால் நன்றாகத் தூங்க முடியாது. காரணம் நீங்கள் நன்றாகத் தூங்கினாலும், முழுமையான தணிவு நிலையில் இருந்தாலும் உங்களுக்கு பால்சார்ந்த கனவுகள் வரும். தூக்கத்திலேயே விந்து வெளிப்பாடு இருக்கும். அச்சம் இருக்கும் உங்களால் நன்றாகத் தூங்கமுடியாது. தற்போது ஒட்டுமொத்த வாழ்க்கையிலும் ஒரு சிக்கல், ஒரு முடிச்சு விழும், வாழ்க்கையே இடர்ப்பாட்டில் சிக்கிக் கொண்டுவிடும்.

நீங்கள் பாலுணர்வை அடக்க முடியும். ஆனால் அந்நிலையில் நீங்கள் மிகுந்த இறுக்கத்துக்குள்ளாவீர்கள். அதுதான் நடந்திருக்கிறது. 'ஆனால் என்னுடைய மனதில் இறுக்கங்கள் இருந்தன.'

'உங்களுடைய புகலிடத்தை வந்தடைந்தபின் இறுக்கங்கள் மறைந்துவிட்டன...' ரொம்ப நல்லது. இறுக்கங்கள் மறைகிற பொழுது, அந்நிலையில் நீங்கள் அடக்கிவைத்திருந்த பாலுணர்வு அந்த இறுக்கங்கள் மூலம் மேலே வரும். மறுபடியும் குமிழிடும்.

'.... ஆனால் பாலுணர்வு பற்றிய ஒரு புதிய பிரச்சினை தோன்றும்.' அதைப் பிரச்சினை என்று கூறாதீர்கள். தற்போது 'பால்சார்ந்த சக்தி மறுபடியும் பாய்ந்தோடுகிறது' என்று சொல்லுங்கள். தற்போது உங்கள் பால்சார்ந்த சக்தி திண்மையாயிருப்பதில்லை, அது நீர்த்தன்மை உடையதாகி, தங்கு தடையின்றித் தொடரும். தற்போது உங்கள் பாலுணர்வு உயிரோட்டமுடையதாகிவிடும். அது செயலற்று முடங்கிக் கிடப்பதில்லை. நீங்கள் மறுபடியும் இளமையானவராகி விடுகிறீர்கள்.

உங்களைக் கட்டுப்பாடு செய்கிற ஆசான்களிடம் இருந்தும், நீங்கள் வாசிக்கிற மறைநூல்களில இருந்தும், முட்டாள்தனமான நடத்தைகளில் இருந்தும் உங்களை விடுவிப்பதே என்னுடைய முழு முயற்சியாக இருக்கும். என்னுடைய தொண்ணூறு சதவிகித வேலைகளுக்கு நீங்கள் தவறான ஒன்றைக் கற்றுணர்ந்ததும், உங்கள்

நினைவில் உள்ளதையே நீங்கள் அகற்றியாக வேண்டும் என்பதே காரணமாக இருக்கும். தற்போது நீங்கள் அதைப் பிரச்சினை என்றால் அது உங்களால் அல்ல. உங்களுடைய ஆசான் என்று அழைக்கப்படுகிறவரின் குரல் மறுபடியும் உங்களுக்குள் வேலை செய்யத் தொடங்கிவிட்டது. உங்கள் இதயத்தில் அவர் சிம்மாசனமிட்டு அமர்ந்து கொண்டு, 'இதோபார், பிரச்சினை மறுபடியும் உண்டாகிறது; அதை நிறுத்து; அதை அடக்கு' என்கிறார். நீங்கள் அக்குரலை அலட்சியப்படுத்திவிட வேண்டும்.

நீங்கள் என்னுடன் இருக்க விரும்பினால், உயிரோட்டத்துடன் இருக்கவேண்டும். அதில் இருந்து எதுவும் தவிர்க்கப்படாமல், எல்லாமும் அதனுடன் உட்படுத்தப்படுமளவு முழுமையான உயிரோட்டத்துடன் இருக்கவேண்டும். அதுவே வேலையின் தொடக்கமாயிருக்கும்.

உங்களால் இறுக்கம் தளர்ந்து, தணிவு நிலை அடைய முடியுமெனில் நீங்கள் கடவுளை அடைய முடியும். அது ஒன்றும் கடவுளை அடைதற்கான முயற்சி அல்ல. அது முயற்சியற்ற ஓய்வாக இருக்கும்.

> *'அமைதியான கவனத்துடன் இருப்பது எப்படி?*
>
> *தன்னை உள்நோக்கித்திருப்பாமலும், புறப்பொருளின்பால் செல்லவிடாமல் இருப்பது எப்படி?*
>
> *எப்படி இருப்பது, இருந்தும் இல்லாமல் இருப்பது?*
>
> *அருள்கூர்ந்து சொற்களின் வழியேயல்லாது, வெறுமை (இல்லாதநிலை)யின் வழியே பதிலளியுங்கள்.'*

அந்நிலையில் நீங்கள் வெறுமை (void) யின் மூலமே கேட்க வேண்டும். என்னுடைய நிசப்தமான பதிலை நீங்கள் விரும்பினால் உங்களுடைய கேள்வியும் நிசப்தமாகவே இருக்க வேண்டும். உங்களால் நிசப்தமாகக் கேட்க முடியாவிட்டாலும் என்னால் நிசப்தமாக - சொற்களற்ற விதத்தில் பதிலளிக்க முடியும். ஆனால் அதை உங்களால் புரிந்து கொள்ள முடியாது. முதலில் நீங்கள் நிசப்த (silent) மொழியைக் கற்றுக் கொள்ள வேண்டும். நீங்கள் என்னிடமிருந்து சந்தடியற்றவிதத்தில் ஏதோஒன்றைப் பெற விரும்பினால், அப்போது உங்களைத் தயார் செய்து கொண்டு அமைதியாக கேட்கவேண்டும். அதை எழுதத் தேவையில்லை.

காரணம் உங்களுடைய ஏற்புத்திறன் எந்த அளவுக்கு இருக்குமோ, அந்த அளவுதான் நானும் கொடுக்க முடியும்.

நீங்கள் கிறுக்குத்தனமான கேள்விகளைக் கேட்டு வைக்காதீர்கள், காரணம், நான் ரொம்பவும் கிறுக்குத்தனமாய் பதிலளிக்கக்கூடும்.

சின்னதாய் ஒரு கதை:

ஒரு தாய் தன்னுடைய சிறுவயதுப் பெண்ணை இயல்புக்கு மாறான போக்குகளுக்காக பரிசோதிக்க வேண்டும் என்று நினைத்தாள். எனவே, அந்தக் குட்டிப் பெண்ணை மனநல மருத்துவரிடம் அழைத்துச் சென்றாள். மற்ற கேள்விகளின் நடுவே மருத்துவர் கேட்ட ஒரு கேள்வி: நீ பையனா அல்லது பெண் குழந்தையா?

அந்தப் பெண் சொன்னது, 'நான் பையன்' என்று.

அதிர்ச்சியுற் மருத்துவர் கேட்டார், 'நீ வளர்ச்சியடையும் பொழுது ஓர் ஆணாக இருப்பாயா அல்லது பெண்ணாகவா?' என்று.

அந்தப் பெண் சொல்லிற்று, 'ஒரு ஆணாக இருப்பேன்' என்று.

அதன்பிறகு அவர்கள் வீட்டுக்குத் திரும்புகிற வழியில் தாய் கேட்டாள்: 'அந்த ஆள் கேட்ட கேள்விகளுக்கு நீ ஏன் விசித்திரமான பதில்களைக் கொடுத்தாய்' என்று.

அந்தச் சின்னப்பெண் தன்னைச் சுதாரித்துக் கொண்டு மதிப்பாகச் சொன்னாள், 'அவர் கிறுக்குத்தனமான கேள்விகளை என்னிடம் கேட்டால், நானும் கிறுக்குத்தனமாகவே பதிலளிப்பேன்–அவர் ஒன்றும் என்னை முட்டாளாக்கிவிட முடியாது.'

இதனை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் முற்றான அமைதியில் ஒரு பதிலைப்பெற விரும்பினால், எப்படி அமைதியாய் இருப்பது என்பதை அப்போது நீங்கள் கற்றிருக்க வேண்டும்; அந்நிலையில் நீங்கள் கேட்கவே அவசியம் இல்லை, கேள்வியை முறைப்படுத்திக் கொள்ளவும் அவசியம் இருக்காது, நீங்கள் என்னிடம் வரவேண்டிய அவசியமும் இருக்காது. காரணம் அந்நிலையில் உடல் சார்ந்த நெருக்கம் தேவைப்படாமல் போய்விடும். நீங்கள் எங்கிருந்து கொண்டும் என்னுடைய பதிலைப் பெறமுடியும். அந்த பதில் என்னுடையதாகவோ அல்லது வேறு யாருடையதாகவோ இருக்காது. அது உங்கள் இதயத்தின் பதிலாகவே இருக்கும்.

நான் உங்களுக்குப் பதில்களைக் கொடுக்கத்தான் வேண்டும், காரணம் உங்களுக்கு எப்படிக் கேட்பதென்றே தெரியவில்லை. நான்

உங்களுக்குப் பதிலளிக்கக் காரணம் இருக்கிறது. உங்களுடைய இருப்புணர்வில் இருந்து பதில்களைப் பெறும் திறமையை நீங்கள் இன்னும் பெறவில்லை. ஒருமுறை நீங்கள் அமைதியை அறிந்து கொண்டுவிட்டால் நீங்கள் பெரிய அளவில் திறமை உடையவராகி விடுவீர்கள். அமைதியாய் இருங்கள், எல்லாக் கேள்விகளும் மறைந்துவிடும். அது நீங்கள் பதிலைப் பெறுகிறீர்கள் என்பதாகாது. கேள்விகள் அப்படியே மறைந்துவிடும். கேட்பதற்கு உங்களிடம் எந்தக் கேள்வியும் இருக்காது.

புத்தர் தம்முடைய சீடர்களிடம் இப்படிச் சொல்வதுண்டு. 'ஓராண்டு காலத்துக்கு நீங்கள் ஒய்வாகவும், அமைதியாகவும் இருங்கள். ஓராண்டுக்குப் பிறகு நீங்கள் எதைக் கேட்க விரும்பினாலும் கேளுங்கள்' என்று. ஆனால், ஓராண்டுகழிந்தபின் அவர்கள் கேட்கமாட்டார்கள், காரணம் கேள்விகள் அழிந்துவிடும்.

உங்கள் அமைதி கூடுகிறபோது, உங்களுடைய கேள்விகள் குறைந்துவிடும். காரணம் கேள்விகள் இரைச்சலிடும் மனதின் ஒரு பகுதிதான். கேள்விகள் உங்களுடைய உயிரில் இருந்தோ, இருப்புணர்வில் இருந்தோ, பிரபஞ்ச இருப்பில் இருந்தோ வருவதல்ல, அவை களிவெறி கொண்ட ஒரு மனதில் இருந்து வருவது. அந்தச் களிவெளி (madness) சிறிது குறைகிறபோது இரைச்சலும் (noise) கொஞ்சம் குறைகிறது. மனதில் போக்குவரத்து நின்றுவிடுகிறது. போக்குவரத்துடன் இரைச்சலும் - கேள்விகளும் மறைந்து விடுகின்றன. உடனே அங்கு அமைதி உண்டாகிறது.

அமைதியே பதிலாகிறது.

*'பகவானே நான் நிறையவே கனவு காண்கிறேன் ஆனால், என்னுடைய கனவில் நீங்கள் அரிதாகவே தோன்று கிறீர்கள். நேரு, ஜெயப்ரகாஷ், திங்ரே போன்றவர்கள் அடிக்கடி காட்சியளிக்கிறார்கள். அந்தப் பொல்லாத இரயில் ஒவ்வொரு முறையும் என்னைவிட்டுவிட்டு என்னுடைய உடைகளை ஏற்றிச் செல்கிறது? ஒருமுறை உங்களுடைய ஜீப்பில் என்னைச் சமதளமில்லாத ஆற்றங்கரையில் அழைத்துச் சென்றீர்கள். நேற்றிரவு நீங்கள் பல பெண்களைக் கல்யாணம் செய்து கொண்டதை நான் பார்த்தேன். விரும்பத்தக்க அவர்கள் ஒருசேர நின்றிருந் தனர். உங்களால் அவர்களை எவ்வித இடர்ப்பாடுமின்றி, அன்புடன் கையாள முடியும் என்று என்னிடம் சொன் னீர்கள்! பகவானே, இதுவெல்லாம் கனவு காண்பவரின்*

*பொருட்டு எதைக் குறிக்கிறது என்று தாங்கள் தயவுடன் சொல்வீர்களா?'*

இது சுவாமி மைத்ரேயரிடம் இருந்து வந்த கேள்வி. ஒரு அழகான கேள்வி, ஓர் அருமையான, சிறப்பு வாய்ந்த கனவு. அது அவரைப்பற்றி மிகுதியான அளவில் வெளிக்காட்டுகிறது.

முதலாவது, தம்முடைய கடந்த காலத்தில் அவர் ஒரு அரசியல்வாதியாகவும், அதிக நம்பிக்கைக் கொண்டவராகவும் இருந்தார். பண்டித ஜவஹர்லால் நேரு, ஜெய்ப்ரகாஷ் நாராயணன், ராம்தாரி சிங் திங்ரே இவர்களுடைய உடன் உழைக்கும் தோழராகவும் இவர் இருந்திருக்கிறார். பாராளுமன்ற உறுப்பினராகவும் பல ஆண்டுகள் இருந்ததுண்டு. எப்படியோ கொக்கிபோட்டு என்னை பிடித்துவிட்டார், மிகச் சிறந்த அரசியல்வாதியாகவும், அரசியலில் மிகப்பெரிய சக்தியாகவும் வரவேண்டும் என்கிற அவருடைய கனவுகள் மறைந்துவிட்டன. ஆனால், கடந்தகாலம் இன்னும் விடாமல் பற்றிக் கொண்டிருக்கிறது.

நேரு, ஜெய்பிரகாஷ் மற்றும் திங்ரேயுடனான இந்தக் கனவுகள் மிகவே சுட்டிக்காட்டுகிறவையாய் இருக்கின்றன. அந்த அரசியல் குறித்த பேராவல் அவருக்குள் தெரிந்திராமல் ஓரிடத்தில் இன்னமும் ஒளிந்திருப்பவையே அவை காட்டுகின்றன. அவரால் அதில் இருந்து முற்றாக விடுபடி முடியவில்லை. அவர் என்னிடம் நேர்மையாகவும், நம்பத்தக்கவராகவும் இருக்கிறார். ஆனாலும் கடந்தகாலம் இன்னமும் பற்றிக் கொண்டிருக்கிறது. அவர் அதில் இருந்து விடுபடவே விரும்புகிறார், அதனால்தான் கடந்த காலம் பகலில் வருவதில்லை. அவர் உதவியற்றவராய் அயர்ந்து உறங்கும்போது வருகிறது. அந்நிலையில் மனமானது, பழைய தந்திரங்களைப் பயன்படுத்தி ஆடுகிறது மறுபடியும், மறுபடியும்

நான் அவருடைய கனவில் அதிகம் வருவதில்லை. காரணம் நான் முன்னதாகவே இங்கிருக்கிறேன். நான் யதார்த்தத்தில் இங்கிருக்கிற போது, என்னைப் பற்றி ஒரு கனவைத் தோற்றுவித்துக் கொண்டு என்ன ஆகப்போகிறது? கனவுகள் நிகழ்காலத்தில் இல்லாதவற்றைப் பற்றியதே என்பதை நினைவில் வையுங்கள். அவை கடந்த காலம் பற்றியதாக இருக்கும் அல்லது எதிர்காலத்தில் இடம்பெற வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறவையாக இருக்கும்.

உண்மையில் தற்போது உங்களுடன் இருக்கிற யாரும் உங்களுடைய கனவில் வரமாட்டார்கள். உங்களுக்கே உரிய மனைவி

உங்கள் கனவில் வருவதில்லை. அண்டை வீட்டுக்காரரின் மனைவிகள் உங்கள் கனவில் வருவார்கள். உங்களுக்கே உரிய கணவர் உங்களுடைய கனவில் வரமாட்டார். ஆனால் மற்றவர்கள் தோன்றுவார்கள். அதில் முக்கியக் கருத்தாய் எதுவும் இல்லை.

கனவு, நிஜத்துக்குப் பதிலியாய் (substitute) அமைவது. அது நிறைவை உண்டு பண்ணுகிறது. நீங்கள் நன்றாகச் சாப்பிட்டுவிட்டு உங்கள் உணவை அனுபவித்து மகிழ்ந்திருந்தால், அதில் திருப்தி கண்டிருந்தால் அந்த உணவை மறுபடியும் உண்பதாக எண்ண மிடவோ, கனவு காணவோ மாட்டீர்கள். ஒருநாள் நீங்கள் உண்ணாமல் நோன்பிருந்து விட்டீர்கள் என்று வைத்துக் கொள்வோம், அபபோது உணவைப்பற்றி, அருமையான சுவைமிக்க உணவு பற்றி உங்களுக்குக் கனவுகள் வரும். அரச குடும்பத்தினர் உங்களை அரண்மனைக்கு அழைத்து விருந்தளிப்பதாகவும் நீங்கள் விழுந்து விழுந்து தின்று வைப்பதாகவும் கனவு காண்பீர்கள்.

உங்கள் வாழ்வில் தவறவிடப்பட்ட ஒன்றையே கனவு சுட்டிக்காட்டும், முன்பே உளதாயிருக்கிற எதுவும் கனவில் இடம் பெறாது அதனால்தான் ஞானம் பெற்ற ஒருவர் கனவு காண்பதில்லை. காரணம் அவர் எதையும் தவறவிட்டுக் கொண்டிருப்பதில்லை. அவர் விரும்பியதெல்லாம் நடந்து விடுகிறது, அதற்குமேல் எதுவும் இல்லை. அவருக்குக் கடந்தகாலமும் இல்லை, வருங்காலமும் இல்லை. அவருடைய நிகழ்காலம் முழுமையானது. அவர் எதைச் செய்தாலும் முற்றிலும் அனுபவித்துச் செய்கிறார். அவர் மிகுந்த மனநிறைவோடு இருக்கிறார், நிறைவளிக்கிற எந்தக் கனவும் அவருக்குத் தேவைப்படாது.

உங்களுடைய மனக்குறைகளே உங்கள் கனவுகளாகின்றன. உங்கள் அதிருப்திகளே கனவுகளாகின்றன. உங்கள் நிறைவேறாத ஆசைகளே கனவுகளாகின்றன.

மைத்ரேயர் ஓர் அரசியல்வாதியாக இருந்தார், மனம் இன்னமும் அதைச் சுமந்து கொண்டிருக்கிறது. அதனால்தான், ".... அந்தப் பொல்லாத இரயில் என்னை விட்டுவிட்டு, என்னுடைய உடைமைகளை மட்டும் எடுத்துச் செல்கிறது". அதுவும் பல தடவைகள் அவருடைய கனவுகளில் வருகிறது. அதுவே பலருடைய கனவின் பகுதியாயிருக்கிறது. ஓர் இரயில், எப்படியோ நீங்கள் இரயிலைப் பிடிக்க முற்படுகிறீர்கள் - ஓடுகிறீர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், நீங்கள் பிளாட்பாரத்தை அடைந்தபோது இரயில் புறப்பட்டுவிடுகிறது. அவருடைய இடர்ப்பாடு அதிகம். அவரது

உடைமைகள் இரயிலுக்குள் இருக்க, அவரோ வெறுங்கையராக பிளாட்பாரத்தில் நிற்கிறார். அதுதான் அவருககும் (மைத்ரேயர்) நடந்தது. நேரு இரயிலுக்குள் சென்றுவிட்டார், திங்ரே இரயிலுக்குள் சென்றுவிட்டார். ஜே.பி.யும் இரயிலில் ஏறியாயிற்று. இவருடைய உடைமைகளை அவர்கள் எடுத்துச் சென்றார். இவர்தான் எதுவுமில்லாமல் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருப்பது. அந்தப் பேராவல்கள் அரசியல் சார்ந்த இலட்சியங்கள் இன்னும் அவருக்குள் ஒளிந்து கொண்டிருக்கின்றன.

நான் அதனால்தான் அவருடைய கனவுகளில் வருவதில்லை. நான் முன்னதாகவே இங்கிருக்கிறேன். நான் ஒரு குறியிலக்குஅல்ல. நான் போய்விட்ட பிறகு வேண்டுமானால் அவருடைய கனவில் வரக்கூடும் - அவர் இன்னொரு இரயிலையும் தவறவிடுகிறபோது. திரும்பிச் செல்ல வழியில்லை காரணம் அவருக்குள் நிச்சயமாய் ஒரு புரிதல் ஏற்பட்டிருக்கிறது. அவரால் திரும்பிச் செல்ல முடியாது, அவரால் மறுபடியும் ஓர் அரசியல்வாதியாக முடியாது. அங்கே திரும்பிச் செல்வதென்பதில்லை, ஆனால் கடந்தகாலத்தைப் பற்றிக் கொண்டிருக்க முடியும். அதை மிகுதியாய்ப் பற்றிக் கொண்டிருந்தால் அவர் இன்னொரு இரயிலையும் தவறவிடும்படியாகும்.

'உங்களுடைய ஜீப்பில் என்னையும் ஒரு சமதளமற்ற ஆற்றங்கரையில் அழைத்துச் சென்றீர்கள்'. அது ஒரு ஜீப், சமதளமற்ற ஆற்றங்கரை நெடுகில் - அது சமதளமற்றதாயிருக்கிறது. என்னோடு இருப்பது எப்போதும் ஆபத்துதான், பாதுகாப்பற்றதுதான். நான் எந்தப் பாதுகாப்பையும் உங்களுக்கு வழங்குவதில்லை, உண்மையில உங்களுடைய எல்லாப் பாதுகாப்புகளையும் உங்களிடம் இருந்து பறித்துக் கொண்டுவிடுகிறேன். உங்களைக் கிட்டத்தட்ட வெறுமையாக்கிவிடுகிறேன், வைத்துக் கொள்ள எதுவும் இல்லாமல், பற்றிக் கொள்ள எதுவும் இல்லாதபடிக்கு. நான் உங்களைத் தனியே விடுகிறேன். அச்சம் உண்டாகிறது.

தற்போது மைத்ரேயர் முற்றிலும் தனித்துவிடப்பட்டிருக்கிறார், பணம் இல்லை, அதிகாரம் இல்லை, மரியாதை இல்லை, அரசியல் அந்தஸ்து இல்லை, எல்லாம் போய்விட்டது. அவர் ஒரு பிக்குவாக இருக்கிறார். நான் அவரை வறியவராக்கியும் அவர் மேலெழுகிறார். தற்போது ஏதோ ஒரு மாநிலத்தில் முதலமைச்சராக இருக்க வேண்டியவர் அவர், அல்லது, மத்திய அமைச்சரவையில் இடம்பெற்றிருக்க வேண்டும். அவர் மிகவும் நம்பிக்கையோடு

இருந்தார். அத்தனை கனவுகளும் மறைந்துவிட்டன. தற்போது அவை பேய்களாகி அவருக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டிருக்கின்றன.

திரும்பிச் செல்வதற்குச் சாத்தியமில்லை என்கிற உண்மையை அவர் இனங்கண்டு கொள்ள வேண்டும். திரும்புவதென்பது இல்லாத ஒரு முனையை அவர் அடைந்துவிட்டார். ஆக, இன்னும் சுமக்க வேண்டிய அவசியமில்லை. இந்த மனம் பழக்கத்தாலன்றோ சுமந்தபடி இருக்கிறது. அதை விட்டுவிடலாம். அதை அடையாளம் காண்பதுடன், ஆழப் புரிந்து கொள்ள வேண்டும். அதன் மூலம் ஏமாற்றப்பட்டு விடக்கூடாது.

நான் கேட்டறிந்தது:

தன் கணவர் நிறையக் குடித்துக் கொண்டிருக்கிறார் என்கிற கவலை முல்லா நஸ்ருத்தீனின் மனைவிக்கு. ஒருநாள் இரவு அவரை அச்சுறுத்த வேண்டும் என்று அவள் தீர்மானித்தாள். தன்னை ஒரு வெள்ளைத் துணியால் மூடிக் கொண்டு, உள்ளூரில் இருக்கும் கல்லறைக்குச் சென்றாள். மதுக்கடையில் இருந்து குறுக்காக வந்து, அந்த வழியாகத்தான் தன்னுடைய கணவர் வீட்டுக்குத் திரும்புவார் என்பது அவளுக்குத் தெரியும். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவர் தள்ளாடியபடி அந்த வழியே வந்தார். அவள் மூலைக்கல்லின் மீதிருந்து குதித்தாள்.

ஓ...ஓ...ஒவென்று கிறீச்சொலி எழுப்பினாள். 'நான்தான் சைத்தான்'

முல்லா நஸ்ருத்தீன் தன்னுடைய கையை நீட்டி, 'தள்ளிப்போ நண்பனே, உன்னுடைய சகோதரியைத்தான் நான் கல்யாணம் பண்ணியிருக்கேன்' என்றார்.

கண்டு கொள்ளுங்கள்! நேரு, திங்ரே மற்றும் ஜே.பியின் ஆவிகளை அடையாளம் கண்டுகொள்ளுங்கள். உங்களுடைய கடந்த காலம் அவர்களுடைய சகோதரியான அரசியலைக் கல்யாணம் பண்ணிக் கொண்டது. இந்த ஆவிகளால் ஏமாற்றப்பட்டு விடாதீர்கள். அவை விட்டுச் சென்ற அடையாளக் குறியைச் சுத்தமாய் கழுவி விடுங்கள்.

அது கடினமான காரியம் என்பதை நான் அறிவேன். வெற்றி யுடன் பதவியில் அமரவிருக்கிற நீங்கள் உடனே திரும்பி, பாதையை மாற்றிக்கொள்வது கடினந்தான். என்னைச் சந்தித்தபோது அவர் ஒரு எம்.பி. யாக இருந்தார். ஆனால், அந்த விபத்து அவருடைய வாழ்க்கையை மாற்றிவிட்டது. மெள்ள மெள்ள எண்ணம் விவாதம்

முதலிய போக்கில் அவர் இழுக்கப்பட்டு, என்னில் மிகவே ஆர்வ முடையரானார். அரசியலில் அவருக்கிருந்த ஆர்வம் குறைந்தது. அப்போது வெற்றிமுனையில் இருந்தார் அவர். அவர் வெற்றி பெற்றிருந்தால் வெற்றியின் வலிகளை அனுபவித்திருந்தால் - வெற்றிகளின் தோல்வியை ருசித்திருந்தால் அந்நிலையில் பழைய ஆவிகளை விடுவது அவருக்கு எளிதாயிருந்திருக்கும். அவருடைய நோக்கம் வெற்றிபெறுகிற தருணம் அது. அவர் மாளிகையின் வாசலில் நுழைகிறபோது என்னைச் சந்தித்தார். தற்போது அந்த வாயிலும், மாளிகைக்கனவும், அங்கே வாழ்கிற கனவும் தொடர்கிறது.

அந்த மாளிகையில் அவர் கொஞ்சகாலமாவது வாழ்ந்து அங்கே எதுவும் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டிருந்தால் அது இன்னும் எளிதாகிவிட்டிருக்கும். அதனால்தான் நான் சொல்கிறேன் நீங்கள் தொழில் அல்லது பதவியில் இருப்பவராயின் அதில் வெற்றி பெறுவதே நல்லது அதன்பிறகு அதைத் துறக்கலாம் என்று. நீங்கள் செல்வந்தராக விரும்பினால் செல்வத்தைத் தேடிக் கொள்ளுங்கள். அத்தோடு தீர்ந்தது. செல்வம் சேர்ந்துவிட்டால் அது ஏமாற்றத்தைத் தருவது. அதில் ஏதும் இல்லை என்பது உங்களுக்குத் தெரியவரும். ஆனால் நீங்கள் வெற்றி பெறுவதற்கு முன்பாகவே அதை விட்டுப் போய்விட்டால், பிரச்சினைதான். 'அதில் ஏதோஒன்று இருக்கத்தான் இருக்கிறது. இல்லாவிட்டால் ஒட்டுமொத்த உலகமும் எதற்காக செல்வத்தில் விருப்பம் வைக்கிறது. அரசியலுக்கும் அதிகாரத்துக்கும் ஏன் அது ஆலாய் பறக்கிறது? அதில் ஏதோ ஒன்று இருக்கவே செய்யும். நான் இரயிலைத் தவறவிட்டிருக்கலாம். நான் தொடர்ந்திருக்க வேண்டும். முழு நிகழ்வையும் புரிந்து அனுபவித்திருக்கவேண்டும்'

ஒரு குறிப்பிட்ட ஆசையில் நீங்கள் வெற்றி பெற்றிருந்தால், அந்த ஆசையே உங்களை ஆசையற்றவராக்கியிருக்கும். வெற்றி ஆசையைத் தானாகவே தீர்த்துக் கட்டிவிடுகிறது. பிறகு, மிகக் குறைவான விழிப்புணர்வோடும் ஒருவர் துறந்துவிட முடியும். ஆனால் ஒன்றை எட்டிப் பிடிக்கிற, தொட்டுவிடுகிற நிலையில் எல்லாமே சாத்தியப்படுகிறபோது அதைவிட்டு நீங்கள் திரும்புவதென்றால் கூடுதல் விழிப்புணர்வு தேவைப்படும். ஆக, மைத்ரேயருக்கு மிகக் கடுமையான விழிப்புணர்வு தேவைப்படும்.

ஆனால் அதுவும் நடக்கவேண்டியதுதான், காரணம் குறிப்பட்ட சக்திகளுடன் நீங்கள் தொடர்பு வைத்துக் கொள்கிறபோது

உங்களுடைய உணர்வுக் கெட்டாமலே அந்தத் தொடர்பு ஏற்பட்டுவிடுகிறது.

மற்றோர் அரசியல்வாதியின் வீட்டில் நான் விருந்தினராக இருந்தேன். அவர் மைத்ரேயரையும் அழைத்திருந்தார். ஆக ஒரு மூத்த அரசியல்வாதி அவரை அழைந்திருந்ததால், என்ன விஷயம் என்று பார்ப்பதற்காக அவர் அங்கு வந்திருக்கவேண்டும். ஆனால் உங்களைப் பேராவல் கொண்ட உலகில் இருந்து உங்களைத் தன்வயப்படுத்திக் கொள்ளும் சக்திகளுடன் நீங்கள் தொடர்பு கொண்டதும், முக்கியக் கருத்தை உடனே புரிந்து கொள்வீர்கள். உங்களிடம் கொஞ்சம் நுட்ப அறிவும், புரிந்து கொள்ளும் திறனும் இருந்தால் போதும். அவரிடம் அது இருந்தது... என்னை விருந்துக்கு அழைத்திருந்த அந்த வயசான அரசியல்வாதி என்னோடு பல வருடங்கள் இருந்திருந்தும் என்னை ஒருபோதும் புரிந்து கொள்ள வில்லை. தற்போது அவர் இறந்துவிட்டார். ஓர் அரசியல்வாதியாக, பாராளுமன்ற உறுப்பினராகவே அவர் இறந்துபோனார். உலகிலேயே நீண்டகாலம் பதவி வகித்த உறுப்பினர்களில் அவரும் ஒருவர். ஐம்பதாண்டு காலம் பாராளுமன்ற உறுப்பினராக அவர் இருந்திருக் கிறார். ஆனாலும் என்னை அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. என்னை அவருக்கு ரொம்ப பிடிக்கும், என்னிடம் அளவற்ற நேசமுடையவராயிருந்தார், ஆனால் புரிந்து கொள்ளும் திறன் இல்லை.

மைத்ரேயர் அவர் வழியாகத்தான் என்னிடம் வந்தார், ஆனால் அவர் ரொம்ப நுட்பமான ஆத்மா. அரசியலில் மட்டுமல்ல ஆன்மிகத்திலும் நம்பிக்கையூட்டக்கூடியவராக அவர் இருந்தார். நீங்கள் ஓர் இரயிலைத் தவறவிட்டீர்கள், மற்றொன்றையும் தவற விட்டு விடாதீர்கள். நீங்கள் இந்த இரயிலைத் தவறவிட்டால் உங்களுடைய மூட்டை முடிச்சுகள் மட்டும், வேட்டி சட்டையும்கூட போயே போய்விடும். நீங்கள் நிர்வாணமாய் நிற்க வேண்டிவரும்.

ஒரு சமயம் மிகப்பெரிய அரசியல்வாதி ஒருவர் செத்துப் போனார். அவருடைய ஆவி ஈமச்சடங்கில் தானும் கலந்து கொள்ளத் தீர்மானித்தது – தன்னுடைய சொந்த ஈமச்சடங்கில் அது. புதைத்தலின் போது, தான் பல வருடங்களாய் அறிந்திருந்த ஓர் அரசியல்வாதியின் ஆவியைச் சந்தித்தது.

'ஹலோ, பழைய ஆளாச்சே!' என்றது இரண்டாவது ஆவி. 'சபை நிறைஞ்சிருக்கு. என்ன நான் சொல்றது, சரிதானா?' என்று கேட்டது.

'ஆமாம்' என்றது முதலாவது ஆவி. 'இவ்வளவு பெரிய கூட்டத்தை நான் இழுத்திட்டு வருவேன்னு தெரிஞ்சிருந்தா, ரொம்ப நாளைக்கு முன்னாடியே செத்திருப்பேன்'

அரசியல்வாதியின் ஆசை ரொம்ப குழந்தைத்தனமான ஆசைதான். மற்றவர்கள் பார்வையில் ரொம்பப் பெரிதாயும், சிறப்பாகவும் காட்சியளிக்க வேண்டும். அது எளிதாய் முடிகிறதுதான், காரணம் மக்கள்கூட்டம் பித்துப்பிடித்தது. அவர்களுடைய பித்து நிலையை எப்படிக் கையாள்வது என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அவர்களை எப்படிப் பாராட்டத் தூண்டுவது என்பதும் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். கொஞ்சம் தந்திரசாலியாய் நீங்கள் நடந்து கொள்ள வேண்டும். அவ்வளவுதான், வேறெதுவும் தேவையில்லை. கூட்டம் முட்டாள்தனமானது.

ஆனால், நீங்கள் உண்மையிலேயே முக்கியத்துவம் உடையவராக வேண்டுமென்றால் அது முற்றலும் வேறான விசயம். உண்மையிலேயே சிறப்பு பெறுவதற்கு, நீங்கள் பளிங்கு போன்றவராய், தன்னுணர்வுடையவராய், ஆசையற்றவராய், பிணைப்பேதும் இல்லாதவராய், கடந்து சென்றவராய், மனிதத் திறனுக்கும் அறிவுக்கும் அப்பாற்பட்டவராய் இருக்க வேண்டும். உங்களைப் போலத்தான் மற்றவர்களும் பைத்தியமாய் இருக்கிறார்கள். அவர்களை உங்களால் கையாள முடியும். உங்கள் பொருட்டு அவர்கள் கைதட்டவும், பாராட்டவும் அவர்களை உங்களால் தூண்ட முடியும், ஆனால் அதன் முக்கியக்கருத்து என்ன?

அதை இந்த வழியில், கணக்கியல் சார்ந்து எண்ணிப் பாருங்கள். ஒரு முட்டாள் உங்களைக் கைதட்டிப் பாராட்டினால் நீங்கள் மன நிறைவு கொண்டு விடுவீர்களா? நீங்கள் அதைக் கொள்வதற்கில்லை, ஆனால் ஒரு முட்டாள் அல்லது ஓராயிரம் முட்டாள்கள் அல்லது இலட்சக்கணக்கான முட்டாள்கள் கைதட்டுவதில் என்ன வேறுபாடு இருக்கப்போகிறது?

ஓர் அறிவாளி உங்களை அன்புடன் நோக்கி, வாழ்த்தினால் அதுவே போதுமானது.

ஒரே நாளில் இரண்டு சிங்கங்கள் மிருகக் காட்சிச்சாலையில் இருந்து தப்பிச் சென்றன. மூன்று வார விடுதலையை அனுபவித்தபின் ஒன்றையொன்று எதிர் கொண்டன. அந்தச் சிங்கங்களில் ஒன்று ரொம்பவும் இளைத்து, மெலிந்து காணப்பட்டது. மற்றொன்றோ நன்றாக உண்டு கொழுத்திருந்தது.

ஒல்லியாக இருந்த சிங்கம் சொன்னது, 'நான் திரும்பவும் மிருகக் காட்சி சாலைக்கே போயிடலாம்னு பார்க்கறேன். பதினைஞ்சு நாளைக்குமேல் இருக்கும் நான் சாப்பாடு சாப்பிட்டு' என்று.

கொழுத்த சிங்கம் சொல்லிற்று, 'கடவுளே, நீ என்னோடு வந்திருக்கலாம். நான் பாராளுமன்றத்துப் பெரிய மனிதர்கள் கைகழுவும் அறையில் இருந்திட்டிருக்கேன். வாரத்தில் ஒவ்வொரு நாளும் ஓர் அரசியல்வாதியைச் சாப்பிடுகிறேன்' என்றது.

நீங்கள் முக்கியத்துவம் உடையவர் என்று கருதும் ஆசாமி களுக்காக யார் கவலைப்படப் போகிறார்கள்? தாங்கள் இல்லாவிடில் உலகமே அழிந்து விடும் என்று அவர்கள் வேண்டுமானால் எண்ணிக் கொள்ளலாம். அவர்கள் இல்லாவிட்டால் உலகம் ஒன்றும் வலுவிழந்து விடாது. இருந்தபடிக்கே எல்லாமும் தொடர்ந்து கொண்டிருக்கும்.

உங்களுடைய குறியிலக்கு என்கிற இரயிலை நீங்கள் தவறவிட்டிருக்கலாம், அதற்காக வருத்தப்படாதீர்கள். நீங்கள் அந்த இரயிலைப் பிடித்திருந்தால் பெரிதும் ஏமாற்றத்துக்குள்ளாகி இருப்பீர்கள் அட, அதைச் செய்யாமல் இருந்திருக்கலாமே என்று எண்ணியிருப்பீர்கள். மனம் இப்படித்தான் செயல்படுகிறது. நீங்கள் வெற்றி பெற்றால் வருந்தும்படி ஆகிறது. நீங்கள் தோற்றாலும் வருந்தத்தான் செய்வீர்கள். எது நடந்தாலும் அதில் துன்பத்தை மனம் தோற்றுவித்துக் கொள்கிறது. அந்த இரயில் ஒன்றும் உடனே பிடித்தாக வேண்டும் என்கிற அளவுக்கு பயனுடையது அல்ல. இரயில் என்னைவிட்டுட்டு, என்னுடைய உடைமைகளைக் கொண்டு போய் விட்டதே என்கிற முறையில் ஆராய்ந்து பார்க்காதீர்கள். போனது உடைமைகள்தான், நீங்களல்ல என்பதற்காக மகிழ்ச்சி கொள்ளுங்கள்.

ஒருநாள் தோட்டமொன்றில் நான் உலவிக் கொண்டிருந்தபோது, தன் கால்களில் ஒன்றில் மட்டும் காலணி அணிந்திருந்த ஒரு பிச்சைக்காரன் எதிர்ப்பட்டான். நான் அவனிடம் கேட்டேன், 'பரிதாபத்துக்குரியவரே, உம்முடைய மற்றொரு காலணியைத் தொலைத்துவிட்டீரா?' என்று.

அவன் சொன்னான், 'இல்லை, நான் ஒன்றைத்தான் முயன்று அடைந்தேன்' என்று.

நம்பிக்கையுடையவராயிருங்கள்.

ஒரு பந்தயத்தை முன்னிட்டு பேய் வாசம் செய்யும் வீட்டில், ராத்திரிபொழுது தங்கும் சவாலை ஏற்றான் ஒருவன். அவன் ராத்திரி

போதில் அங்கிருந்து போய்விடக்கூடாதே என்பதற்காக சன்னல்களுக்கு 'சீல்' வைத்து, வீட்டின் முன்புறக் கதவும், பின்புறக் கதவும் பூட்டப்பட்டன. மறுநாள் காலை அந்த வீடு திறக்கப்பட்ட பொழுது, அங்கே அந்த மனிதன் இருந்ததற்கானஅறிகுறியே இல்லை. ஆனால், கூரையில் பெரிய ஓட்டை போடப்பட்டிருந்தது. ராத்திரி அந்த வழியாக அவன் விரைந்து வெளியேறி இருப்பான் என்பது தெளிவாய் தெரிந்தது. இரண்டு நாட்களுக்குப் பிறகு அவன் ஊருக்குத் திரும்பிவந்தான்.

'கடந்த நாற்பத்தியெட்டு மணிநேரத்தில் நீ எங்கே இருந்தே?' என்று அவனுடைய நண்பன் கேட்டான்.

'திரும்பி வந்துட்டேன்' என்றான் அவன்.

அச்சத்தில் ஓடியதால் அதே கிராமத்துக்குத் திரும்பிவர அவனுக்கு நாற்பத்தியெட்டு மணிநேரம் ஆயிற்று.

மைத்ரேயரே, நீர் இரயிலைத் தவறவிட்டதும் விரும்பத்தக்கதுதான், இல்லையேல், திரும்பி வருவதற்கு நாற்பத்தியெட்டு பிறவிகள் தேவைப்பட்டிருக்கும்.

கேள்வியின் மற்றொரு பகுதி: "நேற்றிரவு நீங்கள பல பெண்களைத் திருமணம் செய்வதாய் நான் கண்டேன், தாங்கள் அவர்களை அன்புடன், எளிதாய் சமாளித்துவிடுவதாக என்னிடம் சொன்னீர்கள்" நான் அவர்களை எவ்வித இடர்ப்பாடுமின்றி அன்புடன் கையாள்வதை நீங்கள் பார்த்ததில்லையா? ஒவ்வொரு சீடரும் பெண்தான் - ஆணா பெண்ணா என்பதில் என்ன முக்கியத்துவம் இருக்கப்போகிறது. பின்பற்றுகிற சீடரின் தன்மை பெண்பாலுக்குரியதாய் இருக்க வேண்டும். அப்போதுதான் அவரால் கற்றுணர முடியும். ஒரு சீடர் (மாணவர்) கருப்பையைப் போன்று வரவேற்கும் பண்புடையவராய் இருக்க வேண்டும். அவர் என்னை முழுமையாய் ஏற்க வேண்டும்... அவர் இணக்கமுடன் ஏற்பவராய் இருக்க வேண்டும்.

இந்தியாவில், கிருஷ்ணருக்கு பதினாறாயிரம் மனைவியர் அல்லது சிநேகிதப் பெண்கள் இருந்ததாக நம்முடைய புராணம் கூறும். மனைவியர் என்று சொல்வது சரியாகாது, காரணம் அவர் ஓர் உண்மையிலேயே ஒரு கலகக்காரர். கணவன் - மனைவியா யிருப்பதில் அவருக்கு நம்பிக்கையில்லை. ஆண்சிநேகம், பெண் சிநேகம் என்கிற கருத்தை அவர்தான் தோற்றுவித்தது - கோபிகள், தோழிகள் பதினாறாயிரம் தோழிகள்? கையாள்வதற்குக் கொஞ்சம்

மிகுதியாகவே தெரிகிறது. ஆனால் புராணம் எதையும் குறியீட்டில் (symbolic) தெரிவிப்பதுதானே. பதினாறாயிரம் சீடர்களை அப்படிக் குறித்திருக்கும். அவர்கள் ஆண்களாகவும் இருக்கலாம். பெண்களாகவும் இருக்கலாம். அது முக்கியமில்லை. ஆனால் ஒரு சீடரிடம் பெண்பாலுக்குரிய தன்மை இருக்க வேண்டும். ஒரு சீடன் கோபிகாஸ்த்ரீதான். இல்லையேல் அவன் ஒரு சீடனாய் இருக்க மாட்டான்.

நானும் பதினாறாயிரம் சந்நியாசிகளைக் கொண்டிருக்கிறேன். மிகச்சரியாக அதே எண்ணிக்கையில் விரும்பத்தக்கவர்களும்கூட. நான் அவர்களை நன்றாகக் கையாள்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும். உண்மையில் நான் கையாள்கிறேன் என்பதாகாது. அவர்களைக் கையாள்வது அன்பு. அன்பு எப்போதுமே நன்றாக நிர்வகிக்கும் – அழகாகவும் எளிதாகவும். அன்புக்கு இறுக்கம் என்றால் என்னவென்று தெரியாது.

உங்களால் ஒரேஒரு பெண்ணையும் நிர்வகிக்க முடியாது. காரணம், நீங்கள் அன்பை இன்னும் அறிந்து கொள்ளவில்லை. அன்பு இல்லையென்பதால் ஒரே ஒரு காதல் விவகாரத்தைக்கூட உங்களால் நிர்வகிக்க முடியாது. தொடர்பு இருக்கும். அன்பு இல்லாத தொடர்பு. அது பெருமளவு தொல்லையே உண்டு பண்ணும்.

என்னுடைய தரப்பில் அன்பு இருக்கிறது. இன்ப நட்பு (affair) கிடையாது. அன்பு கையாள்கிறது.

*பகவானே, தனிப்பட்ட முறையிலான நேர்காணல்கள் பலவற்றிலும் தாங்கள் சிலவற்றிலும் என்னிடம் தெரிவித்திருக்கிறீர்கள். அந்த நேரத்தில் அதை உங்களுடைய மனநிலை சார்ந்த ஊக்குவிப்பாகவே நான் கருதினேன். ஆனால், காலப்போக்கில் உங்கள் கருத்துகள் நூறு சதவிகிதம் சரியாக இருப்பதை அனுபவத்தில் கண்டிருக்கிறேன்.*

*இத்தனை அனுபவங்கள் இருந்தும் தற்போது நீங்கள் சொல்கிற எதையும் அந்த நேரத்தில் நான் நம்புவதில்லை.*

*நீங்கள் சொல்கிற சமயத்தில் நான் அதற்குப் பணிந்து இணங்காவிடினும், உங்கள் வாக்கு மறுபடியும் நூறு சதவிகிதம் சரியாக இருப்பதை நான் உணர்கிறேன்.*

*இந்த உதவியற்ற நிலையில் இருந்து நான் எப்படி விடுபடுவது?*

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன். அதுவே உங்களுக்குப் பதிலாய் அமையும்.

தன்னுடைய சேமிப்பு முழுவதையும் பந்தய மைதானத்தில் தொலைத்த ஒருவன். மனமுடைந்தவனாய், வாட்டர்லூ பாலத்தில் இருந்து விழுந்து விடுவது என்று தீர்மானித்தான். சற்றும் எதிர்பாராதவிதமாய் ஓர் ஆவியின் குரல் அவனுடைய காதருகில் முணுமுணுத்தது. 'குதித்து விடாதே. நாளையும் பந்தய மைதானத்துக்கு செல். நான் எதன் மீது பந்தயம் கட்டுவது என்று உனக்குச் சொல்வேன்' என்று. அவன் வீட்டுக்குத் திரும்பிச் சென்றான். மறுநாள் எப்படியோ சில பவுண்ட்களைக் கடனாய் பெற்றுக் கொண்டு பந்தய மைதானத்துக்குச் சென்றான். பணம் கட்டுகிற வரிசையில் அவன் நின்ற போது மிகச் சரியாக அந்த ஆவியின் குரல், 'முதல் பந்தயத்தில் ப்ளூ பீட்டர் மீது மொத்த பணத்தையும் கட்டு' என்றது. அவன் அப்படியே செய்தான், ப்ளூ பீட்டர் வெற்றி பெற்றது. அவன் இரண்டாவது பந்தயத்தில் பணம் கட்டுவதற்காகக் காத்திருந்தான். 'லிபர்ட்டி பெல்லியின் மீது பணம் கட்டு' என்றது அந்தக் குரல். அவன் அதன்மீது கட்டினான். லிபர்ட்டி பெல்லி வென்றது. அவனுக்குக் கட்டுக் கட்டாய் பணம் கிடைத்தது. அன்று முழுக்க அப்படியே நடந்தது. கடைசிப் பந்தயம் தொடங்கும்போது அவன் கையில் ஒரு மில்லியன் பவுண்ட்கள் இருந்தன. 'கடைசிப் பந்தயத்தில் பணம் கட்டாதே' என்று அந்தக் குரல் ஒலித்தது. அதிர்ஷ்டம் அடித்துக் கொண்டிருக்கிற நேரம் இது என்று எண்ணியவன், கடைசிப் பந்தயத்தில் மொத்த பணத்தையும் கட்டினான். அத்தனை பணத்தையும் இழந்தான்.

'ஓ. இல்லை' முடிவு அறிவிக்கப்பட்ட பொழுது, 'நான் இப்போ என்ன பண்ணட்டும்?' என்றான்.

'இப்போ நீ வாட்டர்லூ பாலத்தில் இருந்து குதிக்கலாம்' என்றது குரல். இதுவே என்னுடைய பதில். நீங்கள் தீர்மானிக்கலாம்.